## EDITORIAL BOARD

### Editor-in-Chief

**Ms. D. Maheswari, M.A., M.Phil., SET., B.Litt., D.G.T., (Ph.D).**
IJTLLS,
Virudhunagar,
Tamil Nadu, India.
E.Mail: maheswari@ijtlls.com, ijtllsetamiljournal@gmail.com

### Co-Editors'

**Dr. N. Sulochana, M.A., M.A., M.Phil., Ph.D., NET.**
Assistant Professor, Department of Tamil Language and Linguistics,
International Institute of Tamil Studies,
Taramani, Chennai-113,
Tamil Nadu, India.
E-mail: suloraja64@gmail.com

**Ms. V.Vimal, M.A. M.Phil., (Ph.D).**
Assistant Professor, Department of Tamil,
The Madura College, Madurai- 625011,
Tamil Nadu, India.
E-mail: vimal.vanji2015in@gmail.com

### Advisory Editorial Board

**Dr. Mohana Dass A/l Ramasamy, M.A., Ph.D.**
Head of the Department, Indian Studies, Faculty of Arts and Social Sciences,
University of Malaya, Malaysia.
Tel: +603-79675629, Fax: +603-79675460.
Email: rmohana-dass@um.edu.my, rmdassa@gmail.com

**Dr. Sascha Ebeling, M.A., Ph.D.**
Associate Professor, College Senior Adviser in the Humanities, Chair, Readings in World Literature Collegiate Core Sequence,
Department of South Asian Languages and Civilizations,
Department of Comparative Literature,
The University of Chicago,
1130 East 59th Street, Foster 203, Chicago, IL 60637, USA.
E-mail: ebeling@uchicago.edu

**R. Venkatesh, (PLM Leader in FORD, Michigan)**
President and Secretary,
Tamil Academy, Canton, Michigan – 48187,
America.
E-mail: vradhak1@ford.com

**Dr. Sasi Kumar, M.A. Ling., M.A. Tamil., M.A. Philosophy., M.Ed., Ph.D.**
Teaching Fellow, Asian Languages & Cultures Academic Group,
National Institute of Education,
Nanyang Technological University, Nanyang Walk,
Singapore- 637616.
E-mail: sasikumar.p@nie.edu.sg

**Dr. J.B.Prashant More, M.A., Ph.D.**
Professor of Social Sciences,
Institute of Research in Social Sciences and Humanities,
Inseec, Paris,
France.
E-mail: morejbplee@aol.com

**Ms. Punitha Subramaniam, B.Sc., M.Ed.**
P.G. Assistant in Tamil,
SJKT Ladang Temerloh,
34800 Trong, Perak, Malaysia.
E-mail: kashnitha@gmail.com, punitha.su@moe.edu.my

**Mr. K. Raguparan, CTHE (Peradeniya)., B.A., M.Phil.**
Senior Lecturer Gr.II in Tamil,
Department of Languages,
Faculty of Arts and Culture,
South Eastern University, Sri Lanka,
E-mail: kanagasabai.raguparan1@gmail.com

**Dr. A. Boologarambai, M.A. Tam., M.A. Ling., NET., B.Ed., Ph.D., P.G. Dip. Hindi., P.G. Dip. Lexicography.**
Assistant Professor, Department of Tamil Language and Translation Studies,
(Sangam Literature & Traditional Grammar, Telugu, Hindi & Japanese, Tamil, English)
Dravidian University, Kuppam- 517425,
Andra Pradesh, India.
E-mail: arpudharambai@gmail.com

**Dr. V. Raman, M.A., Ph.D. Tam., M.A., Ph.D. Jmc., DFTech., DLL., DACP., Dip.in.Rus., CCP., CMM., CFA.**
Dean- Department of Visual Communication,
Rathinam Arts and Science College,
Eachanari, Coimbatore,

Tamilnadu- 641021, India.
E-mail: dean.viscom@rathinamcollege.com

**Dr. S. Manimaran, M.A., M.Phil., B.Ed., Ph.D.**
Associate Professor, Department of Tamil,
N.M.S.S.Vellaichamy Nadar College, Madurai-19.
Tamil Nadu, India.
E-mail: manimaransvn@gmail.com

**Dr. T. K. Vedaraja, M.A., M.Phil., Ph.D.**
Assistant Professor of English,
Alagappa Govt. Arts College,
Karaikudi, Sivaganga-630003,
Tamil Nadu, India.
E-mail: tkvraja@gmail.com

## Associate Editor

**Mr. M.Vinoth Kumar, M.A. Eng., M.A. Ling., M.A. Trans. Studies., M.Phil., SET., (Ph.D).**
Assistant Professor, Department of English,
N.M.S.S.Vellaichamy Nadar College, Madurai-19,
Tamil Nadu, India.
E-mail: vinothkumar@ijtlls.com , vinoth5082@gmail.com

## Assistant Editors'

**Dr. P. Swathi, M.A., M.A., M.Phil., NET., Ph.D.**
Assistant Professor, Department of Tamil,
N.M.S.S.Vellaichamy Nadar College, Madurai-19.
Tamil Nadu, India.
E-mail: pvswathi87@gmail.com

**Mr. J. B. Sam Selva Kumar, M.A., M.Phil., NET., (Ph.D).**
Assistant Professor, Department of Tamil,
N.M.S.S.Vellaichamy Nadar College, Madurai-19.
Tamil Nadu, India.
E-mail: sammeera9487@gmail.com

**Mr. G. Antony Suresh, M.A., M.Phil., NET., C.G.T., (Ph.D).**
Assistant Professor, Department of Tamil,
Sadakathullah Appa College,
Palayamkottai, Tirunelveli.
Tamil Nadu, India.
E-mail: surtamil6@gmail.com

## பொருளடக்கம்

# வாழ்த்துரை

**Ijtlls** எனும் பன்னாட்டு தமிழ் இதழை இனிதே தொடங்கி இரண்டாம் இதழ் வெளியிடுவதில் மிகவும் பெருமையடைகிறோம். தமிழ் மொழி மற்றும் இலக்கியத்தின் தொன்மையினை வெளிகொணரும் வகையில் நிறைய ஆய்வு கட்டுரைகள் இவ்விதழில் அமைந்துள்ளது. தமிழ் ஆய்வாளர்கள், பேராளர்கள் மற்றும் ஆர்வலர்கள் தங்கள் ஆய்வை இயற்றி ஒப்புமை மற்றும் உயர்வு பெற இது ஓர் அரிய களமாகும். *என் பணி தமிழ் பணி செய்து கிடப்பதுவே* என்பதற்கிணங்க ஆராய்ச்சி மாணவர்கள் மற்றும் பேராளர்களால் சிறந்த ஆய்வு கட்டுரைகள் வழங்கப்பட்டு இவ்விதழ் வளம் பெற்றுள்ளது. இவ்விதழின் சிறப்பு இருமொழிகளில் (தமிழ் மற்றும் ஆங்கிலம்) ஆய்வு கட்டுரைகளைக் கொண்டிருப்பதாகும். தமிழ் வளர்ச்சிக்காக அதன் தொன்மையை உலக அரங்கிற்கு எடுத்துச் செல்வதே இவ்ஆய்விதழின் நோக்கமாகக் கொண்டாளப்பட்டுள்ளது. மேன்மேலும் இப்பன்னாட்டு இதழ் வளர்ச்சியடைய அனைவரின் சிறந்த ஆய்வு கட்டுரைகள் வரவேற்கப்படுகின்றன.

- பதிப்புக்குழு


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# தொல்காப்பிய உவமயியல் கோட்பாடும் அணியியலும

**முனைவர். அ. உமாமகேஸ்வரி,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
கிருஷ்ணசாமி மகளிர் அறிவியல் கலை
மற்றும் மேலாண்மையியல் கல்லூரி,
கடலூர்.

## முன்னுரை

மொழி என்பது மனித வாழ்வின் மேம்பாட்டுக்கு மூலாதாரம் என்பர். ஒருவன் பிறனொருவனுக்குத் தன் கருத்தைத் தெரிவிக்கும் முயற்சியால் தோன்றிய ஒலிகுறிப்பு காலப்போக்கில் பொருளுடைய மொழியானது. அவ்வாறு உலகத்தில் தோன்றிய மொழிகளில் தொன்மையானதும் முதன்மையானதுமாகத் திகழும் சிறப்புப் பெற்றவைச் சில மொழிகளே. அச்சில மொழிகளில் முதன்மையான மொழி தமிழ்மொழி. தமிழ்மொழி இலக்கிய வளத்தோடு இலக்கண வளமும் நிறைந்தது. தமிழ்மொழியின் இலக்கணமான தொல்காப்பியம் நமக்குக் கிடைத்திருக்கும் முதல் இலக்கண நூலாகும். மொழிக்கான பலக் கொள்கைகளை அடிப்படையாக வைத்துச் செம்மையாக ஆக்கப்பட்ட இலக்கணம் தொல்காப்பியம் என்றால் அது மிகையில்லை. தொல்காப்பியத்தின் உவமவியல், செய்யுளியல் (யாப்பில்) பயிலும் உவமங்களின் பல்வேறு கோணங்களுக்கு இலக்கணம் வகுத்தளித்துள்ளது. வடவரின் செல்வாக்கால் அணியிலக்கணத்தின் அறிமுகம் தமிழுக்குக் கிடைத்தது என்பர். இக்கொள்கையினை மறுத்து தொல்காப்பிய உவமவியல் இலக்கண அமைப்பினையும், அவற்றில் அடங்கும் அணியிலக்கணக் கொள்கைகளையும் ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

## உவமவியல் கோட்பாடு பொருள் விளக்கம்:

உவமம் என்பது ஒரு பொருளோடு ஒரு பொருளை ஒப்புமைப்படுத்திக் கூறுவதாகும். மேலும் உவமம், தெரியாத ஒன்றைத் தெரிந்த ஒன்றின் மூலம் விளக்கிக் கொள்வதுமாம். இயல் என்பது **"இனமொழி கிளந்த ஓத்து"** என்றது தொல்காப்பியம்.[1] இந்நூற்பாவிற்குப் போராசிரியர் **"இனமாகிய பொருளையே தொகுப்பது ஓத்து"** என விளக்கம் தருகிறார்.

கோட்பாடு, கொள்கை, கொள்ளுதல் என்பன ஒரு பொருட் சொற்கள். பாடு, கை, தல் என்பன தொழிற்பெயர் விகுதிகள். கோட்பாடு என்பது கொள்+பாடு எனப் பிரிக்கப்படினும் கொள் என்பது கோள் என நீண்டு ஒலிக்கும். முதல் நிலை நீண்ட தொழிற்பெயர் விகுதி.

***"கேட்டமொழி ஒழித்துக் கேளாக் கிளவியொடு***
***கூட்டியுரை கொளுத்தல் கோட்பாடன்றே"***



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



அறிஞரிடம் (அ) ஆசானிடம் (அ) உலகோரிடம் கேட்டு அறிந்த செய்திகளை (அ) செய்தியினைக் கேளாமொழி கற்பனை கலப்பின்றி, கேட்டவற்றின் உண்மை நிலையினை எடுத்துரைப்பதே கோட்பாடு என்பது யாப்பருங்கலம் உரைக்கும் செய்தி.

**கோட்பாடு – கொண்டிருக்கும் தன்மை, நிலைமை**

**கொள்கை – அறிவு, குணம், கோட்பாடு, சினேகம் செய்கை**

என்பது தமிழ்மொழி அகராதி கூறும் பொருள்.[2]

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடாகிய 'தமிழ்ச் சொல்லகராதி'யின் பொருளாவன: **கொள்கை-அறிவு, ஒழுக்கம், குணம், தன்மை, கோட்பாடு கொள்கை**[3] என்று மேற்சொன்னவற்றினையே கூறுகின்றது. வாழ்வியற் களஞ்சியம், கலைக்களஞ்சியம் முதலான தொகுப்புகளில் கொள்கை, கோட்பாடு என்ற சொற்களே இடம் பெறவில்லை.

கொள்கை அல்லது கோட்பாடு என்பது 'ஆழ்ந்த அறிந்த சிந்தனையின் வெளிப்பாடு' எனக் கொள்ளலாம். இச்சிந்தனை வெளிப்பாடு அல்லது வரையறை இலக்கியம் சார்ந்ததாக அமையின் இலக்கியக் கோட்பாடு எனவும், இலக்கணம் சார்ந்ததாக அமையின் இலக்கணக் கோட்பாடு எனவும், சமுதாயப்பிரச்சனையின் சிந்தனை வெளிப்பாடாக அமையின் சமூகவியல் கோட்பாடு எனவும் பெயர் பெறுகிறது. இதுவே ஆக்கியோன் பெயரிலும் மார்க்சியம் (மார்க்சியக்கோட்பாடு) லெனினியம், பெரியாரியம் என்றும் அழைக்கப்படுகின்றன. அவ்வகையில் அமைவதே 'தொல்காப்பிய கோட்பாடு'. இது எழுத்து, சொல், பொருள் என்பனவற்றில் பல்வேறு பிரிவுகளைக் கொண்டதாக அமைந்துள்ளது. ஆக்கியோர் பெயர் நூலுக்குப் பெயராகி நூல் பெயர் கோட்பாட்டின் பெயராகிறது.

எழுத்திலக்கணக் கோட்பாடு, சொல்லிக்கணக் கோட்பாடு, தொல்காப்பிய உரைவளத்தொகுப்புகள், தொல்காப்பியக் கடல், தொல்காப்பியக் கருத்தரங்கக் கட்டுரைகள் முதலான ஆய்வு நூல்களும் தொல்காப்பியரின் புணரியல் கோட்பாடு, தொல்காப்பியத்தில் கூற்றுக் கோட்பாடு, தொல்காப்பியச் செய்யுளியல் கோட்பாடும் குறுந்தொகையும், தொல்காப்பியத்தில் அகராதி கூறுகள், தொல்காப்பிய மெய்ப்பாட்டியல், தொல்காப்பிய உத்திகள், தொல்காப்பிய களவியல், தொல்காப்பியக் கற்பியல், தொல்காப்பியர் கூறும் வேற்றுமைகள், தொல்காப்பிய மரபியல், தொல்காப்பியமும் உரைகளும் காட்டும் தொடர்மொழி அமைப்பு, தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் சொல்லும் பொருளும் முதலான புதுவைப்பல்கலைக்கழக ஆய்வேடுகளும் தொல்காப்பியத்தின் கோட்பாடுத் தன்மையினை விளக்குகையில் நோக்கத்தக்கன.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**தொல்காப்பிய உவமவியல்:**

உவமம் பொருள் விளக்கத்திற்கான ஒன்று. அவ்வுவமங்கள் செய்யுளில் பயிலும்போது எவ்வாறெல்லாம் வெளிப்படும் என்பதை வரையறை செய்துள்ளது தொல்காப்பியம்.

"ஆசிரியர் தொல்காப்பியர் காலத்தில் ஐந்திலக்கப் பாகுபாடு இல்லை. எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று பாகுபாடே இருந்தது. பொருளதிகாரத்தில் உள்ள செய்யுளியலால் யாப்பும் உவமஇயலால் அணியிலக்கணமும் அடங்கும்என்பர் ஒரு சாரார். பிறிதொரு சாரார் உவமை பொருளை விளக்கும் கருவியேயன்றி அணியாகாதென்பர். இவ்விரண்டனுள் சேனாவரையர் முன்னைய கருத்தினர். பேராசிரியர் பின்னைய கருத்தினர். பேராசிரியர் உவமஇயலை அணியியல் எனக் கருதும் கருத்துப் பொருத்தமற்றது என்பதோடு அணியிலக்கணம் எனப் பாகுபடுத்துவதே பொருத்தமற்றதென்பர். ஆனால், சேனாவரையர் உவம இயலை அணியியல் என்றும் அணியிலக்கணம் எனப் பாகுபடுத்துவது பொருத்தமுடையது என்றும் கருதுவர்." (தொல்.பொரு.சேனா.பக்-29)

**அணியிலக்கணம் பற்றிய பேராசிரியர் கருத்து:**

1. உவமவியலில் உள்ள உவமங்கள் சிலவற்றையும்(இவ்வாறு பேராசிரியர் கூறக்காரணம் உவமவியலில் அகப்பொருள் உவமமான உள்ளுறையும் இறைச்சியும் இடம் பெற்றுள்ளன. பொதுவிலக்கண உவமங்களைச் சுட்டவே சிலவற்றையும் எனக் குறித்தார்) சொல்லதிகாரத்தினுள்ளும், செய்யுளியலுள்ளும் சொல்லுகின்ற சில பொருள்களை வாங்கிக் கொண்டு மற்றவை செய்யுட்கண்ணே அணியாம் என இக்காலத்தாசிரியர் நூல் செய்தாரும் உளர் என்பது அணியலக்கணம் பற்றிய பேராசிரியர் கருத்து. (தொல்.பொரு.பேரா.பக-108)

இக்கருத்தையொட்டியே **இலக்கண விளக்க ஆசிரியர் வைத்தியநாத தேசிகரின் கருத்து வருமாறு:** தொல்காப்பியம் குற்ப்பிடும் செய்திகளையும் வடமொழி அணியிலக்கண நூல்கள் குறிப்பிடும் செய்திகளையும் உட்கொண்டு இவ்வணியியல் அமைக்கப்பட்டுள்ளது.(இ. வி.பொ.அணி.பக். 74)

2. பேராசிரியர் காலத்தில் தான் உவமம் என்பது அணி எனப்பெயர் கொண்டு தமிழுக்கு வரத் தொடங்கியுள்ளது என்பது அவரின் உரையின் வழி அறியப்படும் செய்தி. (உரையாசியர்களின் உரையின் வழி சமுதாய, அரசியல், சமய, பொருளாதார ஆய்வுகள் நிகழ்த்தப்பட்டுள்ளன.)

3. தொல்காப்பியத்தின் பொருளதிகாரப் பகுதிகள் எல்லாம் செய்யுட்கு அணிசெய்வன. ஆகையால், அவை பாடலுட் பயின்றவை எனப்பட்டன. அவையெல்லாம் தொகுத்து அணியெனக் கூறாது, வேறுசிலவற்றை வரைந்து அணியெனக் கூறுதல் பயமில் கூற்றாம். (தொல்.பொரு.உவ. பேராசிரியருரை. பக்.109).

4. இரண்டு பொருளை எண்ணி ஒருங்கு என்னும் சொற்சேர்த்து அதனால் ஒருங்கணி எனப்பெயர் கொடுப்பர் அணி நூலார். அப்படியாயின் கலித்தாழிசைக்கும் சுரிதகத்துக்கும்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



இடையே 'எனவாங்கு' என்பது வருதலின் அதையும் 'எனவாங்கணி' எனப் பெயர்க்கொடுத்தல் வேண்டும் இப்படியே சொற்களைக் சொற்களைக் கொண்டால் வரையறைப் படாமல் அணிசெல்லும்.

5. செய்யுட்குரிய அழகுதரும் பொருள்களையெல்லாம் தனித்தனி அணிகளாகக் கூறாமல் சில பொருள்களை மட்டும் அணியெனல் பொருந்தாது: குன்றக்கூறலாகிவிடும். (தொல்.பொரு. உவ. பேராசிரியருரை. பக்.109).

மேலும், செய்யுட்கு இவை அணியென்பதூஉம் இவை குற்றமென்பதூஉம் மூன்றதிகாரத்துள்ளும் இவ்வாசிரியர்யாண்டுங் கூறாரோவெனின் இச்செய்யுளியலில் முப்பத்து நான்கு உறுப்புக் கூறி அவ்வற்றதியைபு நல்லிசைப்புலவர் செய்யுளுறுப்பெனவும் அவை தொடர்ந்த தொடர்நிலை எண்வகையாற் தொடர்நிலைச் செய்யுட்கு வனப்பெனவும் பகுத்தோதிய இலக்கணத்திற் பிறழ்ந்தவை எல்லாங் குற்றமென்பதூம் கொள்ளவைத்தானென்பது. (தொல்.பொரு.உவ. பேராசிரியருரை. பக்.111).

**தொல்காப்பிய உவமக்கோட்பாடு:**

தொல்காப்பியம் வரையறுத்த உவமக்கோட்பாடு மிக நுண்ணியதும் பரந்துபட்டதுமாகும். இக்கோட்பாடுகள் அளவிறந்தன. தொல்காப்பிய உவமம் என்பது, உவமத்தோற்றம், தோற்றத்திற்கான நிலைக்களன்கள், உவமம் எவ்வாறெல்லாம் வரும் என்பதன் பொதுவிதி, இப்பொதுவிதியிலிருந்து மாறுபடும் விகற்பங்கள் எனப்பல நோக்கில் கூறப்பட்டுள்ளன. தொல்காப்பிய உவமக்கோட்பாட்டினை அடியொற்றிய அணியிலக்கண நூல்களான தண்டியலங்காரம் மற்றும் இலக்கண விளக்க அணியியலுள்ள பொருளணியியலில் பயின்று வரும் அணிகள் எவ்வாறு உவமக்கோட்பாட்டினைச் சார்ந்து வந்துள்ளன என்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும். இக்கட்டுரை,

1. உவமத் தோற்றத்தின் நிலைக்களன்கள்.
2. உவமம் எவ்வாறெல்லாம் வரும் என்பதன் தொல்காப்பிய விதிகள்.
3. தொல்காப்பிய உவமக்கோட்பாட்டினை அடியொற்றிய அணியிலக்கணகள்.

என்னும் மூன்று பிரிவுகளில் அமைகின்றது.

தொல்காப்பிய உவமவியல் குறிப்பிடும் ஒவ்வொரு நூற்பாவினை ஒவ்வொரு விதியாகக் கொண்டு அவ்வொவ்வொரு விதிக்குள்ளும் அடங்கும் அணிகளை விரித்துக் காணலாம்.

**உவமத்தின் தோற்றமும் அதற்கான நிலைக்களன்களும் பற்றிய தொல்காப்பியக் கோட்பாடும் இதனை அடியொற்றிய பிற்கால அணியிலக்கண நூல்களும்:**

தொல்காப்பிய உவமவியல் உவமம் நான்கு வகையால் தோற்றம் பெறும் என்கிறது. அவையாவன

> **"வினைபயன் மெய்யுரு என்ற நான்கே**
> **வகைபெற வந்த உவமத் தோற்றம்"** (தொல்.உவ.272)


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



என்றும்

**"விரவியும் வருஉம் மரபின என்ப" (தொல்.உ_வ.273)**

என்றும் மேலும் ஒரு விதி கூறுகிறது. வினை பயன் மெய் உரு என்ற இந்நான்கின் காரணமாகவும் இந்நான்கின் தொட்பானவைகளை விளக்குமிடத்தும் உவமம் தோற்றம் பெறும். நான்கு வகை உவமங்களும் ஒரு பொருளுக்கு ஒரு பொருளேயன்றி ஒன்றிற்கு மேற்பட்டவைகளையும் ஒப்புமையாகக் கொள்ளும்.

மேற்கண்ட வகைகளில் உவமம் தோன்றுவதற்கு நிலைகளன்களாக அமைவன சிறப்பு நலன் காதல் வலிமையாம். இந்நான்கு வகை நிலைகளன்களில் ஏதேனும் ஒன்றை அடிப்படையாகக் கொண்டு உவமம் தோற்றம் பெறும் என்பதை,

**"சிறப்பே நலனே காதல் வலியொடு**
**அந்நாற் பண்பும் நிலைக்கள மென்ப" (தொல்.உ_வ.279)**

என்னும் இந்நூற்பாவால் அறியலாம்.

**"சிறப்பென்பது உலகத்துள் இயல்பு வகையானன்றி விகார வகையால் பெறும் சிறப்பு. நலனென்றது அழகு காதலென்பது இந்நலனும் வலியும் இல்வழி உண்டாக்கியுரைப்பது. வலியென்பது தன் தன்மையானே உள்ளதோர் வலிமையாம்". (தொல்.உ_வ.பக்.அண்.பல்.பதி)**

என தொல்காப்பியம் உவமத் தோற்றம் பற்றிக் குறிப்பிடுகிறது.

**உவமத் தோற்றம் பற்றிய பிற்கால அணி இலக்கண நூல்கள்:**

தண்டியலங்காரம் அணியிலக்கணங்களைப் பொதுவியல் பொருளணியில் மற்றும் சொல்லணியியல் என பகுத்துள்ளது. பொருளணியியலில் முப்பத்தைந்து அணிவகைகளையும் சொல்லணியியலில் மடக்கு அவற்றின் வகைகள் சித்திரகவி அவற்றின் வகைகள் வழுக்கள் மற்றும் அவற்றின் வகைகள் ஆகியவற்றையும் குறிப்பிடுகின்றன. இவற்றில் பொருளணியியல் விளக்கும் முப்பத்தைந்து அணி வகைகள் மட்டும் தொல்காப்பியஉவமவியல் கோட்பாட்டினுள் அடங்குகிறது.

தண்டியலங்காரம் மற்றும் இலக்கண விளக்கம் குறிப்பிடும் பொருளணியியலில் வகைகளான தன்மை உவமை முதலானவைகளின் தோற்றம், பொருள், குணம், சாதி தொழில் என்ற நான்கு வகையால் அமைந்துள்ளது.

முப்பத்தைந்து அணிகளில் முதலாவது தன்மையணி. தன்மை என்பது ஒரு பொருளின் ஒத்த இயல்பு. அவ்வியல்பினை உள்ளவாறே குறிப்பது இவ்வணி. இது பொருள் குணம் சாதி என்னும் மூவகையால் தோற்றம் பெறுவது. உரு பொருளினையோ அப்பொருளின் குணத்தையோ சாதியையோ (ஒரு தன்மையான பல பொருட்கள் கொண்டு தோற்றம் பெறுவது.

**உவமையணி:**

பண்பு தொழில் பயன் ஆகியவற்றின் காரணமாக பொருளோடு பொருளை ஒன்றும்


International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com

பலவுமாக பொருந்த வைத்து அவ்விரு பொருளுக்கும் ஒப்புமைத் தோன்றுமாறு சொல்லப்படுவது உவமையணி ஆகும்.

**"பண்புந் தொழிலும் பயனுமென் றிவற்றின்**
**ஒன்றும் பலவும் பொருளொடு பொருள் புணர்ந்து**
**ஒப்புமை தோன்றச் செப்புவ துவமை" (தண்டி-31)**

என்னும் தண்டியலங்கார நூற்பாவினையே இலக்கண விளக்கமும் பின்பற்றுகிறது.

தொழில் பயன் பண்பு இட்மூன்றின் காரணமாக தோற்றம் பெறும் உவமை ஒரு பொருளோடு ஒரு பொருள் ஒரு பொருளோடு பல பொருள் பல பொருளோடு பல பொருள் பல பொருளோடு ஒரு பொருள் என்று ஒப்புமை தோன்ற வரும் என்பதாம். இத்தோற்றம் தொல்காப்பிய உவமத் தோற்றத்தையே சார்ந்துள்ளது.

உவமம் இயல்பாய் வருதலையும் வேறுபடுதலையும் தொல்காப்பிய உவடவியல் குறிப்பிடுவது போல தண்டியலங்காரமும் இலக்கண விளக்கமும் உவமவிரியாக இருபத்து நான்கைக் குறிப்பிடுகின்றன. அவையாமாறு

**"விரியே தொகையே யிதர விதரம்**
**....மாலை யென்னும் பாவ தாகும்"**
**என்னும் நூற்பாவின் வழி தண்டியலங்காரமும்**
**"உற்றபண்பு ஆதியின் உவமம் செய்வுழி**
**...விளக்கிய உவமையின் விரிஎனப் படுமே"**

என்னும் நூற்பாவின் வழி இலக்கண விளக்கமும், உவமை இயல்பாக வருதலையும் வேறுபட வருதலையும் இருபத்து நான்கு வகையில் கூறி மேலும் வேறு உவமை வகைகளும் சேர்ந்து வரும் என்பதனை,

**"அற்புதஞ் சிலேடை யதிசயம் விரோதம்**
**ஒப்புமைக் கூட்டந் தற்குறிப் பேற்றம்**
**விலக்கே யேதுவென வேண்டவும் படுமே" (தண்டி-33)**

என்று தண்டியலங்காரமும் குறிப்பிடுகிறது. இந்நூலும் இலக்கண விளக்கமும் உவமத்தை அடிப்படையாகக் கொண்டு கொண்டு 32 உவமவிரிகளையும் பிற உவமவகைகளான அற்புதம், சிலேடை, அதிசயம், விரோதம், ஒப்புமைக்கூட்டம், தற்குறிப்பேற்றம், விலக்கு, ஏது ஆகியவையும் "உவமம்" என்ற ஒன்றையே அடிப்படையாகக் கொண்டு விரிந்துள்ளன. தண்டியை ஒத்தே வீரசோழியமும் மாறனலங்காரமும் முத்துவீரியம் தொன்னூல் விளக்கமும் அமைந்துள்ளன என்கிறது இலக்கணவிளக்கம்.

மேற்கண்ட தண்டியலங்காரம் முதலான அணியிலக்கண நூல்கள் கூறும் விரி உவமம் முதல் மாலை உவமம் வரையுள்ள அணிகள் தொல்காப்பிய உவமத் தோற்றமாகக்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



குறிப்பிடும் வினை, பயன், மெய், உரு என்ற நான்கிலும் 'விரவியும் வரும் மரபின என்ப' என்னும் சூத்திரத்திலும் அடங்கும்.

'வேறுபடத் தோன்றும் உவமத் தோற்றம்' என்னும் தொல்காப்பிய உவமவியல் சூத்திரத்துள் உவமம் விகற்பித்து தோன்றுவனவாக அணிநூல்கள் கூறும் அற்புதம், சிலேடை, அதிசயம், விரோதம், ஒப்புமைக்கூட்டம், தற்குறிப்பேற்றம், விலக்கு, ஏது ஆகிய அணிகள் அடங்குமென பொதுவாகவே கூறலாம். ஆனால் அது ஏற்புடையதாகாது.

உவமம் எவ்வாறெல்லாம் வரும் என்பதன் தொல்காப்பிய விதியும் இவ்விதியின் இயல்பிலுள்ள மாற்றங்களும் அம்மாற்றத்தின் படி அமைந்துள்ள பின்னாளைய அணிகளும் பற்றி மட்டும் காண்போம்.

**உவமம் எவ்வாறெல்லாம் வரும் என்பதன் தொல்காப்பிய பொதுவிதிகள் அவ்விதிகளை அடியொற்றிய பின்னாளைய அணியிலக்கணங்கள்:**

தொல்காப்பிய உவடவியல் உவமத்தின் நான்னு வகைத் தோற்றம் நிலைக்களன்கள் கூறி பின்னர் நான்கு வகை உவமத் தோற்றமும் ஒரு பொருளுக்கு ஒரு பொருளேயன்றி ஒன்றிற்கு மேற்பட்டவைகளையும் ஒப்புமையாகக் கொண்டு தோன்றும் என்பதை **"விரவியும் வருஒஉம் மரபின என்ப" (தொல்.உவ.273)** என விளக்கி அவ்வாறு தோன்றும் பொரளும் உவமமும் உயர்ந்ததாக இருத்தல் வேண்டும் என்பதோடு தாழ்ந்த பொருளிலும் உவமமும் பொருளும் தோன்ம் என்கிறது தொல்காப்பியம்

**"உயர்ந்ததன் மேற்றே ஒள்ளுங் காலை"(தொல்.உவ.274)**

**"கிழக்கிடும் பொருளோ டைநடது மாகும்"(தொல். உவ.276)**

என்று கூறுகிறது.

மேலும், தாழ்ந்த பொருளை இடம் கருதி ஏற்றுக் கொள்ள வேண்டும். பொருளுக்கு உவமம் கூறும் போது முதற்பொருளுக்குமுதற்பொருளும் சினைப்பொருளுக்கு சினைப்பொருளும் இயல்பாக அமைவதேயன்றி முதற்பொருளுக்கு சினைப்பொருளும் சினைப்பொருளுக்கு முதற்பொருளும் மாறியும் வரும் என்பதை,

**"முதலுஞ் சினையுமென் றாயிரு பொருட்கு**
**நுதலிய மரபி னுரியவை உரிய" (தொல். உவ.271)**

என்னும் நூற்பா விளக்கியுள்ளது.

உவமமும் பொருளும் ஒத்து இருத்தல் வேண்டும். பொருளுக்கேற்ற உவமம் மரபுவழிப்பட்டதாக இருத்தல் வேண்டும். இரட்டைச் சொல்லிற்கு இரட்டைச் சொல்லாலே உவமம் கூறுதல் வேண்டும் என்பதை

***"உவமமும் பொருளம் ஒத்தல் வேண்டும்"(தொல்.உவ.279)***

***"உவமப் பொருளை உணருங் காலை***
***மருவிய மரபின் வழக்கொடு வருமே" (தொல். உவ.292)***



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



***"இரட்டைக் கிளவியும் இரட்டை வழித்தே" (தொல்.உவ.293)***

என்னும் இந்நூற்பாக்களின் வழி விளக்குகிறது தொல்காப்பியம்.

மேற்கூறியவைகளில் கிழக்கிடும் பொருளோடைந்து மாகும் என்றதில் "ஐந்துமாகும்" என்றது சிறப்பு, நலன், காதல், வலி என்னும் நான்கு உயர்வுப் பொருளோடு தாழ்ந்த பொருளையும் சேர்த்து ஐந்தாம். முதற்பொருள் என்பது முகம் முதலானவை. சினைப்பொருள் என்றது நெற்றி கண் முதலானவை. "மருவிய மரபின் வழக்கொடு வருமே" என்றதில் 'மருவிய மரபின் வழக்கொடு' என்றது இன்னவற்றிற்கு இன்னதையே கூற வேண்டும் எனக் காலந்தோறும் மக்களால் தொன்றுதொட்டு வழங்கப்படுவதாகும். "இரட்டைக் கிளவிக்கு இரட்டைச் சொல்லாலே உவமை வழங்கப்படுவது கலகல பளபள மடமட என்னும் சொற்களோடு பாவொடு-தேன், விலங்கொடு-மக்கள் என இரண்டு சொல் இணைந்து வருவது என்று விளக்குகிறார் சிவலிங்கனார். (உரைவளம்.பக்.67-68) மேலும் அவர் விளக்கமாவது,

**"விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்**
**கற்றாரோ டேனை யவர்"** (குறள்-410)

இதில் "கற்றாரோடு ஏனையவர் என்பது இரட்டைக்கிளவி. விலங்கொடு நோக்க மக்கள் எவ்வளவு உயர்ந்தவரோ அவ்வளவு தாழ்ந்தவர் கற்றாரோடு கல்லாதவர் என்பது கருத்து. இதில் விலங்கொடு மக்களுக்குள்ள வேறுபாட்டை உவமையாக்கினார். உவமையில் 'விலங்கொடு மக்கள்' என்பது இரட்டைக்கிளவி. இதில் இரட்டைக்கிளவிச் சொல்லுக்கு இரட்டைக்கிளவியே உவமையாக வந்துள்ளது" என்பது சிவலிங்கனாரின் கூற்றாகும்.

மேற்கண்ட தொல்காப்பிய பொதுவிதியினை "இலக்கண விளக்கம்-அணியியல்" "பண்பும் தொழிலும் பயனும் என்று இவற்றின் என்னும் நூற்பாவிற்கு ஒத்த நூற்பாவாக இணைத்து கூறியுள்ளது. மேற்கண்ட தொல்காப்பிய உவம பொது கோட்பாட்டினை ஒத்து பிற்கால அணிநூல்கள் கோட்பாடு வகுக்கவில்லை.

**தொல்காப்பிய விதியில் அடங்கும் அணிகளாவன:**

1. உவமையின் பண்பு முலியன வெளிப்பட அமையும் வரி உவமை
2. பண்பு முதலியன தொக்கி அமையும் தொகை உவமை
3. மாட்டேற்றுச் சொல்லாகிய 'ஆகிய' முதலானவை மறைந்து வரும் தொகை உருவகம்
4. மாட்டேற்றுச் சொல் விரிந்து வரும் விரி உருவகம்
5. சிலவற்றைத் தொகுத்தும் சிலவற்றை விரித்தும் உருவகம் செய்யும் தொகைவிரி உருவகம்

ஆகியன மேல் தொல்காப்பிய விதியில் அடங்கும்.

**"பெருமையுஞ் சிறுமையு மெய்ப்பா டெட்டன்**
**வழிமருங் கறியத் தோன்று மென்ப" (தொல்.உவ. 290)**

என்றும் நூற்பா பொருளிற்கு ஏற்ற உவமத்தினைப் பெருமையாகவும் சிறுமையாகவும் குறிப்பிடும் போது அது மெய்ப்பாடுகளின் வழி அமையும். மெய்ப்பாடுகளாவன



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



> **"நகையே அழுகை இளிவரல் மருட்கை**
> **அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று**
> **அப்பால் எட்டே மெய்ப்பாடென்ப"** (தொல்.மெய்ப். 251)

என மெய்பாடுகள் எட்டு வகைகளாகும். இவ்வெட்டு மெய்ப்பாடுகள் ஒவ்வொன்றும் நன்நான்கு பிரிவுகளாக 32 வகையாம். இம்முப்பத்திரண்டு மெய்ப்பாடுகளின் வழி உவமை தோன்றும் என்கிறது தொல்காப்பியம். இவ்விதியில் அடங்கும் அணிகளாவன.

1. பொருளைப் பெரிதும் புகழ்ந்து உவமிக்கும் புகழுவாமை
2. உவமையைக் குறை கூறி உவமிக்கும் நிந்தை உவமை
3. ஒரு பொருளிடத்துக் கொண்டே விருப்பத்தான் ஒப்புமைப் பொருளிடத்து மயங்கி உரைத்தவைக் கூறும் மோக உவமை
4. உலகில் இல்லாத பொருளை உவமையாகக் கூறும் அபூத உவமை
5. நிகழாத ஒன்றை நிகழ்வது போலக் கூறி உவமையாக்கும் கூடா உவமை

மற்றும் அற்புத உவமை, அதிசய உவமை, விரோத உவமை, தற்குறிப்பேற்ற உவமை, சிறப்புருவகம் ஆகியனவும் இதன் பாற்படும். இவையேயன்றி மெய்ப்பாடுகள் வழித் தோன்றுவதாக தண்டியலங்காரம் மற்றும் இலக்கண விளக்கம் கூறுவதாவது

> **"உள் நிகழ் தன்மை புறத்துத் தோன்ற**
> **எண்வகை மெய்ப்பாட்டி னியல்வது சுவையே"** (தண்டி. 69.இ.வி.655)

> **"அவைதாம்**
> **வீர மச்ச மிழிப்பொடு வியப்பே**
> **காம மவல முருத்திர நகையே"** (தண்டி-170-இ.வி. 665)

எனக் கூறுகிறது. மேலும், இதற்கு ஒரு புறனடையாக உள்ளத்துக் குறிப்பை வெளிப்படுத்தும் மெய்ப்பாடுகள் தோன்றவும் அவற்றின் தோற்றத்திற்கு வேறொரு பொய்க்காரணத்தைக் கூறி உண்மைக் குறிப்பை மறைத்துக் கூறும் அணி இலேச அணி ஆகும்.

> **"பொருளே உவமஞ் செய்தனர் மொழியினும்**
> **மருளறு சிறப்பின.·. துவம மாகும்"** (தொல்.உவம. 280)

இந்நூற்பாவின் விதியாவது பொருள் உவமாகவும் உவமம் பொருளாகவும் மாறி வந்தாலும் அதுவும் உவம இலக்கணத்தின் பாற்படும். இவ்விதிப்படி அமையும் அணிகளாவன

1. பொருளை உவமமாகவும் உவமத்தை பொருளாகவும் கூறுவது இதரவிதர உவமை.
2. பொருளும் உவமமும் வேறாய் இருக்கும் தன்மையை நீக்கி இணைண்டினையும் ஒன்றாக்கி கூறுவது உருவக அணி
3. பொருளையே உவமமாக்கிக் கூறுவது விபரீத உவமை. மேலும் இவ்விதியில் அடங்கும் ஏனைய அணிகளாவன உவமை உருவகம், வேற்றுமை உருவகம், விலக்குருவகம், அவநுதி உருவகம், உண்மை உருவகம் ஆகியனவாகும்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**"அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே**

**நிரனிறுத் தமைத்தல் நிரனிறை சுண்ணம்**

**வரன்முறை வந்த மூன்றலங்கடையே"** (தொல்-உவ. 309)

என்னும் தொல்காப்பிய விதியின் விளக்கமாவது ஒரு செய்யுளினுள்ளே உவமையும் பொருளும் பல அடுக்கித் தோன்றினாலும், உவமமும் பொருளும் கலந்திருக்கும் வழி உவமானத்திற்கேற்ற உவமேயத்தை நேரே நிறுத்தி பொருத்திக் கொள்ளும் நிரனிறுத்தமைத்தலும், பொருள் தொடர்ச்சியையும் உவமத் தொடர்ச்சியையும் துணிந்து இதற்கு இதுவென பொருள் கொள்ளுதலும் உவமையின் பாற்பட்டதேயாம். **'அடுக்கித் தோற்றம் விடுத்தல் பண்பே'**(தொல்.சொல்.பக். 305 உரைவளம் உ.த.நி)

என்றது நிரல்நிறை சுண்ணம் மொழிமாற்று அடிமறி ஆகிய நான்கினையும் தவிர்த்து மற்றையவற்றில் பொருளும் உவமையும் அடுக்கி வருதல் ஏற்றுக் கொள்ளப்படாது என்பதாம். **"வரன்முறை வந்த மூன்றலங்கடையே"** என்றது சுண்ணம், அடிமறி, மொழிமாற்று என்ற மூன்றும் அல்லாதவிடத்து நிரல்நிறையில் மட்டும் உவமத்தினையும் பொருளினையும் அடுக்கிக் கூறுதல் நிகழும்.

இந்நூற்பா சுட்டும் நான்கு பொருள்கோள்கள் தொல்காப்பிய சொல்லதிகார எச்சவியல் நூற்பாக்கள் 405, 406, 407, 409 வழி அறியலாம். இவ்விதியின் படி அமையும் அணிகளாவன.

1. உவமங்கள் பலவற்றுள்ஒவ்வொன்றனோடும் உவமை உருபைப் புணர்த்துக் கூறுவது பலவயிற் போலி உவமை
2. உவமைகள் பலவற்றுள் ஒன்றனுடனேயே உவமையுருபைப் புணர்ந்துக் கூறுவது ஒரு வயிற்போலி மற்றும் இவ்விதியில் அடங்கும் பிற அணிகளாவன ஒப்புமைக் கூட்டம் உவமை, இயைபு உருவகம், இயைபிலி உருவகம், வியநிலை உருவகம், மாலை உவமை ஆகியனவாகும்.

**"சுட்டிக் கூறா உவம மாயின்**

**பொருளெதிர் புணர்த்துப் புணர்த்ததன் கொளலே"** (தொல்.உவ. 278)

இப்பொருளுக்கு இது உவமையென சுட்டிக்கூறாது இருக்குமிடத்துக் கொண்டு கூட்டி பொருள் கொள்ளுதலும்

**"உவமப் பொருளின் உற்றது ணருந்**

**தெளிமருங் குளவே திறத்திய லான"** (தொல்.உவ. 291)

உவமமும் பொருளும் நேராக இல்லாது உவமிக்கப்பட்டதற்கு இதுவே பொருளென்று துணியுமிடமும்

**"ஒரீஇக் கூறலும் மரீஇய பண்பே"** (தொல்.உவ. 306)



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



இப்பொருளுக்கு இப்பொருள் ஒப்புமை ஆகும் என்று கூறாது பொருளின் தன்மையும் உவமத்தின் தன்மையும் ஒப்புக்கூறி இதற்கு இது ஏற்ற ஒப்புமையாகாது என்பதும் உவமத்தின் பாற்படுமாம்.

**"உவமமும் பொருளும் ஒத்தல் வேண்டும்"**

பொருளும் உவமும் ஒத்தல் வேண்டும் என்பனவைகளாக அமைந்த விதிகளின் படி அமைந்த அணிகள்.

**தொகுப்புரை**

மேற்கண்ட ஆய்வின் வழி பெறலாகும் நிலைப்பாடு உவமம் என்பதே தமிழ் இலக்கண கொள்கை 'அணி' என்பது வட இலக்கண கொள்கை. அணி இலக்கணம் தமிழ்மொழிக்கு வட இலக்கணம் தந்த கொள்கை என்பது இக்கட்டுரையின் வழி மறுக்கப்படுகிறது. பின்னாளைய அணியிலக்கணம் 'கொண்டிருக்கும் அத்தனை தன்மைகளையும்' கிறிஸ்து சகாப்த ஆண்டு தொடங்கும் முன்பே தமிழின் இலக்கணமாம் தொல்காப்பிய உவமவியல் கொண்டிருக்கிறது என்பதை இக்கட்டுரை முன் மொழிகிறது.

**துணைநூற்பட்டியல்**

1. தொல்காப்பியம்- பொருளதிகாரம்பின் நான்கியல்கள் பேராசிரியருரை. கழக வெளியீடு. 1986.
2. தொல்காப்பியம்- பொருளதிகாரம் - உரைவளம். ஆ.சிவலிங்கனார். உலகத்தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடு - 1981.
3. தண்டியலங்காரம் - கழக வெளியீடு. 1991.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக் - ஒப்பியல் உரை நோக்கு

**முனைவர் ச.கண்ணதாசன்,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
மன்னர் திருமலை நாயக்கர் கல்லூரி,
பசுமலை, மதுரை- 625004.

**குறிப்புச் சட்டகம்**

- **பாடலும் உரைகளும்**
- **முதல் உரைகாரரின் கருத்து**
- **உ.வே.சாமிநாதையர்**
- **பொ.வே.சோமசுந்தரனார்**
- **ரா.இராகவையங்கார்**
- **தமிழண்ணலும் ச.வே.சுப்பிரமணியனும்**
- **உடீஇ? உடீஇக்?**
- **முடிபுகள்**

பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களைச் சேகரித்துப் பாதுகாத்து இச்சமூகத்திற்கு வழங்கியவர்கள் பதிப்பாசிரியர்கள் என்றால், அந்நூல்கள் கூறும் கருத்துக்களைக் கற்போர் அனைவருக்கும் கொண்டு சேர்த்தவர்கள் உரையாசிரியர்கள் எனலாம். பதிப்பாசிரியர்களே உரையாசிரியர்களாகவும் இருப்பதுண்டு. தங்களின் புலமையை மூலதனமாகக் கொண்டு ஒரு நூலுக்கு உரை எழுதி வெளியிடும் பொழுது அவ்வுரை அனைவராலும் ஏற்றுக்கொள்ளத் தக்கவகையில் இருப்பதே சிறப்பு. தற்சாற்பின்மை, பொதுநெறி ஆகியவை நூலாசிரியர், பதிப்பாசிரியர், உரையாசிரியர் ஆகிய அனைவருக்கும் உரித்தானவை. குறிப்பிட்ட ஒரு நூலுக்குப் பலர் உரை எழுதுவது தமிழில் தொன்றுதொட்டு இருந்து வரும் மரபு. அவ்வாறு உரை எழுதும் பொழுது உரை எழுதும் ஒவ்வொருவரும் மூலநூலாசிரியரின் கருத்திற்கு முரண்படார் என்பது பொதுமை நெறி. ஆனால் அதே நூலுக்கு உரை எழுதிய பிற உரைகாரர்களோடு மாறுபடுவது இயற்கை. திணை; துறை கூறல், கூற்று விளக்கம், சொற்பொருள் விளக்கம், வைப்புமுறை, தலைப்பிடுதல், உள்ளுறை; இறைச்சி கூறல் எனப் பல தளங்களில் அவ்வேறுபாடுகள் அமையும். உரைகாரர்கள் ஒருவருக்கொருவர் மாறுபட்டாலும் உண்மையறிதல் என்பது திறனாய்வாளரின் கடமை. இதன் அடிப்படையில் குறுந்தொகையில் கூடலூர் கிழாரால் இயற்றப்பட்ட ''முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்'' எனத் தொடங்கும் பாடலுக்கு அமைந்த உரைகளை ஆராய்ந்து, அவை மூலநூலோடு எங்ஙனம் பொருந்திச் செல்கின்றன என்பதை எடுத்துரைக்கும் வகையில் இக்கட்டுரை அமைகின்றது.

**பாடலும் உரைகளும்**

**''முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்**

**குவளை உண்கண் குய்ப்புகை கமழத்**

**தான்துழந்த அட்ட தீம்புளிப் பாகர்**

**இனிதெனக் கணவன் உண்டலின்**

**நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே" (குறுந்தொகை,பா.167)**

எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகிய குறுந்தொகையில் கூடலூர் கிழாரால் இயற்றப்பட்ட இப்பாடல் "கடிநகர் சென்ற செவிலித்தாய் நற்றாய்க்கு உரைத்தது" எனும் துறையில் அமைந்தது. கற்புக் காலத்தில் தலைவி தலைவனுடன் இல்லறம் நடத்தி வந்த பொழுது அதைப் பார்த்துவிட்டு வந்த செவிலித்தாய் நற்றாயிடம், தலைவி குடும்பம் நடத்தும் பாங்கினை ஒரு சிறு நிகழ்வின் மூலம் எடுத்துரைப்பதாகப் பாடல் அமைக்கப்பட்டுள்ளது.

இப்பாடலில் அமைந்துள்ள "கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்.." எனும் இரண்டாம் அடிக்கு உரைகூறுவதில் மட்டும் குறுந்தொகை உரையாசிரியர்களிடையே கருத்து வேறுபாடு காணப்படுகின்றது. குறுந்தொகைக்கு உரை எழுதியுள்ள முதல் உரைகாரரான சௌரிப்பெருமாள் அரங்கன், உ.வே.சாமிநாதையர், பொ.வே.சோமசுந்தரானார், மு.சண்முகம்பிள்ளை, ரா.இராகவையங்கார் ஆகிய முற்கால உரையாசிரியர்களின் உரைகளும், பிற்காலத்தில் எழுந்த தமிழண்ணல், ச.வே.சுப்பிரமணியன், வி.நாகராசன் (என்.சி.பி.ஹெச். பதிப்பாக வந்தது), புலியூர்க்கேசிகன் ஆகியோரின் உரைகளும் இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன.

விளையாட்டுப்பிள்ளையாய் அவள் வீட்டில் இருந்த தலைவி, கணவன் வீட்டில் எவ்வளவு பொறுப்புடன் நடந்து கொள்கிறாள் எனும் பாங்கை எடுத்துரைக்கும் பாடலின் கருத்து பின்வருமாறு அமைகின்றது.

"முதிர்ந்த தயிரைப் பிசைந்த செங்காந்தள் மலரின் இதழ் போன்ற மெல்லிய விரல்களை நீராலே கழுவாமலே தோய்த்துத் தூய்மையுற்ற ஆடையை உடுத்துக்கொண்டு, குவளை மலர் போன்ற கண்களிலே தாளிப்பால் உண்டாய புகை கதுவா நிற்ப (புகை நிறைய) தானே துழாவிச் சமைத்த இனிய புளிப்பை உடைய குழம்பை இது மிக இனிதாயிருப்பதொன்று என்று கூறித் தலைவன் உண்ணுதலானே ஒள்ளிய நெற்றியை உடைய நம் மகளிரது முகம் நுண்ணிதாக மகிழ்ந்தன்று" என்று இப்பாடலுக்கு தெளிவுரை எழுதியுள்ளார் பொ.வே.சோமசுந்தரனார். இவ்விளக்கத்தில் ஆய்வுப்பகுதியான "கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்.." என்பதற்குப் பொ.வே.சோமசுந்தரனார் உட்பட பிற உரையாசிரியர்கள் எழுதிய உரைகளும் இங்கே வரிசைப்படுத்தப்பட்டுள்ளன.

- "கட்டித்தயிரைப் பிசைந்த விரலைக் கழுவாது தோய்த்த ஆடையை உடுத்துக் கண்ணில் தாளிப்புகை மணக்க" - சௌரிப்பெருமாள் அரங்கன்


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com

- "மெல்லிய விரலைத் துடைத்துக் கொண்ட ஆடையைத் துவையாமல் உடுத்துக் கொண்டு" - உ.வே.சாமிநாதையர்
- "மெல்லிய விரல்களை நீராலே கழுவாமலே தோய்த்துத் தூய்மையுற்ற ஆடையை உடுத்துக்கொண்டு" - பொ.வே.சோமசுந்தரனார்
- "மெல்லிய விரல்களைத் துடைத்துக் கொண்ட ஆடையைத் துவைத்து அழுக்கை மாற்றாதே உடுத்துக்கொண்டு" - மு.சண்முகம்பிள்ளை
- "கழுவற்கு உற்ற உடையை அழுக்குற்ற உடையை உடம்பு கழுவாமல் உடுத்தி" - ரா.இராகவையங்கார்
- "செங்காந்தள் மலர் போலும் கைவிரல்களைத் தன் பட்டாடையில் கழுவிக் கொண்டாள். துடைத்துக்கொண்டாள். அவ்வாறு துடைத்துக்கொண்ட கலிங்கத்துப் பட்டாடையில் பட்ட அழுக்கைக் கழுவாது அதனை உடுத்தியிருந்த படியே விரைந்து சமைத்தாள். - தமிழண்ணல்
- காந்தல் மலரைப் போன்ற தன் மெல்லிய விரல்களைத் துடைத்தல் பெற்ற ஆடையினை அவ்வழுக்கை நீக்குமாறு துவையாதே உடுத்திக் கொண்டாள்" - புலியூர்க் கேசிகன்
- "செங்காந்தள் போன்ற விரல்களைக் கழுவித் தன் புதிய ஆடையில் துடைத்துக் கொண்டாள் அதனைக் கழற்றாமல் அதனையே உடுத்திக் கொண்டவாறே" - ச.வே.சுப்பிரமணியன்.
- "அழுக்குற்ற அவ்விரல்களைத் தான் உடுத்தியிருந்த தூய ஆடையில் துடைத்தனள். அதனால் அழுக்கேறிய அவ்வுடை துவையாமல் உடுத்திக் கொண்டாள் - வீ.நாகராசன்

இவ்வாறு ஒவ்வொரு உரையாசிரியரும் தங்களின் நடையில் தாங்கள் உணர்ந்த கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளனர். ஆனால் இவ்வுரையாசிரியர்கள் எழுதியுள்ள விளக்கங்கள் மூலநூலாசிரியரின் கருத்தோடு ஒத்திசைந்து செல்கின்றனவா என்பதை இனிக் காணலாம்.

"கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்.." என்பதில் 'கலிங்கம்', 'உடீஇக்' ஆகியவற்றிற்குப் பொருள் கூறியதில் மேற்கூறிய உரையாசியர்களுள் தமிழண்ணலைத் தவிர்த்த யாரும் மாறுபடவில்லை. ஆனால் இவ்வடிக்குரிய மொத்தக்கருத்தைக் கூறும் பொழுதே ஒருவருக்கொருவர் முரண்படுகின்றனர்.

'கழுவுறு' எனும் வார்த்தை கழுவப்பட்ட, தூய்மைப்படுத்தப்பட்ட எனும் பொருண்மையில் அமைந்துள்ளது.

**"காடி கொண்ட கழுவுறு கலிங்கம்"** (நெடுநல்வாடை,134)



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



எனும் அடியில் உள்ள 'கழுவுறு கலிங்கம்' என்பதற்குக் "கஞ்சியிட்டுக் கழுவப்பட்ட துகில் என்று பொருள் எழுதியுள்ளார் நச்சினார்க்கினியர்" (2017,ப.540) இதைப்போல் பதிற்றுப்பத்திலும் இப்பதம் பயின்று வந்துள்ளது.

**"கழுவுறு கலிங்கங் கடுப்பச் சூடி" (பதிற்றுப்பத்து,76;13)**

எனும் அடிக்குப் பொருள் எழுதியுள்ள பழைய உரைகாரர் "வெளுக்கப்பட்ட வெள்ளாடையைத் தலையில் சூடிக்கொண்டு" (பதிற்றுப்பத்து, 2007, ப. 365) என்று பொருள் எழுதியுள்ளார். இவ்விரு கருத்துக்களை வைத்துப் பார்க்கும் பொழுது 'கழுவுறு' என்பதற்குக் 'கழுவப்பட்ட, நன்கு வெளுக்கப்பட்ட, துவைக்கபட்ட' எனும் பொருள்களுள் இலக்கியங்களில் பயன்படுத்தப் பட்டிருப்பதைப் பார்க்க முடிகிறது.

அடுத்ததாக 'கழாஅது' எனும் சொல். இது 'கழுவாது' என்பதன் மரூஉ. அளபெடுத்து வந்துள்ளது.

**"கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால்" (திருக்குறள், 84; 1)** எனத் தொடங்கும் குறளில் உள்ள முதல்வார்த்தைக்குக் 'கழுவாத கால்' என்று பொருள். எனவே கழாது என்பது செய்யுளில் அளபெடுப்பதும் உறுதியாகியுள்ளது.

இக்கருத்துக்களை எல்லாம் வைத்துப் பார்க்கும் பொழுது, "கழுவுறு - கழுவப்பட்ட, கலிங்கம் - ஆடை, கழாஅது - கழுவாது, உடீஇ - உடுத்தி" என இத்தொடரைப் பதம் பிரிக்கலாம். ஆனால் செய்யுளைப் பொறுத்தமட்டில் பெரும்பான்மை சொல்லுக்குச் சொல் பொருள் கொண்டு தெளிவைக் காண முற்பட முட்டுப்பாடு ஏற்படும். சொல்லை இடம்மாற்றல், கொண்டு கூட்டல் முதலான உத்திகளின் வாயிலாகப் பொருள் காணும் சூழல் பெரும்பான்மை நிகழ்வதுண்டு.

**முதல் உரைகாரரின் கருத்து**

குறுந்தொகையின் முதல் பதிப்பாசிரியரும் உரையாசிரியருமான சௌரிப்பெருமாள் அரங்கன் முன்கூறிய விளக்கத்தோடு, விளக்கவுரையில், "விரல் கழாஅது கலிங்கம் உடீஇ" என்று மாறுக. விரல் கழுவும் கால அளவுள் பாகின் பதந்தவறுமாதல் கருதி விரல் கழுவாளாயினாள்" என்று கூறியுள்ளார்.

தலைவி குழம்பு செய்ய தயிரைப் பிசைந்து கொள்ளப்போகும் முன்பே அடுப்பில் பாத்திரத்தை வைத்து அதில் முன்னே இடவேண்டிய நெய் முதலான பொருள்களை இட்டிருக்கிறாள். தயிரைப் பிறகு பிசைகிறாள். எல்லாம் சேர்ந்து கூடிவரும் போது தயிரை ஊற்ற வேண்டும். ஆனால் சற்று தாமதாகிவிட்டது. இதனால் விரைவாகத் தயிரைப் பிசைந்த கையை ஆடையில் துடைத்துவிட்டு குழம்பு செய்கிறாள். இதைத்தான் "பாகின் பதந்தவறுமாதல் கருதி விரல் கழுவாளாயினாள் என்கிறார். அடுப்பில் புகை வருவதாலும் கையைக் கழுவாமல் தொடர்ந்து சமையல் வேலையில் ஈடுபடுகிறாள். இதுவே அவரின் கருத்தாக இருக்க முடியும்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**உ.வே.சாமிநாதையர்**

உ.வே.சாமிநாதையரும் தலைவி விரைவாகச் செய்யும் பொருட்டுக் கையை ஆடையில் துடைத்தாள் என்று எழுதியுள்ளார். ''விரைவில் அமைக்க வேண்டும் என்னும் விருப்பினாளாதலின் தயிர் பிசைந்த கையைத் துடைத்த ஆடையை'' என்று எழுதியது வரை சௌரிப்பெருமாளோடு ஒத்துப்போகின்றார். தொடந்து ''துடைத்த ஆடையைத் துவைத்தலை மறந்தாள்'' என்று பொருள் எழுதும் போதே முரண்படுகிறார். சௌரிப்பெருமாள் அரங்கன் 'கழாஅது உடீஇ' என்பதற்குக் கையைக் கழுவாமல் என்று பொருள் கொண்டதற்கு மாறாக உ.வே.சா. ஆடையைக் கழுவாமல் என்று மாற்றிப் பொருள் கொண்டுள்ளார்.

சமைத்துக் கொண்டே கையை ஆடையில் துடைக்கிறாள். பின் அந்த ஆடையை மாற்றாமல் இருக்கிறாள் என்று பொருள் எழுதியிருப்பது, பாடலின் ஒட்டுமொத்த கருத்தையும் வைத்துப் பார்க்கும் பொழுது ஏற்புடையதாகத் தோன்றினாலும், முழுவதுமாக ஏற்றுக்கொள்ள இடையூறு ஏற்படுகிறது. சமைத்து முடித்தவுடன் ஆடையை மாற்றாமல், கணவனுக்குப் பரிமாற வேண்டும் என்ற அவாவில், கையைத் துடைத்த ஆடையை அவள் மாற்றவில்லை என்று பொருள் கொண்டால் உ.வே.சா.வின் கருத்து ஏற்புடைத்தாகின்றது. "தன்னை மறந்து தலைவனை மகிழ்விக்கும் சால்பினள் தலைவி" என்று புலியூர்க்கேசிகன் கூறியிருப்பது நினைவிற் கொள்ளத்தக்கது.

கைப்பிடித் துணியில் துடைக்காமல், முற்றிய தயிர் பிசைந்த கையை ஆடையில் துடைத்ததால் ஆடையை மாற்றியிருக்க வேண்டும். ஆனால் அன்பின் மிகுதியால், கணவனின் வரைவை எதிர்பார்த்து (கணவன் அருகிலும் இருந்திருக்கலாம்), அவனுக்குப் பரிமாறும் ஆவலோடு இருப்பதால் மாற்றவில்லை எனும் கருத்து உ.வே.சா.வின் உரைவழிப் புலப்படுகின்றது. கைப்பிடித் துணி அருகில் இல்லாத பொழுது ஆடையில் துடைத்துக் கொள்ளுதல் என்பது இன்றும் அவ்வபோது நடைபெறும் வழக்கமே. ஆனால் இதற்கு மாறாக ''துடைத்துக்கொண்ட கையைத் துவையாதே உடுத்துக்கொண்டு; இதனால் அட்டில் ஆக்கும் பொழுது இப்படிக் கையைத் துடைப்பதும், கணவற்கு உணவு பறிமாறும் முன் அவ்வுடையை மாற்றிக்கொள்வதும் அக்கால மகளிரது இயல்பாதல் பெறப்படும். இவள் மாற்றுதற்கும் நினையாது கணவனை உண்பித்தலிலேயே கவனஞ் செலுத்துவாள்'' என்று இச்செயலை அக்கால மகளிரின் இயல்பு என்று புலியூர்க்கேசிகன் கூறுவது ஏற்றுக்கொள்ளத்தக்க வகையில் இல்லை. காரணம் அவரின் உரையின் இறுதிலேயே கூறப்பட்டுள்ளது. தலைவன் மீது கொண்ட அன்பின் மிகுதியைக் காண்பிக்கவே, அவளின் உடையை அழுக்காக்கி உள்ளத்தை தூய்மையாகக் காட்டுகிறார் கூடலூர்கிழார்.

உ.வே.சா.வின் கருத்தை அடியொற்றியே மு.சண்முகம் பிள்ளை, வி.நாகராசன், புலியூர்க் கேசிகன், தமிழண்ணல் ஆகியோரின் கருத்துக்கள் அமைந்துள்ளன. இவர்களுள்

E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com

புலியூர்க்கேசிகன் முன்னிருவரைவிட இக்கருத்து குறித்து சற்று விரிவான பதிவைத் தந்துள்ளது குறித்து மேற்சுட்டிக் காட்டப்பட்டது.

**பொ.வே.சோமசுந்தரனார்**

பொ.வே.சோமசுந்தரனார் சௌரிப்பெருமாள் அரங்கனின் கருத்தை ஏற்றுக்கொள்வதோடு, உ.வே.சா.வின் கருத்திற்கு மறுப்புரையும் கூறியுள்ளார். "மெல்விரல் கழாது, கழுவுறு கலிங்கம் உடீஇ" என்று கூறி, முதல் உரைகாரர் கருத்தோடு அவர் ஒத்துப்போவது போல் இருந்தாலும், அவரின் கருத்து மாறுபட்ட கோணத்தில் அமைந்துள்ளது. தன் கருத்தை ஆழமாகச் சிந்தித்துத் தெளிவுபடுத்தியுள்ளார்.

"தாளிதற்கிட்ட நெய் முறுக வெந்தமையின் தயிர் பிசைந்தவள் தாளித்தற்கெழுந்தாளாக. அப்போது உடுத்திய ஆடை நெகிழ்ந்தது. நெகிழ்ந்த ஆடையை உடுத்தற்கு விரலை நீரால் கழுவச் செல்லின் நெய் முறுகிப் பதனழியும். ஆதலின் விரலைக் கழுவாமலே நெகிழ்ந்த ஆடையை உடுத்திக் கொண்டு தாளிப்பாளாயினாள். கழுவுறு கலிங்கம் என்றது அவள் அப்போது உடுத்தியிருந்த ஆடை நன்கு தோய்த்துத் தூய்மை செய்யப்பட்டிருந்த ஆடை என்றவாறு. தூய்தாக உள்ள ஆடையைத் தயிர் தோய்த்த விரலாலே உடுக்க இசையார் ஆகவும், அடிசிலின் பதன் கெடாமைப் பொருட்டு அதனைச் சிந்தியாது உடுத்தாள் என்றவாறு. இங்ஙனம் கூறவறியார், தயிர் பிசைந்த கையைத் துடைத்த ஆடையைத் துவையாது உடுத்து என்று உரைவிரிப்பாயினர். விரல் கழாஅது கழுவுறு கலிங்கத்தை உடுத்தென்க" என்று தன்கருத்தையும் மாற்றுக்கருத்தாக உள்ள கருத்தையும் பகர்ந்துள்ளார்.

ஆடையை உடுத்தி என்பதற்கு மாறாக உடுத்தியிருந்த ஆடையைச் சரிசெய்து கொண்டு என்று எழுதியுள்ளார். ஆனால் சௌரிப்பெருமாள் அரங்கன் போல் 'கழாஅது' என்பதை விரல்களுக்கு அடையாக்கியே கூறியுள்ளார்.

**ரா.இராகவையங்கார்**

மேற்கூறிய உரைகாரர்கள் 'கழாஅது' என்பதை உடைக்கும், விரலுக்கும் உரிய சொல்லாக்கிக் கூறியுள்ள நிலையில், அப்பதத்தைத் தலைவியின் உடலுக்குக் கொண்டு சேர்க்கிறார் இராகவையங்கார். இதுவரை பார்த்த கருத்துக்களில் இருந்து முற்றிலும் வேறுபட்ட பார்வையில் தனது உரையை அமைத்துள்ளார் அவர். அதாவது அழுக்குற்ற ஆடையை உடம்பு கழுவாமல் உடுத்திச் சமைத்தாள். "உடம்பு குளியாதது, உடை கழுவாதது" என்று விளக்கம் தருகிறார். வெளியில் சென்ற கணவன் வருவதற்கு முன்பு அவனுக்குப் பிடித்தமான குழம்பைச் சமைக்க வேண்டும் என்ற எண்ணத்தில் அழுக்கான ஆடையோடு குளிக்காமல் கூட சமையல் செய்கிறாள். உணவு சமைப்பதில்தான் அவள் கவனம் முழுதும் இருந்துள்ளது என்பது அவரின் கருத்து.

இவர் கூறுவது நடைமுறையில் இருக்கும் பழக்கமே. ஆனால் 'கழுவுறு' என்பதற்கு



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



'கழுவற்கு உற்ற ஆடை' அதாவது துவைக்காமல் அழுக்காக உள்ள ஆடை என்று பொருள் கொண்டுள்ளது ஏற்புடைத்தாக இல்லை. முன்னர் 'கழுவுறு' எனும் சொல் 'தூய்மையான, வெளுக்கப்பட்ட, கழுவப்பட்ட' எனும் பொருண்மைகளிலேயே வந்துள்ளதையும், முன்னால் எழுதப்பட்ட உரைகளையும் வைத்துப் பார்க்கும் பொழுது இவருடைய உரை பொருத்தமுடையதாக அமையவில்லை. 'பிசைந்த மெல்விரல் கழாஅது உடீஇ' என்பதுமாம் என்று அவரே பின் பகுதியில் கூறியிருப்பது, 'விரல்களைக் கழுவாமல் உடுத்தி' எனும் கருத்திலும் அவர் உடன்படுகின்றார் என்பதைக் காட்டுகின்றது.

**தமிழண்ணலும் ச.வே.சுப்பிரமணியனும்**

தமிழண்ணலின் கருத்து உ.வே.சா.வின் கருத்தை அடியொற்றியே அமைந்துள்ளது என முன்னர் கூறப்பட்டது. ஆனால் ஆடையைத் துவையாது உடுத்துக் கொண்டாள் என்று ஏனையோர் சொன்னதைப் போல் சொல்லாமல் 'ஆடையில் பட்ட அழுக்கைக் கழுவாது' என்று சிறு விளக்கத்தைக் கூடுதலாகத் தந்துள்ளார். இது உ.வே.சா.வின் கருத்தை சற்று விரித்துரைக்கும் வகையில் அமைந்துள்ளது. மேலும் கலிங்கம் என்பதற்குப் பிற உரைகளில் சொல்லப்படாத புதியதொரு விளக்கத்தைத் தமிழண்ணல் கொண்டிருப்பது இன்னுமொரு புதுமையாக அமைகிறது. பிற உரைகாரர்கள் எல்லாம் 'கலிங்கம்' என்பதை ஆடை என்றே எடுத்துக்கொண்டுள்ளனர். ஆனால் தமிழண்ணல் மட்டும் "கலிங்கம் - கலிங்க நாட்டில் இருந்து வந்த பட்டுச்சேலை" என்று உரை கண்டுள்ளார்.

"கையை ஆடையிற் துடைத்தது செல்வ மிகுதியால் வந்த இயல்பு" என்ற உ.வே.சா.வின் கருத்தை அடியொற்றி தலைவி உடுத்தியிருக்கும் ஆடையைப் பட்டாடை என்று கொண்டார் போலும். பட்டாடை என்று கொண்டாலும் அது தலைவியின் அன்பை மிகுத்துக் காட்டும் கருவியாக அமையும் எனலாம். ஆனால் கலிங்க நாட்டில் இருந்து வந்த பட்டுச்சேலை என்று உரை கொண்டு 'கலிங்கம்' எனும் சொல்லை இங்கு ஆகுபெயராகக் கொள்கிறார். 'காஞ்சிபுரம் உடுத்தினாள், ஆரணி உடுத்தினாள்' என்பவற்றைப் போன்று. இது பொருத்தப்பாடுடையதா என்பதை ஆராயவேண்டும்.

கலிங்கம் என்பதற்குக் கழகத் தமிழ் அகராதி "போர்வை, ஊர்க்குருவி, கண்மருந்து, குதிரை, சீலை, நாடுகள் ஐம்பத்தாறில் ஒன்று, மிளகு…" (2004, ப. 294) முதலான பல பொருள்களைத் தருகிறது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி,

"கலிங்கம் - ஆடை (கலிங்கம் பகர்நரும், மதுரை.513),

ஒரு காலத்தில் கலிங்கம் ஆடை நெசவுக்குப் பெயர் பெற்றிருந்தது. அதனால் ஆகுபெயராய்க் கலிங்கம் என்பது ஆடையைக் குறித்தது என்று கூறி, அடுத்ததாகக் கலிங்கம் - பட்டாடை (மணிமுடி கலிங்க மாலை… மேருமந்.123)" என்று விளக்கம் தந்துள்ளது. (ப.553)



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



அதே சமயத்தில் சங்கஇலக்கியச் சொல்லடைவு 'கலிங்கம்' எனும் பதம் பாட்டிலும் தொகையிலும் பயின்று வரும் இடங்களை எல்லாம் பட்டியலிட்டுள்ளது. (ப.465) அவற்றைப் புரட்டிப்பார்த்தவற்றுள் சில,

**"நலம்பெறு கலிங்கத்துக் குரங்கின் மிசை யசைஇய ஒருகை"**

**(திருமுருகாற்றுப்படை,109)**

**"இழைமருங் கறியா நுழைநூற் கலிங்கம்" (மலைபடுகடாம்,561)**

**"கலிங்கம் பகர்நரும்.." (மதுரைக்காஞ்சி, 513)**

**"ஒண்பூங் கலிங்க முடீஇ நுண்பூன்" (புறநானூறு,383;11)**

இவ்வடிகளுள் 'கலிங்கம்' எனும் சொல் ஆடை, நுண்ணாடை, மெல்லிய ஆடை, புடவை எனும் பொருண்மையிலும்,

**"நூலாக் கலிங்கம் வாலரைக் கொளீஇ" (பதிற்றுப்பத்து,12;21)**

எனும் பதிற்றுப்பத்து அடி மட்டும் 'பட்டாடை' எனும் பொருளைத் தருகிறது என்பதை "நூலாக்கலிங்கம் - நூற்கப்படாத நூலாகிய பட்டாலியன்ற கலிங்கம்" (பதிற்றுப்பத்து, 2007, ப. 15) என்ற ஔவை துரைசாமிப்பிள்ளையின் உரைவழி அறியமுடிகிறது. எனவே 'கலிங்கம்' என்பதற்குப் 'பட்டாடை' என்று பொருள்கொள்வது சங்கஇலக்கியத்தில் அருகியே வந்துள்ளது. இதனால்தான் மேல் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியில் மேரு மந்திர புராணத்திலிருந்து சான்றுதரப்பட்டுள்ளது போலும். எவ்வாறாயினும் 'கலிங்கம்' எனும் கிளவிக்குக் 'கலிங்கநாட்டிலிந்து வந்த ஆடை' என்று குறந்தொகை உரைகாரர்கள் மட்டுமின்றி, பிற நூல் உரைகாரர்களும் பொருள் கொள்ளவில்லை. எனவே தமிழண்ணல் 'பட்டாடை' என்று கொள்வதில் நெருடல் இல்லாவிட்டாலும் 'கலிங்க நாட்டிலிருந்து கொண்டுவரப்பட்ட ஆடை' என்று பொருள் வருவித்துள்ளது ஏற்புடைத்தாக அமையவில்லை.

இதுவரை பார்த்த உரைகள் எல்லாவற்றிலும் தலைவி விரல்களைக் கழுவாமல் ஆடையில் துடைத்துக் கொண்டாள் என்றே எழுதப்பட்டுள்ளன. ஆனால் ச.வே.சுப்பிரமணியனின் உரை இதற்கு மாறாக அமைந்துள்ளது. தலைவி விரல்களைத் தண்ணீரில் கழுவி ஆடையில் துடைத்துக்கொண்டு, அதனால் உண்டான ஈரத்தைப் பொருட்படுத்தாமல் அதே ஆடையை உடுத்திக்கொண்டாள் என்பது இவரின் கருத்தாக உள்ளது. தண்ணீரில் கையைக் கழுவிய பின்பு கையை ஆடையில் துடைத்தல் என்பது இயல்பான ஒன்றுதான். கைகளைக் கழுவிவிட்டு ஆடையில் துடைக்கும் போது ஆடை ஈரமாகும். ஆனால் அழுக்காகது. ஈரமும் விரைவில் காய்ந்து விடும். கையைத் துடைக்கும் பெண்கள் பெரும்பாலும் முந்தானையில் துடைப்பதே வழக்கம். அதற்காக உடையை மாற்றவேண்டிய அவசியம் ஏற்படாது. எனவே பாடலின் கருத்தோடு ச.வே.சு.வின் கருத்து இழையோடிச் செல்லவில்லை. "கையைக் கழுவுவதற்குள் பாகின் பதம் திரியும் என்பதால் கையைக் கழுவாமல் எழுந்தாள்" என்ற முந்தைய உரையாசிரியர்களின் கருத்தே பொருத்தமாக அமைந்துள்ளது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**‘உடீஇ’ ? ‘உடீஇக்’ ?**

‘உடீஇ’, ‘உடீஇக்’ எனும் இரண்டு சொற்களையும் உரையாசிரியர்கள் பாடமாகக் கொண்டுள்ளனர். சௌரிப்பெருமாள் அரங்கன், உ.வே.சா., இராகவையங்கார், மு.சண்முகம் பிள்ளை, தமிழண்ணல், புலியூர்க்கேசிகன் ஆகியோர் ‘உடீஇக்’ என்பதைப் பாடமாக அமைத்துள்ளனர்.

பொ.வே.சோமசுந்தரனார், வீ.நாகராசு, ச.வே.சுப்பிரமணியன் ஆகியோர் ‘உடீஇ’ என்பதைப் பாடமாக ஏற்றுள்ளனர்.

‘உடீஇ’ - நிரை நேர், ‘உடீஇக்’ - நிரை நேர் என இரண்டுமே புளிமாவாக அமைவதால் இவற்றைப் பாடமாக ஏற்றுக்கொள்வதில் நெருடல் ஏற்படவில்லை. ஆனால் வருமொழி (குவளை) வல்லினத்தில் இருப்பதால் ‘உடீஇக்’ என்று கொள்வதே உற்ற பாடமாகும். இதற்குச் சான்றாகக் கீழ்க்காணும் சான்றுகள் அமைகின்றன.

- **“முரண்கொ ளுருவி னிரண்டு உடீஇச்**
  **செந்நூல் யாத்து” (திருமுருகாற்றுப்படை, 230-231)**
- **“இரும்பே ரொக்கலொ டொருங்குட னுடீஇக்**
  **கொடுவாள்….” (பெரும்பானாற்றுப்படை, 470-471)**
- **“துரிவை மேகலை யுடீஇப் பரிவொடு” ( சிலப்பதிகாரம்,12;30)**
- **“குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன;” (திருக்குறள், 544;1)**
- **“வில்லைக் கவைஇக் கணைத்தாங்கு மார்பின்” (மதுரைக்காஞ்சி, 728)**
- **“மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து” (திருமுருகாற்றுப்படை, 296)**

இவ்வடிகளை வைத்துப் பார்க்கும் பொழுது ‘உடீஇக்’ எனும் பாடமே பொருத்தமானது என்பது புலனாகின்றது.

அடுத்ததாக, ‘உடீஇக்’ என்பதற்கு ‘உரீஇ’ என்பதை உ.வே.சாமிநாதையரும், ரா.இராகவையங்காரும் பாடபேதமாகக் காட்டிள்ளனர். ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட அனைத்து உரையாசிரியர்களும் ‘உடீஇக்’ அல்லது ‘உடீஇ’ எனும் இவற்றுள் ஏதேனும் ஒன்றை மட்டும் பாடமாகக் கொண்டுள்ளதால் ‘உரீஇ’ என்பது பொருந்தாப் பாடமாகின்றது. இச்சொல் “தீற்றி, வழித்து, வாரி, உருவி” (சங்க இலக்கிய அகராதி, பாட்டும் தொகையும், உகர வரிசை) எனும் பொருள்களைத் தருவதும் ‘உரீஇ’ ஏற்கத்தக்கப் பாடம் இல்லை என்பதை உறுதி செய்கிறது.

**முடிபுகள்**

“உள்ளதன் நுணுக்கம் ஆய்வு” எனும் கூற்றிற்கேற்ப ‘கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்” எனும் அடியை மட்டும் ஆய்வுக்குட்படுத்தி பெறப்பட்ட ஆய்வின் முடிபுகள் பின்வருமாறு அமைகின்றன.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



- முதல் உரைகாரரான சௌரிப்பெருமாள் அரங்கன், "தலைவி கையைக் கழுவாமல் ஆடையை உடுத்தினாள்" என்னும் பொருண்மையில் பொருள்கொண்டுள்ளார்.
- சௌரிப்பெருமாள் அரங்கன் போலவே, 'கழாஅது' என்பதை ஆடைக்குப் பொருத்திப் பார்க்கும் பொ.வே.சோமசுந்தரானர், 'ஆடை நெகிழும்போது அதைக் கையால் சரிசெய்கிறாள்' என்று சிறிது மாறுபட்டு நுட்பமாக விளக்கியுள்ளது பாடலின் சூழலை தெள்ளிதின் விளக்குகிறது.
- உ.வே.சாமிநாதையர் 'கழாஅது உடீஇக்' என்பதற்கு ஆடையைத் துவைக்காமல் எனப் பொருள் கொண்டுள்ளார். மு.சண்முகம்பிள்ளை, புலியூர்க்கேசிகன், வீ.நாகராசு, தமிழண்ணல் ஆகியோரும் இவ்வகையினரே. இவர்களுள் தமிழண்ணல் 'ஆடையில் பட்ட அழுக்கைக் கழுவாது' என சிறு மாற்றத்துடன்விளக்கம் தந்துள்ளது உ.வே.சா.வின் கருத்தில் இருந்த நெருடலைப் போக்கும் வண்ணம் அமைந்துள்ளது.
- 'மெல்விரல் கழாஅது', 'கலிங்கம் கழாது', 'உடல்கழாஅது' என்று மூன்று கருத்துக்கள் அமைந்தாலும் 'ஆடையில் தலைவியின் விரல்கள் பட்டன' என்பது பெரும்பான்மையோரின் கருத்தாக உள்ளது.
- எல்லோர் உரைகளிலிருந்து முற்றிலும் மாறுபட்டு அழுக்கான உடையோடு, குளிக்காமல் சமைத்தாள் என்ற ரா.இராகவையங்காரும் 'மெல்விரல் கழாஅது' என்பதை ஏற்றுக்கொண்டுள்ளதை அவருடைய உரைவழி அறியமுடிகின்றது.
- பிற உரையாசிரியர்கள் 'கலிங்கம்' எனும் சொல்லிற்குக் கொள்ளாத 'பட்டாடை' எனும் பொருளைத் தமிழண்ணல் கொண்டுள்ளது புதுமையானதாகும். அதே சமயம் 'கலிங்க நாட்டிலிருந்து வந்த பட்டாடை' என்று விளக்கியுள்ளது பொருத்தப்பாடுடையதன்று.
- தலைவி நீரில் கையைக் கழுவி, பின் ஆடையில் துடைத்துக்கொண்டாள் என உரை கூறியுள்ள ச.வே.சுப்பிரமணியனின் கருத்து ஏற்றுக்கொள்ளும் வகையில் இல்லை.
- உரைகாரர்களுள் சிலர் 'உடீஇக்' என்றும், சிலர் 'உடீஇ' என்றும் பாடம் கொண்டுள்ளனர். 'உடீஇ, உடீஇக்' இரண்டுமே யாப்பளவில் ஒன்றுபட்டாலும், 'உடீஇக்' என்பதே பொருத்தமான பாடமாகும். 'உரீஇ' எனும் பாடபேதத்தை உரையாசிரியர்கள் எவரும் பாடமாக ஏற்றுக்கொள்ளாததால் அது பிழையான பாடம் என்பது புலனாகிறது.

**துணைநின்ற நூல்கள்**


1. **இராகவையங்கார்,ரா.,(உ.ஆ)** - **குறுந்தொகை விளக்கம்**
   அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
   முதற்பதிப்பு - 1993.
2. **சண்முகம் பிள்ளை,மு.,(ப.ஆ)** - **குறுந்தொகை மூலமும் உரையும்**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்,
மறுபதிப்பு - 1994.

3. **சாமிநாதையர், உ.வே.,(உ.ஆ) - குறுந்தொகை**
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
(திருப்பனந்தாள் காசிமட நிதிய வெளியீடு),
முதற்பதிப்பு - 1983.

4. **சாமிநாதையர், உ.வே.,(ப.ஆ) - பத்துப்பாட்டு மூலமும் நச்சினாக்கினியர் உரையும்**
டாக்டர் உ.வே.சா. நூல்நிலையம்,
2, அருண்டேல் கடற்கரைச் சாலை,
பெசன்ட்நகர், சென்னை-600090,
எட்டாம் பதிப்பு, 2017.

5. **சாமிநாதையர், உ.வே.,(ப.ஆ) - புறநானூறு மூலமும் உரையும்**
கபீர் அச்சுக்கூடம்,
தியாகராச விலாச வெளியீடு,
ஐந்தாம் பதிப்பு, 1956.

6 .**சாமிநாதையர், உ.வே.,(ப.ஆ) - சிலப்பதிகாரம் மூலமும் அரும்பத உரையும் - அடியார்க்கு நல்லார் உரையுடன்**
டாக்டர் உ.வே.சா. நூல்நிலையம்,
2, அருண்டேல் கடற்கரைச் சாலை, பெசன்ட்நகர்,
சென்னை-600090, எட்டாம் பதிப்பு, 2008.

7. **சுப்பிரமணியன்,ச.வே., - சங்க இலக்கியம் - எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும் - தொகுதி-I (நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு)**
மணிவாசகர் பதிப்பகம், 1, சிங்கர் தெரு,
பாரிமுனை, சென்னை - 600018,
முதற்பதிப்பு, ஜூன், 2010.

8. **சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ.)- குறுந்தொகை மூலமும் உரையும்,**
திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
522, டி.டி.கே. சாலை, சென்னை.
மறுபதிப்பு, 2007.

9. **சௌரிப்பெருமாள் அரங்கன்,(உ.ஆ),- குறுந்தொகை விளக்கம்**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



| | | |
|---|---|---|
| **சந்திரசேகரன், நா., (ப.ஆ)** | | முல்லைநிலையம்,<br>9, பாரதிநகர் முதல்தெரு,<br>தி.நகர், சென்னை-600017, மறுபதிப்பு, 2008. |
| **10. தமிழண்ணல் (உ.ஆ)** | - | **குறுந்தொகை (மக்கள் பதிப்பு)**<br>கோவிலூர் மடாலயம், கோவிலூர் - 630307.<br>முதற்பதிப்பு, ஏப்பிரல், 2002. |
| **11. துரைசாமிப்பிள்ளை,<br>ஔவை சு., (உ.ஆ.)** | - | **பதிற்றுப்பத்து மூலமும் உரையும்**<br>திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த<br>நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,<br>522, டி.டி.கே. சாலை,சென்னை.<br>மறுபதிப்பு, 2007. |
| **12. நாகராசன், வி.,(உ.ஆ),** | - | **குறுந்தொகை விளக்கம்**<br>நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,<br>41பி,சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்,<br>அம்பத்தூர், சென்னை - 600098.<br>மூன்றாம் பதிப்பு - பிப்ரவரி, 2007. |
| **13. பரிமேலழகர் (உ.ஆ)** | - | **திருக்குறள் மூலமும் உரையும்**<br>சாரதா பதிப்பகம், சென்னை - 600018.<br>ஏழாம் பதிப்பு, பிப்ரவரி, 2006. |
| **14. புலியூர்க்கேசிகன்** | - | **குறுந்தொகை மூலமும் உரையும்**<br>சாரதா பதிப்பகம், சென்னை - 600014<br>மூன்றாம் பதிப்பு, ஆகஸ்டு, 2012. |
| **15. கழகப்புலவர் குழுவினர்** | - | **கழகத் தமிழ் அகராதி**<br>திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த<br>நூற்பதிப்புக் கழக லிமிடெட்,<br>522, டி.டி.கே.சாலை, சென்னை-18.<br>17 ஆம் பதிப்பு, 2002. |
| **16. இணையதளம்** | - | **tamilvu.org** (சங்க இலக்கியச் சொல்லடைவு,<br>செந்தமிழ்ச்சொற்பிறப்பியல் பேரகரமுதலி,<br>சங்க இலக்கிய அகராதி ஆகியவற்றின்<br>பார்வைக்கு மட்டும்) |


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# பழமொழிகள் கூறும் மருத்துவம்

**ப.கலைஅருணா**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
அதியமான் மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
சீனிவாசா நகர், ஊத்தங்கரை,
கிருஷ்ணகிரி-635207.

**தெளிவுரை**

அனுபவ அறிவைக் கனிந்த மொழியில் கூறுவதே பழமொழி. **'பழமையும் எளிமையும் இனிமையும் நிறைந்த பழமொழிகளைக் கொண்டு மக்களின் பண்பாட்டையும் நாகரிகத்தையும் அறியலாம்'**[1] என்று பழமொழியின் சிறப்பினைத் திருமதி கிருஷ்ணா சஞ்சீவி அவர்கள் குறிப்பிடுகின்றார். சிந்தனை களஞ்சியமாகவும், அனுபவப் பெட்டகமாகவும் விளங்கும் பழமொழிகள் பாமரர் நெஞ்சில் களங்கொண்டு படித்தவர் ஆய்வில் பாராட்டுப் பெற்றவையாகும். **"சிறந்த இலக்கியங்கள் அனுபவ முத்திரையும் சிறந்த சொற்செட்டும் உடையனவாய் விளங்க வேண்டும்"** என்பார் அறிஞர் இராதாகிருட்டிணன் இத்தகைய இலக்கணம் பழமொழிக்கு மிகவும் பொருத்தமாக அமைகின்றது. வாழ்க்கையின் இயல்பான போக்குகளையும் நீண்ட நெடுங்காலமாகப் பாமரரிடையே விளங்கும் அனுபவ அறிவையும் வாய்மொழி வாயிலாகச் சுருங்கிய சொற்களால் வழங்குவதே பழமொழியின் நோக்கமும் செயலும் ஆகும். பழமொழிகளில் கற்பனையின் பங்கு குறைவு. அனபவத்திற்கே அதிக இடம். எனவே, உண்மை அனுபவங்களின் உறைவிடமாகப் பழமொழிகளைக் கருதலாம்.

அவ்வகையில் பண்டைய மருத்துவர்கள் தம் மருத்துவ அனுபவ அறிவைப் பாதுகாக்கும் பெட்டகமாகப் பழமொழிகளைப் பயன்படுத்தினர். தமிழ்நாட்டுப் பழமொழிகள் தொகுப்பில் ஏராளமான **'மருத்துவப் பழமொழிகள்'** இடம் பெற்றிருப்பது இதற்குச் சான்றாகும். நூற்றுக்கு மேற்பட்ட பழமொழிகளை வகை – தொகை செய்து ஆய்வு நோக்குடன் அணுகினால் அரிய பல மருத்துவ உண்மைகளை உலகுக்கு அறிவிக்க முடியும்.

**தமிழ் மருத்துவக் கோட்பாடுகளைக் குறிக்கும் பழமொழிகள்**

இந்திய மருத்துவ முறைகள் (India Medicines) என்பவை ஆயுர்வேதம், சித்த, யுனானி மருத்துவ முறைகளைக் குறிக்கும். இவற்றுள் சித்த மருத்துவம், கி.பி. 5 ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர்ச் சித்தர்களால் தனிப்பட்ட முறையில் அக்கறையுடன் வளர்க்கப்பட்டதால் அப்பெயர் பெற்றது. தமிழகத்தில் மட்டுமே வளர்ந்து வாழ்ந்து வருவதால் இது 'தமிழ் மருத்துவம்' எனறும் வழங்கப்படுகிறது.

தமிழ் மருத்துவத்தில் பல கோட்பாடுகளைச் சித்தர் நூல்கள் விளக்கமாகக் குறிப்பிடுகின்றன. நூலில் உள்ள அக்கருத்துகள் பழமொழிகளில் பதிந்திருப்பது வியக்கத்தக்கதே! பெரும்பாலும் சித்தர்கள் நாட்டுப்புறங்களில் வாழ்ந்ததால், அவர்கள்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



நாட்டுப்புறங்களில் வாழ்ந்ததால், அவர்கள் பாமரர்க்குப் புரியும் வகையில் மருத்துவக் கோட்பாடுகளை எளிமைப்படுத்திக் கூறியிருப்பார்கள் போலும். வாய்மொழி வாயிலாக அவை பரப்பப்பட்டுப் பழமொழியாகி இருக்கக்கூடும். அவ்வகையில் பல பழமொழிகள் தமிழ் மருத்தவ நூலோர் கருத்துக்களில் சுருங்கிய வடிவமாகக் காட்சியளிக்கின்றன. **'**அண்டத்திலுள்ளது பிண்டத்திற்கும் உண்டு' இப்பழமொழி, *சட்டமுனி ஞானம்* எனும் சித்தர் நூலில் இடம்பெற்றுள்ள கீழ்க்கண்ட பாடலை அப்படியே எதிரொலிக்கிறது.

**அண்டத்திலுள்ளதே பிண்டம்**
**பிண்டத்திலுள்ளதே அண்டம்**
**அண்டமும் பிண்டமும் ஒன்றே**
**அறிந்து தான் பார்க்கையிலே....**

உலகம் என்பது தான் அண்டம் (Macrocosom) அதில் மனிதன் சிறிய பிண்டம். (Microcosom) இவ்வுலகம் ஐம்பெரும் மூலங்களின் கூட்டுறவால் ஆனது. மண், விண், வளி. தீ, நீர் ஆகிய ஐம்பெரும் மூலங்களின் சேர்க்கையால் விளங்கும் இவ்வுலகத்தைப் போலவே, மனித உடலிலும் இவ்வைம்பெரும் சக்திகள் இயங்குகின்றன. அண்டத்தில் இயங்கும் இவ்வைந்தும் பிண்டத்தில் வாதம். பித்தம், ஐ என்னும் மூன்று உயர்ச் சக்திகளாக இயங்குகின்றன. **'**விண்ணும் காற்றும்' இணைந்து வாதமாகவும், 'தீ' பித்தமாகவும், 'மண்ணும் நீரும்' இணைந்து 'ஐ' ஆகவும் பிண்டமாகிய இவ்வுடலில் இயங்குகின்றன.

அண்டத்தில் இயங்கும் இச்சக்திகள் அதனதன் அளவில் இயங்கும் வரை உலகில் துன்பம் ஏதும் ஏற்படுவதில்லை. அவற்றினளவில் மாறுபடும் போது பூகம்பம், புயல், வறட்சி, பெருமழை ஆகிய கொடும் துயறங்கள் எழுகின்றன. அதுபோல் பிண்டமாகிய உடலில் வாதா, பித்த, ஆகியன அதனதன் அளவில் இயங்கும் வரை உடல் துன்பமற்று நோயின்றி வளர்கிறது. இம்மூன்றும் பல்வேறு அகப்புற காரணங்களால் மாறுபடும்போது, உடலிநிலை மாறி நோய் வயப்படுகிறது. இக்கருத்தினை உள்ளடக்கியது தான், 'அண்டத்தில் உள்ள பிண்டத்திற்கும் உண்டு' என்பது பழமொழி. நோய் வருவதற்கும் தீர்ப்பதற்கும் உரிய காரணங்களில் உணவு முதலிடம் விகிக்கன்றது. அளவான உணவு வளமான வாழ்வைத் தருகின்றது. மிகையான உணவு உடலில் நோயைத் தருகின்றது. சிலவகை நோய்கள் உணவைக் கட்டுப்பாட்டிலேயே குணமாகி விடுகின்றன. இரட்டைப் பணி ஆற்றும் உணவு பற்றிய கோட்பாட்டினை இப்பழமொழி விளக்குகின்றது.

**நோயில்லா நெறியைக் கூறும் பழமொழிகள்**

உடலை நோய் வருமுன் காத்தலே நோயில்லா நெறியாகும். 'Prevention is better than cure' என்னும் ஆங்கில மருத்துவ பழமொழி நோயில்லா நெறியினை வலியுறுத்தும். உடலும் உள்ளமும் வாழும் சூழலும் தூய்மையாக இருப்பின் எவ்வித நோயும் மனிதனைப் பிடிக்காது. நோய்த் தடுப்பு என்பது தற்கால மருத்துவத்தில் ஒரு பிரிவாகக் கற்பிக்கப்படுகின்றது. ஆனால்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



பாமரரிடையே நிலவும் தமிழ்நாட்டுப் பழமொழிகள் பல நோயில்லா நெறியை உணர்த்துபவையாக உள்ளன.

நாம் உட்கொள்ளும் உணவிலிருந்து வரும் கழிவுகளை அவ்வபோது அகற்றாவிடில் மலச்சிக்கல் உண்டாகி நரம்புகள் வலிமை இழக்கும். எனவே, கழிவுகளை உள்ளடக்கக் கூடாது. இன்று உலகெங்கும் பரவலாகப் பரவி வரும் நரம்புத்தளர்ச்சி நோய்க்கு மலச்சிக்கலே மூல காரணம் அமெரிக்காவிலும் சோவியத் நாட்டிலும் உள்ள மருத்துவர்கள் மலச்சிக்கலை நீக்கியதன் மூலமே நரம்புத் தளர்ச்சியால் பாதிக்கப்பட்டவர்களில் 100க்கு 80 பேர் குணமடைந்ததாகத் தெரிகின்றது. எனவே இப்பழமொழி கூறுவதுபோல், நாள்தோறும் இருமுறையாகிலும் மலக்குடலைத் தூய்மை செய்வதன் மூலம் பல நோய்கள் வராமல் தடுக்கலாம்.

'அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் விஷமாகும்' என்பது அமிர்தமான பழமொழி ஆகும். நரை, திரையை ஒழித்து நீடிய நல்வாழ்வை நல்கும் அமிர்தத்திற்கே கட்டப்பாட்டினை விதிக்கும் இப்பழமொழி, காதல் இன்பத்திற்கும் பொருந்தும். விந்து எனப்படும் சக்தி அதிக போகத்தால் அதிகமாக வெளியேறும்போது, நரம்புத் தளர்ச்சி போன்ற நோய்கள் ஏற்படும். அதனால் தான் 'விந்து விட்டவன் நொந்து கெட்டான்' என்னும் பழமொழியும் தோன்றியது போலும். விந்துச் சக்தியை எவ்வளவுக் கெவ்வளவு கட்டுப்படுத்துகின்றோமோ அவ்வளவுக்குப் பல தீவிர நோய்கள் வராமல் தடுக்கலாம். எனவேதான் காதல் இன்பத்திற்கு வரையறை வகுக்க 'மாதம் இரண்டு' என்ற குடும்பநலத்திட்டம் வகுத்தவர் பாமர மக்கள். அதுவே பழமொழியாகிவிட்டது. நடைமுறையில் இதனைப் பின்பற்றுவது பெரிதும் இயலாது எனினும், நோய் வாராது நல்வாழ்வு வாழ விரும்புவர்க்கு வழிகாட்டும் பழமொழியாக இது விளங்குகின்றது எனலாம். இக்கால அறிவியலாரும் அதிகமான போகத்தால் உடலுக்குப் பற்பல நோய்கள் வருகின்றன என்று எச்சரிப்பது ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

**மருந்து முறைகளைக் கூறும் பழமொழிகள்**

பாமர மக்கள் பின்பற்றிய மருந்து முறைகள் பலவற்றைப் பழமொழிகளில் காணலாம். இக்கால மருத்துவர் இன்ன நோய்க்கு இன்ன மருந்துகள் என்று, மருந்துகளையும் நோய்களையும் இணைத்து அட்டவணைப்படுத்தி எளிதில் மருத்துவம் செய்வார்கள். மருத்துவக் குறிப்பு அட்டவணை (Therapeutic Index) என அழைக்கப்படும் இவ்வட்டவணை போல மருத்துவப் பழமொழிகள் பாமரர்க்குப் பயன்பட்டன.

'சளித் தொல்லையா? விக்ஸ் பார்முலா சாப்பிடுங்கள்' என்று இக்காலத்தவர் கூறுவது போல், நாட்டுப்புற மக்கள், 'இஞ்சிரசம் சளி போக்கும்' என்று கூறி இஞ்சிச் சுரசம் செய்து சாப்பிடுவார்கள். இரண்டு துண்டு இஞ்சியைத் தோல் நீக்கித் தூய்மை செய்து நசுக்கிச் சாறு எடுத்து அதனுடன் அச்சாறு அளவு நீர் கலந்து கொதிக்க வைத்து வடிகட்டி அதே அளவு தேன் கலந்து வைக்க வேண்டும். இதனையே 'இஞ்சிச் சுரசம்' என்பர். எனவே



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



இவற்றையெல்லாம் தொகுத்து அட்டவணை செய்தால், தற்கால மருத்துவக் குறிப்பு அட்டவணை போல அது அமையும். அவ்வளவு அரிய மருந்து முறைகளைத் தன்னகத்தே கொண்டு தன்னிகரற்று விளங்குகின்றன தமிழகத்து மருத்துவப் பழமொழிகள். "கழுதைப் பாலைக் குடித்ததாம் பிள்ளை சிரித்ததாம்" குழந்தைகள் பிறக்கும் போதே சில நோய்களின் அறிகுறியுடன் பிறக்கும். உள்ளங்கை, உள்ளங்கால் பகுதிகள் நீல நிறமாக இருப்பின் குழந்தை 'செவ்வாப்பு' என்னும் நோயால் பீடிக்கப்பட்டுள்ளதெனக் கண்டுப்பிடிப்பர். இந்நோய் வேகமாக வளரக் கூடியதாகையால் குழந்தை, குரல் கம்மல், இழுப்பு, சளித்தொல்லை போன்றவற்றால் துயருற்று அழும். எனவே, செவ்வாப்புப் பற்றிய அறிகுறிகள் தோன்றிய உடனே நாட்டுப்புற மக்கள் குழந்தைக்குக் கழுதைப் பாலைப் புகட்டுவார்கள். கழுதைப் பால் செவ்வாப்பை நீக்கும் ஆற்றலுடையதாகக் கருதப்படுகின்றது. கழுதைப் பாலினால் இந்நோய் நீங்கப்பெற்றுக் குழந்தை நலம்பெறும். இதனைக் குறிக்க எழுந்ததே மேற்கண்ட பழமொழியாகும். செவ்வாப்பு நோயால் பீடிக்கப்பட்டு அழும் குழந்தை, கழுதைப்பாலைக் குடித்து நோய்த் துன்பம் நீங்கிச் சிரித்தது என்பது இதன் பொருள்.

*ஆற்றுநீர் வாதம் போக்கும், அருவி நீர் பித்தம் போக்கும், சோற்றுநீர் இரண்டையும் போக்கும்.* இப்பழமொழி மூலம் நம் முன்னோர்களின் இயற்கை மருத்துவ அறிவு புலனாகின்றது. ஆற்று நீரிலும் அருவி நீரிலும் உயர்ந்த தாதுப் பொருட்களும் மூலிகைச் சத்துக்களும் நிறைந்து காணப்படும். தாமிரவருணி, வைகை, காவிரி. குங்கை நதிகளில் நீராடினால் சிலவகை நோய்கள் தீரும் என்பது சமய நம்பிக்கை மட்டும் நிறைவேறுவது இல்லை: சிறந்த மருத்துவப் பயனும் அதனால் விளைகின்றது என்பது இப்பழமொழி மூலம் தெளிவாகின்றது. நரம்புக் கோளாறுகள், வாதநோய் காரணமாக வரக்கூடியவை. இவற்றுக்கு ஆற்று நீரில் குறிப்பது நன்மை தரும். பித்தம் தொடர்பாக வருபவை மூளைக் கோளாறு முதலியன. பித்தம் தொடர்பாக வரும் நோய்களைப் போக்க அருவி நீரிலும் குளிப்பது நல்லது. ஆலும், வேலும் திருக்குறளும் நாலடியாரும் போல் இணைப்பிரியாது நன்மை அளிக்கின்றன எனபதனை இப்பழமொழி உறுதிப்படுத்துகின்றன.

வேப்பெண்ணெய் அரிய மருத்தவ பனுடையதாகும். 'வேப்பெண்ணெய் ஆபத்துக்குதவும்' மலேரியா போன்ற காய்ச்சல் வந்து உற்றபோது வரும் குளிர் ஜன்னி போன்றவற்றை தீர்க்கும் ஆற்றல் உடையது. பாரதத் தலைமையமைச்சர் திருமதி. இந்திராகாந்தி அவர்கள் இப்பழமொழியை மேற்கோளாகக் காட்டி, "பிற மருந்துகளைச் சார்ந்திருக்காமல் நம் நாட்டில் எளிதிலும் தேவையான அளவிலும் கைவசம் கிடைக்கக் கூடிய செல்வங்களைப் பயன்படுத்திக் கொள்வதன் மூலமே உண்மையான முன்னேற்றம் காண இயலும். என்று கூறியிருப்பது, மக்களிடையே பச்சிலை மருத்துவம் பற்றிய புதிய மறுமலர்ச்சி எண்ணத்தினைப் புகுத்தும்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**நோய்களைப் பற்றிக் கூறும் பழமொழிகள்**

பழமொழிகள் நோய்களுக்குப் பல்வேறு மருந்துகளைப் பற்றிக் குறிப்பிடுவது போல், பல்வேறு நோய்களைப் புலப்படுத்தும் அறிகுறிகளையும் அவற்றின் இயல்புகளையும் சுருங்கிக் கூறி விளங்க வைக்கின்றது. சில பழமொழிகள் நோயின் மூல காரணத்தைக் கூடக் குறிப்பிடுகின்றன. 'மாதா பிதா செய்தவை மக்களுக்கு' இப்பழமொழியை மேலோட்டமாகப் பார்க்கையில் நீதிக் கருத்தினைப் புலப்படுத்துவது போல் தோன்றும். ஆனால் மருத்துவக் கண் கொண்டு பார்க்கையில் தவறான வழியில் பாலுணர்ச்சிக்குப் பலியானவர்கள் அதன் காரணமாக வரக்கூடிய மேக நோயினைத் தாம் அனுபவிப்பதுடன், தம் சந்ததியினர்க்கும் பரவக் கூடிய அபாயத்தினை அளிக்கின்றார்கள். பெற்றோர்களின் தவறான செயல்களின் விளைவே, குழந்தைகள் பல பிறக்கும் போதே மேக நோயுடன் பிறப்பதற்குக் காரணம் ஆகும். குடிப்பழக்கம் சிகரெட் பழக்கம் காரணமாகக் குழந்தைகள் பிறவிக் குறைபாட்டுடன் பிறக்கின்றன.

'நீர்க்கோவை' என்னும் நோயினைச் 'சளி பிடித்துவிட்டது' என்று நாட்டுப் புறத்தில் கூறுவர். சளிநோய் நுரையீரல் கோளாற்றினால் வருவதாகும். சளி பிடித்ததோ! சனி பிடித்ததோ! இந்நோய்க்கு இதுவரை எந்த மருத்துவ முறையிலும் மருந்து கண்டுபிடிக்கவே இல்லை. இந்நோய் வந்தால் மூன்று நாள் கட்டாயமாக இருக்கும் என்று அகத்தியர் முதல் ஆங்கில மருத்துவர் வரை உறுதியாகக் கூறுகின்றனர் இருக்கும் மூன்று நாட்களிலும் இந்நோய் உண்டாக்கும் தொல்லை பொறுத்துக் கொள்ள இயலாததாகும். ஓயாத தும்மல், மூக்கில் நீர் ஒழுகல், இருமல், மண்டை வலி, காய்ச்சல் போன்ற தொல்லைகள் சளித் தொல்லையால் சங்கிலித் தொடர் போல் வருவனவாகும்.

எனவேதான், இதன் தொல்லையைச் 'சனி' என்னும் கிரகத்தின் கோளாற்றுக்கு ஒப்பிடுவர். ஒன்பது கிரகங்களில் சனிக் கிரகம் பிடித்து விட்டால் ஓயாத தொல்லைகள் அடுக்கடுக்காக வந்து அல்லல் படுத்தும். 'ஏழரை ஆண்டுகள் இதன் தொல்லை நீடிக்கும். எனவேதான் ஏழரை நாட்டுச் சனியன் பிடித்துவிட்டதா?' என்று கேட்பார்கள். அது போல், மூன்று நாட்கள் இருந்தாலும், சளிதொல்லை வந்துவிட்டால் ஏழரைநாட்டுச் சனியன் பிடித்தது போல் இருக்கும் என்பதனை மேற்கண்ட பழமொழியாக வடித்துவிட்டனர் நாட்டுப்புற மக்கள்.

சோகை என்பது இரத்தக் குறைவு காரணமாக வரும் நோய். 'தின்ற மண்ணுக்குத் தக்க சோகை' என்பது பழமொழி. இரத்தம் குறைவதற்குக் காரணம் ஈரல் கோளாறு ஆகும். வளரும் குழந்தைகளில் பல, பராமரிப்புக் குறைவு காரணமாகச் சுவரில் உள்ள சுண்ணாம்பு, மண், சாம்பல் ஆகியவற்றைத் தின்னும். இவை ஈரலில் சேர்ந்து கட்டி, வீக்கம் ஆகியவை உண்டாக்கிப் பசியை அடக்கி உணவு உட்கொள்ள முடியாத நிலைமையை உண்டாக்கும். உணவு குறைவுவதால் இரத்தம் குறைகின்றது இரத்தம் குறையச் சோகை உண்டாகின்றது. எனவே சோகைக்கு நேரடியான காரணம் மண், சாம்பல் போன்றவையே. இவற்றை எவ்வளவுக்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



கெவ்வளவு அதிகமாகக் குழந்தை சாப்பிடுகின்றதோ அவ்வளவுக்குச் சோகை உண்டாகும். தின்ற மண்ணுக்குத் தக்க சோகை என்று கூறும் இப்பழமொழி, சோகை நோய்க்குக் காரணம் மண்தான் என்று கூறியிருப்பது பாமர மக்களிடையே நிலவி வரும் உண்மையான மருத்துவ அறிவைப் புலப்படுத்தும்.

'சாப்பிணி மருந்தேற்காது'. மரண அறிகுறிகளைக் கொண்டுவிட்ட பிணி, எத்தகைய மருந்துகளை கொடுத்தாலும் ஏற்காது என்பதே இப்பழமொழியின் கருத்தாகும் தமிழ் மருத்துவத்தில் எந்த ஒரு பிணிக்கும் தீரும் நிலை, தீரா நிலைகளை வகுத்துக் கூறியுள்ளனர். தீராத அறிகுறிகளைக் கொண்டுள்ள நோய்களைச் சாப்பிணி என்பர். அதற்கு மருந்து கொடுக்கக் கூடாது என்று கூறுவர்.

**முடிவுரை**

பாமர மக்களின் வாயிலாக வாழ்ந்து வரும் பழமொழிகளில் கொடிய நோய்களைத் தீர்க்கும் மருத்துவ முறைகள் உள்ளன. முறையான அறிவியல் ஆய்வுக்கு அவற்றை உட்படுத்தினால் உலக மருத்துவ ஆய்வாளர்கள் தமிழகத்தைத்தேடி வரும் நாள் தொலைவில் இல்லை.

- குழந்தைப் பிணிகட்குக் 'கழுதைப் பாலையும்'
- பித்தம் தணிய 'வேலம் பட்டையையும்'
- மேகப் பிணிகள் விலக 'ஆலம்பட்டையையும்'

பயன்படுத்துமாறு கூறும் பழமொழிகள் போன்று தமிழில் நூற்றுக்கணக்கான பழமொழிகள் இன்றும் மதிக்கப்பெற்ற வாய்மொழி வாயிலாக வாழ்ந்து மக்களுக்கு நல்வாழ்வு அளித்து வருகின்றன. ஆய்வு நோக்கில் அவைகளை அணுகினால் அரிய மருந்துகளை இக்கால மருத்துவ உலகுக்கு அளிக்கலாம்.

**பார்வை நூல்கள்:**

1. ராமலிங்கம். கே.கே. - பதினெண்கீழ்க்கணக்கு கூறும் நல்லுரைகள்
2. இராமசாமி.பொ.இரா. - மருந்தாகும் இலக்கிய தாவரங்கள்,



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# சமகால வரலாறும் படைப்பாளர்களின் கருத்தியல் சார்பும்

**முனைவர் வி.காயத்ரி பிரியதர்ஷினி,**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
ஜி.டி.என். கலைக் கல்லூரி,
திண்டுக்கல்.

**முன்னுரை**

நாவல் என்ற வகைமை காலமாற்றத்திற்கு ஏற்ப பல வடிவ மாறுதல்களையும் பல பொருண்மை மாறுதல்களையும் கொண்டு இயங்கி வருகின்றது. அவற்றில் வரலாற்று நாவல்களுக்கு தனி இடமுண்டு. வரலாறும் புனைவும் கலந்த படைப்பாக வாசகர்களின் மனதைக் கவரும் விதத்தில் அமைந்திருப்பது அதன் தனிச் சிறப்பு. அதில் குறிப்பாகச் சமகால வரலாற்றைத் தன் நாவலின் அடிப்டைக் கருவாக கொண்ட படைப்பாளர்களால் உருவாக்கப்படும் படைப்புகளில் உண்மை வரலாறு என்பது தவிர்க்க இயலாத அம்சமாக மாறிவிடுகின்றது. சமகால வரலாற்று நாவல்களைப் பொறுத்தவரை வாழும் சாட்சியங்களும் ஆவணத்தரவுகளும் அந்நாவல்கள் படைக்க உறுதுணையாக அமைந்துவிடுகின்றன. இவ்வகை நாவல்களில் படைப்பாளர்கள் வரலாற்றோடு தம் கருத்தியலை வெளிப்படுத்தவும் இயலும் என்பதை அவர்கள் படைப்புகள் வாயிலாகவே அறிந்து கொள்ள முடியும். அவ்வகையில் ***சுதந்திரதாகம், பயணம்*** என்ற இரு நாவல்களின் படைப்பாளர்களும் சமகால வரலாற்றை நாவல் வடிவில் தர முன்வந்துள்ளனர். அதில் அவர்கள் தாங்கள் மையப்படுத்தும் வரலாற்றுத் தகவல்களோடு தாங்கள் சார்ந்த இயக்கங்களின் கருத்தியலையே முதன்மைப்படுத்துகின்றனர். சி.சு.செல்லப்பா இந்தியத் தேசியத்தையும் வேள் நம்பி திராவிட முன்னேற்றக் கழகம் முன்வைக்கும் ஆரிய எதிர்ப்பு சார்ந்த வரலாற்றையும் எவ்வாறு முன்வைக்கின்றனர் என்பதை ஆராய்வதே இவ் ஆய்வின் நோக்கமாகும்.

**இந்திய வரலாற்றில் குறிப்பிடப்பட்டுள்ள ஆஷ் கொலை**

இந்தியாவில் சுதந்திரத்திற்கான போராட்ட முன்னெடுப்பில், குறிப்பாக 1918இல் காந்தியடிகளின் அரசியல் பிரவேசத்திற்கு முன்பு, தீவிரவாதச் செயல்பாட்டின் வழிச் சுதந்திரப் போராட்டங்கள் அதிகம் நடைபெற்றன. இந்தியா முழுவதும் தீவிரவாதச் செயல்கள் பல நடைபெற்றன. அவற்றில் தமிழகத்தில் நடைபெற்ற தீவிரவாதச் செயல்பாடுகளில் முக்கியமானதாகக் கருதப்படுவது ஆஷ் என்ற ஆங்கிலேயரை வாஞ்சிநாதன் மணியாச்சியில் வைத்துச் சுட்டது. இந்திய வரலாற்றில் முக்கியமான தியாகச் செயலாக இது போற்றப்படுகிறது.

1911ஆம் ஆண்டு ஜூன் 17ஆம் நாள் திருநெல்வேலி மாவட்டக் கலெக்டர் ராபர்ட் வில்லியம் டி எஸ்கர்ட் ஆஷ் தன் மனைவி மேரி லில்லியம் பேட்டர்சனோடு கொடைக்கானலுக்குச் செல்லத் திருநெல்வேலி ரயில் நிலையத்திலிருந்து 10.35 மணிக்கு மணியாச்சியை வந்தடைந்தார். ‘சிலோன் போட்’ என்னும் ரயிலுக்காக மணியாச்சியில் காத்திருந்தனர். அப்போது திருநெல்வேலியில் இருந்து மணியாச்சி ரயிலில் வந்த பச்சை



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



கோட் அணிந்த ஒருவரும் (வாஞ்சி அய்யர்) மலையாளியைப் போல் இருந்த ஒருவரும் (சங்கர கிருஷ்ணய்யர்) அவர்களை எதிர்கொண்டனர். அப்போது பச்சைக் கோட் அணிந்திருந்த வாஞ்சி அய்யர் தன் கைத்துப்பாக்கியால் ஆஷைச் சுட்டார். அக்குண்டு ஆஷின் மார்பில் பாய்ந்தது. ஆஷைக் காப்பாற்றத் திருநெல்வேலி ரயிலில் ஏற்றிச் சென்றனர். மருத்துவமனை செல்லும் வழியில் கங்கைகொண்டான் அருகே ஆஷ் இறந்தார். ஆஷைச் சுட்ட வாஞ்சி அய்யர் அங்கே இருந்த கழிப்பறையில் தன் வாயில் துப்பாக்கியை நுழைத்துச் சுட்டுக்கொண்டு இறந்தார். அவர் சட்டைப்பையில் ஒரு கடிதம் இருந்தது:

> **“ஆங்கில சத்ருக்கள் நமது தேசத்தைப் பிடிங்கிக் கொண்டு அழியாத ஸனாதன தா்மத்தை காலால் மிதித்து துமசம் செய்து வருகிறார்கள். ஒவ்வொரு இந்தியனும் தற்காலத்தில் தேச சத்துருவாகிய ஆங்கிலேயனை துரத்தி தா்மத்தையும், சுதந்திரத்தையும் நிலைநாட்ட முயற்சி செய்து வருகிறான். எங்கள் ராமன், சிவாஜி, கிருஷ்ணன், குருகோவிந்தா், அா்ஜுனன் முதலியவா் இருந்து தா்மம் செழிக்க அரசாட்சி செய்து வந்த தேசத்தில் கேவல கொமாம்சம் தின்னக்கூடிய ஒரு மிலேச்சனாகிய ஜாா்ஜ் பஞ்சமனை (Geroge V) முடிசூட்ட உத்தேசம் செய்து கொண்டு பெருமுயற்சி நடந்து வருகின்றது. அவன் எங்கள் தேசத்தில் காலை வைத்த உடனேயே அவனைக் கொல்லும் பொருட்டு 3000 மதராசிகள் பிரதிக்கினை செய்து கொண்டிருக்கிறோம். அதைத் தெரிவிக்கும் பொருட்டு அவா்களில் கடையேனாகிய நான் இன்று இச்செய்கை செய்தேன் இதுதான் இந்துஸ்தானத்தில் ஒவ்வொருவனும் செய்ய வேண்டிய கடமை”**
>
> **(சிவசுப்ரமணியன் 2006: 82)**

வாஞ்சி அய்யரின் இந்தச் செயல் இன்று வரை இந்திய வரலாற்றின் பக்கங்களில் கொடுங்கோலனான ஆஷைக் கொன்று தானும் இறந்த பெரும் தியாகச் செயலாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஆனால் ஆஷ் பற்றியும் வாஞ்சி அய்யர் பற்றியும் சில மாறுபட்ட கண்ணோட்டங்களும் இருப்பதைக் காணமுடிகிறது. தொ.மு.சிதம்பர ரகுநாதன், ஆ.சிவசுப்ரமணியன் போன்றோர் இச்செயலை இந்துத் தேசியத்தின் வெளிப்பாடு எனக் கருதுகின்றனர். தாழ்த்தப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மக்களின் நலனைக் கருத்திற்கொண்டு உழைத்த ஆஷை ஆரிய மனோபாவம் கொண்ட பார்ப்பனனான வாஞ்சி கொன்றான் எனத் திராவிடச் சார்பாளரான என்.செல்வேந்திரன் கூறுகிறார். ஆஷ் கொலை இந்துச் சாதியம் என்ற ஆதிக்க மனோபாவத்தின் வெளிப்பாடே; இது பஞ்சமரோடு ஆஷை இணைத்துக் காணும் மனோபாவம் எனத் தலித்தியக் கண்ணோட்டத்தில் அன்புச்செல்வம் எழுதுகிறார். அண்மையில் “ஆஷ் அடிச்சுவட்டில்” என்று ஆஷ் குடும்பத்தோடு உரையாற்றியதை அடிப்படையாகக் கொண்டு இது பற்றி எழுதியுள்ளார் ஆ.இரா.வேங்கடாசலபதி.[16] இவற்றிற்கு மாறாகப் பெ.சு.மணி இந்தியத் தேசியக் கண்ணோட்டத்தில், வாஞ்சிநாத அய்யருடைய



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



கடிதத்தின் வார்த்தைகளையே மாற்றி யாருக்கும் விரோதம் ஏற்படுத்தாத வண்ணம் ஒரு வரலாற்று இருட்டடிப்பைச் செய்ய முயல்கிறார். இங்கே ***சுதந்திரதாகம்*** நாவலும், ***பயணம்*** நாவலும் ஆஷ் கொலையை எவ்வகையில் சித்திரிக்கின்றன என்று காண்பது அவசியமாகும்.

**ஆஷ் கொலை: மாறுபட்ட கண்ணோட்டங்கள்**

**இந்தியத் தேசியக் கண்ணோட்டத்தில் வாஞ்சிநாதன்**

இந்தியத் தேசியவாதிகள் இந்தியத் தேசியச் சிந்தனைக் கண்ணோட்டத்தோடேயே காலனிய ஆட்சியில் ஆஷ் கொலையை அணுகினர். வரலாற்றின் பக்கங்களில் ஒரு வீரதீரச் செயலாகவே இதை அணுகினர். இங்கு ஆ.சிவசுப்ரமணியன் தொ.மு.சி.ரகுநாதன் ஆகியோர் ஆஷ் கொலையைப் பற்றி எழுதியுள்ளது குறிப்பிடதக்கது. ஆஷ் கொலை, அதன் பின்னால் இயங்கிய இந்துத் தீவிரவாத அமைப்பு, வாஞ்சிநாதனோடு தொடர்புடையவர்கள், ஆஷ் கொலை தொடர்பாக நடந்த வழக்கு, அதிலுள்ள சாட்சியங்கள் என விரிவான ஒரு வரலாற்றுத் தேடுதலை அவர்கள் நிகழ்த்தி உள்ளனர்.

வாஞ்சி சார்ந்திருந்த ‘அபிநவ பாரத் சமிதி’, அவருக்குத் துப்பாக்கியைச் சுடப் பயிற்சி அளித்த வ.வே.சு.அய்யர், வாஞ்சியின் ‘ஆரியருக்கு ஒரு ஆப்த வாக்கியம்’ என்ற பிரசுரம், அது ஆஷ் கொலைக்குப் பின் போலீஸாரின் கையில் கிடைக்கப் பெற்றமை, அதனடிப்படையில் அபிநவ பாரத் சமிதியைச் சார்ந்த பலர் கைது செய்யப்பட்டமை ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றனர். நீலகண்ட பிரம்மச்சாரி, சங்கர கிருஷ்ணய்யர், ஹரிஹர அய்யர் எனப் பலரும் முதன்மைக் குற்றவாளிகளாகச் சேர்க்கப்பட்டனர். இவர்களில் தர்மராஜய்யர், வெங்கடேஸ்வர அய்யர் என்ற இருவரும் தற்கொலை செய்து கொண்டனர். மேலும், 1911 ஜுலை 11 அன்று ***வந்தே மாதரம்*** இதழை நடத்தி வந்த மேடம் காமா தன் இதழில் பின்வருமாறு எழுதினார்:

> **“இந்துஸ்தானத்திலிருந்து வந்த மணிமுடி தரித்த அடிமைகள் லண்டன் தெருக்களில் அணிவகுத்து வந்து, ராயல் சர்க்கஸின் கோமாளிகளாகப் பலியாடுகளைப்போல் இங்கிலாந்து மன்னரின் காலடியில் விழுந்து வணங்கிக் கொண்டிருக்கும்பொழுது நமது நாட்டின் தீரமிக்க இரு இளைஞர்கள் மணியாச்சியிலும், மைமன்சிங்கிலும் தங்கள் தீரச் செயல்களைக்காட்டி இந்துஸ்தானம் உறங்கிக் கொண்டிருக்கவில்லை என்று நிரூபித்துள்ளார்கள்.”**
>
> **(சிவசுப்ரமணியன் 2009: 70)**

வாஞ்சிநாதனின் இந்தச் செயல்பாடு இந்தியத் தேசியக் கண்ணோட்டம் கொண்டவர்கள் பலரது வரவேற்பையும் பெற்றது என்பது இதனால் புலனாகிறது.

**திராவிட இயக்கப் பார்வையில் வாஞ்சிநாதன்**

இந்தியத் தேசியக் கண்ணோட்டம் கொண்டவர்களின் பார்வையில் வாஞ்சிநாதன் புரட்சி வீரனாக இருக்கும்பொழுது திராவிட இயக்கத்தவரான செல்வேந்திரன் பார்வையில் வாஞ்சிநாதனின் செயலில் வெளிப்பட்டது பார்ப்பன ஆதிக்கமே.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



> **"ஆஷின் மனைவி தேர்வண்டியில் போய்க் கொண்டிருந்தபொழுது வழியில் தீண்டப்படாத சாதியைச் சார்ந்த பெண் ஒருத்தி பிரசவ வலி தாங்காமல் துடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தார். சாதி வெறி பிடித்த சமூகத்தில் மேல்சாதியினர் யாரும் அவளுக்கு உதவி செய்ய முன்வராததால் ஆஷின் மனைவி அப்பெண்ணைத் தம் வண்டியில் ஏற்றி, மேல்சாதியினர் தெருவைக் கடந்து மருத்துவமனைக்குக் கொண்டு போனார்"**
>
> **(செல்வேந்திரன் 2009: 9)**

ஆஷ் மற்றும் அவரது மனைவி மேரி திருநெல்வேலிப்பகுதியில் தாழ்த்தப்பட்ட மக்கள் பலரின் நம்பிக்கையைப் பெற்றவர்கள் எனவும், பள்ளிகள், சிறுவர் இல்லங்களுக்குப் பல உதவிகள் செய்தவர்கள் எனவும் கூறுகிற செல்வேந்திரன், வாஞ்சிநாதனின் செயலை ஒரு பார்ப்பன வெறியனின் செயலாகக் கூறுகிறார். திருநெல்வேலிப் பகுதியில் வழக்கிலிருந்த வாய்மொழிக் கதையை அடிப்படையாக வைத்து வாஞ்சியின் செயலைத் திராவிட நோக்கில் காண்கிறார்.

**தலித்தியப் பார்வையில் வாஞ்சிநாதன்**

அன்புச்செல்வம் ***ஆஷ் படுகொலை: மீளும் தலித் விசாரணை*** என்ற நூலில் வாஞ்சிநாதன் எழுதிய கடிதத்தினை அடிப்படையாகக் கொள்கிறார். 'ஜார்ஜ் பஞ்சமன்' என்பதில் உள்ள 'பஞ்சமன்' என்ற சொல் நேரடியாகத் தலித்துகளை சுட்டுகிறது. 'பஞ்சமன்' என்பதோடு 'கொமாம்சம் தின்னக்கூடிய' என்று வரும் கடித வாசகத்தின் வாயிலாகத் தலித்துகள் மேல் பார்ப்பனர்கள் கொண்ட விரோதப் போக்கைச் சுட்டுகிறார். காலங்காலமாகத் திருநெல்வேலிப் பகுதியில் நிலவிய சாதிய அடக்குமுறைகளின் தொடர்ச்சியாக இதைக் காண்கிறார்.

> **"சாதி ஒழுக்கத்தையும் கொடுமைகளையும் எதிர்த்து மதம் மாறிய கீழ்ச் சாதியினர் சமத்துவத்தைக் கேட்டனர். மேல்சாதி நிலக்கிழார்களும் ஆண்டைகளும் ஒடுக்கப்பட்ட அடிமைச்சாதியினர் மீது அதுவரை கொண்டிருந்த கொடும்பிடிப்பும் மேலாண்மையும் நெகிழத்தொடங்கின. இத்தகைய புதிய நிலை உருவானதற்குக் காரணமானவர்கள் கிறித்தவ மிஷனரிகளே என்று மேல்சாதி நிலக்கிழார்கள் ஆத்திரம் கொண்டனர்"**
>
> **(அன்புச்செல்வம் 2009: 60)**

**வாஞ்சிநாதன் தொடர்பான வரலாற்று ஆவணத்தை மாற்றல்**

பெ.சு.மணி மற்றும் தொ.மு.சி. ரகுநாதன் இருவரும் ஆஷின் கடித வாசகங்களில் சில மாற்றங்களைச் செய்துள்ளனர். இவர்களில் தொ.மு.சி.ரகுநாதன் தன் ***பாரதி: காலமும் கருத்தும்*** என்ற நூலில் மேற்கோளாகக் காட்டிய கடிதத்தில் பிழைதிருத்தங்கள் மட்டுமே செய்துள்ளார். ஒற்றுப்பிழை, எழுத்துப்பிழை இவைகளை மட்டுமே மாற்றி உள்ளார்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



பிடிங்கிக் கொண்டு - பிடுங்கிக் கொண்டு, துமசம் - துவம்சம், கொமாம்சம் - கோமாமிசம் இவைபோல் சில திருத்தங்களை மட்டுமே மேற்கொண்டிருக்கிறார்.

ஆனால், ***இந்தியத் தேசியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்*** என்ற நூலில் பெ.சு.மணி வாஞ்சிநாதன் கடிதத்தில் பெரிய மாற்றத்தையே செய்துள்ளார். அது "கேவலம் கோமாமிசம் தின்னக்கூடிய மிலேச்சனாகிய ஜார்ஜ் பஞ்சமனை (George V)" என்பது கடிதத்தின் அசல் வாசகம். ஆனால் பெ.சு.மணி,

> **"எருது மாமிசம் தின்னக்கூடிய ஒரு மிலேச்சனாகிய ஜார்ஜ் பஞ்சயனை George V" என மாற்றி உள்ளார். 'கொமாம்சம்' என்பதை 'எருதுமாமிசம்' எனவும், 'பஞ்சமன்' என்பதை 'பஞ்சயன்' எனவும்... (சிவசுப்ரமணியன் 2006: 84)**

மாற்றி உள்ளார். பஞ்சமர் என்பதன் பொருள் நாற்சாதிக்கும் கீழாக ஐந்தாம் நிலையில் உள்ள தாழ்த்தப்பட்டவர்கள் என்பதாகும். பஞ்சமர் என்பவர்கள் மாட்டிறைச்சி தின்னக்கூடியவர்கள், என்பதாலேயே சாதியில் கீழானவர்கள் என்பது காலங்காலமாக வழங்கி வரும் ஒரு நம்பிக்கையும், நடைமுறையும் ஆகும். இந்தச் சொற்களை வாஞ்சிநாதய்யர் பயன்படுத்துவதைக் குறிப்பிட்டால் தேசியச் சிந்தனை கொண்டவர் சனாதன உணர்வு கொண்டவர்கள் என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கும் என்பதால் அதை மாற்றவே பஞ்சயன் என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார் பெ.சு.மணி. பஞ்சயன் என்பவன் ஐந்தாமவன். அதாவது இது ஐந்தாவது ஜார்ஜைக் குறிக்கும் என ஆவணத்தையே மாற்றுகிறார். அரசியலே கொலைக்கானக் காரணமாகக் கூறுகிறார். அது கீழ்வரும் சான்று விளக்கும்.

**நாவல்களில் ஆஷ் படுகொலை**

சி.சு.செல்லப்பா எழுதிய ***சுதந்திரதாகம்*** நாவல் சாகித்திய அகாதமி விருது பெற்ற நாவலாகும். இந்நாவல் 1927 முதல் 1934 வரையிலான காலக்கட்டத்தை தன் நாவலின் காலமாகக் கொண்டுள்ளது. சுதந்திரப் போராட்டத்தில் காந்தியடிகள் பங்களிப்பு அதிகமாக இருந்தது இக்காலக்கட்டம் காந்தியடிகள் ஒரு வெகுஜனத் தலைவராக உருவெடுத்த காலக்கட்டமும் ஆகும். மேலும் நாவலாசிரியர் ஒரு சுதந்திரப் போரட்டத் தியாகி என்பதும் குறிப்பிடத்தக்கது. அகிம்சை வழியிலான போராட்டத்தை மையப்படுத்தும் இந்நாவல் அன்றைய இந்தியத் தேசியக் காங்கிரஸின் செயல்பாட்டை விளக்கவும் செய்கிறது. காந்தியடிகளின் கொள்கைகளைத் தன் கருத்தியலாகக் கொண்டுள்ள நாவலாசிரியர் ஆஷ் படுகொலை எவ்வாறு காண்கிறார் என்பது கவனிக்கத்தக்கது. மேலே குறிப்பிட்டுள்ள இந்தியத் தேசிய இயக்கத்தினர் வாஞ்சிநாதன் வரலாற்றை எவ்வாறு அணுகினார்களோ அதே நோக்கிலேயே வாஞ்சிநாதனைத் தேசிய வீரனாக இந்நாவலும் சித்திரிக்கிறது. வாஞ்சியின் செயல்பாட்டை எடுத்துக்காட்டி தமிழகத்தில் உள்ள புரட்சியாளர்கள் பலரும் செயல்பட்ட விதத்தையும், ஆஷைக் கொடுங்கோலனாகச் சித்திரிக்கும் மனோபாவமும் இவரிடம் தொனிக்கிறது. அரசியலே கொலைக்கானக் காரணமாகக் கூறுகிறார். இந்நிகழ்வு குறித்து கதைத் தலைவனான சிவராமன் மூலம் இவ்வரலாற்று நிகழ்வை வெளிப்படுத்தும் ஆசிரியர்,



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



ஆஷ்துரையைக் கொன்ற செயல் நியாயமானது என்று அவர் எண்ணுவதாகச் சித்திரிக்கிறார். அதே வேளையில் காந்தியடிகள் கொள்கையைப் பின்பற்றுபவர் மனத்தில் தீவிரவாத எண்ணம் வெளிப்படுவதே தவறு என்று அவர் தெளிவடைவதாகவும் காட்டுகிறார்:

> **"வாஞ்சி அவன் நெஞ்சில் அழுத்தமாக இடம்பெற்றிருந்தான். வாஞ்சி நினைவு இப்போதும் அவனைப் பரபரக்கச்செய்தது. இந்த ஆஷ்களுக்கு வாஞ்சிநாதன் தேவை என்று ஒரு கணம் எண்ணிவிட்டான். அடுத்த கணம் அவன் சமாளித்துக் கொண்டான். வாஞ்சி செய்தது திலகர் காலத்தில், தான் இன்று இருப்பது காந்தி காலத்தில் என்று தனக்குச் சொல்லிக்கொண்டான்"**
>
> **(செல்லப்பா 1997: 59)**

இங்கே அகிம்சை வழியினை முன்வைத்தாலும் வாஞ்சிநாதன் மிகப்பெரிய போராளி என்பதை ஆசிரியர் மறுக்கவில்லை. சுதந்திரத்திற்கான போராட்ட வழிமுறைகளில் இதுவும் ஒன்று என்ற கருத்தும் முன்வைக்கப்படுகின்றது. மறுக்க இயலாத தியாகச்செயலாகவும் படைப்பாளி காண்கிறார்.

***பயணம்*** **நாவலில் படுகொலை பற்றிய வரலாறு**

வேள்நம்பி இயற்றிய ***பயணம்*** நாவல் 1949 முதல் 1969 வரையிலான காலக்கட்டத்தைத் தன் நாவலின் காலக்கட்டமாக கொண்டுள்ளது. திராவிட முன்னேற்றக் கழகம் தொடங்கிய காலக்கட்டத்திலிருந்து அண்ணாத்துரை ஆட்சியில் அமர்ந்தது வரையிலான வரலாற்றை இந்நாவல் முன்வைக்கின்றது. திராவிட இயக்கத்தினரின் கொள்கைளை தன் கருத்தியலாகக் கொண்டுள்ள நாவலாசிரியர் ஆஷ் படுகொலையைத் திராவிட இயக்கக் கண்ணோட்டத்திலேயே இவ்வரலாற்றை அணுகுகின்றது. இந்நாவல் திராவிட இயக்கக் கருத்தியல் விளக்கமாக அமைந்திருப்பதோடு அன்றைய திராவிட முன்னேற்றக் கழகத்தின் எதிர் நிலையினின்று செயல்பட்ட காங்கிரஸ் இயக்கத்தை விமர்சனம் செய்ய இவ்வரலாற்றைப் பயன்படுத்துகின்றது. அன்றைய காங்கிரஸ் தீவிரவாத அமைப்பைச் சார்ந்த வாஞ்சிநாதனின் செயல்பாட்டை மறுவாசிப்பிற்கு உட்படுத்துகிறார். வாஞ்சிநாதன் பார்ப்பனியச் சிந்தனை அதிகம் கொண்டவராகவும் ஆஷ் நல்லவராகவும் சித்திரிக்கப்படுகின்றனர்.

> **"தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த பெண் பிரசவ வலியில் துடித்த போது அப்பக்கமாக வந்த ஆசும் அவர் மனைவியும் அவர்கள் வண்டியில் ஏற்றிச் சென்று மருத்துவ மனையில் அனுமதித்தனர். பிராமணர்கள் வசிக்கும் பகுதியில் பிரசவத்திற்காக அழைத்துச் சென்றதால் கோபங்கொண்ட வாஞ்சிநாதன் ஆஷைச் சுட்டார். தன் குலத்தார் வசிக்கும் பகுதியில் தாழ்த்ப்பட்ட பெண்ணை அழைத்துச் செல்வது தங்கள் குலமுறைக்கு இழுக்கு என்று கருதினார்" (பயணம் 2007:1367)**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



இதுவரை வீரச்செயலாக வரலாற்றில் கூறப்பட்ட தகவலை ஆசிரியர் பிராமணர்களின் ஆதிக்க வெறியாகச் சுட்டுகிறார். இவ்வரலாற்றை பாண்டியன் என்ற முதன்மைக் கதைமாந்தர் வாயிலாக வெளிப்படுத்துகின்றார்.

கொலையை அணுகியவரான செல்வேந்திரன் கருத்தை ஒட்டியே இந்நிகழ்வைச் சித்திரிக்கிறது. வாஞ்சிநாதன் செயல்பாட்டை ஆரிய வெறிச்செயலாகவே ஆசிரியர் காண்கிறார்.

**தொகுப்புரை**

வரலாறு தற்காலத்தில் மீள்வாசிப்புக்கு உட்படுத்தப்படுவதோடு அவற்றில் புனைவுகள் மற்றும் உண்மைத்தன்மை கூறுகள் எவ்வாறு அமைந்துள்ளன எனப் பல ஆய்வாளர்களால் ஆராயப்பட்டு வெளிப்படுத்தப்பட்டுள்ளன. அவ்வகையில் ஆஷ் கொலையும் வாஞ்சிநாதன் குறித்து வரலாற்றில் பதிவுசெய்யப்பட்டுள்ள தகவல்களும் குறித்த வரலாற்றுப் பதிவுகளோடு ஆய்வாளர்கள் வெளியிட்டுள்ள தகவல்களும் இன்று கவனத்தில் கொள்ளப்படுகின்றன. அதை தம் நாவல்களில் வெளிப்படுத்தும் ஆசிரியர்கள் தம் இயக்கச் சார்பு மற்றும் கருத்தியலை விளக்க அதைப் பயன்படுத்தி உள்ளனர். தேசியச் சிந்தனை கொண்டவர்கள் பார்வையில் வாஞ்சிநாதன் செயல் பிரிட்டிஷாருக்கு எதிராக செய்தி மிகப்பெரிய வீரச்செயலாகப் போற்றப்படுகின்றது. அதேவேளையில் திராவிட இயக்கச் சார்பு கொண்ட படைபாளர்கள் பார்வையில் வாஞ்சிநாதன் செயல் பார்ப்பன வெறிச்செயலாகச் சித்தரிக்கப்படுகின்றது.

**துணை நூற்பட்டியல்**


1. அன்புச் செல்வம். 2005. *ஆஷ் படுகொலை மீளும் தலித் விசாரணை.* சென்னை: புலம் வெளியீடு.
2. சிவசுப்பிரமணியன். 2006. *பஞ்சமனா பஞ்சயனா.* சென்னை.பரிசல் வெளியீடு.
3. சிவசுப்பிரமணியன். 2009. *ஆஷ் கொலையும் இந்தியப் புரட்சி இயக்கமும்.* நாகர்கோவில்: காலச்சுவடு பதிப்பகம்.
4. செல்லப்பா, சி.சு. 1997. *சுதந்திரதாகம்.* சென்னை. எழுத்து - வெளி வெளியீடு.
5. மணி, பெ.சு. 2003. *இந்தியத் தேசியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்.* சென்னை: மணிவாசகர் பதிப்பகம்.
6. ரகுநாதன், தொ.மு.சி. 2008.*பாரதி காலமும் கருத்தும்.* சென்னை: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.
7. வேங்கடாசலபதி, ஆ. இரா. 2012. *ஆஷ் அடிச்சுவட்டில்.* நாகர்கோவில்: காலச்சுவடு பதிப்பகம்.
8. வேள்நம்பி. 2007. *பயணம்.* சென்னை: சீதை பதிப்பகம்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# திரிகடுகமும் அறநெறியும்

**முனைவர் கோ. சரோஜா,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
கிருஷ்ணசாமி மகளிர் அறிவியல் கலை
மற்றும் மேலாண்மையியல் கல்லூரி,
கடலூர்.

## முன்னுரை

இருண்டகாலத் தமிழ் மக்கள் தம் பண்டை அறவொழுக்கங்களைப் போற்றி அவற்றின் வழியே நல்வாழ்க்கை நடத்தச் சிறு சிறு நீதி நூல்களை, எளிய வெண்பாக்களில் எழுதி வெளியிடலாயினர். அவ்வாறு தோன்றிய நீதிநூல்களே பதினெண் கீழ்க்கணக்கு நூல்களாகும். இந்நூல்கள் அறம், பொருள், இன்பம் என்னும் முப்பொருளையும் கொண்டு அமைகிறது. நீதி நூல்களில் காலத்தால் முற்பட்டதும், பொருட்சிறப்பால் உயர்ந்ததுமாகத் திகழ்வது திரிகடுகம்.

## கீழ்க்கணக்கு நூல்கள் உருவாகக் காரணம்

சங்க இலக்கியங்களில் மேற்கணக்கு நூல்கள் தோன்றி வளரத் தொடங்கிய பிறகு சங்கம் மருவியக் காலத்தில் தமிழர்கள் அல்லாத களப்பிரர்கள் ஆட்சி புரிந்தமையால் தமிழகத்தின் நாகரீகமும் சிதையத்தொடங்கின. அதனால் தமிழர்களிடையே அறம் என்பதும் சிதைந்தது. அந்த அறத்தினை நிலை நாட்ட எழுந்தவையே பதினெண்கீழ்க்கணக்கு நூல்களாகும். இத்தகைய அறம் சார்ந்த கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று திரிகடுகம் ஆகும்.

## அறம் விளக்கம்

அறங்கூறும் தமிழ் நூல்கள் மிகப் பலவாக உள்ளன. எனினும் அறம் என்னும் சொல் பொருளளவில் மிகவும் நெகிழ்ச்சியுடையது. அதைப் பகுத்துப் பொருள் காணுதல் எளிதன்று. பிறவிதோறும் மனிதனைப் பற்றிக்கொண்டு வரும் திவினையின் பயனாகிய அறியாமையை அறுத்தெறிவதே அறம் என்று விளக்கம் கூறப்படுகிறது.

கடமையைக் குறிக்கவும் அறம் என்னும் சொல் இலக்கியங்களில் பயன்படுத்தப்படுகின்றன. நல்வினை இயற்றலே அறமாகும். நல்வினையும் மனம், மொழி, மெய், ஆகிய மூன்றாலும் தூய்மையாக இயற்றுதல் வேண்டும். உண்மை .வாய்மை. மெய்மை இம்மூன்றும் அறத்தின் அடிப்படைகளாகும். இதனை.

***“உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்***
***உள்ளத்து எல்லாம் ஊன்”*** (குறள்-294)

என்பார் வள்ளுவர் உள்ளத்தில் எண்ணும் எண்ணத் தூய்மையே உண்மை. உள்ளத்தில் தூய்மை இருந்தால் தான் சொல்லும் சொல்லில் தூய்மை இருக்கும். சொல்லும் சொல்லின் தூய்மையே வாய்மை எனப்பெறுவது. உள்ளத்திலும். சொல்லிலும் உள்ள தூய்மையே நடத்தை, ஒழுக்கம் எனப்போற்றப்படுகிறது. இவ்வொழுக்கமே அறமாகிறது.


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com

**அறத்தை வலியுறுத்தியதன் அவசியம்**

அறத்தினை வலியுறுத்திடும் ஓர் வாழ்க்கை நூலாகவும் திகழ்கிறது காதல், வீரம், கொடை முதலிய சிறந்த உணர்ச்சிகளிலும் இயற்கையின்பத்திலும் ஈடுபட்டிருந்த புலவர்களின் உள்ளம் அடுத்த சில தலைமுறைகளில் நீதிகளைப் பாடும் நிலைக்கு மாறியது. வாழ்க்கையே ஒரு சிக்கலாக மாறிவிட்டமையால் சமுதாயத்தில் எப்படி எப்படி வாழ வேண்டும், என்னென்ன நீதிகளைப் போற்ற வேண்டும் என்று எடுத்துரைக்க வேண்டிய கடமை புலவர்களுக்கு ஏற்பட்டது.

**திரிகடுகம் சொற்பொருள் விளக்கம்**

கடுகம் என்பது உறைப்பு .கார்ப்பு என்று பொருள்படும். கடுக்கும் பொருளாகிய சுக்கு. மிளகு. திப்பிலிகளில் ஒன்றையோ அல்லது இம்மூன்றையுமோ கடுகம் என்ற சொல் உணர்த்துகிறது. சுக்கு, மிளகு. திப்பிலியாகிய மூன்றையும் ஒருங்கே குறிக்கும் போது இது திரிகடுகம் என்று சொல்லப்படுகிறது. இதனை,

*"உலகில் கடுகம் உடலின் நோய் மாற்றும்*
*அலகுஇல் அகநோய் அகற்றும். நிலைகொள்*
*திரிகடுகம் என்னும் திகழ் தமிழ்ச்சங்கம்*
*மருவு நல்லாதன் மருந்து"*

என்ற திரிகடுகத்தின் சிறப்புப்பாயிரம் உணர்த்துகிறது. எனவே திரிகடுகம் என்பது சுக்கு மிளகு திப்பிலி ஆகியவை எவ்வாறு உடல் நோயை குணப்படுத்தும் மருந்தாகிறதோ அதுபோல் திரிகடுகமும் மனிதனின் மனத்தினைப் பக்குவப்படுத்தி அதில் வரும் மூன்று மூன்று அறக்கருத்துக்கள் மனிதனை நெறிப்படுத்தும் ஓர் மருந்து நூலாகத்திகழ்கிறது.

**நூலின் சிறப்பு**

இந்நூலில் உள்ள ஒவ்வொரு வெண்பாவிலும் மூன்று மூன்ற அறங்கள் சொல்லப்படுகின்றன. இம் மூன்று நீதிகளையும் பின்பற்றி நடப்போர் உள்ளத்திலே ஒரு னோயும் இன்றி உவகையுடன் வாழ முடியும். வாழ்விலே குற்றம் வளராமல் மாசற்ற வாழ்வு நடத்த முடியும். இந்த உண்மையைக் கருதித்தான் இந்நூலுக்குத் திரிகடுகம் என்ற பெயர் வைத்தனர்.

இந்நூலில் கூறப்படும் அறங்கள் பல; அவை ஒவ்வொரு மக்களும் பின்பற்றக்கூடிய வகையிலே அமைந்திருக்கின்றன. மக்கள் முன்னேற்றத்திற்கு வழி காட்டுவனவாக இருக்கின்றன. அனுபவத்திலே கண்டறிந்த உண்மைகளாகவும் காணப்படுகின்றன.

**நன்மை தராதவை**

*"கணக்காயர் இல்லாத ஊரும், பிணக்கு அறுக்கும்"*
*"மூத்தோர் இல்லா அவைக்களனும்"*
*"பாத்து உண்ணும்"*


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



***"தன்மை யிலாளர் அயல் இருப்பும் -***

***இம்மூன்றும் நன்மை பயத்துல் இல்"*** (பா.10)

கல்வி கற்பிக்கும் ஆசிரியர் இல்லாத ஊர், வழக்கைத் தீர்த்து வைக்கின்ற அறிவு முதிர்ந்தவர் இல்லாத சபை, தமக்கு உள்ளதைப் பிறருக்கும் பகுத்துக் கொடுத்து உண்ணும் தன்மை இல்லாதவர்களின் பக்கத்திலே வாழ்வது, இம்மூன்றும் நன்மை தருவதில்லை என்கிறது.

**செல்வத்தை சிதைப்பன**

***"தன்னை வியந்து தருக்கலும்தாழ்வின்றிக்***
***கொள்ளே வெகுளி யெருக்கலும் - முன்னிய***
***பல் பொருள், வெ.்.கும் சிறுமையும் இம்மூன்றும்***
***செல்வம் உடைக்கும் படை மூன்றும்"*** (பா. 38)

ஒருவன் தன் செல்வத்தைச் இதையாமல் பாதுகாத்துப் பெருக்கிக்கொள்ள வேண்டுமானால் மேலே கூறிய மூன்று குணங்களையும் விட்டுவிட வேண்டும். தற்பெருமை கூடாது, கோபம் கூடாது, கண்ட பொருள்கள் மேலெல்லாம் ஆசைப்படக் கூடாது என்ற உண்மையைக் கூறுகிறது.

**பெண்ணின் கடமைகள்**

***"நல்விருந்து ஓம்பலின் நட்டாளாம்; வைகலும்***
***இல்புறம் செய்தலின் ஈன்றதாய் - தொல்குடியின்***
***மக்கள் பெறலின் மனைக்கிழத்தி, இம் மூன்றும்***
***கற்புடையாள் பூண்ட கடன்"– (பா.64)***

இல்லறத்திலே இன்பம் தவழ வேணடுமாயின் இல்லாள் கற்புடையவளாயிருக்க வேண்டும், தன் காதலனுக்குக் கூட்டாளியாகவும், தாயாகவும், மனைவியாகவும் இருந்து உதவி செய்வதே கற்புள்ள பெண்ணின் கடமை என்று கூறுகிறது.

**பெண்ணின் சிறப்புகள்**

***"கொண்டான் குறிப்பு அறிவான் பெண்டாட்டி" (பா. 96)***

என்ற இப்பாடலில் கணவனுடைய குறிப்பறிந்து நடப்பவளே மனைவி. அவள் பெய் எனச் சொன்னால் மழை பெய்யும் என்றும்.

***"பெண்பால் கொழுநன் வழிச்செலவும்"(பா. 98)***

என்ற இப்பாடலில் கணவன் குறிப்பின் வழியில் மனைவி நடத்தல் வேண்டும். அவ்வாறு நடக்கும் போது மாதந்தோறும் பெய்ய வேண்டிய மழை தவறாது பெய்யும் என்றும் கூறப்படுகிறது.

இதையே வள்ளுவரும்

***"தெய்வம் தொழாஅள் கொழநன் தொழுது எழுவாள்***



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



***பெய்எனப் பெய்யும் மழை"***

என்று தமது குறளில் கூறியுள்ளார். மேலும்

***"கற்புடையாள் பூப்பின்கண் சாரத் தலைமகனும்"*** (பா. 17)

என்ற இப்பாடலில் கற்புடைய மனைவியைக் குறித்த காலத்தில் சேராத ஆண்மகனின் நிலை வெளிப்படுத்தப்பட்டு உள்ளது. இங்கு பெண்மை என்பது ஆண்மைக்காகவே படைக்கப்பட்டது என்பதை உணரலாம். மேலும்,

***"விருந்தின்றி உண்ட பகலும். திருந்திழையார்***
***புல்லப்புடை பெயராக் கங்குலும்" (பா. 44)***

என்ற இப்பாடலில் மனைவியில்லா இரவு ஆண்மகனுக்கு நோயைத் தரும்.

***"மாசுஇல் சீர்ப் பெண்ணினுள் கற்புடையாள் -- பெற்றானும்"*** (பா. 16)

கற்புடைய மனைவியை பெற்ற ஆண் மகன் சாவா உடம்பை அடைவான். ஆகவே கற்புடைய மனைவியைத் துறத்தல் ஆண்மகனுக்கு பாவச் செயல். இதையே

***"எஞ்சாத நட்பினும் பொய் வழக்கும் நெஞ்சு அமர்ந்த***
***கற்பு உடையாளைத் துறத்தலும்"*** (பா. 97)

என்ற இப்பாடல் உணர்த்திற்று.

**அறமுணர்வோர் பண்பு**

வறியோர்க்கு உதவும் செல்வம், உலகப் பொருள்கள் நிலையற்றவை என்று அறியும் அறிவு, எவ்வுயிர்க்கும் கொடுமை செய்யாதிருத்தல், இம் மூன்றும் அறநெறியை அறிந்தவர்களின் பண்பாகும்.

**அரசியல்**

அரசன் நீதியுடன் நடந்தால் தான் நாடு செழிக்கும், குடிகள் இன்புறுவர் என்று கருத்தை இந்நூலாசிரியர் வற்புறுத்திக் கூறுகின்றார்.

***"தான் வாங்கிக் கொள்ளும் பொருளுக்கு ஆசைப் பட்டுக் குடிகளைக் கொடுமைப்படுத்தும் அரசன் உள்ள நாட்டிலே மழைபெய்யாது."*** (பா.50)

***"கொடுங்கோல் அரசன் பெருமையடைய மாட்டான்"*** (பா.66)

***"கொடுமைகளை நீக்கிக் குடிகளுக்கு நன்மை செய்கின்றவனே அரசன் ஆவான்"*** (பா.96)

இவ்வாறு அரசாட்சியைப் பற்றிக் கூறுகிறது இந்நூல்.

**பார்ப்பார்**

பார்ப்பாரைப் பற்றி இந்நூலிலே பலவிடங்கில் கூறப்பட்டிருக்கின்றன. வேதம் ஓதல், வேள்வி செய்தல், அறநெறி தவறாமை இவைகள் அந்தணர் கடமையாகும் என்பதை அறிவிக்கின்றன.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com

**பழக்கவழக்கங்கள்**

மனைவியைக் கோல்கொண்டு அடிப்பது அறியாமையாகும், மாட்டு மந்தைக்குள் கையில் கோல் இல்லாமல் செல்லக் கூடாது, குடிகாரன் குடும்பம் வாழாது, வாழ்வது போலக் காணப் பட்டாலும் விரைவில் அழிந்து விடும். கொடுக்கும் பணத்திற்கு வட்டி வாங்குவோன் பேராசைக்காரன், விலை மாதர்களின் சொற்களை நம்பக்கூடாது. அவர்களின் இன்பத்தை விரும்புவதால் துன்பந்தான் உண்டாகும்.

'பிறர் மனைவியை விரும்புதல் குற்றமாகும்' இவை போன்ற கருத்துக்களும் பல பாடல்களிலே காணப்படுகின்றன.

**நம்பிக்கைகள்**

அருந்ததியே சிறந்த கற்புடையவள், கற்புள்ள மகளிர்க்கு அருந்ததியே உதாரணம், நான்கு வேதங்களை அறிந்த வேதியர்கள் சொல்லும் அறங்களைப் பின்பற்றி நடப்பதே நல்லொழுக்கமாகும். குடிகளைத் துன்புறுத்தி வரி வாங்கும் அரசன், பொய் பேசும் மக்கள், குடும்பத்திலிருந்து கொண்டே விபசாரம் செய்யும் பெண், இவர்கள் உள்ள நாட்டில் மழை பெய்யாது. அறம் புரியாதவர்கள் நரகத்தை அடைவார்கள், உயிர்க்கொலை செய்தால் பாவம். இவை போன்ற பல நம்பிக்கைகள் தமிழ்மக்களிடம் குடிகொண்டிருந்தன. இவைகளைத் திரிகடுகப் பாடல்களிலே காணலாம்.

**நட்பு**

ஒருவருடன் நட்புக்கொள்ளும் பொழுது நன்கு ஆராய்ந்து அறிந்து நட்புக் கொள்ள வேண்டும் எனத் திரிகடுகம் வலியுறுத்துகின்றது.

***"பொய்வழங்கி வாழும் பொறியறையும் கைதிரிந்து***
***தாழ்விடத்து நேர்கருதும் தட்டையும் - ஊழினால்***
***ஒட்டி வினைநலம் பார்ப்பானும் இம்மூவர்***
***நட்கப்படாஅ தவர்"*** (பா.15)

என்ற திரிகடுகச் செய்யுள் அதற்குச் சான்றாக அமைகிறது. இதனை பொய் சொல்லி வாழும் தன்மையுடைய திருவல்லாதவனும், முறைதிரிந்து ஒருவன் தாழ்ந்த விடத்து அவனைத் தனக்கு நேராக என்று மூங்கில் போன்ற புரைப்பட்ட மனத்தையுடையவனும், ஒருவனைச் சேரும் முறையால் சேர்ந்து அவன் செயலில் தனக்குப் பயனை எதிர்பார்ப்பவனும் ஆகிய இந்த மூவரும் எல்லாராலும் நட்புக் கொள்ளப்படாதவர் ஆவர். இக்கருத்தை வள்ளுவர் அறிவுடையோர் நட்பு வளர்பிறை போல் வளர்ந்து நன்மைதரும் ஆனால், அறிவிலார் நட்பு தேய்பிறைபோல் தேய்ந்து தீமையுண்டாகும் என்று கூறுகிறார். எனவே, இவற்றிலிருந்து வாழ்க்கையில் பொய் கூறுதல், தாழ்ந்த சிந்தனையுடையனாயிருத்தல், எந்தபொருவனிடமிருந்தும் அப்பொழுதும், பயனை எதிர்பார்த்தல் என்னும் குணமுடைய ஒருவனிடம் நட்புக்கொள்வது வாழ்க்கைக்குப் பொருந்தாது என்பது விளக்கம் பெறுகிறது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**கல்வி**

கல்வி அனைவருக்கும் இன்றியமையாத ஒன்றாகும். கல்வியில்லாமல் ஒரு சமுதாயம் முன்னேற இயலாது. இக்கல்வி குறித்துக் காலந்தோறும் பேசப்பட்டு வருகிறது. குணித நூலினையும் இலக்கண நூலையும் கல்லாமல் இகந்து தள்ளாதே என்று நீதிநூலார் குறிப்பிடுவார். நூல்களில் உள்ள சொற்களை ஆராய்ந்து நுட்பமான பொருள்களைக் காணுதலும் நூல்களுக்குத் தகாத பயன் இல்லாத சொற்களை மற்றவர் விரும்பினாலும் கூறாமையும், உயிர்க்கு உறுதி பயக்கும் சொற்களைக் கீழ்க்குலம் அல்லாதவரிடத்துக் கூறுதலும் என்ற இம்மூன்றும் கற்றறிந்தவர் மேற்கொள் வேண்டிய கடமைகளாகும். இதனை,

***நுண்மொழி நோக்கிப் பொருள் கொளலும் நூற்குரலா***
***வெண்மொழி வேண்டினும் சொல்லாமை, நன்மொழியைச்***
***சிற்றினம் அல்லார்கண் சொல்லலும் இம்மூன்றும்***
***கற்றறிந்தார் பூண்ட கடன்*** (பா.32)

என்ற பாடலின் வழி எடுத்துரைக்கின்றது எனவே கற்றவன் உருவன் எந்த ஒரு நூலிலும் உள்ள சொற்களை ஆய்ந்து அதன் பொருள் நுட்பத்தைக் கூறுகையில் இலக்கியச் சுவை மேம்பட வாய்ப்புண்டு என்பதை எடுத்துரைப்பது வெளிப்படுகின்றது. மேலும், தகாத அல்லது பயனற்ற சொற்களை விரித்துரைக்க முனைவது பிறரிடம் அறியாமையை மிகுவிப்பதுடன் இலக்கிய ஆர்வத்தினைக் குறைத்துவிடும் என்பதுவும் இந்நூலின் வழிப் புலனாகின்றது.

**முடிவுரை**

திரிகடுகத்தில் உள்ள வெண்பாக்கள் அனைத்தும் சிறந்த கருத்தமைந்தவை படிப்போர் மனதிலே அப்படியே பதியக் கூடியவை. தமிழ் மக்கள் வாழ்க்கைச் சிறப்பைக் காண்பதற்கு இந்நூல் உதவி செய்கின்றது. அவர்களுடைய ஒழுக்கச் சிறப்பை விளக்கி உரைக்கின்றது. படித்தறிய வேண்டிய நீதி நூல்களிலே இந்நூல் ஒரு சிறந்த நூல்.

**துணைநூற்பட்டியல்:**

1. தமிழறிஞர் சாமி. சிதம்பரனார் – ‘பதினெண் கீழ்க்கணக்கும் தமிழர் வாழ்வும்’, இலக்கிய நிலையம், சென்னை, 1962.
2. இரா.கனகசுப்புரத்தினம் - ‘திருக்குறள்’, அறிவுநிதி பதிப்பகம், சென்னை, 1996.
3. கலைமாமணி . முனைவர் வி. முத்து. பேரா. இரா. ஏழுமலை. “பன்முக நோக்கில் பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்” ஹேமப்பிரியா பதிப்பகம் திண்டிவனம். 2018.


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com


# இனக்குழுச் சமுதாயத்தில் பகுத்துண்ணும் பண்பு

**கோ.சவிதா,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
அதியமான் மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
சீனிவாசா நகர், ஊத்தங்கரை.
கிருஷ்ணகிரி-635207.

**முன்னுரை**

சங்கப் பாடல்கள் ஒன்றுக்கொன்று மாறான இரு வேறுபட்ட சமுதாய வாழ்வியல்புகளைக் காட்டுவனவாய் உள்ளன. ஆதிப்பொதுவுடைமைச் சமூகத்தில் பங்கிட்டு உண்ணும் வழக்கமே இருந்திருக்க வேண்டும். இனக்குழுச் சமுதாயத்தின் அடையாளப் பண்புகளில் பொதுவில் வைத்து உண்ணுதல் என்பது மரபான ஒன்றாகும். அக்கால இனக்குழுத் தலைவனநின் முக்கிய செயல் ஆநிரை கவர்தல், மீட்டல் புரியும் வழக்கம். சீறூர் மன்னன் தம் சுற்றத்தாருடன் பக்கத்து ஊர்களுக்கு சென்று ஆநிரைகளைக் கவர்ந்து வந்து சுற்றத்தார்க்கு பகிர்ந்தளித்தல் வழக்கம். கால்நடைகளையே பண்டைய மக்கள் பெரிய செல்வமாகக் கருதியுள்ளனர். இன்றளவிலும் கூட சவ்வாது மலைகளில் வாழும் இனக்குழு மக்களான இருளர்கள், குறும்பர் போன்றோர் கால்நடைகளையே பெரிய செல்வமாகக் கருதுகின்றனர். அவர்கள் தாங்கள் சேமித்து வைத்த தானியக் கிடங்குகளில் இருக்கும் தானியங்களை வறுமையான காலக்கட்டத்தில் தம் சுற்றத்தாருடன் பகிர்ந்துக் கொள்வதை வழக்கமாகக் கொண்டுள்ளனர் இச்செய்திப் பண்டைய இனக்குழுச் சமுதாயத்தின் எச்சமாகவே காணப்படுகிறது எனலாம். இனக்குழுச் சமுதாயத்தில் பகுத்துண்ணும் பண்பு எவ்வகையில் இருந்தது என்பதை இலக்கியங்களில் உள்ள தரவுகளைக் கொண்டு ஆய்ந்து கூறும் விதமாக இக்கட்டுரை அமைகிறது.

**பகுத்துண்ணுதல்**

குறிஞ்சி, முல்லை மற்றும் பாலை ஆகிய நிலங்களில் சில வகைத் தானியங்கள் தவிர பெரிய அளவில் வேறெதுவும் விளைவதில்லை ஆதலால் இந்நில மக்களின் செல்வமாக விளங்கியவை ஆநிரைகளே என்று கூறலாம். காடும் மலையும் அனைவருக்கும் பொதுவானவை, வேட்டைக்குச் செல்லும் மக்களும் ஒரு குழுவாகவே சென்றார்கள். அதனால் வேட்டையில் கிடைத்த இறைச்சியைக் குழுவினர் அனைவரும் சமமாகப் பகிர்ந்துக் கொண்டார்கள் என்பதை,

> **“கானவன் எய்த முளவுமான் கொழுங்குறை**
> **தேம்கமழ் கதுப்பின் கொடுச்சி கிழங்கொடு**
> **காந்தள் அம் சிறுகுடிப் பகுக்கும்”** (நற்: 85, 8-10)

என்ற பாடலடியின் மூலம் அறியமுடிகிறது. பண்டைத் தமிழகத்தில் வாழ்ந்த இனக்குழுச் சமூகம் நெல்நெறிக்குறிய ஒரு சமூகம் என்பதை நிலைநாட்டும் வேறுபல தரவுகளும் உள்ளன.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



புறநானூற்றுப் பாடல் (331) ஒன்று முல்லை நிலத்துச் சிற்றூரில் காணப்பட்ட கூட்டு வாழ்க்கையையும், பொதுவுடைமைப் பாங்கினையும் காட்டுகிறது.

**"..........உள்ளது**
**தவச்சிறிது ஆயினும் மிகப்பலர் என்னாள்**
**நீள்நெடும் பந்தர் ஊண்முறை ஊட்டும்**
**இற்பொலி மகடூ" (புறம்: 331,6-9)**

இந்த முல்லைச் சமூகத்தின் இல்லத் தலைவி வீட்டில் இருந்த குறைந்த அளவுடைய தினையரிசியைச் சோறு சமைத்தாள் ஆனால் அதை உண்பதற்குக் காத்திருந்தோர் மிகப் பரவலாக இருந்தார்கள். அனைவரையும் வீட்டு முற்றத்தில் இருந்த பந்தலின் கீழ் வரிசையாக உட்கார வைத்து சமைத்த உணவை அனைவருக்கும் முறையாக தந்து உண்ணச் செய்தாள். அவளது பகுத்துண்ணும் இனக்குழுப் பண்பை வியந்து முதுகூத்தனார் அவளை 'இற்பொலி மகடூஉ' என்று போற்றியுள்ளார்.

**பாதீடு**

கவர்ந்து வந்த ஆநிரைகளை பங்கிட்டச் செய்தி பாதீடு என இலக்கியங்கள் கூறுகின்றன. (பதிற்-30) வெட்சித்திணை ஆநிரை கவரும் போரைக் குறிப்பிடுகின்றது. மதுரைத் தமிழ்பேரகராதி பாதீடு என்ற சொல்லுக்கு (காத்தல், செறித்தல், பங்கிடுதல் வெட்சித்துறை, வீரன் கொண்ட பசுநிரையை வீரர்க்கு பகுத்து கொடுத்தல்.)என கூறுகிறது. கொலைத் தொழிலில் வலிய வில்லினையுடைய வெட்சி வீரர் ஈடுபட்டனர். ஆநிரை கவர்ந்து வெற்றியுடன் திரும்பும் கொடுவில் எயினர் அவற்றைப் ஊர் மன்றத்திற்குக் கொண்டு வந்து சேர்ப்பார்கள். பின்னர் அவற்றைப் போரில் ஈடுபட்டவர்களின் செயலுக்கேற்ப பங்கிட்டுக் கொள்வார்கள் என்பதைப் பாதீடு எனும் துறையாகத் தொல்காப்பியம் கூறுகிறது. புறப்பொருள் வெண்பாமாலையும் இதனை,

**"ஒள்வாண் மலைந்தார்க்கு மொற்றாய்ந் துறைத்தார்க்கும்**
**புற்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும் விள்வாரை**
**மாறட்ட வென்றி மறவர்க்கும் - விள்வாரை**
**மாறட்ட வென்றி மறவர்தஞ் சீறூரிற்**
**கூறிட்டார் கொண்ட நிரை." (பு.வெ.1,14)**

பாடல் வரிகள் கூறுகின்றது. வீரர்கள் அவரவர் போராற்றலுக்கு ஏற்பவே அவரவர் பங்குப் பெற்றனர் என்பதை அறியமுடிகிறது. பொருளைச் சேர்த்து வைக்கும் வழக்கம் இனக்குழு மக்களிடையே இல்லை என்பதை, (நற்- 85) பாடலும் தேடிக் கொணர்ந்த பண்டங்களைப் பங்கிட்டுக் கொடுத்தலை,

**"சேறுகிளைத் திட்ட கலுழ்கண்ணூறல்**
**முறையி னுண்ணு நிறையா வாழ்க்கை**


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**முளவுமாத் தொலைச்சிய முழுச்சொலாடவர்**
**உடும்பிழு தறுத்த வொடுங்கால்ப் படலைச்**
**சீறின் முன்றிற் கூறுசெய் திடுமார்" (புறம் - 325:48)**

இப்பாடலடிகள் கூறுகிறது. (அகம்:70, 1-9) உணவு பங்கிடும் செய்தியைக் கூறுகிறது. கிடைக்கும் பொருள் எதுவாயினும் அவற்றைப் பாதீடு செய்துக் கொள்பவர்களாக பண்டைய குறிஞ்சி, முல்லை நில மக்கள் இருந்துள்ளனர். "பண்டைய இனக்குழுச் சமூகத்தில் ஒருபடித்தான பாங்கும், சமூக சமவுடைமையும் மிகுதிருந்ததால் அவர்களிடம் கூட்டுண்ணும் முறை இயல்பாக இருந்தது எனலாம்." (பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப- 65) வேடர்களின் இனக்கழு வாழ்க்கையை நன்கறிந்த புலவர்கள் சிறுகுடி மன்றத்தைக் குறிப்பிடும் போது 'கூட்டுண்ணும் புல்லென் மன்றம்' (நற் - 33) என்று குறிப்பிட்டுள்ளனர்.

குறிஞ்சி நில மக்கள் இயற்கையோடு இயைந்து இயற்யையை நம்பி வாழ்ந்தவர்கள். அவர்கள் வாழ்வுக்கு ஆதாரமாக இருந்த இயற்கையைத் தெய்வமாகப் போற்றினார்கள். அதர்குறிய ஓர் அறத்தையும் கொண்டிருந்தார்கள். அதுப்பற்றிக் கலித்தொகை கூறும் பாடல் வருமாறு,

**"சிறுகுடியீரே! சிறுகுடியீரே!**
**வள்ளி கீழ்விழா வரைமிசைத் தேன்கொடா**
**கொல்லை குரல் வாங்கி ஈனா மலைவாழ்நர்**
**அல்ல புரிந்து ஒழுகலான்" (கலி, 39:11-14)**

தீமைப் புரிந்து வாழ்ந்தால் மலையில் வாழும் நமக்குத் தேனும் கிடைக்காமல் போகும் எனும் அறம் சார்ந்த ஒரு தொன்மத்தைக் கலித்தொகைக் காட்டுகிறது.

ஆநிரைகளைக் கவர்ந்துவந்து பங்கிடுதல் பண்டைய இனக்குழுச் சமூகத்தில் ஆநிரைகளைக் கவர்வதிலும், மீட்டலிலும் தலைவனின் பங்கு முக்கியமான ஒன்றாகக் கருதப்படுகிறது.

> **"தரைநிலைச் சமுதாய அமைப்பில் அனைவரும் சம தகுதியைப் பெற இயலாத நிலையில் தலைவனே உயர்ந்த தகுதியைப் பெற்றிருப்பான். அவனே மக்கள் அனைவரையும் வழிநடத்தும் பொறுக்பைப் பெற்றவனாவான். அதனோடு பெரும்பாலான சமுதாயகளில் உணவுப் பொருட்களைப் பகிர்ந்து கொடுக்கும் உரிமையைக் கொண்டிருப்பான். விளை பொருட்கள் வேட்டைகளில் கிடைப்பவை இன்னும் பிற வழிகளில் கிடைப்பவை ஆகியவற்றை அவன் மக்களுக்குப் பகிர்ந்தளிப்பான். உணவுப் பொருட்களைத் தலைவன் மறுபங்கீடு செய்யும் முறையானது சொத்துடைமை அனைவருக்கும் பொதுவுடைமை என்ற கருத்தைச் சுட்டிக் காட்டுகிறது."**

**(பக்தவச்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 553)**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



இக்கருத்தை உறுதிப்படுத்தும் விதமாக சங்க இலக்கியங்களில் பல பாடல்கள் காணப்படுகின்றன. சங்ககால இனக்குழுச் சமூகத்தாரும் காட்டரண்களில் உள்ளவர்கள் அலறுமாறு ஆநழரைகளைக் கொன்று அவற்றைப் பெறிய கற்பாறையின் முடுக்கில் தசையை அறுத்துண்டனர். என்பதை,

**“இரவுக் குறும்பு அலற நூறி நிரைபகுத்து**
**இருங்கல் முடுக்கர்த் திற்றி கொண்டும்**
**கோலைவில் ஆடவர;”** (அகம் - 97: 4-9)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. மேலும் அகநானூற்றில் பல பாடல்கள் ஆநிரைகளைக் கவர்ந்து வந்து பங்கிட்ட செய்தியை (அகம், 70: 1-4, 10, 12, 89, 237, 280, 311, 393, 167, 284) புறநானூற்றில் (46, 168, 319, 320, 326, 330, 331, 332, 334) போன்ற பாடல்களும் சீறூர் தலைவன் ஆநிரை கவர்ந்து வந்து பாதீடு செய்த நிகழ்வினை,

**“முட்காற் காரை முதுபழ னேய்ப்பத்**
**தெறிப்ப விளைந்த தேங்கந் தாரம்**
**நிறுத்த வாயந் தலைச்சென் றுண்டு**
**பச்சூன் றின்று பைந்நிணம் பெருத்த**
**எச்சி லீரங்கை லிற்புறந் தியிரிப்**
**புலம்புக் கனனே புல்லணற் காளை**
**ஒருமுறை யுண்ணா வாவைப் பெருநிரை**
**ஊர்ப்புற நிறையத் தருகுவன் யார்க்கும்**
**தொடுத லோம்புமதி முதுகட் சாடி**
**ஆதரக் கழுமிய துகளன்**
**காய்தலு முண்டக் கள்வெய் யோனே”** (புறம்: 258)

இப்பாடல் மூலம் இனக்குழுத் தலைவன் ஆநிரைகளைக் கவர்ந்து வந்து மக்களுக்கு கொடுப்பதை இனக்குழுச் சமுதாயத்தின் அறமாக கருதியுள்ளனர் என்பதை அறியமுடிகிறது. இனக்குழுச் சமூகத்தினர் ‘தொன்மைப் பொதுவுடைமை’ யை மிகச் சிறப்பாகக் கண்டறிந்துள்ள முடிவாகும். சங்ககால இனக்குழுச் சமூகம் ஒரு பொதுவுமைச் சமூகமாக பொதுவுடைமைப் பண்புகளைப் பெரிதும் கொண்டிருந்ததாக அறியமுடிகிறது.

**முடிவுரை**

இனக்குழுச் சமூகத்தில் உற்பத்தி போலவே பகிர்வும் நுகர்வும்கூட உறவுமுறை சார்ந்தே இருந்தது என்று கூறலாம். பகிர்ந்துண்ணுதல் இதன் சிறப்பம்சமாகும். இனக்குழுப் பொருளாதாரம் பெரிதும் குழுச் சார்ந்த உறவுமுறை சார்ந்த உற்பத்தியாகவே காணப்படுகிறது. ஆநிரைகளை கவர்ந்து வரும் தலைவன் தம் சுற்றத்தார்க்கு பகிர்ந்தளித்தலும், வேட்டை மூலமும் வேந்துவிடுத் தொழில் மூலம் தலைவன் கொணர்ந்த



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



பொருள்களை தலைவி சுற்றத்தாருடன் பசித்திருந்து பகிர்ந்துண்ணச் செய்தியையும் பார்க்கும் பொழுது இது ஒரு உறவுமுறைச் சார்ந்து இருந்ததை அறியமுடிகிறது. இன்றுங்கூட மறுபங்கீடு என்பது கிராமத் திருவிழாக்களில், மயானக் கொள்ளை போன்ற விழாக்களில் அதிகம் விளைச்சல் பெற்றோர் கோயிலின் முன் வாரி இரைக்க இல்லாதோர் அவற்றை எடுத்துச் செல்லும் முறை காணப்படுகிறது. சங்ககாலத்திய இனக்குழுச் சமூகத்திற்குறிய பகுத்துண்ணும் பண்பு இக்கால முடியாட்சி அமைப்பிலும் இன்றுவரை தொடர்ந்து வந்துள்ளது. தொல் தமிழ்ப் பண்பாடு அழிந்துபோகாமல் ஒரு காலக்கட்டத்தில் முதன்மைக்கூறாக பார்க்கப்பட்ட ஒன்று அடுத்த காலக்கட்டத்தில் எச்சக்கூறுகளாக தொடர்வதை காணமுடிகிறது என்றே கூறலாம்.

**ஆய்வுக்குப் பயன்படுத்திய நூல்கள்**

1. அகநானூறு, ந.சி.கந்தையா, தமிழ்மண் பதிப்பகம், சென்னை, 2008.
2. இலக்கிய மானிடவியல், பக்தவத்சலபாரதி, அடையாளம் பதிப்பகம், 2014.
3. கலித்தொகை நச்சினார்கினியர் உரை, கழக வெளியீடு, 2007.
4. தொல்காப்பியம், பொருளதிகார மூலமும் உரையும், நச்சினார்க்கிணியர் பதிப்பகம், 2007.
5. நற்றிணை நானூறு, அ.நாராயணசாமி ஐயர் உரை, கழக வெளியீடு,
6. பண்பாட்டு மானிடவியல், பக்தவத்சலபாரதி, மணிவாசகர் பதிப்பகம், 1999.
7. பதிற்றுப்பத்து மூலமும் உரையும், சாரதா பதிப்பகம், 2008.
8. புறநானூறு தொகுதி 1, 2, ஔவை. துரைசாமிப்பிள்ளை உரை, தமிழ்மண் பதிப்பகம், 2008.
9. மதுரைத் தமிழ்ப் பேரகராதி தொகுதி-2, சந்தியா பதிப்பகம், சென்னை, 2004.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



# பாவண்ணன் சிறுகதைகளில் காலம்

**மு.சாதிக் அலி,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
சதக்கத்துல்லாஹ் அப்பா கல்லூரி,
திருநெல்வேலி.

**முன்னுரை**

காலம் பொன் போன்றது. எதார்த்த வாழ்க்கையில் மட்டுமல்ல. சிறுகதை இலக்கியத்திலும் தான். அதன் விளைவாகவே செய்ய வேண்டிய வேலைகளை உரிய காலத்தில் செய்யாமல் காலம் கடந்த பின்னர் வருத்தப்படும் மனிதர்களை சிறுகதை இலக்கியத்திலும். யதார்த்த வாழ்விலும் நாம் அதிகம் காண்கின்றோம்.

சிறுகதையின் தவிர்க்க முடியாத கூறுகளில் ஒன்று காலம், காலம், இடம் பெறாமல் ஒரு சிறுகதையைப் படைக்க முடியாது. சிறுகதையினுள் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ காலம் இடம் பெற்றிருக்கும். ந.பிச்சமூர்த்தி படைப்புகள் ஓர் ஆய்வு என்ற நூலில் டாக்டர் மீனாமேரி அவர்கள் “எந்த ஒரு படைப்பாளனும் தான் வாழ்கின்ற காலத்தை முழுமையாகப் புறக்கணித்து விடுவதில்லை. ஆவனை அறிந்தோ அறியாமலோ கூட வாழும் காலத்தின் சாயல் அவன் படைப்பில் படிந்திட வாய்ப்புண்டு” என்கிறார். மேலும் சிறுகதையின் காலம் பற்றி சி.சு. செல்லப்பா கூறும் போது “காலம் சிறுகதையை அனுபவ விநாடிகளாக, உணர்வு கணங்களாக மின்வீச்சு போல் எண்ணங்களாகத் தொனிக்க வேண்டும். சிறுகதையில் வெளியான அனுபவம், நமக்கு ஏற்பட்ட உணர்வு, இவை நம்மை பாதித்தும், ஐந்து நிமிடம் ஆயிற்றா, ஒரு நாளா, ஒரு மணியா என்று அவனுக்கு நினைக்கவே தோன்றாத படியான மனநிலையை ஏற்படச் செய்ய வேண்டும்” என்கிறார். கதை நிகழும் காலம், கதை நிகழ்ந்த காலம் என காலம் இரு வகைப்படும்.கதையின் தொடக்கம் முதல் முடிவு வரை உள்ள காலம் கதை நிகழும் காலமாகும். அது ஒரு சில நிமிடங்களாகவும் இருக்கலாம் அல்லது பல வருடங்களாகவும் இருக்கலாம். முன்பு எப்போதோ நடந்த நிகழ்வுகள் கதையிலுள்ள கதாபாத்திரங்கள் மூலம் தற்போது நினைக்கப்படுமானால் அது கதை நிகழ்ந்த காலமாகும். சிறுகதையில் இடம்பெறும் காலம் கதை நிகழ்ச்சிகளுக்கும் கதாபாத்திரங்களுக்கும் பொருத்தமானதாக இருக்க வேண்டும். கதை நிகழும் காலத்தின் அளவிற்கும் கதையின் பக்க அளவிற்கும் தொடர்பில்லை. ஒரு சில நிமிடங்களே கதை நிகழும் காலமென்றாலும் அக்கதை ஐம்பதுக்கும் மேற்பட்ட பக்கங்களை உடையதாகக் கூட இருக்கலாம்.

**பாவண்ணனும் காலம் பற்றிய செய்திகளும்**

எழுத்தாளர் பாவண்ணன் அவர்கள் பதினாறுக்கும் மேற்பட்ட சிறுகதைக் தொகுதிகள் உட்பட சுமார் நூற்று ஐம்பதுக்கும் மேற்பட்ட படைப்புகளைப் படைத்திருந்தாலும் அவருடைய சிறுகதைகள் சில மணி நேரங்களையும், சில நாட்களையும், சில வாரங்களையும், சில மாதங்களையும், சில வருடங்களையும் கதை நிகழும் கால அளவாகக் கொண்டுள்ளன.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



அவற்றுள் வெளிச்சம், பொம்மைக்காரி, கடலோர வீடு, பாக்குத்தோட்டம், இரண்டு மரங்கள், பச்சைக்கிளிகள், அடுக்கு மாளிகை, ஏழுலட்சம் வரிகள், நேற்று வாழ்ந்தவர்கள், வலை, நெல்லித்தோப்பு ஆகிய சிறுகதைத் தொகுதிகளில் இடம்பெற்றுள்ள சிறுகதைகளில் சில மாதங்களையும், சில வருடங்களையும் கால அளவாகக் கொண்டுள்ள சிறுகதைகளையே இக்கட்டுரை ஆராய்கிறது.

புதிதாக குடிவந்திருக்கும் வீட்டின் கீழ்தளத்தில் வசிக்கும் வீட்டின் சொந்தக்காரர் வளர்த்த நாய் (ஜுலி) என்னிடம் மட்டும் பழகாமலேயே இறந்து விட்டது என்பதை நினைத்து வாடகை வீட்டுக்காரர் வருத்தப்படுவதாக அமைந்துள்ள கதை **'உயிர்'** என்னும் சிறுகதையாகும்.

**"ஒரு மாசம் ஆன பிறகு கூட ஜுலி அதன் போக்கில் பிடிவாதமாய் இருந்தது"** (ப-31)

**"அடுத்த நாலு மாதத்தில் வாட்டசாட்டமாய் புஷ்டியோடு வளர்ந்திருந்தது ஜுலி"** (ப-32)

ஓவியப் பயிற்சி பள்ளியிலே பயிற்சி எடுக்கும் இருவர் ஒருவரையொருவர் காதலிக்கின்றனர். காதலியின் வீட்டிற்கு விஷயம் தெரியும் போது எதிர்ப்பு கிளம்பவே காதலன் சோகமாக இருக்கும் நிகழ்வைச் சொல்லும் சிறுகதை **'முகம்'** என்பதாகும்.

**"மூன்று மாசப் பயிற்சிக் காலமும் நான் இருந்த அணிக்கே அவளும் மாற்றிக்கொண்டு வந்ததும் பலவிதங்களில் இதற்குத் துணையாக இருந்தது"** (ப-65)

**"அடுத்த பல மாதங்களுக்கு அறையை விட்டு வெளியே எங்கும் நகரவில்லை"** (ப-70)

சிறுகுழந்தையின் மழலைப்பேச்சை பெற்றோர்கள் ரசித்துக் கேட்பதாக அமைந்துள்ளக் கதை **'புறா'** எனும் சிறுகதையாகும்.

**"கோபி பேச ஆரம்பிக்கிற வரைக்கும் சாயங்காலங்களில் வெளியே திரிவதை சந்தோஷமாய் எண்ணிக்கொண்டிருந்தேன்"** (ப-103)

**"கோபி பேசத் தொடங்கியதும் தான் இன்னொரு சந்தோஷமான உலகத்தைக் கண்டுபிடித்தேன்"** (ப-104)

வெளிநாட்டில் இருக்கும் தன் மாமா மகனிடம், டெய்லர் வேலை பார்க்கும் தன் கணவருக்கு கத்தரிகோல் வாங்கி வரச் சொல்லி கடிதம் போடுகிறாள் சுந்தரி. தரமான கத்தரிகோல் கிடைக்கவில்லையென வாங்காமல் வந்துவிட்ட மாமன் மகனை நினைத்து சுந்தரி வருத்தப்படுவதாக அமைந்துள்ளது **'வழி'** என்னும் சிறுகதை.

**"தீபாவளி இல்லனா பொங்கல், பொங்கல் இல்லனா தீபாவளி. அப்ப சம்பாரிச்சி வாங்கிக்ணா போச்சி. இதுக்கெல்லாம் அழலாமா சுந்தரி"** (ப-19)

கர்நாடகாவில் வசிக்கும் நான்கு தமிழர்கள் சேர்ந்து ஒரு தமிழ் செய்தித்தாளை தினமும் வாங்கி மாற்றி மாற்றி படிக்கிறார்கள். நாளடைவில் அவர்களின் குடும்பத்திற்குள்ளே


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



பிரச்சனைகள் வந்தவுடன் தமிழ் செய்தித்தாள் நிறுத்தப்பட்டது. அனைவருக்கும் வருத்தமளிப்பதாக அமைந்துள்ளது **கூட்டாளிகள்** என்னும் சிறுகதையாகும்.

**“திட்டமிட்டபடியே நாலைந்து மாதம் நடந்தது அதற்கப்புறம் தான் மெல்ல பிரச்சனை ஆரம்பமானது” (ப-68)**

ஒரு குறிப்பிட்ட ஏழைக்கு, தினமும் காசும், உணவும் கொடுத்து ஒருவன் உதவி வந்த நிலையில் அவ்வேழையின் மனைவியினுடைய உடல் நலம் சரியில்லாமல் போய் விடுகிறது. அந்நேரத்தில் உதவி செய்ய முடியாததை நினைத்து அவர் வருத்தப்படுவதாக அமைந்துள்ள கதை **“முடியவில்லை”** என்னும் சிறுகதையாகும்.

**“இது நடந்து மூன்று மாசமிருக்கும் அலுவலகத்தில் ஒரு சின்ன பிரச்சனை” (ப-78)**

**“நிஜமாகவே என்னிடம் பணம் இல்லை மாசக்கடைசியின் சிரமம் நுகத்தடியாய் அழுத்திக் கொண்டிருந்தது” (ப-78)**

வெளியூரில் வேலை செய்யும் அலுவலக ஊழியர் அலுவலகப்பணி காரணமாகத் தன் பக்கத்து ஊருக்கு வருகிறார். பணி முடிந்ததும் அலுவலக வாகனத்திலேயே தன் வீட்டிற்குச் சென்று திரும்பும் போது வாகனம் விபத்துக்குள்ளாகி அவன் மீது துறை ரீதியான ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படுகிறது. அதை நினைத்து அவன் வருந்துவதாக அமைந்துள்ள கதை **‘வழக்கு’** என்னும் சிறுகதையாகும்.

**“ஒரு மாசம் வேலைக்கு வரலை அவன் நொறுங்கின வண்டியை ஸ்டேசனில் இருந்து விடுவித்து சீர்படுத்த முப்பதாயிரம் செலவானது” (ப-97)**

அவ்வப்போது வேலைக்காக வேறு வேறு அலுவலகத்திற்கு தாவும் இளைஞன் நிரந்தரமான வேலை இல்லாமல் வருத்தப்படுவதாக அமைந்துள்ள கதை **‘வழிகாட்டிகள்’** என்னும் சிறுகதையாகும்.

**“ஓர் இடத்தில் நாலுமாதமோ ஐந்து மாதமோ இருப்பேன் அப்புறம் நீக்கி விடுவார்கள் அல்லது நானாக நின்று கொள்வேன்” (ப-45)**

தான் வேலை பார்க்கும் டீக்கடைக்கு தினமும் டீக்குடிக்க வருபவனை காதலித்து குடும்பம் நடத்திவிட்டு அவன் ஏமாற்றி சென்ற பின்பு வருத்தப்படும் பெண்ணைப்பற்றிய கதை **‘வழி’** என்னும் சிறுகதையாகும்.

**“ஆசைப்பட்டு ஆறேழு மாசங்களாய் குடித்தனம் நடத்தினாளாம். ஏதோ இன்டர்வியூ என்று சொல்லி விட்டு ஊர்பக்கம் போனவன் மாசம் இரண்டாகி விட்டதாம். தகவல் எதுவும் இல்லையாம்” (ப-102)**

தன்னுடன் பிறந்த தம்பியுடன் தன் மனைவி உறவில் இருக்கும் போது பார்த்து விட்ட கணவர் வேலையை வெளியூருக்கு மாற்றி வந்தாலும் அவர் மனைவியின் துரோகத்தை மறக்க முடியாமல் வருத்தப்படுவதாக அமைந்துள்ள கதை **‘சின்னம்’** என்னும் சிறுகதையாகும்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**"அடுத்த மாதம் சொந்தமாய் ஒரு மட்டை வாங்கினேன் உறுப்பினராய் பதிவு செய்து கொண்டேன்" (ப-168)**

**"நாலைந்து மாதங்கள் கடந்திருக்கும் துரைசாமியை ஒற்றைக்கு ஒற்றை ஆட்டத்தில் சந்திக்கும் அளவிற்கு நுணுக்கம் கூடி இருந்தது" (ப-171)**

தன்னுடன் நாடகத்தில் நடிக்கும் நடிகனை நம்பி சினிமாவில் நடிக்கும் ஆசையினால் அவனிடம் பணமும், நகையும் கொடுத்த நடிகையை அவன் ஏமாற்றி விடுகிறான். அதனை அறிந்த நடிகை வருத்தப்படுவதாக அமைந்துள்ள கதை **'ஆசை'** என்னும் சிறுகதையாகும்.

**"ஒரு நாளா ரெண்டு நாளா மாதக் கணக்கில் அப்டி நடந்திருக்கு" (ப-184)**

**"பிரமாதமா வந்திருக்குது, எவ்ளோ காலமாக புடிச்சது இதெல்லாம் நாலஞ்சி மாசம் இருக்கும்" (ப-194)**

பள்ளியின் விளையாட்டு மைதானத்திற்கு வேலி தேவை என்பதால் மாணவர்கள் கற்றாழை செடியை வேலியாக நட்ட நிகழ்வைக் கூறுவது **'வேலி'** என்னும் சிறுகதையாகும்.

**"ஒரு மாதம் வரையிலும் நாள் தவறாமல் நாங்கள் கற்றாழைகளைக் கொண்டு சென்று வேலி கட்டினோம் பெரும்பாலும் பச்சை பிடிக்கத் தொடங்கி விட்டன. (ப-90)**

போலி சான்றிதழ்களைக் கொடுத்து கல்லூரியில் விரிவுரையாளர் வேலைக்குச் சேர்ந்தவனை எதேச்சையாக கருத்தரங்கத்தில் பார்த்த அவன் நண்பன் போலிஸுக்கு தகவல் சொல்கிறான். சிறையிலடைக்கப்பட்ட போலி விரிவுரையாளர் நண்பன் மீது கோபமாக இருப்பதாக அமைந்துள்ளது **'வலை'** என்னும் சிறுகதையாகும்.

**"சிறைக்கு வந்து ஒரு மாதமாகி விட்டது மனசின் கொந்தளிப்பு அடங்கவில்லை ஒவ்வொரு நரம்பிலும் வெறிபீறிட்டோடுகிறது" (ப-116)**

காற்றில் ஈரப்பதம் அதிகம் இருப்பதால் புதிதாகக் கட்டிய கடலோர வீட்டை வாடகைக்கு கொடுத்து விட்டு சற்று தொலைவில் வேறு வீட்டில் குடியிருக்கின்றனர். கடலோர வீட்டில் வாடகைக்கு வசிக்கும் குடும்பத்தில் அடிக்கடி நிகழும் சண்டையில் ஒரு நாள் கணவன் அனைவரையும் கொலைசெய்து தானும் தற்கொலை செய்து கொள்கிறான். அவ்வீட்டின் உரிமையாளர் மன அமைதியின்றி வருத்தப்படுவதாக அமைந்துள்ளது **"கடலோர வீடு"** என்னும் சிறுகதையாகும்.

**"ஆறேழு மாதங்களில் லலிதா உடல் நலம் தேறி எழுந்தாள்" (ப-4)**

**"ஆறேழு மாதங்கள் கடந்ததே தெரியவில்லை" (ப-9)**

வார இதழில் தொடர் கட்டுரைகள் எழுதும் இரு எழுத்தாளர்கள் தங்கள் நட்பு வளர்ந்ததைச் சொல்லும் கதை **'காலத்தின் விளிம்பில்'** என்னும் சிறுகதையாகும்.

**"ஏறத்தாழ பத்து வாரங்களாக அத்தொடர் வெளிவந்து கொண்டிருந்தது" (ப-81)**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal 

E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com

**"பதினோராவது வாரத்துக்கான கட்டுரையை எழுதி முடித்ததும் மின்அஞ்சல் பக்கத்தைத் திருப்பியபோது எனக்கொரு மடல் வந்திருக்கும் செய்தியை அறிந்தேன்" (ப-81)**

தலைவனுக்காகப் பாடுபட்ட தொண்டனை மதிக்காத தலைவர்களை நினைத்து தொண்டன் வருத்தப்படுவதாக அமைந்துள்ள கதை **"மாலை"** என்னும் சிறுகதையாகும்.

**"மாதத்துக்கு ஒரு நாள் தொகுதி உறுப்பினர் உள்ளிட்ட முக்கியஸ்தர்கள் முன்னிலையில் உண்டியல் திறக்கப்பட்டு பணம் வகைபடுத்தப்பட்டது. (ப-126).**

அனாதை இல்லத்தில் வளரும் பார்வையற்ற குழந்தைகளை உற்சாகப்படுத்தி அவர்களுக்கு போட்டிகள் நடத்தி பரிசு வழங்கிய நிகழ்வுகளைச் சொல்லும் சிறுகதை **'பார்வை'** என்பதாகும்.

**"அலுவலக கண்காணிப்புச் சோதனைகள் மாதக்கணக்கில் நீண்டு கொண்டே போயின" (ப-97)**

கணவனின் கொடுமைகள் தாங்க முடியாமல் தன் அண்ணன் வீட்டுக்கு வரும் தங்கையின் மனதை அவள் அண்ணியின் வார்த்தைகள் புண்படுத்துவதால் அத்தங்கை யாருக்கும் தெரியாமல் வெளியூர் சென்று விடுகிறாள். எங்கு தேடியும் கிடைக்காததால் குடும்ப உறவுகள் வருத்தப்படுவதாக அமைந்துள்ள கதை **"கையெழுத்து"** என்பதாகும்.

**"ஒரு மாத காலம் அப்பா, பெரியப்பா, சித்தப்பா மூவரும் திசைக்கொருவராகத் தேடினார்கள் சின்னத் தகவல் கூட கிடைக்கவில்லை" (ப-26)**

திருமணமானப் பெண்ணுடன் கள்ளக்காதலில் ஈடுபடும் வாலிபனை அவள் கணவன் அடித்து உதைத்த நிகழ்வுகளைச் சொல்லும் கதை **'அட்டை'** என்னும் சிறுகதையாகும்.

**"அவன் உடல்நிலை முழுவதும் தேரிவர மூன்று மாதங்கள் பிடித்தன" (ப-206)**

தன் வீட்டில் நடந்த தீ விபத்தில் கணவனையும் குழந்தைகளையும் பறிகொடுத்தப் பெண்ணும் மனநோய்க்கு ஆளாகிறாள். அவளுடன் பிறந்தவர்கள். அவளைப் பாதுகாக்கும் நிகழ்வுகளைச் சொல்வது **'பொம்மை'** என்னும் சிறுதையாகும்.

**"ஆறு மாதங்களுக்கு முன்புவரை நாங்கள் பார்த்த அத்தை வேறு" (ப-238)**

**"நான்கு மாதங்களுக்கு பின் தான் அவள் கண்களில் ஒரு தெளிவு படரத் தொடங்கினதைப் பார்த்தேன். (ப-242)**

தன் தெருவிற்கு புதிதாக குடி வந்தவர்கள் தன் வியாபாரத்தில் தனக்குப் போட்டியாக வந்துவிடுவார்கள் என்ற பயத்தில் முறுக்கு சுட்டு விற்கும் டீக்கடைக்காரர் காவலர்களின் மூலம் அவர்களை விரட்டி ஊரைக் காலி செய்ய வைத்த நிகழ்வுகளைக் கூறுவது **'பச்சைக்கிளிகள்'** என்னும் சிறுகதையாகும்.

**"இரண்டு மூன்று மாதங்களிலேயே முத்துச்சாமியின் முறுக்குப் பாக்கெட்டுகளுக்கு தெருவில் இருந்த எல்லோருமே வாடிக்கைக்காரர்களானார்கள்" (ப-191)**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



பெற்றோர் விபத்துக்குள்ளானதால் ஆசிரியராக வேண்டும் என்ற அவன் கனவும் பாதிக்கப்பட்டது. அதனை எண்ணி வருந்துவதாக அமைந்துள்ள கதை **"ஒரு நாள் ஆசிரியர்"** என்னும் சிறுகதையாகும்.

**"நாலஞ்சி மாசம் கழிச்சி ஒரு நாள் போயி பார்த்துப் பேசியிருந்துட்டு சர்டிபிகேட்டுகள கேட்டு வாங்கியாந்துட்டேன்" (ப-56)**

சிறு வயதில் தான் படித்த பள்ளிக்கூடம் தற்போது மூடப்பட்டு விட்டதால் அதனை எண்ணி வருத்தமடையும் நிகழ்வுகளைச் சொல்வது **'பள்ளிக்கூடம்'** என்னும் சிறுகதையாகும்.

**"ஒரு மாதம் கணக்கு ஆசிரியராக பிள்ளைகளுக்கு சொல்லிக் கொடுத்திருக்கிறேன்" (ப-111)**

பொருள் ஈட்டுவதற்காக தாய் சொன்ன வேலையில் சேராமல் தன் மனதிற்குப் பிடித்த வேலைச் செய்து சம்பாதிக்கும் பெண்ணிடம் அவள் தாய் அறிவுரை கூறுவதாக அமைந்துள்ள கதை **'இரு வழிகள்'** என்னும் சிறுகதையாகும்.

**"இரண்டு மாதங்கள் கடந்து விட்டன. மதிய நேரத்தில் அவள் வீட்டில் வேலையின்றி புத்தகம் படித்த படி பொழுதை கழிப்பதை பார்க்கும் போதெல்லாம் அவள் அம்மாவின் முகம் நெருப்பு பிடித்தது போல மாறிவிடும்" (ப-156)**

நேர்மையாக வேலை செய்த அதிகாரி மீது பொய் புகார் கொடுத்ததும் அவர் பொய் சாட்சி சொல்லி, விடுதலையானதைச் சொல்லும் கதை **'பொய்'** என்னும் சிறுகதையாகும்.

**"ஆறுமாசத்துக்கு முன்னால லஞ்ச கேஸ்ல கையும் மெய்யுமா புடிச்சிட்டான்" (ப-31)**

பாவண்ணன் சிறுகதைகளில் 21 சிறுகதைகள் சில வருடங்களைக் கால அளவாகக் கொண்டுள்ளன. அவை

1) கடிதம் 2) தீ 3) பட்டம் 4) சரண் 5) காலம் 6) மையம் 7) தனிமரம் 8) திசை தேடும் பறவை 9) பழி 10) கனல் 11) கன்று 12) அர்ஜுனன் தவம் 13) பறவைகள் 14) ஆல மரத்தில் ஒரு பறவை 15) அழைப்பு 16) குப்பு 17) பூனைக்குட்டி 18) பாட்டு 19) தாத்தா 20) பிரசாதம் 21) சைக்கிள்

**சில வருடங்களைக் கால அளவாகக் கொண்டச் சிறுகதைகள்**

நகராட்சியில் வேலை செய்த தந்தை இறந்ததும் அவரது வேலை தனக்கு வேண்டும் என மனு செய்து வேலையைப் பெற நான்கு வருடங்களாக போராடும் மகனைப் பற்றியக் கதை **'கடிதம்'** என்னும் சிறுகதையாகும்.

**"இரண்டு வருடங்களாய் இந்த வழக்கு நடக்கிறது என்றும் கண்டிப்பாய் இங்கு தான் இருக்க வேண்டும் என்றும் சொன்னேன்" (ப-156)**

**"மூனாவது வருஷத்தில் நான் எழுதிய வங்கித் தேர்வு முடிவுகள் வந்திருந்தன" (ப-154)**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



திருமண விடுப்பு முடிந்து மீண்டும் பணியில் சேர்ந்த ஊழியனுக்கு களப்பணி என்று சொல்லி வெவ்வேறு மாநிலங்களாக அலைக்கழிப்பதும் அவன் வருத்தப்படுவதுமான நிகழ்வுகளைச் சொல்வது **'தீ'** என்னும் சிறுகதையாகும்.

**"மூன்று வருஷத்தில் மூன்று தீபாவளிகள் முப்பது நாள்கள் அதுவும் பிரயாண நாள்கள் நீங்களாக மனைவியோடு வாழ்ந்திருக்கிறேன்" (ப-37)**

நன்றாக விளையாண்டு பள்ளிக்கு வெற்றியைத் தேடித்தந்த மாணவர்கள் பரீட்சையில் தோல்வியடைந்ததும் வருத்தப்பட்டு ஒரு மாணவன் தற்கொலை செய்து கொண்ட நிகழ்வைச் சொல்லும் கதை **'பட்டம்'** என்னும் சிறுகதையாகும்.

**"மூன்று மாதம் கழித்து கால் பந்தாட்டப் போட்டி விழுப்புரம் மைதானத்தில் தான் ஆட்டம்" (ப-63) "முழுப்பரீட்சை வந்து விட்டது. பரீட்சைக்குரிய எண்கள் அறிவிக்கப்பட்டுவிட்டன" (ப-64)** மனைவி திட்டியதற்காக அவள் மீது கோபப்பட்டு வந்த கணவன் வெளியூரிலுள்ள ஒரு கோவிலில் பூசாரியாகி விடுகிறான். அவன் மனைவி இறந்த பிறகும் அவளைப் பார்க்கச் செல்லாமல் வேறு எங்கோ சென்றுவிட்ட நிகழ்வுகளைச் சொல்லும் கதை **'சரண்'** என்னும் சிறுகதையாகும்.

**"மூணு வருஷமா உன்ன எங்கெல்லாம் தேடறம் தெரியுமா" (ப-20)**

**"இரண்டு மூன்று தரிசனங்களுக்குப் பிறகு சுப்பையா சாமியே குருசாமியாக இருந்து வழி நடத்தினார்" (ப-19)**

தன் பாட்டி வீட்டுக்கு சென்ற பேத்திக்கு அவள் தந்தை காலத்து விளையாட்டு பொருட்களையெல்லாம் கொடுத்து விளையாடச் சொல்கிறாள் பாட்டி. அப்பொருட்களை வேண்டாம் என பேத்தி சொல்லும் போது பாட்டி வருத்தப்படுவதாக அமைந்துள்ள கதை **'காலம்'** என்னும் சிறுகதையாகும்.

**"போன வருஷம் ஊருக்கு வந்த போது இத்தனை கேள்வி இல்லை இத்தனைப் பேச்சுமில்லை ஒரு பொம்மையைப் போல இருந்தாள்" (ப-45)**

தன்னுடன் படித்த பெண்ணின் மகளும் தன் மகளும் ஒரே வகுப்பில் படிப்பதை நினைத்து பெருமைப்படும் தந்தையைப் பற்றிய கதை **'மையம்'** என்னும் சிறுகதையாகும்.

**"ஆண்டுகள் கழியக் கழிய வீட்டில் நான் எதிர்பாராத கஷ்டங்கள் அதிகரித்தன" (ப-74)**

**"ஐந்து வருஷங்களாகவே மாலினியுடன் பேச்சு வார்த்தை இல்லை" (ப-76)**

தனக்கென குடும்ப உறவுகள் இல்லாததால் பணி நிறைவுக்குப் பின் நண்பனின் வீட்டில் தங்குகிறார் ரத்தன். நண்பனின் மகன் கொடுக்கும் தொல்லையால் அங்கிருந்து ரத்தன் சோகமாக வெளியேறும் நிகழ்வைச் சொல்வது **'தனிமரம்'** என்றும் சிறுகதையாகும்.

E-ISSN: 2581-7140

Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com

**"இருபது வருஷம் தான் இருந்த வீடா என்று அவருக்கே ஆச்சரியமாக இருந்தது" (ப-44)**

பணி நிறைவுக்குப் பின் மன அமைதி வேண்டி குடும்பத்திலிருந்து விலகி ஆசிரமத்தில் சேர்ந்த தாத்தா சில வருடங்களில் இறந்து விட்ட நிகழ்வுகளைச் சொல்லும் கதை **'திசைதேடும் பறவை'** என்னும் சிறுகதையாகும்.

**"ஒரு வருஷம் அம்மாவின் தம்பிக்குத் திருமணம் இன்னொரு வருஷம் ஆபிஸ் பதவி உயர்வு தேர்வு" (ப-112)** அழகாகச் சாமிச் சிலைகள் வரைந்து கொடுக்கும் ஓவியர் மொத்த ஆர்டர் வாங்கிய சமயத்தில் அவர் மனைவி வேறொருவனுடன் சென்று விடுகிறாள். மனைவியை நினைத்து வருத்தப்பட்ட ஓவியர் யாருக்கும் சொல்லாமல் எங்கோ சென்று விடும் நிகழ்வுகளைச் சொல்வது **'பழி'** என்னும் சிறுகதையாகும்.

**"அந்தப் பக்கம் செல்லவே பலரும் பயந்தார்கள் ஆண்டுகள் கழியக் கழிய பயம் விலகி நடமாட்டம் தொடங்கியது" (ப-50)** தன்னை மாட்டிவிட்டவனை பழி வாங்க வேண்டும் என்ற நோக்கத்தோடு ஜெயிலில் இருந்து வெளியே வந்தவன் எதிரியைக் கண்டதும் மன்னித்து விட்ட நிகழ்வுகளைச் சொல்லும் கதை **'கனல்'** என்னும் சிறுகதையாகும்.

**"பத்து வருஷ காலம் அந்தச் சிறுமியை வளர்த்தேன்" (ப-149)**

வெளி நாட்டிலிருந்து தன் கிராமத்திற்கு வருபவர் அங்கு படிக்கும் குழந்தைகளுக்கு இலவசமாக டியூசன் சொல்லிக் கொடுக்கும் நிகழ்வுகளை விளக்கும் கதை **'கன்று'** என்னும் சிறுகதையாகும்.

**"நாட்கள் மாதங்களாகவும் ஆண்டுகளாகவும் உருள உருள தங்கச்சாமியின் திண்ணைப் பள்ளியின் பெருமை அடுத்தடுத்த ஊர்களுக்கெல்லாம் பரவத் தொடங்கியது" (ப-88).**

அர்ஜுனன் வேஷம் போட்டு சாமியாடியவன் திருவிழாவின் கடைசி நாளில் இறந்ததும் அவனுக்காக ஊரே வருத்தப்பட்ட நிகழ்வுகளை விளக்கும் கதை **'அர்ஜுனன் தவம்'** என்னும் சிறுகதையாகும். **"கடந்த வருஷம் அர்ஜுனனாக ஆடிய கோபால் தூவிய பூவை பிடித்த தனலெட்சுமி ஒரு பெண் குழந்தையைப் பெற்று உலகம் தனக்கு சூட்டியிருந்த மலடிப் பட்டத்தைத் துடைத் தெறிந்தாள்" (ப-160)**

பறவைகள் காப்பகத்தில் அவற்றைப் பராமரிக்கும் பணியாளர் அவைகளுக்கு உணவு இல்லாத நிலையை எண்ணி வருந்தி வருந்தி மனநலம் பாதிக்கப்பட்டார். அவர் மகன் தன் தந்தைக்கு சிகிச்சையளிக்கும் நிகழ்வுகளைச் சொல்லும் கதை **'பறவைகள்'** என்னும் சிறுகதையாகும்.

**"இருபது ஆண்டுகளுக்கு மேலான காலத்தை பறவைகள் நடுவில் கழித்ததில் அவருக்கு எல்லாமே அத்துபடியாகி இருந்தது" (ப-28)** தன் தந்தை இறந்து விடுகிறார்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



அவரைப் பற்றி ஒரு புத்தகம் வெளியிட விரும்பும் மகன் அதற்கான முயற்சிகளைச் செய்யும் நிகழ்வுகளைக் கூறும் கதை **'ஆல மரத்தில் ஒரு பறவை'** என்னும் சிறுகதையாகும்.

**"ஆண்டு முழுக்க அளிக்கப்பட்ட தொடர்ச்சியான மருத்துவத்துக்குப் பிறகும் அவர் இந்த மண்ணுலகை விட்டு மறைந்து போனார்"** (ப-131) எந்த நிறுவனத்திலும் தன் படிப்பிற்கேற்ற வேலை கிடைக்காததால் வருத்தப்பட்ட புதிதாக திருமணமான பெண் நாளடைவில் மனநோயாளியாக மாறி இறந்து விடுகிறாள். அவளை நினைத்து அவள் கணவன் வருத்தப்படுவதாக அமைந்துள்ள கதை **'அழைப்பு'** என்னும் சிறுகதையாகும்.

**"மூன்றாண்டு கால இல்லற வாழ்க்கை அனுபவங்கள் அக்காட்சிகளின் ஊடாக ஒரு நதியைப் போல பாய்ந்து பெருகுவதாக உணர்ந்தான்" (ப-141)**

திருமணம் செய்துக் கொள்ளலாம் என பொய் சொல்லி கர்ப்பமாக்கிவிட்டு அவளுக்கு குழந்தைப் பிறந்ததும் வேறொரு பெண்ணைத் திருமணம் செய்த ஆணை நினைத்து பெண் வருத்தப்படுவதாக அமைந்துள்ள கதை **'குப்பு'** என்னும் சிறுகதையாகும்.

**"வேகவேகமாக மாதங்கள் கடந்ததே தெரியவில்லை.... பிரசவத்துக்குப்பிறகு அவள் பதட்டம் அதிகமானது"** (ப-53) தன் பெண் குழந்தைக்கு உடல் நலம் சரியில்லாமல் போன போது அதை நினைத்து பெற்றோர்கள் வருத்தப்படுவதாக அமைந்துள்ள கதை **'பூனைக்குட்டி'** என்னும் சிறுகதையாகும்.

**"அடுத்த ஆண்டும் அவள் ஆறு கோப்பைகள் பெற்றாள்.... அதைத் தொடர்ந்த ஆண்டிலும் அவளே முன்னிலை வகித்தாள்"** (ப-92, 93)

பாட்டின் மீது ஆர்வம் கொண்ட ஒருநபரை அத்துறையில் பயணிக்க அவருடைய குடும்பத்தினர் அனுமதிக்கவில்லை. சில காலம் கழித்து அவருடைய பேரன் இயல்பாகவே மிக அழகாகப் பாடுவதைப் பார்த்தவுடன் அந்நபர் மிகுந்த மகிழ்ச்சியடைந்த நிகழ்வுகளை சொல்லும் சிறுகதை **"பாட்டு"** என்னும் சிறுகதையாகும்.

**"பத்து வருஷகால மோதல் அவள் மரணத்துக்குப் பிறகு தான் ஒரு முடிவுக்கு வந்தது"** (ப-84)

திருமணமான சில நாட்களிலேயே தன் மனைவி வேறொரு ஆணுடன் சென்றுவிட்டதையறிந்த கணவன் அளவுக்கதிகமாக மது அருந்தி தன் உயிரை விட்ட நிகழ்வுகளைச் சொல்லும் கதை **'தாத்தா'** என்னும் சிறுகதையாகும்.

**"ஆண்டுக்கு ஒரு முறை துரோபதை அம்மன் கோயில் திருவிழா சமயத்தில் கொடி கட்டி கொடி அவிழ்க்கும் வரை அதைத் தொட மாட்டார்"** (ப-127)

தினமும் இலவசமாக கிடைத்த பிரசாதத்தை உண்டு படித்து பெரியவனாக வளர்ந்தவன் மீண்டும் தன் கிராமத்திற்கு வரும் போது பழைய ஆட்கள் யாரும் இல்லாததை நினைத்து வருந்துவதாக அமைந்துள்ள கதை **'பிரசாதம்'** என்னும் சிறுகதையாகும்.


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**"அவனுடைய கடின உழைப்புக்கான பரிசாக ஒவ்வொரு ஆண்டு இறுதியிலும் அவனுக்கு நல்ல மதிப்பெண்கள் கிடைத்தன" (ப-163)** கணவன் மனைவிக்கிடையேயான சண்டையில் கோபத்தில் வெளியில் சென்ற கணவன் பல வருடமாகியும் வீட்டிற்குத் திரும்பாததால் கல்லூரி படிப்பிற்கு பணமில்லாத மகன் அவரின் சைக்கிளை விற்று கல்லூரியில் படிக்கும் நிகழ்வுகளைச் சொல்லும் கதை **'சைக்கிள்'** என்னும் சிறுகதையாகும்.

**"அடுத்த நாள் பள்ளியில் மாதிரித் தேர்வுகள் தொடங்கி விட்டன" (ப-19)**

**"அவள் கல்லூரிக்கு நடந்து செல்ல ஆரம்பித்தாள்" (ப-24)**

புதிய தொழில் தொடங்கி சம்பாதிக்கும் கணவனுக்கு மனைவி மேலும் மேலும் தொல்லை கொடுத்ததால் அவன் குடும்பத்திலிருந்து பிரிந்து சென்று மன வேதனையில் இறந்து போன நிகழ்வுகளைச் சொல்லும் கதை **'நேற்று வாழ்ந்தவர்கள்'** என்னும் சிறுகதையாகும்.

**முடிவுரை**

பாவண்ணனின் பதினோரு சிறுகதைத் தொகுதிகளிலுள்ள 48 சிறுகதைகளை இக்கட்டுரையில் ஆய்வுக்குள்ளாக்கியுள்ளேன். அவற்றுள் இருபத்தேழு (27) சிறுகதைகள் சில மாதங்களைக் கதை நிகழும் காலமாகவும், இருபத்தி ஒன்று (21) சிறுகதைகள் சில வருடங்களைக் கதை நிகழும் கால அளவுகளாகவும் கொண்டுள்ளன.

**முதன்மைச் சான்றுகள்**

1) வெளிச்சம் - பாவண்ணன்
2) பொம்மைக்காரி - பாவண்ணன்
3) கடலோர வீடு - பாவண்ணன்
4) பாக்குத் தோட்டம் - பாவண்ணன்
5) இரண்டு மரங்கள் - பாவண்ணன்
6) பச்சைக் கிளிகள் - பாவண்ணன்
7) அடுக்கு மாளிகை - பாவண்ணன்
8) ஏழு லட்சம் வரிகள் - பாவண்ணன்
9) நேற்று வாழ்ந்தவர்கள் - பாவண்ணன்
10) வலை - பாவண்ணன்
11) நெல்லித்தோப்பு - பாவண்ணன்

**துணைமைச் சான்றுகள்**

1) ந.பிச்சமூர்த்தி படைப்புகள் ஓர் ஆய்வு
2) தமிழ் சிறுகதை பிறக்கிறது



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



# சீவக சிந்தாமணியில் நீர்மேலாண்மைச் சிந்தனைகள்

**ச.ஷோபனா,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
கிருஷ்ணசாமி மகளிர் அறிவியல் கலை
மற்றும் மேலாண்மையியல் கல்லூரி,
கடலூர்.

**தோற்றுவாய்**

ஐம்பெருங் காப்பியங்களுள் நம் சிந்தையை சிறப்புறச் செய்யும் காப்பியம் சிந்தாமணியாம். அச்சிந்தாமணியில் நீர் மேலாண்மைக் குறித்த விதைகள் நம்மை வியப்படையச் செய்கின்றன. இயற்கையோடு இணைந்த வாழ்வை மனிதன் எவ்வாறெல்லாம் வாழ்ந்தான் என்பதை இலக்கியப் பதிவுகள் நமக்கு சான்றளிக்கின்றன. அத்தகைய இயற்கைப் பதிவுகள் சூழலியல் சார்ந்த கருத்துப் பொருண்மைகளை நாம் இன்றைய சூழலோடு பொருத்திப் பார்ப்பது அவசியமாகிறது. சிந்தாமணியில் முதலாவதாக வீற்றிருக்கும் நாமகள் இலம்பகம் சூழலியலையும் அவை சார்ந்த நீர் மேலாண்மையையும் ஒருங்கே வெளிப்படுத்துகின்றன. சூழலியல் தொகுதியில் அடிப்படையாக அமைவது நீராதாரம் ஆகும். அத்தகு நீரானது நிலத்தையும் உயிரினத்தையும் ஒருங்கே காப்பதாகிறது அத்தகு நீரினை நெறிப்படுத்தல் முறைகளை நம் முன்னொர்கள் இலக்கியங்களிலும், கல்வெட்டுகளிலும் பதிவுசெய்து வைத்துள்ளனர். நீர் மேலாண்மை என்ற பொருண்மையை மையமாகக் கொண்டு சீவக சிந்தாமணியில் உள்ள நாட்டுவளப் பகுதியோடு பொருத்திப் பார்ப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**சூழலியலில் ஐந்திணைகள்**

சூழலியல் மண்டலத்தில் நீர்ச் சூழலியல் முக்கியமானதாகிறது. ஏனெனில் இச்சூழலியல் எல்லா உயிரினத்திற்கும் முக்கியத்துவம் வாய்ந்ததாகிறது. பின்வருபவை நீர்ச் சூழ்நிலை மண்டலங்களாவன.

1. **குளங்கள்**
2. **நீரோடைகள்**
3. **ஏரிகள்**
4. **நதிகள்**
5. **பெருங்கடல்கள்**
6. **முகத்துவாரங்கள்**

போன்றவை நீர்ச்சூழலையும் அது சார்ந்த உயிரினங்களையும் சார்ந்தவையாகிறது. இத்தகு சூழலை அன்றே திணை அடிப்படையில் பகுத்துள்ளதோடு, திணைகளில் நீரையும் உருப்பொருளோடு சேர்த்துள்ளனர். எல்லாத் திணைகளிலும் நீர் முக்கியமானதாக அமையப்பெற்றுள்ளது சிறப்பானதாகிறது. அக,புறப்பாடல்களும் இவை சார்ந்தே புனையப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலும் ஒரு திணை அடிப்படியில் சூழலியல் தொகுதியை



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



முன்வைக்கின்றன. அச்சூழலை முன்னோர்கள் முதல், உரி, கருப்பொருள் என பகுக்கலாயினர். அக்கருப்பொருளின் தன்மையை திணைகள் சார்ந்த பகுப்புகளில் காணமுகிறது. இங்கு ஒவ்வொரு திணைக்கும் நீரின் பெயர் மாறுகிறது அன்றி நீரின் பயன்பாடு மாறாமல் பல நிலைகளில் அமையப்பெறுகிறது.

***குறிஞ்சி – அருவி***

***முல்லை- கான்யாறு***

***மருதம் - ஆறு, பொய்கை***

***நெய்தல் - மணல்கிணறு***

***பாலை- கூவல், சுனை***

இவ்வாறு திணை அடிப்படையில் நீர் நிலைகளில் பயன்பாடு அவசயமானதாகிறது. அகம் சார்ந்த பாடல்களை உற்று நோக்கும் பொழுது இரு நிலைக்களன்களை உருவாக்குகின்றன.

**இயற்கைச் சூழல் அகவாழ்வு**

அகவாழ்வினை விளக்குவதாக மட்டும் அல்லாமல் இயற்கையையும் ஒருங்கே விளக்கும் நனி நாகரீகமான அமைப்பியல் கவிதைகளை சங்க இலக்கியமானது வெளிப்படுத்துகிறது.

சான்றாக சில திணைப் பாடலை ஈண்டு காண்போம்.

***"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று***
***நீரினும் ஆர் அளவு இன்றே சாரல்***
***கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு***
***பெருந்தேன்..."[1]***

குறிஞ்சித் திணையை தெளிவுப்படுத்தும் இப்பாடல் நிலத்தையும், நீரையும் சுட்டுகிறது நுட்பமான உண்மையை தலைவி தன் கூற்றில் பொதித்துள்ளாள். யாதெனில் நீர்த் தேவையில் நிறைவு பெற்ற நாடே வளம்மிக்க நாடாகும். சாரல் வளம் மிக்க நாட்டுத் தலைவனின் ஊரானது செல்வ வளமிக்கது என்பதை வெளிப்படுத்துகிறது. நீர்வரத்து அதிகமானதால் பெருந்தேன் சாத்தியமாயிற்று.

"நீரின்றி அமையாது உலகு" என்ற வள்ளுவனின் வாக்குப்படி நீராதாரமே மனிதனின் உயிர்நாடி. நீரின் செயல்பாட்டாலே உலகமானது இயங்கி வருகிறது. இவ்வாறு நீர் காற்றுடனும் வெப்பத்துடனும் இயக்க நிலைப்பெற்று திணைகளின் அடிப்படையில் நிலைபெறுகிறது. மேற்கண்ட குறிஞ்சி நிலப்பாடல் இயக்கத்தில் உள்ள நீரின் பயன்பாட்டையேச் சுட்டி நிற்கிறது.

**குளச்சூழலை உணர்த்தும் மருதக்கலி**

மருதக்கலி பாடல் ஒன்று நீர்ச்சூழல் கொண்ட குளத்தை மையமிட்டதாக அமைகிறது மருதத்திணையோடு தொடர்பு இருப்பினும் நீராதாரத்தையும் அவற்றிக்கான சூழலும் எப்படி



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



அமையும் என்பதை வெளிப்படுத்துகிறது. குளத்தின் தன்மையை பல கோணங்களில் அமைகின்றது. அவை,

1. **நீளம்**
2. **ஆழம்**
3. **நீர் தேங்கும்**
4. **நீரைப்பெறும் முறை**
5. **வெளியேற்றும் முறை**

என்பனவைகளாகும் பின்வரும் பாடலை குளத்தின் ஆழம், நீளம், நீர்தேங்கும் சூழல் என இவற்றோடு ஒப்பிடலாம்.

*"அகன்துறை அணிபெற புதலொடு தாழ்ந்த*
*பகன்றைப் பூ உற நீண்ட பாசடைத் தாமரை*
*கண்டு பொர ஒளி விட்ட வெள்ளிய வள்ளத்தான்*
*தண் கமழ் நறுந்தேறல் உண்பவள்..."*[2]

அகன்துறை என்பது அகன்ற என்ற நீளத்தைக் குறிப்பதாக அமைகிறது. செடி, கொடிகள், தாழ்ந்த, பகன்றைப் பூ பூத்திருக்கும் துறையாக வர்ணிக்கப்படுகிறது. இவ்வர்ணணையில் புல் போன்ற உயிரினத்தைச் சூழ்ந்ததாக அமைவதை ஈண்டு காணலாம். தாமரை மலர் பூத்திருக்கும் சூழல் என்பதால் ஆழம் நிறைந்ததாகவும் குறிக்கிறது. தண் கமழ் என்பதில் தண்மை என்ற சொல்லாடலால் எப்பொழுதும் நீர் தேங்கி இருக்கும் சூழலைச் சுட்டுகிறது. தலைவியின் கூற்றில் ஒருபுறம் சூழலியலையும், தலைவனின் சூழலையும் உணர்த்தியுள்ளது.

மனிதனுக்கு மட்டுமானது அல்ல இந்த உலகம் எல்லா உயிரினத்திற்கும் பொதுவானதாகும். எல்லா சூழலியலிலும் உயிரினங்களின் பங்கு முக்கியமானதாகிறது. இத்தகுச் சிறப்புமிகு சூழலியன் உயிரினங்க்ள் குறித்து தொல்காப்பியர் சுட்டியுள்ளார். அவை,

*"ஒன்றறி வதுவே உற்றறி வதுவே*
*இரண்டறி வதுவே அதனொடு நாவே*
*மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே........"*[3]

வெப்பம், தட்பம், வன்மை, மென்மை, அறியும் புல் மரம் முதலாக அனைத்து உயிரினமும் தோன்ற நீர்ச்சூழல் முக்கியப் பங்கு வகிக்கிறது. ஓரறிவு முதல் ஆறறிவு உயிர் அனைத்திற்கும் நீர் அவசியமாகிறது. இவை உயிர்க் காரணிகளின் தொகுப்பாகும் (biotic factors) இவற்றை காக்க நீர் மேலாண்மை முக்கியமானதாகிறது.

**சங்க கால நீர் மேலாண்மை**

நீர் பாசனத் தொழில் நுட்பத்தின் தோற்றம் சுமார். கி.பி.750 வாக்கிலேயே நம் மக்களிடையே வேரூன்றிவிட்டதாக இரா.சங்கரன் கூறுகிறார். தமிழர் வாழ்வியலில் நீர் சமூகம்


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com


பின்னிப் பிணைந்திருந்தது. அச்சமூகமே நீர் மேலாண்மைச் சிந்தனைக்கு அடித்தகளமிட்டனர். அவ்வழிச் சமூகத்தை இன்று தொலைத்த சமூகமாக நாம் மாறியுள்ளோம்.

நீர் மேலாண்மையை நிர்வகிக்கும் சமூகத்தினரில் நதியில் ஓடம் நீரை ஏரிகளுக்கு அனுப்பிக்கும் பணியை மேற்கொள்பவரை **நீராணிக்கர்கள்** என்பர். ஏரிகளுக்கு முழு பொறுப்பையும் மேற்கொண்டவர்கள் **நீர்க்கட்டியார்** என்பர். இவர்களின் அனுமதி இன்றி யாரும் ஏரியை நெருங்க முடியாத அரணாக வீற்றிருந்தனர். ஏரிகளை உடைத்தால் நாட்டின் பொருளாதாரத்தை உடைப்பதற்குச் சமம். அதனை, தவிர்க்கும் பொருட்டு அதற்கென தனி பணியாட்களை நியமித்திருந்தனர், இவர்கள் விளைநிலங்கள் வரை நீரைக்கொண்டு சென்றனர். ஆற்று நீரை முழுவதுமாகத் தடுத்துக் குளங்களுக்கு அனுப்புபவரை **குளத்துக் காப்பாளர்கள், குளத்துப் பள்ளர்கள்** என்பர். இவர்கள் குளத்தைப் பாதுகாக்கவும், தூய்மையாக்கவும் பணியமர்த்தப்பட்டனர்.

குளத்திலிருந்து வயல்களுக்கு நீரைப் பாய்ச்சுபவர்களை **நீர்ப்பாய்ச்சி'** என்று சுட்டுவர். மேலும், சிறு, சிறு நீர் ஆதாரங்களான மதகு, மடை, குமிழ், தூம்பு போன்றவற்றைக் காப்பவர்கள் **மடையர்கள்** என்று கூறுவர். இவ்வாறு நீர் மேலாண்மைக்கென தனித்துறையே செயல்பட்டது தெரியவருகிறது.

சங்க கால மக்கள் பண்பட்ட சமூகத்தினராக இருந்திருந்தனர் என்பதற்கு நீர் மேலாண்மை தக்கச் சான்றாகிறது.

**சீவகசிந்தாமணியில் நீர் மேலாண்மை**

சிந்தாமணியின் முதல் இலம்பகமான நாமகள் இலம்பகம் இயற்கை சூழலையும், சமூகச் சூழலையும் உணர்த்துகின்றது. நீர்ச்சூழல் மூலம் பெறப்படும் காரணிகளைத் திருத்தக்க தேவர் நாட்டுவளத்தில் குறிப்பிடுகின்றார். மழையை முதலில் மேகங்களில் இருந்து வர்ணிப்பதோடு அம்மேகங்கள் கடல்நீரை முகர்ந்து பெருந்திரள்கொண்ட மேகமாக உருவெடுத்ததை பின்பவரும் பாடல்வரி மெய்ப்பிகக்கின்றன. அவை,

*“இழியும் வெள்ளருவித் திரள் யாவையும்*
*குழுவின் மாடத் துகிற்கொடி போன்றவே.......”*[4]

நீரியல் கோட்பாட்டை இத்துணை அழகாக கூறமுடியுமெனில் அது தமிழ் இலக்கிங்களாலாயே சாத்தியம். கடல் நீரை முகந்த மேகமானது மலை முகடுகளில் அருவியாய் பரிணமித்து நிலத்தை அடைந்தது என்பதை அழகிய வர்ணனையோடு திருத்தக்க தேவர் கூறிப்போந்துள்ளார்.

இதே கருத்தை பரிபாடலில் வையை ஆற்றை குறிக்கும் பொழுது அமைகிறது.

*“நிறைகடன் முகந்துராய் நிறைந்துநீர் துளும்புந்தம்*
*பொறைதவிர் பசைவிடப் பொழிந்தன்று வானம்*
*நிலமறை வதுபோன் மலிர்புன றலைத்தலைஇ......”*[5]



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



முகில்கள் நீர் நிறைந்த கடலின்கண் உள்ள நீரை முகந்து கொண்டு வானத்தின் கண் யாண்டும் பரவி நீர் நிறைந்த இருக்கும் என்பதையே இவ்வரி சுட்டுகிறது. பூமிக்கும் வளிமண்டலத்திற்கும் இடைப்பட்ட தூரத்தில் பாயும் நீர்நிலை சுழற்சி எனப்படும். அச்சுழற்சிப் பற்றிய அறிவியல் உண்மையை அன்றே நம் முன்னோர்கள் அறிந்திருந்தனர் என்பது வியப்பளிக்கிறது. இதனை பின்வரும் நீர்சுழற்சி மெய்ப்பிக்கிறது.




மேற்கண்ட சூழலியல் திணைகள் அனைத்திற்கும் பொதுவான காரணிகளாக அமைகின்றன. பெருக்கெடுத்துவரும் ஆற்று வெள்ளத்தை எவ்வாறு கையாள்வது என்பதை சோழர்கள் முன்னோடியாக இருந்திருக்கின்றனர். அச்சோழ பேரரசின் மிகப்பெரிய அடையானமாகத் திகழ்பவர் கரிகால் சோழன் கல்லணையைக் கட்டி நீர் மேலாண்மைக்கு மிகச்சிறந்த முன்னுதாரனமாகத் திகழ்கிறார். நீரைத்தேக்கி பயன்படுத்தும் முறையை மிகச்சரியாக கையாண்டது இன்றைய பொறியியல் வல்லுனரிடையேயும் வியப்பளிக்கிறது. அதே சோழர் குலத்தில் வந்தவர் திருத்தக்க தேவர் ஆவார். இதனை **'முந்நீர் வலம்புரி'** ஓம்படைச் செய்யுளின் உரையில் நச்சினார்க்கினியர் சுட்டுகிறார். கரிகாலனின் நீர்மேலாண்மைச் சிந்தனைகள் திருத்தக்கதேவரும் சுட்டுவது வியப்பிற்குரியதில்லை எனலாம். இந்திய நீர் பாசனத்தின் தந்தை என்று அழைக்கப்படும் சர். ஆர்தர் காட்டன் கல்லணையின் பொறியியலை கண்டு வியந்து கல்லணைக்கு **"கிராண்ட் அணைகட்"** என்கிறார்.

பல்வேறு பெருமைகளை உடைய நீர்மேலாண்மைச் சமூகமாக சோழர்காலம் விளங்கியுள்ளது. ஈண்டு ஏமாங்கத நாட்டின் நீர் வளத்தை காக்கும் வரிகள் பின்வருமாறு,

***"பழம்கொள் தெங்கு இலையெனப் பரந்து பாய்புனல்***
***வழங்கமுன் இயற்றிய சுதைசெய் வாய்த்தலை***
***தழங்குரல் பம்மையிற் சாற்றி நாடெலாம்***
***முழங்குதீம் புனல்அக முரிய மொய்த்ததே......."[6]***



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



பெருக்கெடுத்து வரும் ஆற்று வெள்ளம் கரையோரப் பகுதிகளை அரித்துக்கொண்டு வராமல் காக்க நிற்கும் வீரர்களின் ஒலியும் வெள்ளத் தை திசைமாற்ற பழுத்த தென்னங் கீற்றைப் போல் பரந்து விரிந்து பாயச்செய்ய தலைமடையில் வந்து கூடினர். நீர்ச் சமூக மக்கள் நீரைக்காக்கவும் நீரிடம் இருந்து மக்களைக் காக்கவும் விரைந்து கூடினர் என்பதை இவ்வரிகள் உரைக்கின்றன. நீரை ஏற்கனவே சுண்ணாம்பினால் கட்டப்பட்ட வாய்க்காலினிடத்துப் படலிடக் கூடி நின்றனர். அவ் வாய்க்கால் வழியே வழிந்தோடும் நீரினை ஏரிகளுக்கும், குளங்களுக்கும், விளை நிலங்களுக்கும் திசை மாற்றினர். நீரினை காத்து நிற்பவரின் ஒலியும் ,அவ்வப்போது எழுப்புகின்ற பல்வேறான பறைமுழக்கும் பம்பை ஒலியுமாகப் பல திசைகளிலும் ஒலித்தன. அவ்வரிகள் பின்வருமாறு,

*"கவ்வையும் கடும்புனம் ஒலியும் காப்பவர்*
*செவ்வனூ றாயிரம் சிலைக்கும் பம்பையும்*
*எவ்வெலாத் திசைகளும் ஈண்டிக் காரொடு"*[7]

இவ்வாறு எழுப்பக் கூடிய ஒலி மக்களுக்கு எச்சரிக்கை மணியாகவும் வெள்ளத்தின் பாதிப்பில் இருந்து அவர்களைக் காக்கவும் ஏதுவாக இருந்தது. ஊர்ப்பொது மக்களும் நீர் மேலாண்மையில் பங்கெடுத்தனர். நீரினை பாதுகாக்கும் பொறுப்பினை மக்களும் கையிலெடுத்தனர். இதற்கான சான்றுகள் பழைய கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. இதனை,

*"ஏரிகளையும் குளம், குட்டைகளையும் தூர்வாரி,*
*கரைகளைச் சீரமைத்துப் பராமரிப்பது தொடர்*
*நடவடிக்கை குடிமராமத்து மூலம்*
*அந்தந்த ஊர் மக்கள் அவற்றைக் கடமையாகச்செய்தனர்"*[8]

நூற்றுக்கும் மேற்பட்ட ஆலயச் சுவர் பதிவுகள் இதை விரிவாகக் குறிப்பிடுகின்றன. நீர் மேலாண்மையை மக்கள் தங்கள் கடமையாகச் செய்தனர் என்பதையே கல்வெட்டும், சிந்தாமணியும் செப்புகின்றது.

**நீர் மேலாண்மையில் அடைந்த நிலவளம்:**

நீர்வளம் நிறைந்த நாட்டின் நில வளமானது நீரும், நிலமும் நிறைந்த சூழல் தொகுதியாக காட்சியிள்கிறது. இதனை மருத நிலம் சிறப்பானதொரு இத்தைப் பெருகிறது.ஏனெனில் மருதம் சமவெளிப் பகுதியாக அமைகிறது. இங்கு ஆறு நீரோடை, ஏரி, குளம் அமைவதில் இடர்கள் இல்லை இவையெல்லாம் இணைந்த பகுதியாக அமையப்பெறுகிறது. இச்சூழலே வேளாண்மைக்கு முக்கியப் பங்கு வகிக்கின்றது. **"நீரோடைகள் நதிகள் ஆகியவற்றின் ஆழம் குறைவாக இருப்பதாலும் தொடர்ச்சியான நீரோட்டத்தாலும், நீரின் அதிகப் பரப்பளவு வளிமண்டலத்துடன் தொடர்பு கொண்டிருப்பதாலும் ஆக்ஸிஜன் அளவு அதிகமாகக் காணப்படுகிறது"[9].**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



மேற்கண்ட சூழலையையே ஏமாங்க நாட்டு நிலங்கள் பெற்றிருந்தன எனலாம். அதிக விளைச்சலுக்கு அதிமான நீர்ப்பயன்பாடு அவசியமாகிறது. வயல்களுக்கு அருகிலேயே ஏரிகளும், குளங்களும் அமைந்திருந்தன என்பதை நாட்டு வளம் மெய்ப்பிக்கின்றது. மீன் கண்ணளவும் ˙வெற்றிடம் இல்லாமல் தேன் எனச் சுவைதரும் கரும்புக் காடுகளும் யானை நின்றால் மறையும் அளவுக்கு வளர்ந்து விளைந்த புகழ்மிக்க வளமுடைய செந்நெல் வயல்களும் விளைந்திருந்தன. என்பதை பின்வரிகள் மெய்ப்பிக்கின்றன.

***"மீன்கணின் அளவும் வெற்றிடங்கள் இன்மையால்***
***தேன்கணக் கரும்பியல் காடுஞ் செந்நெலின்***
***வான் புகழ் களிறுமாய் கழனி ஆக்கமும்"[10]***

பண்டைய இந்திய சமூகம் வேளாண் சமூகமாக பரிணமத்திருந்தது என்பதை மேலும் மெய்ப்பிக்கும் வகையில் சிந்து சமவெளி நாகரீகம் எகிப்திய நாகரிகம் இவற்றிலும் தமிழர்களின் வேளாண்மை திருந்திருந்தது சில ஓவியங்கள் பறை சாற்றுகின்றன. மேலும் டி.டி.கோசாம்பி அவர்கள் பண்டைய இந்தியா என்ற நூலில் நெல் சாகுபடி முறையை சுட்டும் பொழுது பின்வருமாறு விளக்குகிறார்.

***"நெல் சாகுபடி நாற்றாங்கால்களிலிருந்து***
***நாற்றுகளைப் பிடுங்கி உழுத வயல்களில்***
***நடுகிறாகள் நாற்று நடும்போது முழங்கால் வரை***
***சேறு அமிழ்ந்துள்ளதைக் கவனிக்கவும், வயல்கள்***
***தண்ணீரால் நிரம்புவதற்கு முன்பாகவே உழுதுவிடுகின்றனர்"[11]***

அதிகமான நீர்வரத்து உள்ள பகுதிகளில்தான் நெல், கரும்பு பயிர்களை பயிரிடுகின்றனர். நீர்வரத்து குறைவான போது பயறு வகைகளையும் பருத்தியையும் மண்ணின் தன்மைக்கு ஏற்றவாறு பயிரிட்டிருக்கின்றனர். அவ்வகையில் ஏமாங்கத நாடு இருவகை விளைச்சலையும் முழுவதுமாக எட்டியதாக திருத்தக்க தேவர் சுட்டியுள்ளார். நிலங்களுக்கு இடையே ஊடு பயிரையும் விளைவித்து வெற்றிக் கண்டுள்ளனர். இதற்கு அவர்கள் பின்பற்றிய நீர் மேலாண்மையே ஆகும்.

**நில வளத்தில் மீன் வளம்**

நீர் வளத்தைக் காத்த நிலங்களில் எப்பொழுதும் நீரானது சிறிது நிரம்பியே இருக்கும். அவ்வாறு இருக்கும் அந்நிலச்சூழலில் வாளை மீன்களைக் காணமுடிகிறது. வாளை மீன்கள் வயல்களிடத்து நீங்காது இருந்தன என சங்கப் பாடல்கள் முதல் காப்பியப் பாடல்கள் வரை அனைத்தும் மெய்ப்பிக்கின்றன. இச்சூழலுக்கான வெற்றி நீர் மேலாண்மையால் அடைந்தது.

***"வாளையின் இனம்தலை இரிய வண்டலர்***
***தாளுடைத் தாமரை கிழிய வண்சுமை…."[12]***



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



வயல்களில் சூழ்ந்திருந்த மக்கள் எழுப்பிய ஒலியினால் மீன்கள் இடம்பெயர்ந்து துள்ளியதாக சிறப்பாக சுட்டப்பட்டுள்ளது. ஈண்டு பெறப்படுவது வயலும் வயல் சார்ந்த நீர்ச் சூழலும் வாளைமீன் வாழ்வதற்கு ஏதுவாக அமைந்திருந்தது என்பது திண்ணம். (அறுவடை முடிந்தபின் வாளை மீனை வயல்களில் இறங்கி வடித்துள்ளனர். இதே கருத்தை நற்றிணைப் பாடல் ஒன்றும் மெய்ப்பிக்கின்றது.

*"அரிகால் மாறிய அங்கண் அகல்வயல்*
*மறுகால் உழுத ஈரச் செறுவின்*
*மீனொடு பெயரும் யாணர் ஊர"*[13]

நெல் அறுத்து நீங்கப்பெற்றதான அழகிய இடமகன்ற வயலினிடத்தே மீளவும், உழுத ஈரத்தையுடைய சேற்றிலே, விதைக்கும் பொருட்டாக வித்தோடு போயின உழவர். வட்டினிடத்தே பற்பல மீன்களை திரும்பிக் கொண்டுவந்த புது வருவாயினைக்கொண்ட ஊரனே! புது வருவாய் என்பதில் மருதச் சூழலை உள்ளடக்கியப் பாடல் நீரோட்டம் நிறைந்த ஊராக காட்சியளிக்கிறது. உயிரினங்களின் வாழ்க்கை நிலையில் நீரோட்டமானது முக்கிய பங்காற்றுகிறது. மீன்கள் நீரோடை மற்றும் நதிச் சூழ்நிலை மண்டலத்தில் வாழும் உயிரினமாகிறது. சூழலியல் அறிவை அன்றே நம் முன்னோர்கள் பெற்றிருந்தனர் என்பதற்கு இப்பாடல் நற்சான்றாக அமைகிறது.

**இறுவாய்**

சமூகம் சார்ந்த நிலைப்பாட்டில் மாறுபாடு கொள்ளாமல் சமநிலையான நிலையை சமூகம் விழிப்போடு எதிர்கொள்ள வேண்டும். இலக்கிங்களில் நீர்ச் சூழலை கற்பனைக்காக மட்டும் அல்லாமல் சமூக மேம்பாட்டிற்காகவும் நம் இலக்கியங்கள் பல நிலைகளில் முன்னெடுத்துள்ளன. மனிதனுக்கு கிடைத்த மிகப்பெரிய பரிசு இயற்கை. சூழ்நிலை மண்டலங்கள் நிறைந்ததே இயற்கையின் வண்ணங்கள். இச்சூழ்நிலையை நாம் பாதுகாக்க வேண்டுமென்ற விழிப்பணர்வைப் பெற்றாலே இயற்கை மேம்படும். பெருங்காப்பிய இலக்கணங்கள் பொருந்தியுள்ள சீவகசிந்தாமணியின் நாமகள் இலம்பகம் சூழலியல், நீர்ப் பங்கீடு, நிலச்சூழல், சூழல் தொகுதிபெற்ற வெற்றியால் நாட்டின் பொருளாதார மேம்பாடு என ஒவ்வொரு படிநிலைகளில் நீரின் அவசியத்தை அழகான உவமைகளோடு வெளிப்படுத்தியுள்ளார். கல்வெட்டு, இலக்கியங்கள், செப்பேடு என்ற எல்லா பதிவுகளிலும் நீர் மேலாண்மை குறித்த வழிப்புணர்வினை நம் முன்னோர்கள் பதிவிட்டுள்ளனர். இப்பதிவுகளை நாம் சீர்தூக்கி பார்த்தாலே நீர் மேம்பாட்டிற்கான இலக்கினை ஓரளவு அடைதல் சாத்தியமே. நம் முன்னோர்களின் மேலாண்மைச் சிந்தனைகளை இன்றைய சமூகம் முழுவதும் தொலைத்து நிற்கிறது. இச்சூழலை மாற்ற சூழலியல் தொகுதிக்கு மக்கள் ஒவ்வொருவரும் தங்கள் ஒத்துழைப்பு நல்கினாலே நம் நீர் ஆதாரங்களைக் காக்க முடியும்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



**அடிக்குறிப்புகள்**

1. உ.வே.சா., குறுந்தொகை மூலமும் உரையும்., ப. 11.
2. மருதக்கலி, தலைவி கூற்று. 73.
3. தொல், பொருள். நூற்பா- 571.
4. சீவகசிந்தாமணி, ஞா. மாணிக்கவாசகன், ப. 34.
5. பரிபாடல், வெ. சோமசுந்தரனார். 5-6.
6. சீவகசிந்தாமணி, ஞா. மாணிக்கவாசகன், ப.40.
7. மேலது, ப. 42.
8. பிரதீப் சக்கரவர்த்தி, தி இந்து நாளிதழ். ஆகஸ்டு, 2, 2017. ப. 8.
9. சுற்றுச்சூழல் கல்வி.
10. சீவகசிந்தாமணி, ஞா. மாணிக்கவாசகன், ப. 54.
11. பண்டைய இந்தியா, டி.டி. கோசாம்பி, ப. 30
12. சீவகசிந்தாமணி, ஞா. மாணிக்கவாசகன், ப. 57.
13. நற்றிணை., பாடல்-210.

**துணைநூற் பட்டியல்**


1. திருத்தக்க தேவர், சீவக சிந்தாமணி, சாரதா பதிப்பகம், சென்னை – 600014.
2. சுற்றுச்சூழல் கல்வி, பெரியார் ஈவெரா கல்லூரி திருச்சிராப்பள்ளி – 620023.
3. டி.டி.கோசாம்பி, பண்டை இந்திய பண்பாடும் நாகரிகமும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 41-டீ, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை – 600098.
4. தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணனார் உரை, சாரதா பதிப்பகம், ஜி-4, சாந்தி அடுக்ககம், ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு, இராயப்பேட்டை, சென்னை – 600014.
5. தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், பெ.மாறையன் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 41-டீ, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை – 600 098.
6. குறுந்தொகை, வி.நாகராசன்., நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 41-டீ, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், மு.ப-ஏப்-2004.
7. சங்க இலக்கியம் கலித்தொகை., பதிப்புரை – அ. விஸ்வநாதன்., நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 41-டீ, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், மு.ப-ஏப்-2004.
8. பரிபாடல்., உரை – தே.சுப்பிரமணியன்., நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 41-டீ, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், மு.ப-ஏப்-2004.
9. நற்றிணை, பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-18.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



# இராமலிங்க அடிகளின் உயிரிரக்கக் கோட்பாடு

**முனைவர். வி. தமிழ்மொழி,**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
கிருஷ்ணசாமி மகளிர் அறிவியல் கலை
மற்றும் மேலாண்மையியல் கல்லூரி,
கடலூர்.

**முன்னுரை**

இவ்வுலகில் மனித சமுதாயம் செம்மையுற வாழ, பல அரிய செய்திகளைக் கூறிச் சென்றவர்கள் சித்தர்கள். முக்காலமும் உணரத்தக்க ஞானம் பெற்று பல்லாண்டு காலம் தவம் செய்து கருமசித்தி, யோகசித்தி, ஞானசித்தி முதலான சித்திகள் கைவரப் பெற்று சோதிடம், மருத்துவம், யோகம், மாந்திரீகம், மந்திரம், இரசவாதம் முதலியவைகளில் சிறந்து விளங்கி அற்புதம் பலவற்றை நிகழ்த்தினார்கள். இவ்வுடல் நீண்ட காலம் அழியாமல் இருக்கின்ற வகைகளைக் கண்டறிந்து சொன்னார்கள். அவ்வகையில் கடைசி சித்தர் என்று கூறப்படும் இராமலிங்க அடிகளார் வலியுறுத்திய கருத்துக்களின் அடிநாதமாகவும், அவர்தம் படைப்புகளின் மைய நீரோட்டமாக விளங்குவதும் உயிரிரக்கக் கோட்பாடேயாகும். இறைவனை அடைவதற்குரிய ஒரே வழியாக உயிரிரக்கத்தை வலியுறுத்தியதன் பின்னணி, அவர்காலச் சமூகச்சூழல், உயிரிரக்கத்தை விளக்கியுள்ள பான்மை, அடிகளாரின் படைப்புகளில் ஊடுபாவாக உயிரிரக்கம் அமைந்துள்ள தன்மை ஆகிய யாவற்றையும் வாழ்வியல் சிந்தனையோடு ஆராய்கின்ற முயற்சி இக்கட்டுரையில் மேற்கொள்ளப்படுகிறது.

**இராமலிங்க அடிகள் காலச் சமூகச்சூழல்:**

இராமலிங்க அடிகளார் வாழ்ந்த காலகட்டமானது இந்தியா ஆங்கில ஏகாதிபத்தியத்தின் கீழ் அடிமைப்பட்டிருந்த காலகட்டமாகும். ஆங்கில கிழக்கிந்திய நிறுவனம் மக்கள் நலனில் அக்கறை கொள்ளாமல் தனது வாணிபத்தையும் வரி வருவாயையும் பெருக்கிக் கொண்ட தன்மை, இயற்கையைப் பெரிதும் நம்பிய விவசாயச்சூழல், வர்க்க சாதிய முரண்பாடு, சிறு தொழில்களின் சிதைவு, போக்குவரத்துக்கள் வளர்ந்த போதும் அவை மூலப்பொருட்களைக் கொண்டு செல்லவே பயன்பட்ட தன்மை ஆகிய இவையாவும் மக்களின் வாழ்க்கையைப் பெரிதும் பாதிப்புக்குள்ளாக்கின.

இராமலிங்க அடிகள் வாழ்ந்த பத்தொன்பதாம் நூற்றாண்டைப் பஞ்ச நூற்றாண்டு என்றழைக்கும் அளவிற்குக் கடுமையான பஞ்சங்கள் அக்காலக்கட்டத்தில் தோன்றின. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முதல் பாதியில் ஏழு கடுமையான பஞ்சங்கள் ஏற்பட்டன. இவற்றால் ஒன்றரை மில்லியன் மக்கள் மாண்டனர். பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் 24 பஞ்சங்கள் தோன்றின. (151 முதல் 1875 வரை ஆறு, 1876-க்கும் 1900-க்கும் இடையில் பதினெட்டு) அரசின் பதிவேடுகளின்படி இருபது மில்லியன் மக்கள் இந்தப் பஞ்சங்களினால் இறந்தனர் என்று வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகின்றார்கள்.


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



***"பசியினால் இளைத்தே வீடுதோறு***
***இரந்தும் பசியறாது அயர்ந்த***
***வெற்றாரைக் கண்டுளம் பதைத்தேன்"***[1]

என்று அவர் பாடிய சூழ்நிலை இதுவேயாகும். ஜீவகாருண்ய ஒழுக்கத்தில் பசிப்பிணி தவிர்த்தலை வலியுறுத்தியதற்கான காரணிகளும் இவையேயாகும்.

அதுபோலவே இராமலிங்கரின் காலச் சமயப் பின்னணியும் இங்கு உளங்கொளத்தக்கது. அடிகளார் காலத்தில் வட இந்தியாவிலும் சமய மறுமலர்ச்சி ஏற்பட்டது. அவற்றில் மூன்று இயக்கங்கள் குறிப்பிடத்தக்கன.

1. **இராஜாராம் மோகன்ராயின் (1774-1884) பிரம்மசமாஜம்.**
2. **தயானந்த சரஸ்வதியின் (1824-1883) ஆரிய சமாஜம்.**
3. **விவேகானந்தரின் (1863-1902) இராமகிருஷ்ண இயக்கம்.**

ஆகிய யாவும் இறுகி உறைந்து போயிருந்த வைதீக சமயத்தை நெகிழ்வுக்குள்ளாக்கிய மறுமலர்ச்சி இயக்கங்களாகும். வடக்கில் இராஜாராம் மோகன்ராய், தயானந்த சரஸ்வதி, விவேகானந்தர் ஆகியோர் சமய சீர்திருத்தப் பணிகளை மேற்கொண்ட பொழுது அங்கு ஆங்கிலக் கல்வி மூலம் ஒரு வகை விழிப்புணர்ச்சி நகர்ப்புறங்களில் பரவியிருந்தது கவனிக்கத்தக்கது. அதுமட்டுமின்றி இம்மூவருள் இராஜாராம் மோகன்ராயும், விவேகானந்தரும் ஆங்கிலக்கல்வி பயின்றவர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இச்சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு இராமலிங்க அடிகளையும் அவர்தம் படைப்புகளையும் ஆராயப்புகின் புதிய கருத்துப் புலப்பாடுகள் தோன்றுவதற்கு இடமுள. ஆங்கிலக் கல்வி கற்று அதன் மூலம் தத்தமது சமூகத்தில் களைகளாய்ப் பரவியிருந்த மூடப்பழக்கவழக்கங்களை நீக்க முயன்ற சமய சீர்திருத்தவாதிகளிடையே, அடிகளாரே குறிப்பிடுவது போல்

***"வாழையடி வாழையென வந்த***
***திருக்கூட்ட மரபில் யான் ஒருவன்"***[2]

என்று இந்தியச் சமய மரபிலிருந்தே தனது சீர்திருத்த கருத்துக்கான களத்தினை அமைத்துக்கொண்ட இராமலிங்க அடிகளின் தனித்தன்மை இங்குக் குறிப்பிடத்தக்கது.

மேலும், மனித சமூகத்தோடு உண்மையான அன்பு கொண்டவர் அடிகளார். அவர் ஆருயிர்களிடத்தில் நாம் அன்பு செலுத்த வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர். ஆன்புடையோர் தாய்க்கு ஒப்பாவர் என்றும் தாய் தன் மக்களிடத்தில் புன்சொல் பேசுவதில்லை. இன்சொல்லே பேசுவாள். அதுபோல சன்மார்க்கிகளும் எல்லோரிடத்தும் தாயன்பு கொண்டு இன்சொல்லுடன் பேசவேண்டும். அங்ஙனம் பேசுபவர்கள் சன்மார்க்கிகள் என்றுரைக்கிரார். இதனைப் பின்வரும் பாடலடிகளால் தெளியலாம்:

***"அப்பா நான் வேண்டுதல் கேட்டு அருள் புரிதல் வேண்டும்***


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com


***ஆருயிர்க்கெல்லாம் நான் அன்பு செய்தல் வேண்டும்"*** [3]

***"சேய் போல் உலகத்துயிரை எல்லாம்***

***எண்ணிச் சேர்ந்து பெற்ற***

***தாய் போல் உரைப்பர் சன்மார்க்கச் சங்கத்தவர்"*** [4]

இதன்வழி, மனித மேம்பாட்டிற்கு அடிப்படையாக அமைவது அன்பு ஒன்றே என்பதையும் மாபெறும் ஆற்றலைப்பெற அன்பே அடிப்படை என்பதையும் அறியமுடிகின்றது.

தூக்கம் - துயரம் - அச்சம் - துன்பம் - வினை – மாயை இவையெல்லாம் ஒழிந்து அடக்கம் - அருள் - அன்பு – அழிவுறா உடம்பு முதலிய பண்புகள் தமக்கு அமைய வேண்டும் என்று விழைவதை,

***"தூக்கமும் துயரமும் அச்சமும் இடமும்***

***தொலைந்தன தொலைந்தன எனை விட்டே"*** [5]

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன.

ஈகைப் பண்பும் பிற உயிர்களிடத்தில் அன்பு - இரக்கம் காட்டுதலும் அடக்கமும் எளிய வாழ்வும் எதையும் தாங்கும் மனப் பக்குவமும் பொறுமையும் தனக்கு வேண்டும் என்கிறார் இராமலிங்க அடிகளார். சான்று:

***"அருளுடையார் எல்லாம் சமரச சன்மார்க்கம்***

***அடைந்தவரே ஆதலினால் அவருடன் கூடித்***

***தெருளுடைய அறநெறியில் களித்து விளையாடி***

***செழித்திருக்க வாழ்க எனச் செப்பிய சற்குருவே"*** [6]

மேலும், திருமூலர், மாணிக்கவாசகர், தாயுமானவர் ஆகியோரின் தாக்கமும் குறள்நெறிச் செல்வாக்கும் திருவருட்பிரகாசரின் படைப்புகளில் பரக்கக் காணமுடிகிறது.

**வள்ளலார் படைப்புகளில் உயிரிரக்கம்:**

*"தாதுண் பறவை பேதுறல் அஞ்சி மணிநா ஆர்த்த மாண்வினைத்தேரன்"* என்பது போன்ற மென்மையான உணர்வுகளைச் சங்க இலக்கியம் பதிவு செய்திருந்தாலும், புலால் உண்ணுதலுக்கு எதிரான கருத்துக்களைப் புலப்படுத்தவில்லை. சங்க இலக்கியப் பாடல்களில் மக்கள் மீன், மாமிச உணவு உட்கொள்கிற வழக்கம் பதிவாகியுள்ளது. சமண, பௌத்த சமயங்களின் செல்வாக்குத் தமிழகத்தில் ஏற்பட்ட பின்னரே புலால் உண்ணும் வழக்கத்திற்கு எதிர்ப்பு ஏற்பட்டது. வள்ளுவர் **"புலால் மறுத்தல்"** என்னும் அதிகாரத்தையே வகுத்துள்ளார்.

***"அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்***

***உயிர்செகுத்து உண்ணாமை நன்று"*** [7]

என்கின்றது வள்ளுவம். தாயுமானவரும் கொல்லாமையை வலியுறுத்தியுள்ளார்.

***"கொல்லா விரதமென்று கொண்டவரே நல்லோர் மற்று***


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com


*அல்லாதார் யாரோ அறியேன் பராபரமே"* [8]

என்கிறார். கொல்லா விரதத்தை மேற்கொண்ட மக்களே நல்லோர் என்று குறிப்பிடுகிறார். மற்றவரைக் கொடியோர் என்று சொல்லவும் மனமின்றி அவரெல்லாம் யாரோ அறியேன் என்று குறித்திருக்கும் நயம் ஈண்டு எண்ணற்பாலது. இராமலிங்க அடிகளார் தனது படைப்புகள் தோறும் உயிரிரக்கத்தை வலியுறுத்தியுள்ளார். சன்மார்க்க கொள்கைகளுள் தலையானது உயிரிரக்கமேயாகும். இதனை இரு வகையாகப் பிரித்துப் பார்க்க முடிகிறது.

**1.புலால் உணவை மறுத்தல் (கொல்லாமை)**

**2.பசிப்பிணி தவிர்த்தல்**

இறையடியார்கள் இறையருளைப் பெறுவதற்குப் பக்தியுணர்வுக்கே முதலிடங் கொடுத்தனர். ஆனால், வள்ளல் பெருமானோ ஜீவகாருண்ய ஒழுக்கத்திற்கு முதலிடங்கொடுத்து, அதுவே பக்தியுணர்வுக்கு அடிப்படை என்பதை விளக்கினார். ஜீவகாருண்யமே மோட்ச வீட்டின் திறவுகோல் என்றார்.

*"எத்துணையும் பேதமுறா தெவ்வுயிரும்*
*தம் உயிர்போல் எண்ணி உள்ளே*
*ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்*
*யாவர்அவர் உளந்தான் சுத்த*
*சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்*
*இடம்என நான் தெரிந்தேன் அந்த*
*வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திட என்*
*சிந்தைமிக விழைந்த தாலோ"* [9]

என்று தமது பாக்களில் உயிரிரக்கத்தை வலியுறுத்திய வள்ளல் பெருமான் தனது இரு உரைநடை நூல்களிலும் (ஜீவகாருண்ய ஒழுக்கம், மனுமுறை கண்ட வாசகம்) இக்கொள்கையை அழுத்தமாக நிறுவியுள்ளார்.

**1. ஜீவகாருண்ய ஒழுக்கம்**

புண்ணியம் என்பது ஜீவகாருண்யம் என்றும், பாவம் என்பது ஜீவகாருண்யமின்மையே என்றும், ஞானவழி – சன்மார்க்கம் என்பது ஜீவகாருண்யமே என்றும், அஞ்ஞானவழி - துன்மார்க்கம் என்பது ஜீவகாருண்ய ஒழுக்கமின்மையே என்றும் உயிரிரக்கத்திற்கு முதலிடம் கொடுக்கிறார். ஜீவகாருண்ய ஒழுக்கத்தினால் கடவுள் அருளைப் பெறக்கூடுமல்லது, வேறெந்த வழியாலும் சிறிதும் பெறக்கூடாது என்பதை அறிதல் வேண்டும் என்று இக்கொள்கையை வலியுறுத்தியுள்ளார். உயிரிரக்கம், உயிர்க்கருணை என்பதற்கான அடிப்படைப் பொருளை இவ்வுரைநடை நூலில் புலப்படுத்துகின்றார்.

வள்ளலார், சகோதரர்களுள் ஒருவர் ஒரு ஆபத்தால் துக்கப்படுகின்றபோதும், துக்கப்படுவாரென்று கண்ட மற்றொரு சகோதரருக்கு உருக்கமுண்டாவது சகோதர உரிமையாகலில், ஒரு ஜீவன் துக்கத்தை அனுபவிக்கக் கண்டபோதும், துக்கப்படுமென்று

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140

Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com

அறிந்தபோதும், மற்றொரு ஜீவனுக்கு உருக்கம் உண்டாவதையே ஜீவகாருண்யமாக உயிரிரக்கமாகக் கொள்கிறார். வள்ளலார், ஜீவகாருண்யத்தை பரஜீவகாருண்யம், அபர ஜீவகாருண்யம் என்று இரண்டு வகையாக வகைப்படுத்துகின்றார். பசியினால் வரும் துன்பத்தையும் கொலையினால் வரும் துன்பத்தையும் நீக்குவது பர ஜீவகாருண்யம் என்றும், இவை தவிர மற்றவைகளால் வரும் துன்பங்களை மாற்றுவது அபர ஜீவகாருண்யமென்றும் கூறுகிறார். தாகம், பிணி, இச்சை, எளிமை, பயம் என்று துன்பத்தையும் கொலையினால் வரும் துன்பத்தையும் தீர்ப்பதையே ஜீவகாருண்யத்தின் முக்கிய இலட்சியமாகக் கருதுகிறார் வள்ளலார்.

பசியின் அவஸ்த்தைகளைப் பலபட விவரிக்கிறார். பசி என்கிற நெருப்பானது ஏழைகள் தேகத்தினுள் பற்றி எரிகின்றபோது ஆகாரத்தால் அவிப்பதுதான் ஜீவகாருண்யம் என்றும், பசி என்ற விஷக்காற்றானது ஏழைகள் அறிவாகிய விளக்கை அவிக்கின்ற தருணத்தில் ஆகாரங் கொடுத்து அவியாமல் ஏற்றுவதே ஜீவகாருண்யம் என்றும் கூறுகிறார்.

*'பசியென்ற புலி',*

*'பசியென்ற விஷம்'.*

*'பசியென்ற தேள்',*

*'பசியென்ற பாவி'*

என்று அடுக்கடுக்கான உருவகங்கள் மூலம் பசிக் கொடுமையினை விவரிக்கிறார். வள்ளலார் காலத்தில் அடுத்தடுத்த கொடிய பஞ்சங்களால் இலட்சக்கணக்கான மக்கள் உயிர் நீத்தது காரணமாகவே சத்திய தருமச்சாலையை அவர் நிறுவினார். சாதி சமய ஆசாரங்கள் வலுவாக வேரூன்றியிருந்த காலகட்டத்தில் ஜீவர்களைப் பசியென்ற அபாயத்திலிருந்து நீங்கச் செய்கின்ற உத்தமர்கள் எந்த ஜாதியாராயினும் எந்தச் சமயத்தாராயினும், எந்த செய்கையை உடையவர்களாயிருப்பினும் தேவர், முனிவர், சித்தர், யோகர் முதலிய யாவராயினும் வணங்கத்தக்க சிறப்புடையவர்கள் ஆவர் என்ற இராமலிங்க அடிகளாரின் குரல் கலகக் குரலாகவே ஒலிப்பதை அறியமுடிகிறது. ஒருவர் ஆணைப் பெண்ணாக்கி செத்தாரை எழுப்பிச் சித்துக்கள் புரிபவராக இருப்பினும் பிரிதொரு ஜீவனை கொன்றுண்ணும் எண்ணமுடையவர் ஆயின், அவரை ஞானி எனக் கூறலாகாது என்று எதிர்மறை நிலையிலும் இதனை வலியுறுத்துகிறார்.

**2. மனுமுறை கண்ட வாசகம்**

பெரிய புராணத்திலுள்ள மனுநீதி கண்ட புராணத்தை ஒட்டி எழுந்த வழி நூலே மனுமுறை கண்ட வாசகமாகும். மற்ற கதைகளை விடுத்து இக்கதையை அடிகளார் தேர்வு செய்திருப்பதிலிருந்தே அடிகளாரின் உள்ளார்ந்த நோக்கத்தை அறிய முடிகிறது. மக்களிடம் மனித உயிரையும் பிற உயிர்களையும் ஒன்றெனக் கருதுகின்ற மனப் பக்குவம் வரவேண்டுமென்ற பெரும் விழைவு அடிகளார்க்கு இருந்தது. தான் பெற்ற மகனையும் பசுவின்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



கன்றையும் சரிநிகர் சமமாக கருதிய மன்னனின் வரலாற்றைக் கூறுவதன் மூலம் உலகிற்கு ஜீவகாருண்ய பேருண்மையை விளக்க முயல்கிறார்.

புறாவின் உயிரைக் காக்க தன்னுடலில் இருந்து தசையை அரிந்து கொடுத்த சிபியும் சன்மார்க்கியே. ஆனால் அதற்காக அவன் செய்த தியாகம் தன்னுடலில் இருந்து சிறிதளவு தசையேயின்றி வேறன்று. தழுவக் கொம்பின்றி அலைந்த கொடிக்குத் தேரீந்த பாரி ஆன்ம நேய ஒருமைப்பாட்டைக் கடைபிடித்தவனே ஆயினும் அவன் அதன் பொருட்டு இழந்தது ஒரு தேரேயன்றி வேறொன்றுமில்லை. ஆனால் கன்றையிழந்த பசுவுக்குத் தன் ஒரே மகனைத் தேர்க்காலில் இட்டுக் கொன்ற மனுநீதிச் சோழனே இவர்களுக்கெல்லாம் மேம்பட்ட பரிபூரண சன்மார்க்கியாகத் திகழ்வதை மா.பொ.சி. சுட்டிக்காட்டியுள்ளார்.[10]

**முடிவுரை**

இராமலிங்க அடிகளார் நிறுவிய சாலை, சபை, சங்கம் ஆகிய யாவற்றுக்கும் அடிப்படைக் கொள்கையாக விளங்குவது உயிரிரக்கமேயாகும். புலால் உண்ணாதவரெல்லாம் உறவினத்தார் என்றும், உண்ணுவோரெல்லாம் புறவினத்தார் என்றும் கூறுகிறார். தெய்வங்களின் பெயரால் உயிர்பலி கொடுக்கும் வழக்கத்தினையும் சாடியுள்ளார். ஆருயிர்க்கு எல்லாம் அன்பு செய்கின்ற உயிர்கருணையினைத் தனது அருட்பாக்களில் வலியுறுத்துகின்றார். பசிப்பிணி நீக்கல், கொல்லாமை ஆகிய இரு நிலைகளில் உயிரிரக்கத்தை விளக்குகின்றார் வள்ளலார். இறை வழிபாட்டுக்குப் பக்தியுணர்வைவிட உயிரிரக்கத்துக்கு முதன்மை கொடுத்த வகையிலும், உயிரிரக்கக் கொள்கையைப் பின்பற்றுவோர் எந்தச் சாதியைச் சார்ந்தவர்களாக இருந்தாலும், எந்தச் சமயத்தைச் சார்ந்தவர்களாக இருந்தாலும் அவர்கள் மேம்பட்டவர்களே என்று கூறும் நிலையிலும் வள்ளலாரின் தனித்தன்மையையும் அவரது வாழ்வியல் சிந்தனைகளையும் அறியமுடிகிறது.

**அடிக்குறிப்புகள்**

1. திருவருட்பா, பாடல், 1419.
2. மேலது, 469.
3. மேலது, 12.
4. மேலது, 610.
5. மேலது, 86.
6. சிற்பி. பாலசுப்பிரமணியம், அருட்பாவின் அமுதம், ப. 21.
7. திருக்குறள், புலால் மறுத்தல், 52.
8. தாயுமானவர், பராபரக்கண்ணி, 329.
9. திருவருட்பா, பாடல், 1616.மா. பொ. சிவஞானம், வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு, ப. 209.

**துணைநூற் பட்டியல்:**

1. சிவஞானம். மா. பொ., வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு, (ஸ்ரீ செண்பகா பதிப்பகம்: 2011).
2. சிற்பி. பாலசுப்பிரமணியம், அருட்பாவின் அமுதம், (சாகித்திய அகாதமி பதிப்பகம்,



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



சென்னை: 2001)

3. தாயுமானவர், பராபரக்கண்ணி மூலமும் உரையும், (உமா பதிப்பகம் , சென்னை: 2000).
4. திருக்குறள், (1999), நாமக்கல் கவிஞர். (உ.ஆ.), (வர்த்தமானன் பதிப்பகம், சென்னை: ஏழாம் பதிப்பு 2000).
5. துரைசாமிப்பிள்ளை. ஔவை. சு., திருவருட்பா மூலமும் உரையும், (அண்ணாமலைப் பல்கலைக்கழகம்: சிதம்பரம்: 1990).



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# அகநானூற்றில் முல்லை நிலமக்களும் தொழில்களும்

**இரா. பாண்டியராஜன்,**
முழுநேர முனைவர்ப்பட்ட ஆய்வாளர்,
இக்கால இலக்கியத் துறை, தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை – 21.

மலைப்பகுதியின் அடிவாரத்தில் இருந்த காடும் காடு சார்ந்த இடமும் முல்லை நிலமாகும். இங்கு வாழ்ந்தவர்கள் இடையர், ஆயர் என்று அழைக்கப்பட்டனர். பசுக்களையும், ஆடுகளையும் காடுகளில் மேய்த்தனர், அவரை, துவரை, கேழ்வரகு போன்றவற்றைப் பயிரிட்டனர். ஆநிரைகளின் மூலம் கிடைத்த பால், தயிர், மோர், போன்றவற்றை அயல் நிலத்தார்க்கு பண்டமாற்றம் செய்தனர். முல்லை நிலத்தில் வாழும் மக்களின் தொழில்களை குறிப்பதாக இக்கட்டுரை அமைகின்றது. முல்லை நில மக்கள் பெயர் **"முல்லையாளர் கோவலர் இடையர், சொல்லியவண்டா பொதுவர் ஆன்வல்லோர், குடவர் பாலர் தொறுவர் கோவிந்தர், அண்டர் கோபாலர் ஆயர் அமுதர் என்று, இங்கிவை முல்லை நிலத்தவர் பெயரே"**[1] இது முல்லை நில மக்களின் யெராகும். முல்லை நில மகளிர் பெயர் **"ஆய்ச்சியர் தொறுத்தியர் பொதுவியர் குடத்தியர், வாய்த்த இடைச்சியர் முல்லைநில மகளிர்"**[2] இதுவே முல்லை நில மகளிர் பெயராகும். முல்லை நிலத்தலைவன் பெயர் **"அண்ணல் தோன்றல் குறும் பொறைநாடன், கானகநாடன் முல்லைத் தலை மகன்"**[3] இது முல்லை நிலத்தலைவனின் பெயராகும். முல்லை நிலத்தலைவிப் பெயர், **"அனையவை முல்லைத் தலைவிக்கு மாகும்"**[4] இது முல்லை நிலத்தலைவிப் பெயராகும். முல்லைத் திணையில் வரும் வேடர்களைக் குறிப்பதாக **"தொடுதோற் கானவன் கவை பொறுத்தன்ன"**[5] என்ற அடியில் அமைந்துள்ளது. தொல்காப்பியரால் குறிப்பிடப்பெறாத கானவன், கானவர் என்னும் சொற்கள் குறிப்பிட்ட நிலத்தவரைக் குறிக்காது கையில் வில் உடைய, காட்டில் வாழும் வலிமையானவர்களைக் குறிப்பதாக அமைந்துள்ளது. கோவை வளர்த்த முல்லை நிலத்து மக்கள் கோவலர் எனப்பட்டனர்.**"முல்லை நிலத்து மக்களில் பசுக்களை மேய்த்தவர் கோவலர்"**[6] என்றும் **"கையிலே கோலைக் கொண்டிருந்த காரணத்தால் இவர்கள் கோலாயர் எனவும் அழைக்கப்பெற்றனர்"**[7] என்றும் கோவலர் என்பதற்கு விளக்கம் கூறுவர். கோ என்றால் பசு என்று பொருள். பசு எனப்படும் கோவை மேய்ப்பவர் கோவலர் எனப்பட்டனர்.

கோவினை மேய்ப்பவரைக் குறிப்பதாக கோவலர் என்னும் சொல், **"முல்லை வியன் புலம் பரப்பி, கோவலர், குறும் பொறை மருங்கின் நறும் பூ அயர, பதவு மேயல் அருந்து மதவு நடை நல் ஆன்"**[8] என்ற அடிகளில் அமைந்துள்ளது. தனது ஆ நிரைகளைக் குழல் ஊதியோ, சீழ்க்கை ஒலி எழுப்பியோ அழைக்கும் மக்களைக் குறிப்பதாக கோவலர் என்னும்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



சொல், **"கல்லாக் கோவலர் ஊதும், வல் வாய்ச் சிறு குழல்"**[9] என்றும் **"அந்திக் கோவலர் அம்பணை இமிழ்இசை"**[10] என்ற அடிகளில் அமைந்துள்ளது. கொல்லை என்பது முல்லை நிலத்தைக் குறிக்கும் சொல்லாகும். அக்கொல்லையில் வாழும் மக்களைக் குறிப்பதாக கோவலர் என்னும் சொல் "கொல்லைக் கோவலர்" என்று சங்க இலக்கியத்தில் அமைந்துள்ளது. சங்க இலக்கிய அடிகள் யாவும் கோவலர் என்னும் சொல்லை ஏதேனும் ஒருவகையில் முல்லை நிலத்துடன் தொடர்புபடுத்தியே குறிப்பிடுகின்றது. தொல்காப்பியம் என்ற இலக்கண நூலில் அச்சொல் குறிப்பிடவில்லை. ஆ என்றால் பசு எனறு பொருள். பசுக்கூட்டம் ஆயம் எனப்பட்டது. ஆயம் எனப்படும் பசுக்கூட்டத்தை ஓம்பி வளர்ப்பவர் ஆயர் எனப்பட்டனர். ஆயன் என்பதற்கு **"ஆவை வளர்க்கும் இடையன்"**[11] என்றும் ஆயர் என்பதற்கு **"இடையர்"**[12] என்றும் பொருள் கூறுவர். ஆயர் என்னும் சொல் தொல்காப்பியத்தில், **"ஆயர் வேட்டுவர் ஆடுஉத் திணைப்பெயர், ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே"**[13] என்ற நூற்பாவில் முல்லைநில ஆண்மகன் பெயரைக் குறிப்பதாக உள்ளது துணிகளுக்குப் பசை இட்டு வெளுக்கும் பெண் புலைத்தி எனப்பட்டாள். தொழிலால் பெயர் பெற்றதை சங்க இலக்கியத்தின் பாக்கள் மூலமாக காண்போம். இச்செய்தியை, **"பசை கொல் மெல் விரல், பெருந் தோள், புலைத்தி, துறை விட்டன்ன தூமயிர் எகினம்"**[14] என்ற அடிகளில் அமைந்துள்ளது.

முல்லை நில மக்கள் கால்நடை வளர்ப்பில் ஈடுபட்டுள்ளனர். முல்லை நில மக்களுள் ஆண்கள் ஆயர், கோவலர், இடையர், பொதுவர் என அழைக்கப்பெற்றுள்ளனர். பெண்கள் ஆய்ச்சியர், கோவித்தியர், இடைச்சியர், பொதுவியர் என அழைக்கப்பெற்றுள்ளனர். ஓரிரு இடங்களில் அண்டர், பூழியர் எனும் சொற்களும் முல்லை நில மக்களைக் குறிக்கப் பயன்பெற்றுள்ளன. ஆயர்கள் வாழ்ந்த பகுதியான காடும் காடு சார்ந்த நிலப்பகுதிகளில் விலங்குகள் இயல்பாகவே மிகுதியாகக் காணப்பெறும். அவ்விலங்குகளுள் மிகப் பயன் தரும் ஆ, எருமை, ஆடு, ஏறுகளைத் தேர்வு செய்து, அதன் உழைப்பு, போன்ற நிரைகளை மேய்க்கும் தொழிலில் ஈடுபட்டுள்ள ஆயர்கள் தூய ஆடை அணிந்தாலும் சிறிது நேரத்தில் ஆடையில் அழுக்கேறி விட வாய்ப்புண்டு. எனவே, இவர்கள் மாசு படிந்த ஆடை அணிந்தவர்களாகவே காட்சியளிக்கின்றனர். இவர்கள் மேய்ச்சலின் பொருட்டு நீண்ட பயணம் மேற்கொள்வதால் உணவுக் கலங்களையும் பறியையும் சுமந்த அழுத்திய தோள், காட்டின் வெம்மை, பரற்கல், முட்களிலிருந்து தம் கால்களைப் பாதுகாக்கும் பொருட்டு செருப்பினை உடையவர்களாகவும் நிகழ்ந்துள்ளன.

ஆயர்கள் தம்மையும் தமது நிரைகளையும் கொடிய விலங்குகளிடமிருந்து காக்க தீக்கடைக்கோலால் தீயை உண்டாக்கி விறகினை எரித்து பெருந்தீ உருவாக்கியுள்ளனர். அதனோடு சீழ்க்கை ஒலியையும் எழுப்பி விலங்குகளை ஓட்டியுள்ளமையை, **"கடைகோல் சிறுதீ அடைய மாட்டி, திண்கால் உறியன் பானையன், அதளன், நுண்பல் துவலை ஒருதிறம்**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**நனைப்ப, தண்டுகால் ஊன்றிய தனிநிலை இடையன், மடிவிடு வீளை கடிதுசென்று இசைப்ப, தெறிமறி பார்க்கும் குறுநரி வெரீஇ, முள்ளுடைக் குறுந்தூறு இரியப் போகும்"**[15] இவ்வடிகள் விளம்புகின்றன. ஆயர்கள் மழைக்காலத்தில் குளிர்ச்சியிலிருந்து தம்மைக் காத்துக் கொள்ளவும் தீக்கடைக் கோலால் தீயை மூட்டி குளிர் காய்ந்துள்ளனர். புலி, நரி போன்ற கொடிய விலங்குகள் இல்லாத பகுதிகளுக்கு ஆநிரைகளை ஓட்டிச் சென்றுள்ளனர். நிரைகளுக்கு மிகுந்த பாதுகாப்பு உடையோராகவும், கொடிய விலங்குகள் வந்தவிடத்து அதற்கு அஞ்சாதவர்களாகவும் ஆயர்கள் திகழ்ந்துள்ளன. நிரைகளை கட்டிப்போடும் இடம் மன்றம், தொழு, களன் எனக் குறிப்பிடப்பெறுகின்றது. தொழுக்கள் முள்வேலியிட்ட தொடரிக் காடுகள் சூழ்ந்ததாகத் திகழ்கின்றன. தொழுக்கள் சேறு நிறைந்தனவாகவும், நிரைகளைக் கட்டிப் போடுவதற்கேற்ப மரத்தூண்களைக் கொண்டும் அமைந்துள்ளன. நிரைகள் கழுத்திலும் கன்றுகள் காலிலும் கயிறால் பிணைத்து வைக்கப்பெற்றுள்ளன. அண்மையில் பிறந்த எருமைக் கன்றுகள் தன் தாயருகில் துயில் கொண்டுள்ளன. ஆயர்கள் இசை நாட்டமுள்ளவர்களாக இருந்துள்ளனர்.

இசையைக் கலை என்ற நிலையில் புலனின்பத்திற்காக மட்டுமில்லாது மேய்ச்சலில் ஈடுபட்ட ஆநிரைகளை ஒன்று சேர்க்கும் உத்தி முறையாகவும் கையாண்டுள்ளமையை, **"வென்றுகொடி எடுத்தனன் வேந்தனும், கன்றொடு, கறவைப் புல்லினம் புறவுதொறு உகள, குழல்வாய் வைத்தனர் கோவலர்"**[16] என்ற அடிகள் பதிவு செய்கின்றது. பவளம், பொன், சங்கினால் செய்த வளையலைப் பெண்கள் அணிந்துள்ளனர். அக்காலப் பெண்கள் வளையலை இறுக்கமாக அணிந்துள்ளனர். அத்தன்மையால் கையில் வெண்தடம் பதிய கையில் வளையலில்லா நிலையில் அது தெரிந்துள்ளது. அக்காட்சியை மூங்கிலில் பட்டை உரித்த நிலைக்குச் சங்கப் புலவர்கள் உவமைப்படுத்தினர். ஈங்கு வளை இறுக்கமாக அணிந்துள்ள தன்மையால், கணவனைப் பிரிந்த பின் தலைவி சிறிது மெலியவே வளை நெகிழ்ந்துள்ளதாகக் கருதப்பெறுகின்றது. சங்கினை வாளால் அறுத்த பின் கடைந்து வளையல் செய்தவர்கள் **'வேளாப் பார்ப்பான்'** என அழைக்கப்பெற்றுள்ளனர். இதனை, **"வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த, வளை களைந்து ஒழிந்த கொழுந்து"**[17] என்ற அடிகள் பதிவு செய்துள்ளன. ஆடை நெய்யுங்கால் நூல் அற்றுப் போகாமலிருக்க நூலிற்குப் பசை இட்டுள்ளனர். இதனை, **"பசை கொல் மெல் விரல்"**[18] எனுமடியும் உணர்த்துகின்றது.

சங்கத் தமிழர் விலங்குகளின் தோலைப் பக்குவப்படுத்தி தோலாகவும் கேடகம், முரசு, முழவு, பறை, பை, வேலின் உறை போன்ற பொருட்களாகவும் செய்து பயன்படுத்தியுள்ளனர். **"விலங்குகளின் தோலை உரித்த பின் நெய்யில் தோய்த்து எடுத்துள்ளனர்"**[19] பின் அதிலுள்ள ஊன் போன்ற கழிவுப் பொருட்களை நீக்கி இரும்புக் கருவியால் பயன்படு பொருளாக மாற்றியுள்ள நிலையை, **"பசைபடு பச்சை நெய்தோய்த் தன்ன"**[20] என்ற அகநானூற்றின் பாடல் அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. தோலால் செருப்பு உருவாக்கப் பெற்றுள்ளது. அடியை மூடும்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



தோல் செருப்பு **'அடிபுதை தொடுதோல்'** எனக் குறிப்பிடப் பெற்றுள்ளது. ஆடுகளின் தோலால் தோற்படுக்கை செய்யப் பெற்றுள்ளது. பாணர்கள் தோளில் தோற்பையையும் வீரர்கள் வேலிற்குத் தோலுறையும் இட்டுள்ளனர். வீரம் மிக்க ஏறின் தோலால் முரசு வடிக்கப் பெற்றுள்ளது. இக்கருத்துக்கள், **"ஓடா நல்ஏற்று உரிவை தைஇய, ஆடுகொள் முரசம்"**[21] என்ற சங்க இலக்கிய பாக்கள் இடம்பெற்றுள்ளன. யானைத் தந்தத்தால் கட்டில் உருவாக்கப் பெற்றுள்ளது. வெற்றி பெற்ற மன்னர் தோற்ற மன்னரின் பட்டத்து யானையின் தந்தத்தை, யானை துன்புற வெட்டி எடுத்து அதில் கட்டில் செய்துள்ளனர். மேலும், போரில் இறந்த யானைகளின் தந்தங்களைக் கொண்டு கட்டில் அமைக்கப் பெற்றுள்ளது. அந்தத் தந்தங்கள் யானையிடமிருந்து தானாக விழுந்துள்ளன. தச்சன் கட்டிலை உண்டாக்க உளியைப் பயன்படுத்தியுள்ளான், வட்டக் கட்டிலொன்று நடுவில் பெரிய இலை வடிவத்தைத் தாங்கியுள்ளது. கட்டிலின் கால்கள் சூலுற்ற பெண்களின் மார்பைப் போல வலிய தன்மை கொண்டுள்ளது. கட்டிலில் முத்து மாலை போன்றவை தொங்க விடப் பெற்றுள்ளன. உயரம் குறைவாகவும் அகன்றும் கட்டில் காணப்பெற்றுள்ளதை சங்க இலக்கிய பாக்கள் தெளிவுப்படுத்துகின்றன. தேர், மரம், பொன்னால் செய்யப்பெற்றுள்ளது. ஒரு நாளில் எட்டுத் தேர் செய்யுமளவிற்குத் தொழில் வல்லமை மிக்க தச்சர்கள் இருந்தள்ளன. தேரிலுள்ள உருளையின் வட்டையில் துளைகள் இடப்பெற்று ஆர்கள் பொருத்தப் பெற்றுள்ளன. உருளை முழுமரத்தில் கடையப்பெற்று உருவாக்கப் பெற்றுள்ளது. பார் கணைய மரத்தை இணைத்ததையொப்பவும் தேர்த்தாளிப் பாயால் கூரை வேயப்பெற்றும் தேர் வடிவமைக்கப் பெற்றுள்ளன. யானைக் கொம்பால் தேரிலுள்ள கொடிஞ்சி உருவாக்கப் பெற்றுள்ளது. அது தாமரை வடிவில் தேர் முகப்பில் நடப்படுவதாகும்.

தேரை இழுத்துச் செல்ல குதிரை, கோவேறு கழுதை பயன்படுத்தப் பெற்றுள்ளன. ஓரினமான குதிரைகளைத் தேரில் பூட்டியுள்ளனர். குதிரைகளை விரட்ட ஓட்டுங் கோலில் தாற்று முள்ளைச் செருகியுள்ளனர். தேரில் மணிகள் மாலையாகக் கோர்க்கப் பெற்றுள்ளதனை, **"கற்பால் அருவியின் ஒலிக்கும் நல்தேர்த், தார்மணி பலஉடன் இயம்ப"**[22] என்ற அடிகள் பதிவு செய்துள்ளது. மனிதன் தோலாடையைப் பயன்படுத்திய காலத்தில் உலர்ந்த தோலின் மீது திண்மையான பொருட்கள் விழுந்தால் அதிலிருந்து ஓசையெழும் என்ற உண்மையைத் தெரிந்து கொண்டுள்ளான். பின் பல முயற்சிகள் செய்து குடத்தில் தோலை இறுகப் பிணைத்து குறுந்தடிகளால் அறைந்தது பறையின் தோற்றத்திற்கு வித்தாக அமைந்துள்ளது. பறை சங்க இலக்கியத்தில் போர் அறிவித்தல், வெள்ளத்தைத் தடுக்க அழைப்பு விடுத்தல் போன்ற பல செய்திகளை அறிவிக்கவும் இசைத் தொழிலிற்காகவும், பயன்படுத்தப் பெற்றுள்ளது. பறையை அறைந்தோர் கோடியர், துடியர், புலையர் எனப் பெற்றனர். தொல்காப்பியர் கருப்பொருட்களுள் ஒன்றாகப் பறையைக் குறிப்பிட்டுள்ளார். **"பறை என்பது ஓடும் இசையை ஒழுங்கு பெற நிறுத்தி ஓர் அளவோடு சீரோடு ஒத்த அழகோடு**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**நடக்க இசைக்கு நடை கற்பிக்கும் கருவி”**[23] எனப் பறைக்கு வளர்மதி விளக்கம் தருகின்றார். தொடக்க காலத்தில் தோற்கருவிகளில் இசையெழுப்பியன **‘பறை’** எனப் பொதுவாக அழைக்கப்பெற்றுள்ளன. பறை கொட்டுபவன் மனத்திலே நினைத்ததை அவ்வாறே பறையோசையில் வெளிப்படுத்தியுள்ளான்.

மேலும் மான், காளை, பசுவின் தோலினைத் தோற்கருவிகள் செய்யப்பட்டு அதனை பறையாக பண்டைய கால மக்கள் பயன்படுத்தியுள்ளனர். போர்க்களத்தில் ஒலிக்கப்பெறும் முரசு சிறப்பாகத் தயார் செய்யப் பெற்றுள்ளது. பெருமை மிக்க இரண்டு காளைகளைத் தேர்ந்தெடுத்து அதனைச் சண்டையிடச் செய்துள்ளனர். அதில் வெற்றி பெற்ற காளையின் தோலை மயிர் சீவாது போர்த்தி முரசு செய்துள்ளனர். அம்முரசு போர்க்களத்தின் நடு இடத்தில் ஒலிக்கப்பெற்றுள்ளது. தோலுடன் கடம்பமரம் முரசினைத் தயாரித்தலில் பயன்படுத்தப் பெற்றுள்ளது. முரசை அடிக்கடி அடிக்கும் பொழுது அதன் கண் கிழிந்துள்ளது. ஒவ்வொரு நாட்டிலும் மன்னராட்சி, மக்களாட்சி என ஏதேனும் ஓர் ஆட்சி நடைபெற்று வருகின்றது. ஒரு குறிப்பிட்ட அரசாட்சி இல்லா நாடுகளில் சீரான மக்கட்பண்பு இல்லாது போய்விடும். சங்க கால அரசு நாட்டை விரிவுபடுத்த போர் செய்தல், மக்களைக் காக்க நீர்நிலைகள் அமைத்தல், நீதியை நிலைநிறுத்துதல் எனப்பல செயல்களைத் தன்னகத்துள் அடக்கியதாய் விரிவாக்கம் பெற்றுத் திகழ்ந்துள்ளது. அவ்வேலைகளைச் செய்து முடிக்க தூதர், ஒற்றர், படைத்தலைவர், அமைச்சர் என்போர் உதவி செய்துள்ளனர்.

முல்லை நிலத்தில் முதன் முதலில் அரசாட்சி தோன்றியிருப்பதாக பி.டி. சீனிவாச ஐயங்கார் தம் தமிழர் வரலாறு எனும் நூலில், ‘தமிழில் கோன், கோ என்னும் சொற்கள் அரசனைக் குறிப்பன. இச்சொற்கள் ஆயர்களைச் சுட்டும். அரசன் தன் காவற்கடமையின் சின்னமாகச் செங்கோலைத் தாங்கியுள்ளான். ஆயனும் கையில் செங்கோலை வைத்துள்ளான். எனவே முல்லை நிலத்தில் தான் முதன்முதல் அரசமுறை தோன்றியிருக்க வேண்டும்’ எனக் குறித்துள்ளார். அதை அடியொற்றி வெட்சித்திணைக்கு ஆ.சீ. ஸ்ரீநிவாசன், போரின் போது தம் இனக்குறியீடாகிய ஆநிரைகளுக்குத் தீங்கு நேர்ந்து விடக் கூடாது என ஆநிரைகளை முதலிலேயே களவு செய்து வந்துள்ளனரென சங்க இலக்கியத்தில் இனக்குறியீடுகள் என்னும் கட்டுரையில் விளக்கமளித்துள்ளார்.

சங்க இலக்கியத்தில் சுட்டப்பெறும் அரசர்க்குரிய பல்வேறு பெயர்களுள் காவலர் என்பதும் ஒன்றாகும். அச்சொல்லுக்கு, **“தொடக்கத்தில் மக்கள் உழுதுவித்து விளை செய்யும் பயிர்களை விலங்குகள் தொல்லையினின்றும் காத்தனர். எனவே இவர்கள் ‘காவலர்கள்’ எனப்பட்டனர். இவர்களுடைய இவ்வரும் பெருந்தொண்டிற்கு மக்கள் தாம் விளைவித்த நிலத்திலிருந்து வந்த வருவாயில் ஒரு பங்கினை நன்றிக் கடனாக காணிக்கையாகத் தந்தனர். நாளடைவில் இக்காவலர்கள் நாட்டின் காவலர்கள் ஆயினர். அது பரம்பரை பரம்பரையாகவும் தொடர்ந்தது”**[24] என சி. பாலசுப்பிரமணியன் கருத்துரைத்துள்ளார்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



இக்கூற்றில் மருத நிலத்திலிருந்து அரசாட்சி தோன்றியுள்ளது என எண்ண இடமுள்ளது. இக்காரணங்களால் ஒரு குறிப்பிட்ட நிலத்திலிருந்து அரசாட்சி தோன்றியிருக்கும் எனக் கருதுவது சரியெனக் கருதப்பெறவில்லை. இனக் குழுவாக வாழ்ந்த மனிதர்கள் குறிப்பிட்ட சட்ட திட்டங்களைத் தமக்குள் வகுத்து அதன் வழி செயல்பட்ட நிலையில், விலங்கு, இயற்கைச் சீற்றமிடமிருந்து மக்களைக் காத்தவன் தலைவனாக்கப் பெற்றுள்ளான். அதுவே இனக்குழுவிலிருந்து மாற்றம் பெற்ற அரசமுறை தோன்ற வழி வகுத்துள்ளது.

சங்க இலக்கியங்களில் மன்னன், வேந்தன், அரசன், கோ, இறை, காவலர் எனப்பல பெயர்களால் குறிக்கப்பெற்றுள்ளான். அப்பெயர்களுள் சிற்சில வேறுபாடு உள்ளதை, **“சிற்றரசர், தலைமையரசர், பேரரசர் எனத் தமிழரசர் முத்திறப்பட்டிருந்தனர். இம் முத்திறத்தாரும் முறையே, குறுநிலவரசரும் பெருநிலவரசரும் பல நிலவரசரும் ஆவர். சிற்றரசர்க்கு மன்னன் என்னும் பெயரும், தலைமையரசர்க்கு வேந்தன், கோ (கோன்) என்னும் பெயரும் மரபாகவுரிய... கோ என்னும் பெயர் வேந்தருக்கு மட்டுமன்றி, அவருக்கடங்கி அவர் நாட்டுள் ஒவ்வொரு பகுதியை ஆளும் அவர் தாயத்தார்க்கும், சிற்றரசருள் பெரியவர்க்கும் வழங்கும் ... வேந்தன் என்னும் பெயரோ என்றும் தலைமையரசனையே குறிக்கும்”**[25] என ஞா. தேவநேயப்பாவாணர் கட்டுரைத்துள்ளார். அரியணை அரசு கட்டில் எனப்பெற்றுள்ளது. அது சிங்க உருவத்தால் தாங்கப் பெறுவதால் அரியணை எனப்படலாயிற்று. நாட்டில் பல இடங்களில் அரியணை அமைக்கப் பெற்றுள்ளதை, **“தலைநகரிலும் பிற பாடி வீடுகளிலும் அரசனுக்கு அரியணையுண்டு. தலைநகரில், அரசு வீற்றிருக்கும் ஓலக்க மண்டபத்திலும் (Durbar Hall), அமைச்சரொடு குழும் சூழ்வினை மண்டபத்திலும், அறம்கூறு மண்டபத்திலும், ஒவ்வோர் அரியணையிருக்கும்”**[26] என்பர்.

நாடு, அணி, களிறு, நெல் போன்றன திறைப்பொருட்களாக அக்காலத்தில் ஈயப்பெற்றுள்ளன. பெருமன்னருக்குட்பட்ட சிற்றரசர்கள், மலையிலுள்ள, அருவி, அங்குள்ள பொருட்களைக் கொண்டு வருவதையொத்து பலவகைச் செல்வங்களை அவர்களிடம் திறையாகத் தருவதற்காக, அரண்மனை முன் காத்திருந்துள்ளனர். கொண்காணங்கிழானின் ஊர் திறை செலுத்த வந்த சிற்றரசர்களால் சூழப்பெற்றயுள்ளன என்று சங்க இலக்கிய பாக்கள் கூறுகிறது. போரில் தோற்ற மன்னன் சிறையில் அடைக்கப் பெற்றுள்ளான். அவன் சிறையிலிருந்து விடுபட, வெற்றி அடைந்த மன்னனுக்குத் திறைப் பொருட்களை பெருமளவில் நல்கியுள்ளான். பகைவர்களை அழித்து, அவர்களின் செல்வங்களைக் கொள்ளையிட்டுக் கொணர்ந்ததையும் இலக்கியங்கள் சான்று காட்டுகிறது. பெரு மன்னன் படையெடுத்து வருவதற்கு முன், படையெடுத்து பாசறையில் தங்கியுள்ள பின் திறைப்பொருள் கொடுத்து சிற்றரசர் போரைத் தடுத்துள்ளனர்.

பெருமன்னர்களின் பகைவர் பிழை, பிடிக்காத செயல் புரிந்திடினும் திறைப்பொருள் கொடுத்து அருள் பெற்றதனை, **“நன்கலம் களிற்றொடு நண்ணார் ஏந்தி, வந்துதிறை கொடுத்து**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**வணங்கினர் வழிமொழிந்து, சென்ற என்ப ஆயின், வேந்தனும், நிலம்வகுந் துறாஅ ஈண்டிய தானையொடு”**[27] என்ற அடிகள் பதிவு செய்கிறது. ஒரு நாளில் எட்டுத்தேர் செய்யும் வல்லமை உடைய தச்சர்களால் தேர் உருவாக்கப் பெற்றுள்ளது. சங்க காலத்திற்குப்பின் தேர்ப்படை வழக்கொழிந்து விட்டன எனத் தேவநேயப்பாவாணர் மொழிந்துள்ளார். இரண்டு குதிரைகள் பூட்டப்பெற்ற தேர்கள் பெருமளவிலும் நான்கு குதிரைகள் பூட்டப்பெற்ற தேர்கள் குறைவாகவும் பயன்பாட்டிலிருந்துள்ளன.

இதனை, **“பெயல்தொடங்கின்றால் வானம் வானின், வயங்குசிறை அன்னத்து நிரைபறை கடுப்ப, நால்குஉடன் பூண்ட கால்நவில் புரவிக், கொடிஞ்சி நெடுந்தேர் கடும்பரி தவிராது”**[28] என்ற இவ்வடிகள் புலப்படுத்துகின்றன. போரின் பொருட்டுத் தங்குவதற்காக ‘பாசறை’ அமைத்துள்ளனர். போர் வினையின் பொருட்டு தங்கியுள்ளதால் அங்குள்ள வீரர்கள் இல்லத்திலுள்ள மனைவி, மக்களைக் குறித்து எண்ணுவதில்லை. வீரர்கள் குளிர் மிகுந்து காணப்பெறின் காட்டிலுள்ள மரங்களை வெட்டி நெருப்புண்டாக்கி குளிர் காய்ந்துள்ளனர். இதனை, **“வெஞ்சின வேந்தன் வியன்பெரும் பாசறை, வென்றி, வேட்கையொடு நம்மும் உள்ளார்”**[29] என்ற இவ்வடிகள் நவில்கின்றன. தலைவனது தொலைதூரப் பயணத்திற்குதவும் தேரைச் செலுத்தும் தேர்ப்பாகன் ‘வலவன்’ என அழைக்கப் பெற்றுள்ளான். அவன் கோவேறு கழுதை, குதிரை பூட்டப்பெற்ற தேர்களை ஓட்டியுள்ளான்.

குதிரைகளுக்குக் கொள்ளுடன் நெய் சேர்க்கப்பெற்ற உணவினை அளித்துள்ளான். கடிவாளம் தாற்றுக்கோல் அவன் தொழிலைச் செம்மையாகச் செய்ய உதவியுள்ளன. தலைவனொருவன் தனக்குத் தேர் ஓட்டிய வலவனை மார்புறத் தழுவி அன்புடன் இல்லிற்கு அழைத்துச் சென்றுள்ளான். இதனை, **“உரைமதி – வாழியோ வலவ! – என தன், வரைமருள் மார்பின் அளிப்பனன் முயங்கி, மனைக்கொண்டு புக்கனன்”**[30] ஆகிய அடிகளின் வழி புரிந்துகொள்ள இயலுகின்றது. தலைவனுக்குக் கீழ்த் தேர்ப்பாகன் பணி புரிந்தாலும் மார்புறத் தழுவி இல்லிற்குச் செல்லுமளவிற்கு அவர்களுக்கிடையேயான உறவு நிலை இருந்தமையை இவ்விடம் வெளிப்படுத்துகின்றது.

முல்லை நிலமக்களின் தொழிலாக தழை, பருத்தி. பட்டினாலான ஆடையை அக்கால மக்கள் அணிந்துள்ளனர். பல வண்ண ஆடைகளும் ஆடைகளுக்குக் கஞ்சியூட்டுதலும் அகிற்புகையூட்டுதலும் வழக்கத்திலிருந்துள்ளன. தோலால் முரசு, முழவு போன்ற தோற்கருவிகள் பை, வேலின் உறை, செருப்பு முதலியன செய்துள்ளனர். தோலிற்கு நிறமூட்டும் தொழில்நுட்பம் இருந்துள்ளது. நிலவரி, சுங்கவரி, திறை ஆகியன அரசனுக்கு வருவாய் ஈட்டித்தந்துள்ளன. சிற்றரசர்கள் தம் அரசை நிலைநிறுத்திக் கொள்ளும் ஒரு வழியாகத் திறை அளித்துள்ளனர்.

**அடிக்குறிப்புக்கள்**

1. திவாகரம். நூற். 297.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



2. மேலது. நூற். 298.

3. மேலது. நூற். 299.

4. மேலது. நூற். 308.

5. அகம். 34 : 3.

6. இரா. இராசகோபாலன், தமிழக வரலாறும் பண்பாடும், ப. 70.

7. ஆ. முத்துசாமி, சங்க இலக்கியத்தில் ஆயர், ப. 14.

8. அகம். 14 : 7 – 9.

9. அகம். 74 : 16 – 17.

10. அகம். 124 : 14.

11. ம.சோ. விக்டர், தொல்காப்பியச் சிந்தனைகள், ப. 213.

12. கழகப்புலவர் குழுவினர், கழகத்தமிழ் அகராதி, ப. 82.

13. தொல். நூற். 967.

14. அகம். 34 : 11 – 12.

15. அகம். 274 : 5 – 11.

16. அகம். 354 : 3 – 5.

17. அகம். 24 : 1 – 2.

18. அகம். 34: 11.

19. தோலைப் பதனிடும் முறைகளுள் ஒன்றாக எண்ணெய் பதனிடும் முறையை **WWW. Wikipedia.Com** குறிப்பிடுகின்றது. மீன் எண்ணெய் போன்ற எண்ணெய் வகைகளைக் கொண்டு பதனிடும் முறை எண்ணெய் பதனிடும் முறை எனப்படும். இம்முறைகள் நெடுநாட்களாக இருந்து வரும் முறையாகும்.

20. அகம். 244 : 1.

21. அகம். 334 : 1 – 2.

22. அகம். 184 : 17 – 18.

23. மு. வளர்மதி, பறை, ப. 18.

24. சி. பாலசுப்பிரமணியன், நெஞ்சின் நினைவுகள், ப. 69.

25. ஞா. தேவநேயப்பாவாணர், பழந்தமிழர் அரசியல் கோட்பாடுகள், ப. 26.

26. ஞா. தேவநேயப்பாவாணர், மு.நூ., ப. 35.

27. அகம். 124 : 1 – 4.

28. அகம். 334 : 9 – 12.

29. அகம். 364 : 10 – 11.

30. அகம். 384 : 11 – 13.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**துணைநூற்பட்டியல்**

**முதன்மைச்சான்றாதாரங்கள்**

1. அகநானூறு (மூலமும்உரையும்) புத்தகம்-1,2 ,செயபால் இரா, முனைவர், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட், 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை-600 098, முதல் பதிப்பு, ஏப்ரல் – 2004.

**துணைமைச்சான்றாதாரங்கள்**

1. தமிழ் நிகண்டுகள், தொகுதி-1 - சுப்பிரமணியன் ச.வே, (ப.ஆ), மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம் – 608 001, முதற்பதிப்பு – 2008.
2. சங்க இலக்கியத்தில் ஆயர், முத்துசாமி. ஆ, இராணி பதிப்பகம், சென்னை-600014, முதற்பதிப்பு – 1993.
3. கழகத்தமிழ் அகராதி, கழகப்புலவர் குழுவினர். (தொ.ஆ), திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட், சென்னை-18, பதினைந்தாம் பதிப்பு – 1999.
4. தொல்காப்பியம், ச.வே. சுப்பிரமணியன் (உ.ஆ), மணிவாசகர் பதிப்பகம், சென்னை – 600 108, எட்டாம் பதிப்பு – 2006.
5. பறை, வளர்மதி. மு, அம்ருதா பதிப்பகம், சென்னை – 600 116, 2009.
6. நெஞ்சின் நினைவுகள், பாலசுப்பிரமணியன். சி, நறுமலர்ப் பதிப்பகம், சென்னை,1980.
7. பழந்தமிழர் அரசியல் கோட்பாடுகள், தேவநேயப்பாவாணர். ஞா, மணிவாசகர் பதிப்பகம், சென்னை – 600 108,
8. www.wikipedia.com



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# தமிழன்பன் கவிதைகளில் இயற்கை செய்திகள்

**ஆ.பிந்து,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
ஸ்காட் கிறிஸ்தவக் கல்லூரி,
நாகர்கோவில்.

**முன்னுரை**

இயற்கை என்பது இறைவனின் படைப்பாகும். மனிதனின் எந்த பங்களிப்பும் இல்லாமல் தானாக தோன்றியது. இயற்கை மிகப் பிரம்மாண்டமானது. சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், கோள்கள், மலைகள், காற்று, ஆறு, அருவி, கடல், நிலம், மரம், செடி, கொடிகள் என்று இயற்கையின் விரிவு மிக மிக அகலமானது. இந்த அழகான இயற்கையின் மத்தியில் மக்களின் வாழ்வு ஒன்றியிருப்பதை நினைக்கும் போது வியப்பாக இருக்கின்றது. இக்காலக் கவிதை நூலான தமிழன்பன் கதைகளில் இடம் பெற்றுள்ள இயற்கை செய்திகளை ஆராய்வதாக இக்கட்டுகரை அமைகின்றது.

**இயற்கை விளக்கம்**

இயற்கை படைப்புகள் அனைத்தும் மனிதச் சக்தி இன்றி தானே இயங்குபவை. அவை ஐம்பூதங்களாகிய நிலம், நீர், காற்று, ஆகாயம், நெருப்பு ஆகியவற்றினுள் காணப்படுகின்ற சூரியன், சந்திரன், விண்மீன்கள், கோள்கள், மரம், செடி கொடிகள், புல், பூண்டுகள் உயிரினங்கள் எனலாம். படைப்பு எல்லாம் இறைவனால் படைக்கப்பட்டது என்பதற்கு ஆதாராமாக ஆதியிலே தேவன் வானத்தையும் பூமியையும் படைத்தார் எனத் திருவிவிலியம் கூறுகின்றது. விவிலியமானது முதலில் வெளிச்சத்தையும் பின் பகல், இரவு, ஆகாயம், கடல், பூமி, சூரியன், சந்திரன், பிராணிகள், மனிதன் என்று எல்லாவற்றையும் இயைவன் படைத்ததாகவே சுட்டுகின்றது. *படைத்தவன் புன்னகைத்தான். எல்லாம் செய்து விட்டேன். நல்லவற்றையே படைத்துவிட்டேன்*[1] தொல்காப்பியர் கூறுகின்ற முதல் டிபாருனிலும், கருப்பொருளிலும் இயற்கை அடங்கியுள்ளதை,

> ***முதல்எனப் படுவது நிலம்பொழுது இரண்டின் இயல்பென***
> ***மொழி இயல் புணந் தோரே***[2]

என்ற நூற்பாவில் சுட்டியுள்ளார்.

பண்டையக் கால மக்கள் இயற்கையைத் தெய்வமாக வணங்கியுள்ளதை நினைக்கும் போது அவர்களிடம் இயற்கையின் தாக்கம் எந்த அளவு பிரதிபலித்திருக்கின்றது என்பதை உணர முடிகின்றது

மனிதர்களாகிய நாம் இயற்கையின் அழகினை மரம், செடி, கொடிகள், புல், பூண்டுகள் வானளாவிய மலைகள், வானம், மழை, அருவி, கடல், ஆறு, சூரியன், சந்திரன், வானவில் எனக் கண்டு மகிழ்ந்து, தென்றல் காற்றின் சிலிர்ப்பை உணர்ந்து



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



கொள்கின்றோம். ஆனால் கவிஞர்கள் இந்த மகிழ்வினைக் கவிதையாக்கித் தருகின்றார். பாரதிதாசன் மாலை நேரத்தில் சோலையில் பெற்ற மகிழ்ச்சியை,

*மாலைப்பொழுதில் சோலையின் பக்கம் சென்றேன்.*
*குளிர்ந்த தென்றல் வந்தது*
*வந்த தென்றலின் வாசம் கமழ்ந்தது*
*வாசம் வந்த வசத்தில் திரும்பினேன்*
*சோலை நடுவில் சொக்குப் பச்சைப்*
*பட்டுடை பூண்டு படர்ந்து கிடந்தது*
*குலுக்கென்று சிரித்த முல்லை*
*மலர்க்கொழு கணடடேன் மகிழ்ச்சி கண்டேன்!*[3]

என்ற பாடல் வரிகள் மூலம் சுட்டிக்காட்டியுள்ளார்.

இலக்கியங்கள் ஒவ்வொன்றும் அந்தந்தக் காலக்கட்டத்தில் வாழுகின்ற மக்களின் வாழ்க்கையைப் படம்பிடித்துக்காட்டுபவை இயற்கை மனித வாழ்வுக்கு எவ்வளவு முக்கியமானதோ அதுபோல இலக்கியத்திற்கும் முக்கியமானதாக காணப்படுகிறது *வேதங்கள் முதல் இலக்கண இலக்கியங்கள் வரை இயற்கையின் ஊடுருவல் இல்லாதிருந்ததில்லை*[4] இவ்வாறாக எங்கும் எதிலும் இயற்கையின் தாக்கம் இருப்பது தெரிகின்றது.

**தமிழின்பன் கவிதைகளில் இயற்கை செய்திகள்**

பழம்பெருமை மிக்க நம் பாரதநாடு இயற்கை வளங்களையும் அழகையும் கொண்ட நாடாகும். கண்ணைக் கவரும் காட்சிகளாக விண்ணை முட்டி நிற்கும் மலைகள், இயற்கை அரணாக விளங்கும் இமயமலை தொடர்கள், மலைகளிலிருந்து பாயும் அருவிகள் மலையை முட்டிக் காணப்படும் முகில்கள், நதிகள், ஆறுகள், மரங்கள், செடி, கொடிகள், பூக்கள், புல்கள், வயல்வெளிகள், குளங்கள், ஓடைகள், பறவையினங்கள் என்று இயற்கையின் அழகை சொல்லி கொண்டே போகலாம். இயற்கை சார்ந்த செய்திகள் வானியல், புவியியல், தாவரவியல் என்று வகைப்பாடு செய்யப்பட்டுள்ளன. கவிஞர் இயற்கையைப் பாடுவதோடு நில்லாமல் அதன் மூலம் சமூக கருத்துக்களை இயக்கிய நயங்களோடும் எடுத்துரைத்துள்ளார்.

**வானியல்**

சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், கோள்கள் மற்றும் மேகம், மழை, வானவில், பனி, இடி, மின்னல் என வானிலிருந்து நிகழும் அத்தனை நிகழ்வுகளும் வானியலில் அடங்கும். இதன் முதன்மை கோளாக சூரியனைக் கூறலாம். வானில் தோன்றும் அழகிய காட்சிகளுக்கு அளவே கிடையாது. பகலில் கதிரவன் தோன்றி வெளிச்சத்தையும், வெப்பத்தையம், இரவில் நிலவு தோன்றி ஒளியையும் குளிர்ச்சியையும் அளிக்கின்றன. மழை நேரங்களில் கார்மேகம் தோன்றுவதால் வானம் கருமை நிறத்துடன் மங்கி கிடப்பதும் இடி, மின்னல், வானவில் போன்றவை தோன்றுவதும் இயற்கை காட்சிகளாகும்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



வானவில் தோன்றும் செயலாகக் கவிஞர், *உலகத்தைப் பகற்போதில் கதிரவனின் கடுங்கதிர்களால் சுட்டுப் பொசுக்கும் வானமே தான் இரவில் குளிர்ந்த வட்ட நிலாவை அனுப்பி இன்பம் வழங்குகின்றது*[7] என்று கூறுகிறார்.

சூரியன் தினமும் உதிப்பது இயற்கை. ஆனால் சோம்பேறித்தனம் இல்லாமல் மக்கள் தினமும் உழைக்க வேண்டும் என்பதை வலியுறுத்தி,

***உழைப்பவன் முகம் பார்க்கவே***
***ஒவ்வொரு நாளும்***
***ஓடோடி வருகிறான் சூரியன்***[8]

என்று அழகாக கூறியுள்ளார்.

**புவியியல்**

நாம் வாழுகின்ற இந்தப் பூமி ஒரு சிறிய கோள் (Plant) சூரியனைச் சுற்றி வரும் ஒன்பது கோள்களில் பூமியும் ஒன்று. இந்த பூமி ஒரு உயிர்க் கோளமாகக் கருதப்படுகின்றது. இதில் எண்ணற்ற உயிரினங்கள், தாவரங்கள், நீர்நிலைகள் என்று பலவகைகள் காணப்படுகின்றன. பூமியின் மிக முக்கிய பெருமையாக உள்ளது நீர் தான். ஏனென்றால் பூமி 70 விழுக்காடு நீரால் நிறைந்தது.

நிலம் என்பது வயல், காடு, தோட்டம், துரவு, சொத்து போன்றவைகளால் ஆனது. இதனைக் கவிஞர்,

***நிலம் இருந்தால் தான் வயல்,***
***நிலம் இருந்தால் தான் காடு***
***நிலம் இருந்தால் தான் சொத்து***[8]

என்ற கவிதையில் விளக்கியுள்ளார்.

நிலம் பொறுமைக் கொண்டது. அது தன்னைத் தோண்டுவர்களுக்கும் துன்பம் செய்யாமல் இன்பம் அளிக்கின்றதை,

***தன்னைத் தோண்டித் துன்பஞ் செய்யும்***
***மக்கள் தம்மை அன்புடன்***
***என்றும் தாங்கி இன்பஞ் செய்யும்***
***இந்தப் பெரிய மாநிலம்!***
***அளவில்லாத பயிரின் வகைகள்***
***உள்ளத்தில் நல்ல பொறுமை கொண்ட***
***உயர்ந்த இந்த மாநிலம்***[9]

என்ற கவிதை வழியாக புலப்படுத்தியுள்ளார். நிலத்தின் பொறுமையுணர்வைப் போல மக்களும் பொறுமையுணர்வுடன் செயல்பட்டு வாழ வேண்டும் என்பதை சுட்டிக்காட்டியிருக்கிறார்.

சோலை என்றாலே மரங்களும் செடி கொடிகளும் நிறைந்த குளிர்ச்சியான இடமாகும். குளத்தில் குளித்தல், தென்றல் காற்றின் சுகம், பறவைகளின் ஒலி, மரங்களின் நிழல்,



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



சாப்பிடகனிகள், ஓடையில் நீர் அருந்துறல் போன்ற அனுபவங்கள் கிராமப்புறங்களில் வாழும் மக்களுக்குத் தான் கிடைக்கும் இந்த இயற்கை இன்பத்தைக் குழந்தைகள் அடைய சோலைக்கும் போவோம் என்ற தலைப்பில்,

*நாம்*
*கூடிநீந்திக் குளிப்பதற்குக்*
*குளமும் இருக்குது!*
*தேடி வந்து களைப்பு நீக்கத்*
*தென்றல் இருக்குது! - இசை*
*பாடி யின்பம் ஊட்டு கின்ற*
*பறவை இருக்குது!*
*நெடிது நேரம் ஆடி மகிழ*
*நிழலும் இருக்குது! நாம்*
*கடித்துத் தின்று பசியைப் போக்கக்*
*கனியும் இருக்குது!*
*குடித்துத் தாகம் தணிய ஓடை*
*குறுக்கே இருக்குது! நாம்*
*படித்துத் தேற இயற்கை நல்கும்*
*பாடம் இருக்குது!*[10]

என்று சோலையின் பெருமையைக் கவிதையாகப் புனைந்துள்ளார்.

**தாவரங்கள்**

மரங்கள் முதல் சிறிய புல் பூண்டுகள்வரை தாவர வகையில் அடங்கும். தாவரங்கள் சூரிய ஒளி, நீர், காற்று ஆகிய மூன்றையும் இயற்கையாகப் பெற்று தங்களுக்கு வேண்டிய ஆகாரங்களைத் தாங்களே தயாரித்துக் கொள்கின்றன. இந்த அதிசயமான நிகழ்வை மக்கள் பொருட்படுத்துவதில்லை. தாவரங்களின் உலகம் என்பது ஒரு தனி உலகம் என்றே கூறலாம். வேங்கடசாமி என்பவர், "தாவரம் என்ற சொல்லில் புல், பூடு, செடி, கொடி, மரம் என்பவை அடங்குவதாகக் கருதப்படுகின்றது. பசுமையான உயிரினத்தைப் பொதுவாக ஆங்கிலத்தில் 'Plant' என்ற சொல் குறிக்கும்"[11] என்கிறார். கவிஞர் தாவரவகையில் அடங்கும் மரம், செடி கொடிகள், இலை, வேர், புல், விதை என ஒவ்வொன்றைப் பற்றியும் தமது கவிதையில் விளக்கியுள்ளார்.

மரங்களை *தரு* என்றும் *விருட்சம்* என்றும் கூறுவர். மரங்கள் காற்று, மழை, வெயில், பனி போன்றவற்றை பெற்றுக் கொண்டு பூ, பழம், நிழல், புதிய தளிர்கள் என வழங்கிக் கொண்டு இருக்கின்றது.

மரங்கள் தங்களுடைய ஒவ்வொரு அவயவங்களையும் மக்களுக்காக அளிக்கின்ற கருணை உள்ளம் கொண்டதாக இருக்கின்றது. இத்தகைய மரத்தின் மீது கவிஞர் அன்பு



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



வைத்துக் கவிதைகளைப்படைத்துள்ளார். மரம் என்றாலே ஞாபகத்திற்கு வருவது கனிகள் தான். மரங்களை மனிதர்கள் அழக்கின்றனர். எனினும் மக்களுக்கு நிழலையும், உணவுகளையும் அளித்து உதவுகின்றதென்பதை,

***கொம்பனும் கம்பிகள் மேல்***
***குளிரிலைத் துணியைப் போர்த்தே***
***எம்மிடம் வருக வென்றாய்***
***எழிற்குடை மரமே! எய்தி***
***உம்முடல் வெட்டி னோர்க்கும்***
***உதவினை நிழலை***[12]

என்ற கவிதையில் எடுத்துரைத்துள்ளார்.

பண்டைக்கால மக்கள் காடுகளிலும் பொந்துகளிலும், மரக்கிளைகளிலும் வாழ்ந்தனர். பின்பு சற்று முன்னேற்றம் அடைந்த நிலையில் மக்கள் கால்நடையாகப் பயணம் செய்து விட்டு இளைப்பாற மரத்தடி நிழலில் தங்கி இருப்பர்.

மேலும் கவிஞர் தனது கவிதைகளில் வேப்பமரம், அசோகமரம், ஆலமரம், கருங்காலிமரம் என்று பல மரங்களைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

கருங்காலி மரத்தின் குழல் கருவிகள் செய்து பாட்டு இசைக்கச் செய்வர். இதனை,

***கருங்காலி குழல் செய்து பாட்டிசைக்கக்***
***காடுதெரு நல்லமரம்!***[13]

என்ற பாடலில் தெளிவுப்படுத்தியிருக்கிறார்.

மரம், செடி, கொடிகளில் வேர், தண்டு, இசை, பூ, காய், கனி போன்ற பாகங்கள் காணப்படுகின்றன. இதில் வேரும் தண்டும் இலையும் தாவரங்களின் வாழக்கைக்கு முக்கிய காரணமாக அமைவது பூ. ஏனென்றால் அதிகமான தாவரங்கள் தங்கள் மலரிலிருந்து உண்டாகும் விதையின் மூலம் தான் இன்னொரு தாவரத்தை உண்டாக்குகின்றது.

மேலும் கவிஞர் தனது கவிதையினுள் பருவகாலங்கள், பொழுதுகள், ஐவகை நிலங்கள் என்று பல இயற்கைக் செய்திககளை சுட்டிக்காட்டியுள்ளார். இதில் கவிஞர் கோடைக்கால வறட்சிப் பற்றி தனது கவிதையில் அழகாகச் சுட்டிக்காட்டியள்ளார்.

கோடைக்காலத்தில் மழையில்லாமல் மலைவளம், நிலவளமின்றி, அருவி, ஆறு, சோலை, குளம், குட்டை எல்லாம் வறண்டுக்காணப்படும். இதனைக்கவிஞர்,

***மலைக் கொங்கை நிலமங்கை வானின் தங்கை!***
***வளந்தங்கும் தன்னங்கம் மங்கிப் போகக்***
***கொலைக் கோடை வலைப்பட்டாள்! நிலைகுலைந்தாள்!***
***குளிரருவி முத்தார அணி யிழந்தாள்!***
***கலைப்பொன்மே கலையென்னும் ஆறுவற்றிக்***
***கருத்திழந்த கவிதையெனக் கிடக்கத் துன்பச்***



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



*சிலையானாள்! வெடிப்புற்றாள்! சோலை யாடை*

*சிதைந்துந்தல் சருகாக உருக லானாள்*[14]

என்கிறார். கோடைக்காலத்தில் வெயிலின் தாக்கம் அதிகமாக இருக்கும். இதைக் கவிஞர்,

*மண்ணின் மீதும்*

*மனிதன் மீதும்*

*மற்றப் பருவங்கள் சேர்த்துவைத்த*

*கோபத்தைப்*

*பிரகடனம் செய்தது போன்ற*

*கோடை*[15]

என்று தெரிவித்திருக்கிறார்.

**முடிவுரை**

இயற்கை என்பது மனிதனுக்குக் கிடைத்த பொக்கிஷம். இந்த இயற்கையை மனிதனும் கவிஞரும் வெவ்வேறு கண்ணோட்டத்தில் காண்கின்றார்கள். இயற்கையை ரசிக்க மட்டுமே மனிதனுக்குத் தெரியும். ஆனால் கவிஞர் அதையும் தாண்டி அதை இலக்கியமாகப் படைத்து அதற்கு உயிரோட்டமும் அளித்துச் சமுதாயத்தின் முன் கொண்டு செல்கின்றான். சங்க இலக்கியம் தொடங்கி தற்கால இலக்கியம் வரை இயற்கையை முன்னிறுத்தித் தான் அமைகின்றது.

**அடிக்குறிப்புகள்**

1. ஜெயந்தி நாகராஜன், பைபிள்கதைகள், ப.3.
2. தமிழண்ணல்,தொல்காப்பியம் - பொருளதிகாரம், தொகுதி - 1, ப.31.
3. பாரதிதாசன், தேன் தமிழ்க் கவிதைகள் முழுவதும், பக். 79-80.
4. நசீம்தீன். பாரதிதாசன் காடல்களில் இயற்கை, ப.8.
5. ஜெயதேவன்.வ,ஈரோடு தமிழன்பன் கவிதைகள். தொகுதி-5 ப.735.
6. மேலது, தொகுதி - 4, ப. 265.
7. மேலது, தொகுதி - 5, ப. 740.
8. மேலது, தொகுதி - 1, ப. 646.
9. மேலது, தொகுதி - 2, ப. 549.
10. மேலது, தொகுதி - 2, ப. 567.
11. வேங்கடசாமி, செடிகளின் செயலியல் பண்புகள், ப. 1.
12. ஜெயதேவன்.வ, ஈரோடு தமிழன்பன் கவிதைகள். தொகுதி- 2 ப. 99.
13. ஜெயதேவன்.வ, தொகுதி -1, ப. 104
14. ஜெயதேவன்.வ, தொகுதி -1, ப. 56
15. ஜெயதேவன்.வ, தொகுதி -5, ப. 124



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



துணைநூற்பட்டில்


1. ஜெயதேவன்,வ., (தொ.ஆ) 2007 ஈரோடுதமிழன்பன்கவிதைகள் தொகுதிகள்-1,2,4,5, பூம்புகார் பதிப்பகம், 127 ப:எண்:63, பிரகாசம்காலை பிராட்லே, சென்னை- 600 108

2. தமிழண்ணர் 2002 தொல்காப்பியம் பொருளததிகாரம் தொகுதி, மணிவாசகர் பதிப்பகம், 31, சிங்கர் தெரு, சென்னை- 600 108.

3. கோமுகி சுப்பிரமணியன். 2003 பாதிதாசன் தேன்தமிழ்க் கவிதைகள் (முழுவதும்), நர்மதா பதிப்பகம், நல்லநூல் வெளியிட்டார்கள், 167, ராஜா பாதர் தெரு, பாண்டி பஜார், தியாகராய நகர், சென்னை- 600 017.

4. திருவேங்கடசாமி., 2012 செடிகளின் செயலியல் பண்புகள், நியூசெஞ்சரி புக்ஹவுஸ்(பி)லிட், 41-டீசிட்கோ இண்டஸ்டிரியல், எஸ்டேட், அம்பத்தூர், சென்னை- 600 098.

5. நசீம்தீன்., 1973 பாரதிதாசன் பாடல்களில் இயற்கை, மீனாட்சி புத்தக நிலையம், 60, மேலக்கோபுரத்தெரு, மதுரை.

6. ஜெயந்திநாகராஜன் 2012 பைபிள் கதைகள், தாமரைப்பளிகே'ன்ஸ்(பி)லிட், 41-டீசிட்கோ இண்டஸ்டிரியல், எஸ்டேட், அம்பத்தூர்.


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



# வள்ளுவரின் குடிமையியலில் இன்றைய வாழ்வியல்

**கி.ச.புனிதவதி,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
கிருஷ்ணசாமி மகளிர் அறிவியல் கலை
மற்றும் மேலாண்மையியல் கல்லூரி,
கடலூர்.

**முன்னுரை**

*"உறுப்பொத்தல் மக்களொப்பு அன்றால் வெறுத்தக்க*
*பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு"*[1]

மக்கள் என்போர் நற்பண்பு உடையவர்களே. அப்பண்பு இல்லாதவர்களை அவர்களின் உடல் உறுப்புகளை மட்டுமே ஒப்பிட்டுப்பார்த்து மக்கள் இனத்தில் பேசுவது சரியன்று. வள்ளுவனைப் போல் சொல்லில் வலிமையைக் கூட்டிச் சொல்ல அவர் 'குறள்' மட்டுமே. சமூகத்தின் ஓர் அங்கமாக வாழும் மனிதன் 'சமூகம்' தனக்காக மட்டுமே படைத்துள்ளதாக எண்ணி வாழும் சூழல், தற்காலச் சூழலில் பெருகிவிட்டன. 'தான்' என்ற ஒன்று மட்டுமே எஞ்சியிருக்கின்றதே தவிர, பிறர் என்றும் மற்ற உயிரினங்கள் என எவற்றிலும் அவன் ஆழ்ந்து சிந்திப்பவனாகவோ, செயல்படுபவனாகவோ இல்லை. இப்படிப்பட்ட காலகட்டத்தில் திருவள்ளுவரின் குடிமையியலில் இடம்பெறும் கருத்துக்ளை இன்றைய வாழ்வியலோடு பொருத்திப் பார்ப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**சாதியில் சரியும் சமூகம்**

இயற்கை அளித்த மனித வடிவில் சாதியை உடலில் ஓர் உறுப்பாகப் படைக்கப்படவில்லை. மனிதன் மட்டுமே பிறப்பு என்பதைச் சாதியால் பகுக்கின்றான். ஆண் பெண் என்ற இரு கூறுகளைத் தாண்டி, பிறப்பெடுத்தப் பின்பு அந்த வடிவத்திற்குச் சாதியைப் புகுத்துகின்றான் அறிவார்ந்த மனிதன். அப்போதும் பார்த்தால் தெரிவதில்லை சாதி. சொன்னால் மட்டுமே தெரியும் அளவுக்கு இருக்கக்கூடிய சாதி என்னும் ஒற்றைச் சொல்லால் சமூகத்தைச் சீரழிக்கும் சிலர் ஒருபுறம் உள்ளனர். அதனால் சமூகத்தில் பல கொடுமைகள் நிகழ்ந்த வண்ணம் உள்ளன. 'அன்பு' என்ற ஒற்றைச் சொல்லைத் தாங்கி இரு உயிர்கள் இணையும் காதல் உறவில் சாதி புகுவதினால், 'கௌரவக் கொலைகள்' சர்வ சாதாரணமாக நிகழ்கின்றன. ஆணும், பெண்ணும் இந்தப் பூமியில் வாழத் தகுதியடையவர்களே. விதி மீறல்கள் என்று சாதியைச் சொல்லி தான், மனிதன் என்ற நிலையிலிருந்து தாழ்தல் என்பது அவனுடைய அறியாமையையே காட்டுகின்றது எனலாம்.

*"சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற*
*குலம்பற்றி வாழ்தும்என் பார்"*[2]



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



மனித குலம் என்பது குற்றமற்ற வாழ்வு வாழ வேண்டும் என்று நினைப்பதுவே. அப்படி நினைப்பவர் எவரும் வஞ்சக நினைவுடன் தகாத செயல்களில் ஈடுபடமாட்டார்கள். வாயுறைவாழ்த்துவில் உரைப்பதும் இதுவே. ஆனால் தற்போது பெரும்பாலும் சமூகத்தில் மாசற்ற பண்புடன் வாழ்பவதே வாழ்வு என்ற நிலையில் உள்ளது எனலாம். உயிரைப் படைக்கும் ஆற்றலும், அழிக்கும் ஆற்றலும் நம்முடையது அல்ல.

**கைப்பேசியில் கரையும் காலம்**

விஞ்ஞானயுகம், கணினியுகம், கலியுகம் என்று எல்லாம் சேர்ந்த இக்காலக் கட்டத்திலோ, மனிதன் குற்றம் புரிபவனாக மட்டுமே வாழ்கின்றான். 'குற்றம்' செய்வது குற்றமல்ல என்ற மனநிலைக்கு மாற்றப்பட்டுள்ளான். குடும்பம், உறவுகளுடன் கூடி வாழ்ந்த நிலைமாறி, எப்படி வேண்டுமானாலும் வாழலாம் அதுதான் வாழ்க்கை என்ற நிலை உருவாகியிருக்கிறது. கைப்பேசிக்குள் மனிதன் அடங்கிப்போய்விட்டான். உலகத்தையும் தன்னையும் சேர்த்தே அதில் பிணைத்தும் வைத்துக்கொண்டான். நம்மை நம் உணர்வுகளை, ஆக்கப்பூர்வச் செயல்களையெல்லாம் சோம்பேறித்தனமாக மாற்றும் மூளைச்சலவையை நம்மி வாழ்கிறான். அதனால் நம் பணமும், நேரமும், வாழ்வும் வீணாய் கரைவதை அவன் அறிகிலான்.

சமூகத்தில் குற்றச்செயல்கள் அதிகம் நிகழ்வதற்குக் கைப்பேசியும் ஒரு காரணம். பெற்றோர் பிள்ளைகளுடன் பேசுதல், பழகுதல் இன்றி, அவரவர் தனித்தனி கைப்பேசியுடன் உலா வருதல், பிள்ளைகளோ தேவையற்ற பல தகவல்களையும், தீய பழக்கங்களையும் கற்றுக்கொள்கின்றனர். ஆக்கப்பூர்வமாய் அதில் பல உள்ளதை அவர்கள் விரும்புவதில்லை. அரசு தடைசெய்ய வேண்டியவற்றை செய்யாத நிலையும் நீட்டிக்கவே செய்கின்றன.

நெருப்பில்லாமல் புகையாது என்பர். ஒருவர் மதுவோ, புகைத்தலையோ செய்தால் கண்டிப்பாகத் தெரிந்துவிடும். எனவே மறைவாகச் செய்வர். ஆனால் கைப்பேசியோ வயதுக்கு மீறிய அலசல் பார்வை எல்லாம் பிள்ளகைள் அதில் பார்ப்பதும், குற்றச் செயல்களில் ஈடுபடுவதும், நிகழ்ந்தப்பின்னே வருந்த வேண்டியதுமான சூழலே நிலவுகின்றது. ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் அகத்தே நிகழும் நிகழ்வுகளைக் கண்டிட கணினி உள்ளிட்ட கைப்பேசி உதவியாயிருக்கிறது. ஆக்கத்திற்கு மாறாக அழிவையே அதிகம் அவர்கள் நாடுகின்றனர் எனலாம்.

*"அணிஅன்றோ நாணுடைமை சான்றோர்க்கு அ·.தின்றேல்*
*பிணிஅன்றோ பீடு நடை"*[3]

பெரியோர்க்கு நாணமே அழகு செய்யும் ஆபரணம் ஆகும். நாணம் இல்லையானால் அவர்களது பெருமித நடை பிறர்க்கு நோய் ஆகிவிடும். அப்படித்தான் வாழவும் வேண்டும். ஆனால் இக்காலத்தில் இவ்வாறு வாழ்தல் என்பது அவசியமற்றது என்ற மனநிலையில் சமூகம் உள்ளது.


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**பெண்களை அழிக்கும் மனங்கள்**

பெண்கள் எப்போதுமே சமூகத்தின் பார்வையில் போகப்பொருளே. குழந்தையாய், குமரியாய், கிழவியாய் எப்படியிருந்தாலும், ஆணின் காமப்பசியைத் தீர்த்துக்கொள்ள, அவளைப் பழித்தீர்க்க, விலைமதிப்பில்லாத பெண்ணுக்கு கூடுதலாக விலையுயர்ந்த (இங்கே உயிரைவிட உலோகமே உயர்ந்தது) நகைகளையும் மாட்டிவிட்டு வீதியில் உலாவரச் செய்து, செயின் பறிப்பு, வயதான மூதாட்டியைக்கொன்று நகைத்திருட்டு என்று எவ்வளவோ நாள்தோறும் நிகழ்ந்த வண்ணம் உள்ளன.

பெண்ணைக் காதலிப்பதாகக் கூறி, உடன் இருந்து புகைப்படம் எடுத்து பிரிவு ஏற்படும் போது அவளை வீழ்த்த, (ஆணை வீழ்த்த அப்புகைப்படம் பயன்படாது ஏனெனில் அவன் ஆண் எத்தனைப் பெண்களுடனும் அவன் திருமணத்திற்கு முன்பும், பின்பும் வாழலாம் அதை இச்சமூகம் பெரிதாய் எடுத்துக்கொள்வதில்லை) புகைப்படத்தை வலைதளங்களில் வெளியிட்டுப் பழிதீர்த்தல். ஓர் ஆணுக்கு, ஒரு பெண்ணைப் பார்த்து தனக்கு ஏற்பட்ட காதல் உணர்வு அப்பெண்ணுக்கும் ஏற்பட வேண்டும் என எதிர்ப்பார்த்தல். இல்லையென்றால் முகத்தில் அமில வீச்சு. இம்முகத்தைக் கண்டுதான் காதல் கொண்டவனாம். உண்மையான காதல் உணர்வுடன் அன்பு கொண்டிருந்தால் தான் விரும்பியவள், எப்போதும் பார்க்க அவள் அழகாகவே இருக்கவேண்டும் என நினைக்க வேண்டாமா? மாறாக அம்முகத்தின் அழகு இனி இருக்கவே கூடாது என்கிற வன் உணர்வு எழுதலும், அவள் கழுத்தில் மாலையிட்டு வாழவேண்டும் என்று எண்ணியவன் அவள் கழுத்தை கத்தியால் பதம்பார்த்து வீழ்த்துவதும், அன்புமொழி கூறி ஆள் அரவமற்ற அவளைப் பழித்தீர்க்கக் கற்புக்கோட்பாட்டை மீறி கொலை செய்வதும் என அவன்மேல் நிகழும் வன்முறைகளுக்கு அளவில்லாமல் போய்விட்டது. மாற்றுத்திறனாளிப் பெண்களும் பாலியல் வன்முறைக்கு ஆளாக்கப்படுகின்றனர். ஏனென்றால் அவளும் பெண்ணே.

வளர் இளம் பருவத்தினருக்கு உடற்கூறுகளினால் ஏற்படும் மாற்றங்களை மையமிட்டு அவர்களுக்குக் கல்வியைக் கொடுக்கலாம். ஆனாலும் எப்போது எழுவோம் என்பதே பெண்களின் வாழ்க்கையாய் இருக்கின்றது.

பள்ளிகளில் மாணவிகள் பூ, கொலுசு அணிந்து வர அரசு தடைவிதித்துள்ளது. காரணம் பெண்களின் பூ வாசமும், கொலுசு சத்தமும் ஆண்களுக்கு கவனச் சிதறல்களை உண்டாக்குகின்றனவாம். பெண்ணை எப்போதும் போகப்பொருளாகவே பார்க்கும் எண்ணத்தின் உச்சமே இந்நடவடிக்கை எனலாம். காரணம் பெண்ணிடம் ஆளுமைத்திறனும் கம்பீரமும் இருப்பதை விட்டுவிட்டு அவளுக்கு அலங்காரங்களும், ஒப்பனைகளிலும் காலத்தைக்கழித்து வீணில் அழிவதற்கே வழி வகை செய்யும் சமூகமாக உள்ளது.

**“உலக அளவில் தற்கொலை செய்துகொள்ளும் ஒவ்வொரு பத்துப் பெண்களிலும் நால்வர் இந்தியாவைச் சேர்ந்தவர்கள். பிரபல லான்செட் மருத்துவ இதழ் ஆய்வில் தெரிவிக்கப்பட்டுள்ளது. ஆய்வின்படி, உலக அளவில் 2016-ல் தற்கொலை செய்துகொண்ட**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**2,57,324 பெண்களில் 36.6 சதவீதத்தினர் அதாவது 94,380 பேர் இந்தியாவைச் சேர்ந்தவர்கள்"**[4]

நம் நாட்டில் தற்கொலை செய்துகொண்ட இவ்வளவு பெண்களும் திருமணமான, நாற்பது வயதைக் கடந்தவர்களே. பெண்கள் எவ்வளவோ முன்னேறிவிட்டனர் என்று கூறினாலும் அவர்களுக்கான இருப்பு என்பது எப்போதும் நலிந்த நிலையிலேயே இருக்கின்றது. திருமணம், ஏற்பாட்டுத்திருமணம், குழந்தைத்திருமணம், தாய்மை, சமூகப்பொருளாதாரக் காரணிகள், குடும்ப வன்மை எனக் காரணங்கள் நீண்டு கொண்டேதான் செல்கின்றன.

தமிழகத்தின் ஒரு மாவட்டத்தில் சட்டவிரோத கருக்கலைப்பு மையத்தில் கடந்த 20 ஆண்டுகளில் 19 ஆயிரம் பெண் சிசுக்களைக் கொன்று சமுதாயத்துக்குத் துரோகம் இழைத்ததாக ஆட்சியர் அறிவிக்கின்றார். சட்டவிரோத கருக்கலைப்பு மையம் இயங்குதல் என்பதோடு பெண் குழந்தையை கருவில் உருவாகும் போதும் **'அமில வீச்சு'** நடப்பதுதான் பெண்ணுக்கான சமூக அங்கீகாரம். பெண்ணை பெற்றெடுத்துக்கொள்வதும் சமூக இழிச்செயலென எண்ண வைக்கும் நிலையையே இது காட்டுகின்றது.

***"குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ***
***குன்றி அனைய செயின்"***[5]

குன்றினைப் போல் உயர்ந்து கம்பீரமாக நிற்பவர்களும் ஒரு குன்றிமணி அளவு இழிவான செயலில் ஈடுபட்டால் தாழ்ந்து மனம் குன்றிப் போய் விடுவார்கள். ஆனால் பெண் உயிரை துச்சமென வீழ்த்திக்கொண்டிருந்தாலும் யாரும் குன்றிப்போவதில்லை இச்சமூகத்தில். பிறப்பெடுத்தது வாழ்வதற்காகத்தான். ஆனால், தான் மட்டும் வாழ்ந்து பிறரை வீழ்த்துவது அல்ல. வாயுறைவாழ்த்துவை பின்பற்றோர் குறைவாக உள்ளனர்.

**ஆடம்பரத்தில் அடிமை**

இந்த உடல் மண்ணுக்குத்தான் ஆனாலும், அந்த உடலுக்குத்தான் எத்தனை விதமான வியாபார நோக்கத்துடனான அழகுச் சாதனப் பொருட்களும், நம்மை அடிமையாக்கிக் கொள்கின்றன. தலை முதல் பாதம் வரை **'வண்ண ஒப்பீட்டு ஒப்பனை'** செய்து வண்ணமயமான வாழ்க்கை. உள்ளமோ அழுக்கடைந்ததாய் உள்ளது. ஆடம்பரமாக வாழ்வோரைக் கண்டு, தாமும் அவ்வாறு வாழவேண்டும் என்று நினைப்பது குற்றமல்ல. ஆனால் அதற்கானப்பொருளை ஈட்ட தகாத வழியை நாடுதல் என்பது சமூகச் சீரழிவையே உருவாக்குகிறது. திருட்டு, கொள்ளை, கொலை எப்படி செய்யலாம். செய்தாலும் தவறில்லை பிறர்பழிக்கு ஆளாதல் அஞ்சுதல் எதுவும் கிடையாது. பணம் ஆசையை ஊக்குவிக்கிறது. தவறு செய்ய தூண்டுகிறது. அறத்தின் பாற்பட்டு வாழ சமூகமும் அரசும் செயல்பட வேண்டும். தவிர, குற்றவாளிகளுக்குத் தண்டனை வழங்குவதில் தாமதமும், வழங்கும் தண்டனையும் குறைந்ததாக இருக்கும்போது குற்றவாளிகள் குறைவது ஏது.

***"மருந்தொமற்று ஊன்ஓம்பும் வாழ்க்கை பெருந்தன்மை***



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



***பீடழிய வந்த இடத்து"[6]***

சாகாமலே இருக்க மருந்து கிடையாது. அப்படி இருக்கும்போது உயிரைவிட நிலையான மானத்தைப் போற்றாமல் வாழ்க்கை மேம்பாட்டுக்காக ஒருவர் தமது பெருமையைக் குறைத்துக்கொள்வது இழிவானச் செயலாகும். எனவே ஆடம்பரத்திற்கு அடிமையாகாமல் வாழ்தல் வேண்டும். பிறரை வதைத்து வாழ்தலில் பலனில்லை.

**வியாபாரமே வாழ்க்கை**

இன்றைய மனிதன் தனிமையிலும், இறுக்கத்துடனும் வாழும் சூழல் பெருகியுள்ளது. பணம் பண்புள்ளவனிடம் சேரவேண்டும். பண்பில்லாதவனிடம் சேரும்போது. அது வீணாகித்தான் போகும். கார்மேகம் மழையைச் சுமந்து வந்து, அப்படியே எடுத்துக்கொண்டுச் செல்வதினால் பயனில்லை. அது பூமியில் விழ வேண்டும். அது போலத்தான் பணம் படைத்தவர்கள் இல்லாதோர்க்கு ஈதல் நலம் பயக்கும்.

***"வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் அஃதுஉண்ணான்***
***செத்தான் செயக்கிடந்தது இல்"[7]***

பொருளைப் பிறருக்கு வழங்காதவனை வள்ளுவர் செத்ததற்குச்சமம் என்கிறார். தான் வைத்திருப்பதைப் பிறருக்குக் கொடுக்க வேண்டும். இயற்கை நமக்குத் தேவையானதைத் தருகிறது. அதற்கு நாம் முடிந்த அளவு நன்மை செய்ய முடியவில்லையாயினும் தீமை செய்யாமலாவது இருக்க வேண்டும் அல்லவா? ஆனால் நாம் நம் தேவைக்காக வசதி வாய்ப்புகளைப் பெருக்கிக் கொண்டு, பூமிக்கும் ஆபத்தை விளைவிக்கின்றோம்.

உற்பத்தி செய்யும் எந்தப் பொருளையும் தரமானதாகவும், இயற்கைக்கும் மனிதனுக்கும் ஆபத்து இல்லாததாய் விளைவிக்க வேண்டும். ஆனால் நீர் முதல் விளைபொருள் அனைத்திலும் நச்சு கலந்திருக்கும் காலமாக உள்ளது.

வேகமாய் பணம் சம்பாதித்து, வேகமாய் நோய்வாய்ப்பட்டு, வேகமாக மடிதலே இன்றைய வியாபார நோக்கம். இயற்கைக்கும் அதை சார்ந்த மற்ற உயிரினங்களுக்கும் ஆபத்தையே விளைவித்துக்கொண்டிருக்கிறன.

**உழவை வீழ்த்தும் வாழ்வு**

***"நெருப்பினுள் துஞ்சலும் ஆகும், நிரப்பினுள்***
***யாதுஒன்றும் கண்பாடு அரிது"[8]***

தன்னை மட்டும் துன்புறுத்தக் கூடிய நெருப்பின் உள்ளும் ஒருவாறு தூங்கலாம். ஆனால் தன் குடும்பத்தினரையும் வருத்தும் வறுமையோடு ஒருக்காலும் தூங்க இயலாது. புறத்தே சுடும் நெருப்பை விட அகத்தே சுடும் பசி நெருப்போ மிகக்கொடியது. பசியைப்போக்கும் உணவைக்கொடுக்கும் விவசாயத்தின் நிலையும் அவ்வாறே உள்ளது.

***"வாடன் சம்பா, முடு முழுங்கி, குள்ளக்கார், நவரை, குழிவெடிச்சான், கார், அன்னமழகி, இலுப்பைப்பூ, சம்பா, மாப்பிள்ளைச் சம்பா, கருங்குறுவை,***



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



*கல்லுண்டை, கருடன்சம்பா, பனங்காட்டு குடவாழை, சீரக சம்பா, வாசனை சீரக சம்பா, விஷ்ணுபோகம், கைவரை சம்பா, அறுபதாம் குறுவை, பூங்கார், காட்டுயானம், தேங்காய்ப்பூ சம்பா, கிச்சடி சம்பா, நெய் கிச்சிலி போன்ற நமது பாரம்பரிய அரிசி ரகங்கள் எல்லாம் விவசாயிகளுக்கு இன்று மறந்தேவிட்டன. விதவிதமான பூச்சி, புழுக்கள் தாக்கும் புதிய ரகங்களை அதிக ரசாயன உரங்களைப் பயன்படுத்தி அவர்கள் விளைவித்து வருகிறார்கள். பாரம்பரிய அரிசி ரகங்களுக்கு இந்தப் பிரச்சனையே இல்லை. என்பதை நினைத்துப் பாரக்கக்கூட நேரமின்றி அவர்கள் வணிகப்பிடிக்குள் சுழன்று வருகின்றனர்”*[9]

*“நாடு முழுவதும் ஒரு லட்சம் பாரம்பரிய நெல் ரகங்கள் இருந்துள்ளன. தமிழகத்தில் மட்டும் 10 ஆயிரத்துக்கும் மேற்பட்ட நெல் ரகங்களை நம் முன்னோர்கள் பயிரிட்டு, பாதுகாத்து வந்துள்ளனர். இந்த நெல் ரகங்கள் அனைத்தும், வெள்ளம், வறட்சி உள்ளிட்ட இயற்கைச் சீற்றங்களையும், பூச்சித் தாக்குதல்களையும் தாங்கி நின்று வளரக் கூடியவை. ஏராளமான மருத்துவ குணங்களும் கொண்டவை. ரசாயன உரங்கள், பூச்சிக்கொல்லி மருந்துகளின் வரவு ஒட்டுமொத்த பாரம்பரிய நெல் ரகங்களையும் நம் மண்ணில் இருந்தே விரட்டி விட்டது. அதிக மகசூல் கிடைக்கும் என்று ஆசைகாட்டி, வீரிய ஒட்டு நெல் ரகங்கள் நம் விவசாயிகளின் கைகளில் திணிக்கப்பட்டன. இதனால் நம் மண்வளம் அழிந்ததோடு, மனிதர்களின் உடல்நலமும் சேர்ந்தே பாதிக்கப்பட்டது. இந்தச் சூழலில்தான் அழிவின் விளிம்பில் இருந்த 174 பாரம்பரிய நெல் ரகங்களைக் கண்டறிந்து அவற்றைப் பாதுகாத்தப் பெருமைக்கு உரியவர் நெல் ஜெயராமன்”.*[10]

*“உழவனார் கைம்மடங்கின் இல்லை: விழைவதூஉம்*
*விட்டேம்என் பர்க்கும் நிலை”*[11]

வேளாளன் ஆகிய உழவன் உழைத்து உழவை மேற்கொள்ளவில்லையெனில் பற்றுகள் அனைத்தையும் பற்றற விட்டோம் என்னும் துறவிகளுக்கும் துறவறத்தில் நிலைத்து நிற்க இயலாது என்று வள்ளுவர் கூறுவதிலிருந்து உழவின் மேன்மையை நாம் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். யாரோ பயிர் வைக்க, பணம் இருந்தால் போதும் உணவை வாங்கிக்கொள்ளலாம் என்று நினைத்தல் கூடாது.

**“சர்க்கரையும் உப்பும் கலந்து வைக்கப்பட்ட மூட்டைக்குள் எறும்பு புகுந்தால் அது உப்பைத் தவிர்த்துவிட்டுச் சர்க்கரையை மட்டும் எடுத்துச் செல்லும்.**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**இதுவே எறும்பின் வாழ்க்கைமுறை. அதாவது அனாவசியமானவற்றைப் புறந்தள்ளிவிட்டு அவசியமானவற்றைத் தனதாக்கிக்கொள்ளுதல்”[12]**

அதுபோலவே மனிதன் வாழ நினைக்க வேண்டும். விவசாயத்தையும் மண்ணையும், இயற்கையையும் மதித்து நடக்க வேண்டும். எதிர்காலச் சமூகத்திற்கு நாம் சேர்த்து வைத்திருப்பது என்ன? என்பதைக் கருத்தில் கொண்டு வாழவேண்டும்.

**முடிவுரை**

***“எற்றிற் குரியர் கயவரொன்று உற்றக்கால்***
***விற்றற்கு உரியர் விரைந்து”[13]***

கயவர் தனக்கு ஏதேனும் துன்பம் வந்தால் அதிலிருந்து தப்பித்துக்கொள்ள, தம்மைப் பிறருக்கு விற்பதற்கும் தயாராய் உள்ள குணம் கொண்டவரே என்றுரைப்பது வாயுறைவாழ்த்து. அச்சூழலே தற்காலச் சமூகத்தில் நிகழ்வதை மேற்கண்ட கூற்றுகளின் வழி அறியலாம். பெண்களுக்கு எதிராக நிகழும் கொடுமைகள், சமூக ஏற்றத் தாழ்வுகள், வியாபாரம் பெரும் பாரமாக மக்களுக்கும், ஆடம்பரத்தில் அழியும் ஆசையும், குற்றம் மிகுந்த சமூகமாகவும் இருப்பதைக் காண முடிகின்றது. இவற்றைக் களைய வள்ளுவர் வாயுறை வாழ்த்துவில் பொருட்பாலில் ஒரு குடும்பம் எனும் சமுதாயம் பண்பாடுடன் பேணிப் பாதுகாத்து வளரும் போதுதான் அச்சமூகமும் சிறப்புடையதாக இருக்கும் என்பதை குடிமையியலின் வாயிலாக கூறியிருப்பதை இக்கட்டுரையின் மூலமாக எடுத்துக் கூறப்பட்டது.

**அடிக்குறிப்புகள்**

1. திருக்குறள்: 993, ப.433.
2. மேலது, குறள்: 956, ப.417.
3. மேலது, குறள்: 1014, ப.442.
4. கனி, இந்து தமிழ் திசை, பெண் இன்று, ‘திருமணங்களும் தற்கொலைகளும்’, 9 டிசம்பர் 2018, ப.5.
5. திருக்குறள்: 965, ப.421.
6. மேலது, குறள்: 968, ப.422.
7. மேலது, குறள்: 1001, ப.436.
8. மேலது, குறள்: 1049, ப.457.
9. முகமது ஹீசைன், இந்து தமிழ்திசை, ‘பஞ்சம் போக்கிய நெல் ரகம்’ டிசம்பர் 1, 2018, ப.1.
10. தேவதாசன்.வி, இந்து தமிழ் திசை, ‘நெல் விதைகள் பாதுகாப்பை இயக்கமாக மாற்றிய ஜெயராமன்’, டிசம்பர் 7, 2018, ப.12.
11. திருக்குறள்: 1036, ப.451.
12. மேலது, குறள்: 1080, ப.469.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



# தொல்காப்பிய உரிப்பொருள் மரபும் நாட்டுப்புறப்பாடல்களும்

**பொன். பூஞ்சோலை,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
கிருஷ்ணசாமி அறிவியல் கலை
மற்றும் மேலாண்மையியல் கல்லூரி,
கடலூர்.

## தோற்றுவாய்

மனித இனவரலாறு மிகவும் பரந்துபட்டது. இவ்வரலாற்றில் மொழியின் தோற்றம் குறித்து ஆராய்வோமேயானால் முதலில் மனிதன் சில ஒலிக்குறிப்புக்களாலும் சைகைகளாலும் தான் தனது கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டிருப்பான். அதன்பிறகே ஒலி வடிவங்களைத் தொடர்ந்து பேசி, வாய்மொழியை உருவாக்கியிருப்பான். இதன்மூலம் படிப்படியாக எழுத்து மொழியை உருவாக்கி அவற்றை ஏடுகளில் இலக்கியமாகப் பதிவு செய்து என்றும் அழியாத எழுத்திலக்கியமாகப் படைத்திருக்கக்கூடும். எனவே, உலகில் தோன்றிய அனைத்து வகையான எழுத்திலக்கியங்களுக்கும் வாய்மொழி இலக்கியமே அடிப்படையாகும்.

கி.மு. நான்காம் நூற்றாண்டு வரை முன்னோக்கிப் பார்க்கின்ற தொன்மையான மொழி வரலாற்றின் முதல் இலக்கண நூலாக நமக்குக் கிடைப்பது தொல்காப்பியம் ஆகும். எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று பெரும் பிரிவுகளை உள்ளடக்கியது. அப்பிரிவுகளைத் தொல்காப்பியம் அதன் முந்துநூல்களை ஒட்டியும், சமூக மரபாக்கத்தினை ஒட்டியும் அமைந்துள்ளதோடு, அக்கால சமூகக் கட்டமைப்பினையும் காட்டுகிறது. அகவாழ்க்கை மரபுகளைக் கூறுகின்ற பொருளதிகாரத்தில் உள்ள அகத்திணை உரிப்பொருட் கருத்தாக்கங்கள் நாட்டுப்புறப்பாடல்களில் வெளிப்படும் விதத்தினைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## உரிப்பொருள் மரபும் நாட்டுப்புறப்பாடல்களும்

நாட்டுப்புறக் கவிஞனால் எப்பொழுதும் பாடல்களை ஆக்க முடியும். இக்கவிஞன் பிற கவிஞர்களைப் (Poets) போன்று திட்டமிட்டு எந்தப் பிரிவில் எப்படி எப்படிப் பாடுவது என்று சிந்தித்துச் செயல்படுவதில்லை என்பதையும் அவ்வப்போது ஏற்படும் உந்துதலால் உள்ளத்தில் வரும் செய்திகளையும் அவ்வப்போது இணைத்து (improvision) தற்செயலாக எந்தவிதமான சிரமுமின்றிப் பாடுவதையும் இது குறிக்கும் நிலையில் உள்ளது என்று கவிதை உருவாக்கம் பற்றி அகத்தியலிங்கனார் குறிப்பிடுவார்.[1] சங்க இலக்கிய அகக்கவிதைகள் புலவனின் கற்பனையில் வருபவை. அவைபோன்று நாட்டுப்புறப் பாடல்களும் கற்பனையில் வருபவை எனலாம்.

உரிப்பொருட்கள் சங்க அகக்கவிதையில் பயின்று வருவதாகும். உரிப்பொருளென்பது பாடலின் உயிர்க்கருத்தாக அமைகின்றது. இவை அகஇலக்கியத்தின் அடிக்கருத்தாக இடம்பெறுகிறது.[2] திணைசார்ந்த மக்களின் ஒழுகலாற்றைக் கூறுவது உரிப்பொருள் என்பர்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் இவை நா.வானமாமலையின் தமிழர் நாட்டுப் பாடல்களில் பயின்று வந்துள்ள நிலையினை இனிக்காணலாம்.

**உரிப்பொருள் மரபு**

உரிப்பொருள் என்பது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்து நிலமக்களின் ஒழுக்கத்தை உணர்த்துவது ஆகும்.

> **“புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
> **ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை**
> **தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே”[3]**

என்று தொல்காப்பிய நூற்பாவிற்கு விளக்கவுரையாக “புணர்தல் என்பது குறிஞ்சிக்கும், பிரிதல் என்பது பாலைக்கும் இருத்தல் என்பது முல்லைக்கும், இரங்கல் என்பது நெய்தலுக்கும், ஊடல் என்பது மருதத்திற்கும் உரித்தாவது பெரும்பான்மை. சிறுபான்மை எல்லாப் பொருளும் எல்லாத் திணைக்கும் உரித்தாகவும் கொள்ளப்படும்”[4] என்று ஆசிரியர் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது.

**நாட்டுப்புறக் காதல் பாடல்களில் உரிப்பொருள் மரபு**

மனித உணர்வுகளின் வெளிப்பாடாகக் காதல் அமைகின்றது. பழங்காலத்தில் காதலும், வீரமும் இருகண்களாகப் போற்றப்பட்டது. நாட்டுப்புறக் காதல் உறவின் அடிப்படையில் அமைகின்றது. இக்காதலுக்கு இலக்கியத்தில் கூறப்படும் தோழியைப் போன்று பல பாடல்கள் அமைவதில்லை. ஏதேனும் ஒரு சில பாடலே காணப்படுகிறது. காதலர்கள் நேருக்கு நேர் சந்தித்துக் கொண்டு தனது விருப்பு வெறுப்புகளையும், இன்ப துன்பங்களையும் பகிர்ந்து கொள்கின்றனர். காதல் பாடல்கள் காதலர்களே பாடுவது ஒருவகை. காதலர்கள் அல்லாதவர்கள் தொழில் செய்யும் இடத்தில் இவ்வகைப் பாடல்களைப் பாடுவது மற்றொரு வகையாகும்.[5]

அகமாந்தர்களின் காதல் வாழ்விலும் கற்பு வாழ்விலும் நிகழும் ஒழுக்கமாக ஊடல், புணர்தல், இருத்தல், பிரிதல், இரங்கல் அமைகின்றது.

**மருதநிலத்தில் ஊடல்**

மருதநில மக்களின் ஒழுக்கமாக ஊடலும் ஊடல் நிமித்தமும் அமைகின்றது. இவற்றை சங்க இலக்கியப் பாடல்களில் காணமுடிகிறது. தொல்காப்பியரை வழிகொண்டு திருவள்ளுவர், ‘ஊடலுவகை’ என்ற அதிகாரத்தைப் படைத்துள்ளார். ஊடலின் மூலம் ஆண்களுக்கும் பெண்களுக்கும் கூடல் வேட்கை மிகும் என்பர்.

சங்க இலக்கியங்களில் தலைவியர்கள் மட்டுமே ஊடல் கொள்வதைக் காணமுடிகிறது. நாட்டுப்புறப் பாடல்களில் பெண்கள் ஊடல்கொள்வது மட்டுமல்லாமல் ஆண்களும் ஊடல் கொள்கின்றனர். இந்நிலையானது களவில் ஈடுபட்டிருக்கும் பொழுது குறியிடத்திற்குக் குறித்த



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



நேரத்தில் வரவில்லை எனில் இருவருக்கும் ஊடல் நிகழும் என்பதைக் கீழ்க்கண்டவாறு அறியலாம்.

**குறியிடத்தில் ஊடல்**

நாட்டுப்புறக் காதல் பாடல்களும் குறியிடத்தைத் தெரிவிக்கின்றன. இரவுக்குறி, பகற்குறி என்று குறியிட அடையாளத்தைக் காதலனுக்குக் காதலி உணர்த்துவதாக நாட்டுப்புறப்பாடல்கள் உள்ளன. "கூட்டமும் அறியேன், குளிர்ந்த சாலையும் அறியேன் அடையாளம் சொன்னியானால் அங்கு வந்து சேர்ந்திருவேன்"[6] என்று தடுமாறிய காதலனுக்குக் காதலி அடையாளத்தைச் சுட்டிக்காட்டுகிறாள். கெண்டை கொண்டு தூண் நிறுத்திக் கெளிறு கொண்டு வளைப்பரப்பியுள்ள தன் வீட்டின் சிறப்பையும்[7] சேர்த்துக் கூறுகிறாள். ஆடி மாதத்து, அமாவாசை பின்னிருட்டு, அடைமழை நேரத்தில் தேடி அலைய வேண்டாம். தென்னைமரம் அடையாளம்[8] என்று காதலி குறியிட அடையாளத்தை உரைப்பதாய் நாட்டுப்புறப்பாடல் ஒன்று உணர்த்துகிறது.

குறியிடத்திற்குக் குறித்த நேரத்தில் தலைவியால் வரமுடியாத சில நேரங்களில் காத்திருந்து காத்திருந்து தலைவன் திரும்பிப் போவதுண்டு. அப்போது இருவரிடையே ஊடல் நிகழும். இத்தன்மையைத் தமிழர் நாட்டுப்பாடல்களில் காணமுடிகிறது.

**கற்புக்காலத்தில் ஊடல்**

களவு வாழ்க்கையின் பயன் கற்பு வாழ்க்கையாகும். கற்பு வாழ்க்கையிலே அக ஒழுக்கமான ஊடல் பற்றிப் பெரும்பாலும் மருதநில மக்களிடையே காணப்படுகிறது.

சமுதாயத்தில் திருமணம் பற்றிய இலக்கிய இலக்கணங்கள் கூறும் முறைகள் நமக்குத் தெரிந்ததே. மற்றொன்று தற்காலத்திய சமூக மானிடவியலாளர்கள் சமுதாயத்தில் திருமணத்தின் தேவை என்ன என்பது பற்றி வரையறுத்துள்ளது கவனிக்கத்தக்கது. "பாலினவூக்கம் மகவூக்கம் தனது பெயரையும், பொருளையும் விட்டுச் செல்லும் ஆர்வம். பொருளாதார ஒற்றுமை பாதுகாப்பு ஆகியவற்றின் தேவை மூப்புத் தன்மையில் உதவும் தோழமையும் வேண்டும் என்ற அவா, வாழ்க்கையில் நிகழும் இன்ப துன்பங்களையும் வெற்றி தோல்விகளையும் பகிர்ந்து கொள்ள நல்ல கூட்டாளி வேண்டும் என்ற எண்ணம் போன்ற இன்னபிற காரணங்களுக்காக மனிதர்கள் மணம் புரிந்து கொள்கின்றனர்"[9] என்று திருமணத்தின் தேவையைப் பற்றி அவர்கள் கூறுகின்றனர்.

இச்செய்திகளை நாட்டுப்புறப் பாடல்களின் துணைகொண்டு நிறுவமுடியும். இல்லறத்தைப் பற்றிய பெண்ணின் எதிர்பார்ப்பு நிராசையாகிப் போனது. கணவன் மனைவிக்குள் சிக்கல், மாமியார், சக்களத்தி, பரத்தை ஆகியோருடன் போராட்டம் போன்ற காரணங்களால் தலைவன் தலைவி இருவரிடையே ஊடல் நிகழ்கிறது.

தமிழர் நாட்டுப்பாடலில் காதலித்த இடத்தைத் திருமணமான பிறகு தலைவனும் தலைவியும் சந்திக்கின்றனர். அவர்கள் பழகிய இடங்களை சுற்றிப்பார்த்து நினைவுகளை அசைபோடுகின்றனர். அவை பாழாய்க் கிடக்கின்றனவே, எவ்வளவோ மாறிவிட்டதே என்று



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



நினைக்கின்றனர்.[10] தம்பதியர் இருவரும் சேர்ந்து திரைப்படம் காணச்செல்வதை ஒரு பாடல் தெரிவிக்கின்றது.[11] திரைப்படம் பார்க்கச் செல்லும்போது, அப்படத்தைப் பற்றிக் குறை சொல்கிறான் ஒருவன். மனைவி அவனை நிந்தித்தபடி, 'கருத்துள்ள படமாக்கும் கஷ்டங்களை நிறைஞ்சிருக்கும் கருங்காலி பேச்சைக் கேட்டுக் கலங்க வேண்டாம் போவோம்' என்று உரைக்கிறாள். இதில் இல்லற வாழ்வில் கணவன் - மனைவி இருவரின் மகிழ்ச்சி வெளிப்படுவதைக் காணலாம். ஊடலுக்குப் பின் கூடல் நிகழும் என்பது தமிழர் நாட்டுப்பாடல்வழிப் புலனாகிறது.

**மகளிர் பிறரால் ஏற்படும் ஊடல்**

திருமணமாகிப் புகுந்த வீடு சென்ற பெண்ணிற்கு முதல் எதிரியாகக் கருதப்படுபவள் மாமியார். நாட்டுப்புறப்பாடல்களிலும், நடைமுறை வாழ்க்கையிலும் கிடைக்கக்கூடிய செய்திகள் பெரும்பாலும் மாமியார் – மருமகள்களின் மனவேற்றுமைகளைக் காட்டுவனவாகவே உள்ளன. "வேண்டாத மருமகள் கால்பட்டால் குற்றம் கைப்பட்டால் குற்றம்", "மாமியார் உடைத்தால் மண்குடம், மருமகள் உடைத்தால் பொன்குடம்" போன்ற பழமொழிகள் மாமியார் – மருமகளிடையே உள்ள உறவுப் பிணக்கைக் காட்டுவனவாக உள்ளன. மகன்மீது அதுவரை தனக்கிருந்த அன்பைப் பகிர்ந்துகொள்ள இன்னொரு பெண் வந்துவிட்டாளே என்ற உளவியல் போக்கே இதற்குக் காரணம் என்பர். மாமியார் செய்த கொடுமையால் மருமகள், மன்னவரைப் பெற்றெடுத்த மாமியார்தான் 'மலைக்குரங்காய்' இருக்கிறாள் என்று தன் மாமியாரை நையாண்டி செய்கிறாள்.[12]

அகத்திணையில் 'காமக்கிழத்தி' என்ற ஒரு பாத்திரம் சொல்லப்பட்டுள்ளது. அவள் இல்லற வீட்டிற்கு வெளியே தலைவனால் அனுபவிக்கப்படுகிறவள். இதனால் தலைவன் தலைவி இருவரிடையே ஊடல் நிகழும். நாட்டுப்புறத்திலும் அத்தகைய நிலை உள்ளது. நாட்டுப்பறத்தார் அவளைச் 'சின்னவீடு' என்பார்கள். இன்னும் சொல்லப்போனால் மனைவியால் முடியாத பல காரியங்களைச் 'சின்னவீடு' தலையணை மந்திரத்தால் சாதித்துக் கொள்வாள் என்பார்கள். ஆனால் அவள் இல்லற வீட்டிற்குள் நுழைய முடியாது. "வப்பாட்டி தேடப்போயி வாடுதையா நம்மதேசம்"[13] என்று மனைவி வாடுகிறாள். தவிர, முதல் மனைவி இருக்கக் கணவன் மறுமணம் புரிந்து கொள்வான். அவ்வாறு வருபவள் இல்லற உரிமை பெற்றவளாக ஆகிவிடுகிறாள். அவள் 'இளையதாரம்' என்றும் அழைக்கப்படுகிறாள். மறுமணத்தின் காரணங்களாவன முதல் மனைவிக்குக் குழந்தை பெற வாய்ப்பில்லாமல் போதல், அடிக்கடி நோய்வாய்ப்படுதல் போன்றவற்றினால் கணவன் மறுமணம் செய்து கொள்ளுவான். எந்தவிதமான காரணங்கள் இல்லாமலும் இரண்டாம் மணம் செய்து கொள்ளுதலும் உண்டு. குடும்ப உரிமையில் 'சக்களத்தி' மூத்த மனைவியைவிட கூடுதல் அதிகாரம் பெற்றவளாக இருப்பாள். எனவே, முதல் மனைவிக்குச் சக்களத்தியைப் பிடிக்காது. என்ன இருந்தாலும்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



தான் எச்சில் படுத்திய பண்டம் தானே[14] சக்களத்தி அனுபவிக்கிறாள் என்று, இயலாத ஒருத்தி தனக்குள் சமாதானம் சொல்லிக் கொள்கிறாள். சக்களத்தியிடம் இல்லாமல் கணவனிடம் ஊடல் கொள்ளும் பெண்களும் உள்ளனர். "பத்து மாசம் சுமசுமக்க விட்டுவிட்டு இளையதாரம் கட்டினியே உன்னப் பூநாகம் தீண்டாதோ'[15], 'பிரிந்தாயானா இறப்பது நிச்சயம்'[16] என்று முதல் மனைவி கணவனுக்குச் சாபமிடுகின்றாள்.

இல்லறத்தில் கணவன் - மனைவி இருவரிடையே ஊடல் வருவதற்குக் காரணமானவர்கள் என்று பார்க்கும் பொழுது மாமியார், வைப்பாட்டி, சக்களத்தி ஆகியோர்களாவர். இவர்களைப் போல் பரத்தையர்களும் அமைகின்றனர்.

சங்ககாலத்தில் பரத்தையர் ஒழுக்கம் சமூக அங்கீகாரம் பெற்றிருந்தனர். "பூப்பின் புறப்பாடு ஈராறு நாள்"[17] தவிர்த்துப் பரத்தையர் செலவை அக்காலத்தில் மேற்கொண்டிருந்தனர். சமுதாய அங்கீகாரம் பெற்றதாகப் பரத்தையர் ஒழுக்கம் அமைந்தாலும், "பரத்தை வழிப்பட்ட பண்பினால் ஒரு தலைவன் தன் வீட்டிற்குள் புக அஞ்சுகிறான். புகும் உரிமையை இழக்கின்றான். கேட்டுப்பக வேண்டிய நிலைக்குத் தாழ்கிறான்.[18] பரத்தையர்கள் தலைவனின் பொருள் நலக் குறைவிற்கும் உடல்நலக் குறைவிற்கும் காரணமாய் இருப்பார்கள். இவர்களை, பரத்தையர், தாசி, தேவதாசி போன்ற பெயர்களால் நாட்டுப்புறத்தில் வழங்கப்படுகின்றனர்.

ஊடல் என்பது தொல்காப்பியரின் வழியாக சங்க அகத்திணைப் பாடல்களிலும் நாட்டுப்புறக் காதல் பாடல்களிலும் விளக்கப்பட்டுள்ளது. பரத்தையிற் பிரிவை ஊடலுக்குரிய காரணமாகக் காட்டுகின்றன சங்க அகத்திணைப் பாடல்கள். பரத்தையிற் பிரிவுக்காக மட்டுமல்லாமல், மற்ற நடைமுறை நிகழ்ச்சிகளுக்காகவும் ஊடல் கொள்ளப்படுவதை நாட்டுப்புறப் பாடல்கள் உணர்த்துகின்றன. அகப்பாடல்களில் பெரிதும் காதலி மட்டுமே ஊடல் கொள்கிறாள். மிக அரிதாகத் தலைவன் ஊடுதல் அகப்பொருளில் பேசப்படும். தலைவி குறியிடம் பிழைத்தபோதும், தலைவியின் ஊடலைத் தலைவன் தேற்றத் தலைவி ஊடல் களையாதபோதும் தலைவன் ஊடுவதுண்டு. ஆனால் நாட்டுப்புறக் காதல் பாடல்களில் தலைவன் தலைவி இருவருமே ஊடுவது இயல்பாக அமைந்திருக்கிறது. இதன்மூலம் பழங்காலந் தொட்டு இன்றுவரை மருதநில மக்களின் வாழ்க்கை முறையும் பண்பாடும் சிறந்திருக்கிறது. மருதத்திணையின் உரிப்பொருள் நாட்டுப்புறப் பாடலிலும் பெரும்பாண்மையும் இடம்பெற்றிருக்கிறது.

**பிரிதல் நிமித்தம்**

பிரிதலும் பிரிதல் நிமித்தமும் பாலை நிலத்திற்கு உரியது என்பார் தொல்காப்பியர். களவு வாழ்வில் ஈடுபட்டுத் தலைவன் பொருளீட்டுதல் பொருட்டு தலைவியைப் பிரியும் பிரிவும், கற்பு வாழ்வில் ஓதல், தூது, பகை காரணமாகப் பிரியும் பிரிவும் கூறப்படுகின்றன. மேலும், உடன்போக்கின் போது குடும்பத்தாரைப் பிரிந்து செல்லும் பிரிவும் அடங்கும்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



பிரிந்திருக்கும் காலங்கள் நிலையாகப் பிரிந்திருப்பதில்லை. ஒவ்வொன்றிற்கும் சில குறிப்பிட்ட ஆண்டு வரையறை உண்டு. தலைவன் வரவைக்கண்டு தலைவி காத்திருப்பாள். தலைவியின் நெஞ்சம் பிரிவு என்றாலே கலங்கிவிடுகிறது. திருவள்ளவர், 'சொல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின் வல்வரவு வாழ்வார்க்குரை"[19] என்றிருப்பாள் அவர் குறிப்பிடும் தலைவி. 'கல்லானாலும் கணவன், என்பதற்கேற்ப கணவன் தன்னுடனேயே இருக்க விரும்புவர் மனைவியர்.

கணவன் இல்லாமல் மனைவியால் சமுதாயத்தில் தனித்து வாழ்வது கடினமாகிறது. மற்றவர்களின் பேச்சுக்கும் ஏச்சுக்கும் ஆளாகுதல், பிற ஆடவரின் பார்வைக்கு அஞ்சி வாழ்தல், நல்ல காரியங்களுக்கு அவளைத் தள்ளிவைத்தல் போன்ற பல கொடுமைகளுக்கு ஆளாக்கப்படுவாள். அதனால் அந்த நிலைமை வரக்கூடாது என்று எண்ணுவார்கள்.

நாட்டுப்புறப் பாடல்களில் தலைவன் ஒருவன் பொருள் ஈட்டுவதற்காகச் செல்கிறான். சென்ற தலைவன் விரைவாக வந்துவிடுவான் என்று நினைத்தாள் தலைவி. அவள் சோளம் விதைக்கும்போது சொல்லிவிட்டுப் போன பின்னர்ச் சோளமும் விளைந்துவிட்டது. ஆனால் தலைவன் கூற்று பொய்யாகி விட்டதே என வருந்துகிறாள்.[20] யார் செய்த தீவினையாலோ தாங்கள் பிரிந்து ஆளுக்கொரு தேசமாகிப் போய்விட்டோம்[21] என்று பிரிவின் துயர் வெளிப்படுவதை அறியமுடிகிறது.

பிரிந்திருக்கும் தலைவி தலைவனைச் சேரும் காலத்தை எண்ணி ஏங்குகிறாள்.[22] தலைவனின் பிரிவால் நிறைகுடத்துத் தண்ணீர் போல் திரண்டிருந்த மேனி குறைகுடத்துத் தண்ணீராய் அலைபாய்வதை நினைத்து உருகுகிறாள்.[23]

"திணைப்பாடல்களில் நிகழும் பிரிவு வகைகளில் பாலைக்குரிய பொருட்பிரிவே நீண்ட காலத்திற்கும் நெடுந்தொலைவிற்கும் உரியதாகும்"[24] என்பார். ஆனால் நாட்டுப்புறப் பாடல்களில் குறுகிய காலங்களே பிரிவு நிலை அமைகிறது. அதாவது ஒரு வாரம் அல்லது ஒருமாதம் என்ற நிலைகளைக் காணமுடிகிறது.

ஓதற்பிரிவைப் பற்றியும் ஒருபாடல் காணப்படுகிறது. அவை கல்யாணம் செய்துகொண்டு படிப்பதற்காகச் செல்கிறான் ஒருவன். ஆனால் பல ஆண்டுகளாகியும் அவன் படிப்பு முடிந்தபாடில்லை. "பத்தடுக்கு மாடி மேலே கல்லூரிப்படிப்பு படிக்கும் தன் கணவன் படிச்சி முடிப்பாரா, எழுதி முடிப்பாரா எண்ணங்களைச் சொல்லுவாரா? என ஏங்குகிறாள் அவன் மனைவி.

தலைவனின் பிரிவினால் வாடும் தலைவிக்கு உறக்கம் வருவதில்லை. நாட்டுப்புறப் பாடலில் துரைமகனைக் காணாமல் தூக்கம் குறைந்ததாகவும், ஏக்கத்தினால் உயிர்போகும் துன்பத்தை அடைவதாகவும் ஒரு தலைவி கூறுகிறாள்.[26] படுத்தால் பல நினைவு வந்து வாட்டுகிறது ஒரு தலைவிக்கு. கண்ணீர் வடித்து தலைவனின் நினைவால் சருகாய் உருகுவதாய் வேதனைப்படுகிறாள் ஒருத்தி.[27] பாய்விரித்துப் படுத்தாலும் உறக்கம் வ்ராமல்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal 

E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com

தவிக்கும் தவிப்பு, தலைவனின் முடியைத் தலைக்கு வைத்துப் படுத்துக்கொண்டால்தான் நீங்கும் என்கிறாள் ஒரு தலைவி.[28] இவ்வாறு தலைவனின் பிரிவால் வாடும் தலைவிக்கு உறக்கம் வருவதில்லை என்பது நாட்டுப்புறப் பாடலில் அறியமுடிகிறது.

**இரங்கல்**

நெய்தல் நில உரிப்பொருள் இரங்கலும் இரங்கல் நிமித்தமும் ஆகும். சங்க இலக்கிய அகத்திணைப் பாடல்களில் இரங்கல் பாடல்கள் காணப்படுவதைப் போல நாட்டுப்புறப் பாடல்களிலும் இவற்றைக் காணமுடிகிறது. காதலனும் காதலியும் கூடிய பின்னர் ஏதேனும் ஒரு காரணத்தினால் காதலர்கள் பிரிய நேரிடலாம். ஊர் உரைத்த அலரால் தலைவியை இற்செறித்தல், திருமணத்திற்குப் பின்பு தொழில் காரணமாகச் செல்லுதல், காதலர்களுக்குள் ஏற்படுகின்ற ஏமாற்றம் போன்ற காரணங்களால் காதலர்களுக்கிடையே பிரிவு ஏற்படுகின்றது. பிரிந்திருக்கும் காலத்தில் காதலனும் காதலியும் வாடிக்கிடக்கும் மன இயல்பைக் குறிப்பிடும் நாட்டுப்புறப் பாடல்களை இரங்கல் பாடல்கள் எனலாம்.[29]

தொல்காப்பியர் தலைவன் பிரியும் காலத்துத் தோன்றும் கூறுகளாகச் சிலவற்றை வகைப்படுத்தியுள்ளார்.

**“முன்னிலை யாக்கல் சொல்வழிப் படுத்தல்**
**நன்னயம் உரைத்தல் நகைநனி யுறாஅது**
**அந்நிலை யறிதல் மெலிவுவிளக் குறுத்தல்**
**தன்னிலை யுரைத்தல் தெளிவகப் படுத்தல்”**[30]

எனத் தலைவனுக்கென சில தன்மைகளைத் தொல்காப்பியர் சுட்டுவார். இவற்றை நாட்டுப்புறப் பாடல்களில் இரங்கல் நிலையில் இருபாலருக்கும் பொதுவாய் அமைந்திருப்பதை காணமுடிகிறது.

சங்க அகத்திணைப் பாடல்கள் காதல் ஒழுக்கங்களாக உரிப்பொருளைச் சுட்டுகிறது. அதற்கென்று நிலமும் பொழுதும் அமைத்தே பாடல் பெற்றிருக்கின்றன. ஐந்திணை ஒழுக்கங்களுள் ஒன்றான இரங்கல் நிமித்தம் குறித்து, மு.இராகவையங்கார் குறிப்பிடும் விளக்கம் நோக்கத்தக்கதாகும்.

“தலைவனைப் பிரிந்த கிழத்திக்குக் கடலும் கழியும் கானலும் காணுந்தோறும் ஆற்றாமையைத் தோற்றுவிக்கும். ஆள் அரவம் இல்லாத கடற்கரையிலிருந்து தனிமையில் நாம் நின்று பார்த்தால் நம்மிடமும் இவ்வாற்றாமை தோன்றக் காணலாம். இச்சூழ்நிலை இரங்கலைப் புலப்படுத்துவதற்கு மிகவும் ஏற்றது. ஆகவே, இரங்கலுக்கேற்ற நிலைக்களன் நெய்தலாயிற்று”[31] மேற்கண்டவற்றின் மூலம் இரங்கல் என்பது தெளிவாகிறது.

காதலால் கூடிக் கலந்த இரவரது பிரிவு ஒழுக்கமான பிரிதலும் பிரிதல் நிமித்தமும் குறிப்பது பாலைத் திணையாகும். தொல்காப்பியர் உடன்போக்கைத் தவிர வேறு பிரிவுக்காலங்களில் அகப்பாடல் தலைவி தலைவனோடு செல்வதில்லை என்பது ‘முந்நீர்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



வழக்கம் மகடூவோடில்லை'[32] என்று குறிப்பிடுவார். சங்க காலத்தில் கடல்வழிப் பிரிவு நிகழ்ந்துள்ளது. தலைவியை விட்டு தலைவன் தொழில் செய்வதற்காக பிரிந்து கடல்வழிப் பயணம் மேற்கொண்டான் என்பது தெளிவாகிறது. நாட்டுப்புறப் பாடல்களில் பல பாடல்கள் நீர்வழிப் பிரிவைத் தெரிவிப்பனவாய் உள்ளன. கற்புக்காலத்தில் தலைவனும் தலைவியும் வீட்டைவிட்டுச் சென்று விளையாடுவதற்காகச் சென்றனர் என்பதைத் தொல்காப்பியர்,

**"யாறும் குளனும் காவும் ஆடிப்**
**பதியிகந்து நுகர்தலும் உரிய என்ப"[33]**

எனக் கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது. நீர்வழிப் பயணத்தின்கண் காதலி காதலனுடனும், மனைவி கணவனுடனும் செல்வதுண்டு என்பதை நாட்டுப்புறப் பாடல்வழி அறியமுடிகிறது. ரங்கூன் போன்ற கடல்கடந்த நாடுகளுக்கு ஆண்களோடு பெண்களும் சென்றுள்ளனர்[34] என்பதை நாட்டுப்புறப் பாடல் மூலம் தெரிந்துகொள்ள முடிகின்றது.

ஐந்திணை என்பது ஐவகையான ஒழுக்கம் என்பர். இவ்வைந்தும் மக்கள் கடைபிடித்து வந்தனர். இதனை,

**"போக்கெல்லாம் பாலை, புணர்தல் நறுங்குறிஞ்சி**
**ஆக்கஞ்சேர் ஊடல் அணிமருதம் நோக்குங்கால்**
**இல்லிருத்தல் முல்லை இரங்கல் நறுநெய்தல்**
**சொல்லிருந்த நூலின் தொகை"[35]**

என்ற பழம்பாட்டால் அறியலாம். இவ்வாறு சீரும் சிறப்புடனும் வாழ்ந்த நம் முன்னையோரின் வாழ்க்கை முறை சிறப்பிடம்பெறுகிறது. இத்தகைய திண்ணிய அடிப்படையில் எவ்வளவோ சூராவளியும் பெருமழையும் பேரிடியும் தத்தம் முழுவலியும் கொண்டு தாக்கியுங்கூடத் தமிழ் நாகரிகம் என்னும் தனிப்பெருங் கட்டடம் இன்னும் அழிந்தொழிந்து சிதையாமல் நின்று நிலவுகின்றது என்பர்.[36]

ஐந்திணை நெறியானது உலகியலில் நிகழும் குறிப்புகள் ஆகும். புலவனின் கற்பனைத் திறத்திற்கு கவி புனையும் தன்மையும் கொண்டு தனித்து நோக்கத்தக்கது. ஐந்திணைக்குரிய நிகழ்ச்சிகள் இல்லாமல் இவ்வுலகம் இல்லை என்பர். உலக வாழ்க்கை மாறிமாறி வரும் பல சூழல்களில் நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு பாடல்கள் ஆக்கப்பட்டன.

இதனைத் தொல்காப்பியர் திணைமயக்கம் என்ற நிலையில் **"திணைமயக்குறுதலும் கடிநிலை இலவே"[37]** என்று குறிப்பிடுவார். இதற்கு நச்சினார்க்கினியர் "இஃது இல்லதெனப்படாது, உலகியலேயாம். உலகியலின்றேல் ஆகாயப்பூ நாறிற்றென்றவழி அது சூடக் கருதுவாருமின்றி மயங்கக் கூறினாரென்று உலகம் இழிந்திடப்படுதலின் இதுவும் இழிந்திடப்படும். இச்செய்யுள் வழக்கினை நாடக வழக்கென மேற்கூறினார். எவ்விடத்தும் எக்காலத்தும் ஒப்ப நிகழும் உலகியல் போலாது, உள்ளோன் தலைவனாக இல்லது



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



புணர்த்தல் முதலாகப் புனைந்துரை வகையால் கூறும் நாடக இலக்கணம் போல யாதானுமொரோவழி ஒரு சாரார் மாட்டு உலகியலான் நிகழும் ஒழுக்கத்தினை எல்லார்க்கும் பொதுவாக்கி, இடமும் காலமும் நியமித்து செய்யுட் செய்தல் ஒப்புமை நோக்கச் செய்யப்பட்டதாகலின்" என்று விளக்கம் கூறினார் என்பர்.[38] இவ்வாறு ஐந்திணை நெறியாக மேற்கண்ட விளக்கம் அமைகின்றது.

### முடிவுரை

உரிப்பொருட்கள் ஒழுக்கத்தை உணர்த்துவதாக அமையும். அவை புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்பதாம். சங்க இலக்கியங்கள் முதற்பொருள், கருப்பொருட்கள் இவற்றைப் பின்னணியாகக் கொண்டு அமைந்திருக்கின்றன. நாட்டுப்புறப் பாடல்களிலும் இக்கூறுகள் காணப்படுகின்றன. இவற்றுள் கூறப்படும் காதலனும், காதலியும் பெரும்பாலும் கூலிவேலை, உப்பளம், தேயிலைத் தோட்டம் போன்ற இடங்களில் வேலை செய்பவர்களாக இருப்பதால் இவர்களுக்குரிய பண்புகளோடு அமைந்திருக்கின்றனர். தலைவன், தலைவி இருவரின் பண்பு சூழலை மையமாக வைத்தே அமைகின்றது.

மருத நிலத்தில் உழவுத் தொழில் செய்யும் போது இருவருக்கும் உள்ள தொழில் அனுபவத்தினை, கமலை கட்டத் தெரியாத, தொழில் அனுபம் இல்லா, காதலனை இடித்துரைக்கும் பாடல்கள் ஊடல் பகுதியில் அமைந்திருக்கின்றன. மருதநிலம் ஊடல் நிலையை வெளிப்படுத்துகிறது. தொழிற்களங்களே காதற்பாட்டிற்கு அடிப்படைக் களமாக அமைந்திருக்கிறது. அகப்பாடல்களில் காதலி மட்டுமே ஊடல் கொள்கிறாள். மிக அரிதாகத் தலைவன் ஊடுதல் காணப்பெறும். ஆனால் நாட்டுப்புறப் பாடல்களில் தலைவன், தலைவி இருவருமே ஊடுவதை இயல்பாகக் காணமுடிகிறது.

பிரிதல் நிமித்தம் என்பது கல்வி கற்பதற்கும், பொருளீட்டுவதற்கும் செல்லும் பிரிவுகளும் பரத்தையர் பிரிவும் காணப்படுகின்றன. பிரிந்திருக்கும் காலங்கள் நிலையாகப் பிரிந்திருப்பதில்லை. குறுகிய கால இடைவெளியே பிரிந்திருத்தல் காணப்படுகிறது.

இரங்கல் பாடல்கள் பிரிவு நிலையில் அமைகின்றன. பிரிந்திருக்கும் காலத்தில் காதலனும் காதலியும் வாடிக்கிடக்கும் மன இயல்பைக் குறிப்பிடும் நாட்டுப்புறப் பாடல்கள் இரங்கல் பாடல்களாகும்.

### அடிக்குறிப்புகள்

1. ச.அகத்தியலிங்கம், கவிதை உருவாக்கம்-2, ப.107.
2. க.ஜவகர், திணைக்கோட்பாடும் தமிழ்க் கவிதையியலும், ப.34.
3. தொல்.நூற். 960.
4. வ.த.இராமசுப்பிரமணியம், (உ.ஆ)., தொல்காப்பியம் பொருளதிகாரம் மூலமும் விளக்கவுரையும், ப.32.
5. சு.சக்திவேல், மு.நூ., ப.97.
6. நா.வானமாமலை, தமிழர் நாட்டுப் பாடல்கள்., ப.245.


International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com


7. மேலது, ப.245.
8. மேலது, ப. 237.
9. சு.சண்முகசுந்தரம், திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப்பாடல்களில் சமுதாய அமைப்பு, பக். 122, 123.
10. நா.வானமாமலை, மு.நூ. ப.165.
11. மேலது, ப. 193.
12. மேலது, ப. 343.
13. மேலது, ப. 203.
14. மேலது, ப. 321.
15. மேலது, ப. 206.
16. மேலது, ப. 190.
17. தொல்.நூற். 1133.
18. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 107.
19. திருக்குறள், 1151.
20. மேலது, ப. 205.
21. மேலது, ப. 152.
22. மேலது, ப. 152.
23. மேலது, ப. 153.
24. தமிழண்ணல், சங்கமரபு, ப.220.
25. நா.வானமாமலை, மு.நூ., பக், 315-316.
26. மேலது, ப. 153.
27. மேலது, ப. 258.
28. மேலது, பக். 114, 194.
29. நா.இளங்கோ, மு.நூ., ப. 140.
30. தொல்.நூற். 1047.
31. நா.இளங்கோ, மு.நூ., பக். 140-141.
32. தொல்.நூற். 980.
33. தொல்.நூற். 1137.
34. நா.வானமாமலை, மு.நூ., ப. 180.
35. நா.சுப்பரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 36.
36. மேலது., ப. 36.
37. தொல்.பொருள்.அகத்.நூற். 14.
38. நா.சுப்புரெட்டியார், மு.நூ.ப. 37.


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com

**துணைநூற்பட்டியல்**

**முதன்மை ஆதாரம்**

1. இராமசுப்பிரமணியம்.வ.த., (உ.ஆ.) தொல்காப்பியம், பொருளதிகாரம் மூலமும் விளக்க உரையும், பூம்புகார் பதிப்பகம், சென்னை, 2008.
2. வானமாமலை.நா., தமிழர் நாட்டுப் பாடல்கள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடட், சென்னை, 1964.

**துணைமை ஆதாரம்**

1. அகத்தியலிங்கம்.ச., கவிதை உருவாக்கம் - 2, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1999.
2. இளங்கோ.நா., நாட்டுப்புறக்காதல் பாடல்களும் அகப்பொருள் மரபுகளும், காவ்யா பதிப்பகம், சென்னை. 2005.
3. சக்திவேல்.சு., நாட்டுப்புற இயல் ஆய்வு, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, திருத்திய பதிப்பு, 1983.
4. சண்முகசுந்தரம்.சு. -(தொ.ஆ.)., திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்களில் சமுதாய அமைப்பு, காவ்யா பதிப்பகம், சென்னை, 2008.
5. சுப்புரெட்டியார்.ந., தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, நான்காம் பதிப்பு, 2002.
6. தமிழண்ணல், சங்கமரபு, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 2009.
7. மாணிக்கம்.வ.சுப., தமிழ்க்காதல்., ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ்., சென்னை. 2009.
8. ஜவகர்.க., திணைக்கோட்பாடும் தமிழ்க் கவிதையியலும், காவ்யா பதிப்பகம், சென்னை, 2010.



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# பிரபஞ்சன் புனை கதைகளில் பொருள்சார் பண்பாடு

**டே.பெமிலா,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகம்,
சென்னை.

**முன்னுரை**

இயற்கையோடு இயைந்த வாழ்க்கையை மேற்கொண்டிருந்த மனிதன் தனது பாதுகாப்பு கருதி பல பொருட்களை உருவாக்குகின்றான். கோடாரி, ஈட்டி, குடிசை போன்ற பொருட்கள் உருவாக்கம் பெற்று ஒழுங்கமைவு ஏற்படுகிறது. இத்தகைய ஒழுங்கமைவில் கருத்தியல் சார்ந்த மனிதனின் நடத்தை முறைகளும் ஆட்படுத்தப்பட்டு, இறுக்கமான சமுதாய அமைப்பு உருவாகின்றது. ஒழுங்கை மீறினால் சமுதாயத் தீங்கு ஏற்படும் என்று சிறு வயது முதலே கற்பிக்கப்பட்ட மனிதன் சமுதாய வயப்படுகின்றான் அல்லது பண்பாடு வயப்படுகிறான். பண்பாட்டு வயப்பட்டவன் சமுதாயம் அனுமதிக்காத நடத்தைகளில் ஈடுபடுதல் தவறு என்ற ஒரு மன நிலையைக் கட்டமைத்துக் கொள்கிறான். பிரபஞ்சன் தனது புனைகதைகளில் புதுச்சேரி சமுதாயத்தின் பண்பாட்டைக் காட்சிபடுத்தியுள்ளார். பொருள்சார் பண்பாட்டினை இக்கட்டுரையில் காண்போம்.

**பொருள்சார் பண்பாடு**

மானிடவியலுக்கு அடிப்படையாக விளங்குவது பண்பாடு என்னும் கருத்தாக்கம் ஆகும். பண்பாடு என்பது மனிதர்களால் பகிர்ந்து கொள்ளப்படுவது, கற்றுணரப்படுவது. கடலெனப் பரந்துப்பட்டது. இப்பண்பாட்டைப் பொருள்சார் பண்பாடு, பொருள்சாராப் பண்பாடு என்ற இரு பெரும் பிரிவுகளாக மானிடவியலாளர் பிரித்து ஆராய்கின்றார்.

> **“பண்பாடு என்பது குறிப்பிட்ட ஒரு மக்கட் கூட்டம் தமது சமூக வரலாற்று வளர்ச்சிபடியாகத் தோற்றுவித்துக் கொண்ட பௌதீகப் பொருட்கள் ஆத்மார்த்தக் கருத்துக்கள், மத நடைமுறைகள், சமூகப் பெறுமானங்கள் ஆகியவற்றின் தொகுதியாகும். ஒரு கூட்டத்தினரின் தொழில்நுட்ப வளர்ச்சி, உற்பத்தி முறைமை, உற்பத்தி உறவுகள், கல்வி, விஞ்ஞானம், இலக்கியம், கலைகள், நம்பிக்கைகள் ஆகியவற்றின் தொகுதியாகும்”.**[1]

என்று பேராசிரியர் கார்த்திகேசு சிவத்தம்பி கூறுகின்றார்.

மக்களின் நடத்தை முறைகளைக் கட்டுக்கோப்பான நிலையில் செயல்படுத்தும் மிகப்பெரும் அமைப்பாக பண்பாடு விளங்குகிறது. பண்பாடு என்ற அமைப்பில் பல கூறுகள் இடம்பெறுகின்றன. பண்பாட்டுக் கூறு, பண்பாட்டுக் கலவை, நிறுவனம் போன்றவை பண்பாட்டின் உட்கூறுகள் ஆகும்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



> **"மானுடச் சமூகங்கள் எல்லாம் தான் வாழும் சுற்றுச் சூழலுக்கும், காலத்திற்கும் ஏற்ப வாழ்ந்தாக வேண்டும். இந்தப் படிமுறையில் சமூகங்கள் தத்தம் சொந்த நோக்கத்திற்கேற்ப வாழ்ந்தாக வேண்டும். இயற்கை உலகை வடிவமைக்கப் பல்வேறு தந்திரோபாயங்களையும், அணுகுமுறைகளையும் வளர்தெடுத்துள்ளன. இயற்கை வளங்களைப் பண்பாட்டுப் படைப்புகளாகவும், கலைப் படைப்புகளாகவும் மாற்றிக் கொள்வதையே புழங்கு பொருள்சார் பண்பாடு என்கிறோம்".**[2]

என்று முனைவர் தே. லூர்து குறிப்பிடுகிறார்.

> **"பொருள் சார் பண்டங்களும், திறமைகளும், குறியீட்டுச் செய்கைகளும், நம்பிக்கைகளும், அறிவும், அதனை விவரிக்கும் முறைகளும் சமூக அமைப்பின் மூலக் கூறுகளும், சமூக மதிப்பீடுகளும்தான் பண்பாட்டில் அடங்கியுள்ள துணைக்கருவிகள்".**[3]

என்பார் பால்சன்.

**பொருள்சார் பண்பாடும் பொருள்சாராப் பண்பாடும்**

பொருள்சார் பண்பாடும், பொருள்சாராப் பண்பாடும் ஒன்றையொன்று சார்ந்தது.

> **"மனிதன் பயன்படுத்தும் கருவிகள், ஆடை, வீடு, வாகனங்கள் முதலியவற்றைப் பொருளியல் பண்பாட்டு மூலங்களாகவும் அவன் பின்பற்றும் விதிமுறைகள், பழக்கவழக்கங்கள், சமயக் கொள்கைகள், கலைத்தன்மைகள், மனவெண்ணங்கள் ஆகியவற்றை ஆன்மவியல் பண்பாட்டுத் தன்மைகளாகவும் கருதலாம்".**[4]

ஒவ்வொரு பொருளுக்குப் பின்னும் அதற்கென்றே உரிய பொருள்சார்ப் பண்பாடு இருக்கும். சான்றாக பூக்களால் ஆகிய மாலையில் பூக்கள், நார் அதில் அலங்காரத்திற்காக வைக்கப்படும் வண்ண நூல்கள், காகித அட்டைகள் போன்றவை பொருள்சார் பண்பாட்டைச் சேர்ந்தவை எனலாம். அம்மாலையைத் தொடுக்கும் முறை, அதன் நுணுக்கம், பூக்கட்டுவோரின் திறன், பூக்கட்டுதலில் கையாளப்படும் பல உத்திகள், அதன் பயன்பாடு போன்றவை பொருள்சாராப் பண்பாடு ஆகும். இங்ஙனம் ஒவ்வொரு பொருளும் அதற்கென உள்ள பொருள்சாராப் பண்பாட்டினையும் பெற்றிருக்கும்.

**பொருளாதாரம்**

ஒரு சமூகத்தின் அல்லது நாட்டின் சுய உரிமையும் சுயாட்சியும் தொடர்ந்து பேணப்பட, காக்கப்பட வேண்டுமாயின் அந்நாடு பொருளாதாரத்தில் வலுவான அடிப்படையைக் கொண்டிருத்தல் அவசியம் ஆகும்.

ஒரு நாட்டின் பொருளாதார வளத்திற்கும், தொழில் வளர்ச்சிக்கும் மக்களின் வாழ்க்கைத் தர மேம்பாட்டிற்கும் வணிகமே அடிப்படையாக அமைகின்றது. வணிக முறையை



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



உள்நாட்டு வணிகம் எனவும் பிற நாடுகளுடன் மேற்கொண்ட வணிகம் எனவும் பிரித்துரைக்கலாம்.




தமிழர்கள் கடல் கடந்த நாடுகளுடன் மேற்கொண்ட வணிகத்தினை இலக்கியங்களும், கல்வெட்டுக்களும் புதைபொருள் சான்றுகளும் உறுதிப்படுத்துகின்றன. இன்று கிழக்கிந்தியத் தீவுகள் என்றும் இந்தோனேஷியத் தீவுகள் என்றும் பெயருள்ள சாவக நாட்டில் வணிகம் செய்தனர்.

> **"ஜாவா தீவு (யவதீபம்) சுமத்ரா, கலிருந்தன், லீலவெலி, மின்டனாயோ முதலான தீவுகளும் கணக்கற்ற சிறுசிறு தீவுகளும் சேர்ந்ததே தமிழர் கூறிய சாவகநாடு".**[5]

ஆகும்.

**வணிகம்**

மக்கள் வாழ்விற்கு உணவு போன்றே உடை, கலம், உறையுள், ஊர்தி முதலிய பொருள்களும், பொன், வெள்ளி முதலிய செல்வமும் இன்றியமையானதாக உள்ளன. பொருளாட்சித் துறையில் ஒரு நாட்டின் நல்வாழ்விற்கும் முன்னேற்றத்திற்கும் அடிப்படை உழவுத் தொழில். அதற்கடுத்து இயற்கையும் செயற்கையுமான விளைபொருள்களால் செய்யப்படும் பல்வேறு கைத்தொழில்கள் அடுத்ததாக நிலவழி நீர்வழி நடத்தப்பெறும் வணிகம்.




**நீர் வணிகம்**

கடல் வழி கப்பல் மூலம் வணிகம் செய்தனர்.

> **"பெரிய கடலின் நீர்ப்பரப்பைக் கிழித்துக் கொண்டு செல்லும் மாபெரும் கப்பல்கள் தமிழகத்தில் இருந்தன என்பது அகநானூற்றில் காணப்படுகிறது".**[6]

நாட்டின் மூன்று பக்கங்களிலும், கடல் சூழ்ந்தபடியால் தமிழர்கள் இயற்கையாகவே கடற்பிரயாணஞ் செய்வதிலும், கப்பலில் சென்று வணிகம் செய்வதிலும் தொன்று தொட்டு ஈடுபட்டிருந்தார்கள். கடலில் பல நாடுகளுக்குச் சென்று வணிகஞ் செய்து வந்துள்ளனர். வணிகம் தமிழர் பண்பாட்டு அடையாளமாகக் கருதப்படுகின்றது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



புதுச்சேரியில் நீலச்சாயம் தோய்த்த துணி புகழ்பெற்றது ஆகும். இதனை வியாபாரம் செய்தனர். வெளிநாட்டிற்கும் சென்று வணிகம் செய்தனர்.

**“என்ன வியாபாரம் இந்த முறை”**

**“நீலத்துணி, காலிகப் புடவை அம்மாச்சி”**

**“நல்ல தேக சௌக்கியத்துடனேதானே உன் மனுஷர் கடல் மேல் போய்த் திரும்பட்டும். கர்த்தரை நல்லபடியாக வேண்டிக்கொள்”[7]**

**கப்பலில் வணிகம் மேற்கொண்டனர்,**

**“கப்பல் வந்தால் நமக்கு லட்சுமி வருகிறது.**
**நமது வியாபாரம் தண்ணீரில் அன்றோ?”[8]**

**உழவுத் தொழில்**

உலகம் என்னும் தேருக்கு அச்சாணி போன்றவர்கள் உழவர்கள்.

**“உழுவார் உலகத்திற் காணிய அ தற்றா**
**தொழுவாரை யெல்லாம் பொறுத்து”.[9]**

பிற தொழில் செய்வாரை எல்லாம் தாங்குபவர்கள் உழவர்களே. உழவுத் தொழில் போரின் நிமித்தம் பின்னடையச் செய்தது. மக்கள் உயிர் பிழைக்க பாதுகாப்பான இடத்தை நோக்கிச் சென்றனர்.

**“வேளாண்மை ஒரு போகம், சுத்தமாக அழிந்தே போச்சு. செஞ்சி ஆத்துப் படுகையில் சித்திரக்கால, வாலான், சிறை மீட்டான், மணல்வாரி, செஞ்சம்பா, கருஞ்சூரை, சீரகச் சம்பா, முத்துவிளங்கி, மலைமுண்டன், பொற்பாளை, நெடுமூக்கன், அரிக்கிராவி, மூங்கில் சம்பா, கத்தூரி வாணன், காக்கைமுத்தன், வெள்ளை, புத்தன், கருங்குறுவை, புனுகுச் சம்பா போல பல மாதிரி நெல் பயிர்களை இன்னேரம் நாற்று விட்டிருக்கணும். எல்லாம் போச்சு. ஜனங்க, திரும்ப இவங்க அவங்க ஊருக்குப் போனா, எப்படி ஜீவிக்கும்? எதைத் தின்னும்? சோத்துக்குக் கஷ்டம் வந்துடும், ஏழைப்பட்ட ஜெனம், பஞ்சம், பொழைக்க நாடு நகரம்னு நகரும்”[10].**

**மருத்துவம்**

தமிழ் மருத்துவக்கலை சித்தர்களால் வளர்ந்தது. ஆதலால் அவை சித்த மருத்துவம் எனப் பெயர் பெற்றது. கட்டிகளையும், பிளவையைக் கரைக்கவும் ஒடிந்த எலும்பை ஒட்ட வைப்பதும், முதியவரை இளைஞனாக்குவதும், நூற்றுக்கணக்கான ஆண்டுகள் பழமை வாய்ந்தது சித்த மருத்துவம் ஆகும். *இன்பக்கேணி* என்ற நாவலில் மருத்துவசாலை இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

**“வேரோடு, ஒரு செடியைப் பிழிந்து கஷாயம் காய்ச்சிக் கொண்டிருந்தான்”[11].**

**நெசவுத் தொழில்**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



புதுச்சேரியில் நெசவுத் தொழில் சிறந்து விளங்கியது.

**"புதுச்சேரியில் புகழ்பெற்ற நீலச்சாயம் தோய்த்த துணி".**[12]

**பிற தொழில்கள்**

கப்பல்களில் சரக்குகளை ஏற்றிவிட, இறக்கிவிட வேலை இருந்தன.

> **"கப்பல் வருகிற நாளையிலே.. தொழில் இருக்கும். கட்டு மரங்களில் சென்று மூட்டைகளை இறக்கவும், ஏற்றவும், துணிகளைச் சிப்பம் போடவும், அதுகளை மடித்து ஒழுங்கு பெற வைப்பதும், ஊருக்குள் சென்று கப்பலுக்கு வேண்டிய சரக்குகளைச் சேரகம் பண்ணுகிற போது துணையாக வேலை செய்கிறதும் என்று பல வகையான வேலைகள் இருந்தன".**[13]

> **"ஒரு கூடைக்காரி கூடை நிறைய பச்சை வெள்ளரிக்காயை அடுக்கிக்கொண்டு கோட்டை வாசலுக்கு விற்பனைக்காகப் போய்க் கொண்டிருந்தாள்".**[14]

> **"ஒரு வயோதிகன், தவளே தவளே என்று கூவிக்கொண்டு தலையில் ஒரு கூடையைச் சுமந்தபடி வீதியில் சென்றான்".**[15]

வெள்ளைக்காரச் சிப்பாய்கள் பச்சைத் தவளை தின்றார்கள். அதனால் தவளைகளும் விற்பனையாகியுள்ளது.

**உணவு**

மனிதர்கள் உயிர் வாழ்வதற்கு வேண்டிய அத்தனை உணவுப் பொருட்களும் இயற்கை தருகின்ற நன்கொடையாகும். ஆடை இல்லாத மனிதன் அரை மனிதன் என்பதைப் போல் உணவில்லாத மனிதனும் உயிரற்ற மனிதன் என்று கூறலாம். ஆதி மனிதனுடைய முதற்தொழிலே உணவைத் தேடுவதாக அமைந்தது. காய் கனிகளையும், இறைச்சியையும் பசி தீர்க்க உணவாகப் பயன்படுத்திக் கொண்ட மனிதனே நாகரிகம் வளர வளர அதனைப் பண்படுத்திப் பல்வேறு உணவாகப் பகுத்து உண்ணக் கற்றுக்கொண்டான்.

தமிழர்கள் அறுவைமிக்க உணவுப் பொருட்களைச் சமைப்பதில் சிறந்தவர்களாவர். நிலத்தின் தன்மைக்கேற்ப உணவு முறை வேறுபடுகின்றது. சோறு, கஞ்சி, கூழ், பால், மோர் போன்றவைகளை உணவாக உண்டனர். மரக்கறி உணவோடு புலாலுணவும் பெரிதும் விரும்பி உண்ணப்பட்டது. பல வகையான மது வகைகளையும் விரும்பி உண்டனர்.

**உணவைக் குறிக்கும் சொற்கள்**

உணவு என்ற பொருளைக் குறிக்கும் சொற்களாக,

> **"உணா, வல்சி, உண்டி, ஓதனம், அசனம், பதம், இரை, ஆகாரம், உறை, ஊட்டம்".**[16]

எனப் பத்தும் பிங்கலந்தையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**பந்திப்பாய்**

உட்கார்ந்து உணவு உண்ண பந்திப்பாய் பயன்படுத்தப்பட்டுள்ளது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



"கூடத்தில் பந்திப்பாய் விரிக்கப்பட்டு, இரண்டு வாழை இலைகள் விரிக்கப்பட்டிருந்தன. அருகில் நீர்ச் சொம்புகள் எதிரே முக்காலியில், பெரிய பாத்திரங்களில் இட்லிகளும், அவைகளுக்கான துணைப் பதார்த்தங்களும் வைக்கப்பட்டிருந்தன.

மூன்று இட்லிகளைப் போட்டு, அதில் தேங்காய்த் துவையலும், கத்தரிக்காய்க் கொத்சும், ஒரு மூலையில் இரண்டு உரித்த மலை வாழைப் பழமும், ரூபாய் அகலத்துக்குச் சக்கரையும் என்று பரிமாறிவிட்டு, பண்டிதருக்கு இரண்டு வாழைப் பழங்களும், சர்க்கரையும் இரண்டு பெரிய பலாச்சுளைகளும், உலர்ந்த திராட்சை ஒரு பிடியும், சோற்று உருண்டை அளவுக்கு வெண்ணெய் உருண்டையும் பரிமாறினாள்".[17]

ராணியாரின் உணவுப் பதார்த்தங்கள்

"பூந்தி, வாழைக்காய் மற்றும் முட்டையால் ஆன கௌவாப்பு, துருக்க சமையல்காரர்களைக் கொண்டு தயாரான காபி எல்லாம் பரிமாறப்பட்டது. மதிய உணவுக்குப் புலவு, கோழி இறைச்சியுடன் சேர்த்துச் செய்யப்பட்ட துருக்கச் சமையலான கறிச்சோறு ஆட்டுத் தொடைக்கறி வறுவல், கத்திரிக்காய் வதக்கல், ஜவ்வரிசிப் பாயாசம், கடலைப் பயிறு வடை கறி மற்றும் மீன் குழம்பு, நெத்திலிக் கருவாடும் மீதி பாகல்காயும் சேர்த்து செய்யப்பட்ட கருவாட்டுப் பிரட்டல், ஆட்டிறைச்சியும் பச்சைப் பட்டாணி, பாதாம் பருப்பு, முந்திரிப் பருப்பு இதுகளை அடைத்துப் பொரிக்கப்பட்ட போளி, இஞ்சித் துவையல், நாரத்தங்காய் ஊறுகாய், ஆனை அடி அப்பளம் இதுகள் ஏற்பாடு பண்ணி வைக்கப்பட்டிருக்கிறது".[18]

பலகாரங்கள்

"அரிசிப் பிட்டு அதற்கான சர்க்கரை, உலை அப்பம், அதற்கான தேங்காய்ப்பால், இடி ஆப்பம், அதற்கான தேங்காய்க்கீறல், சர்க்கரை மற்றும் ஆவின் பால் மற்றும் தொட்டுக்கொள்ள வத்தல் குழம்பு, தேங்காய்த் துவையல், மாம்பழம் பிழியல், பேயன்பழம் தேனில் துவைத்தது காரபடை இனிப்புப் போளி".[19]

"இனிப்புத் தேங்குழல், அப்பம், பணியாரம்"[20]

"சுகியன்"[21]

"ஏகப்பட்ட சித்ரான்னங்கள் தேங்காய்ப் பூவும் நெய்யும் சேர்த்து செய்த இனிப்புக் கட்டி, நெய்யில் பொரித்த கார முந்திரிப் பயறுகள், வெல்லமும், பருப்பும் சேர்த்துச் செய்த இனிப்படை, மிளகு வடை, தேங்காய்ச் சாதம், எலுமிச்சை சாதம், சர்க்கரை ஜீராவில் ஊற வைத்த மலைப்பழத் துண்டுகள்".[22]



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com

**பானகம்**

கோடையின் உஷ்ணத்தைத் தவிர்க்க பானகம் அருந்தினர்.

> **"வெள்ளரிப் பழத்தில் வெல்லச் சர்க்கரையைப் போட்டு, பானை ஜலத்தில் கரைத்துப் பானகம்".[23]**
>
> **"பனை வெல்லம், சுக்கு, எலுமிச்சை சேர்த்து செய்யப்பட்ட பானகம்"[24]**
>
> **"பால் கலவாத பிரெஞ்ச் கபே"[25]**
>
> **"பானகம், பனைவெல்லம், எலுமிச்சை, விளாவேர், வெள்ளரி விதை எல்லாம் சேர்ந்து இனித்துக் கிடந்தது"[26]**
>
> **"கருப்பட்டி சுக்குப் பானகம்"[27]**
>
> **"ஷர்பத்"[28]**
>
> **"சீனாக் கல்கண்டும், பனை வெல்லமும், கொஞ்சம் குங்குமப்பூ, கொஞ்சம் கிராம்புத் தூள், கொஞ்சம் ஏலம், இரண்டு இழைப்பு இழைத்த கடுக்காய் மசியல், துளி கற்பூரம் ஆகியவை போட்டு சுண்டக் காய்ச்சிய பசும்பால், பாயாசமாகிப் போய்ப் பருக மிகுந்த ருசியாக இருந்தது".[29]**
>
> **"இளநீர்"[30]**

**ஆடை**

ஆதி மனிதன் விலங்குகளிடமிருந்தும் பிற உயிரிகளிடமிருந்தும் தன்னை வேறுபடுத்தி அறிய இயலாத காலத்திலேயே ஆடை உடுத்தத் தொடங்கிவிட்டான். மழை, வெப்பம், குளிர் போன்றவற்றிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள தழையால் ஆன உடை, மரவுரி, தோலாடை போன்றவற்றைப் பயன்படுத்தினர். மனிதனின் அடிப்படைத் தேவைகளில் ஒன்றாக ஆடை திகழ்கின்றது.

**ஆடையைக் குறிக்கும் சொற்கள்**

ஆடை அல்லது உடையைக் குறிக்க சங்க இலக்கியம் பல்வேறு சொற்களைக் குறிக்கின்றது. இவை ஆடை தயாரிப்பு, அணியும் விதம், உடையின் தன்மைகள் ஆகியவற்றை உள்ளடக்கியனவாக உள்ளன.

> **"உடை, தழை, துகில், கலிங்கம், அறுவை, சிதார், ஆடை, உடுக்கை, கச்சு, ஈரணி, தானை, போர்வை, காழகம், கச்சம், கச்சை, வம்பு, மடி, பட்டு, சீரை, படம், படாம், பூங்கரை, நீலம், உத்தரீயம், கம்பலம், கசவம், தூசு, மழவை, சிதவல், வார், மெய்ப்பை, துகின்மடி, மெய்ம்மறை, மெய்யாப்பு, வாலிது, வெளிது, புட்டகம், நூல், பக்குடுக்கை"[31]**

போன்றன.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



மானுடம் வெல்லும் நாவலில் இஸ்லாமிய அரசியின் ஆடை குறிக்கப்பட்டு உள்ளது.

> **"அரசி, கண்கள் மட்டும் தெரிய முகம் மறைத்திருந்தாள். உடம்பை நன்கு போர்த்திய அங்கியும், அதன் மேல் பொற்சரிகை வேய்ந்த கரும்பட்டு மேல் ஆடையும் போத்தியிருந்தாள்"[32].**

என ஆனந்தரங்கப்பிள்ளை அறிமுகப்படுத்தப்படுகிறார்.

**அணிகலன்கள்**

தமிழ் மக்கள் ஆரம்ப காலத்தில் மலர்களையும் செடி, கொடிகளையும் ஆபரணமாக அணிந்திருந்தனர். காலம் செல்லச் செல்ல உலோகங்களால் ஆன அணிகலன்களை அணிந்தனர்.

முத்து, பவளம், சங்கு, வெள்ளி, தங்கம் போன்றவற்றில் அணிகலன்கள் செய்து அணிந்தனர். அந்த அணிகலன்களைப் பூண், இழை, கலம் என்று பல பெயர்களால் அழைத்தனர்.

நெடுநல்வாடையில் மகளிர் சங்கு வளையலை அணிந்திருந்த செய்தி இடம்பெறுகிறது. இதனை,

> **"வெள்ளி வள்ளி வீங்க இறைப் பணைத்தோள்"[34]**

என்ற வரியானது குறிப்பிடுகின்றது.

கழுத்தில் தொடங்கும் அணிகளாக முத்துமாலை, பொன்னரி, மாலை போன்றவை கூறப்படுகின்றன. கரிகால் வளவன் பாடினிக்கு முத்துக்களோடு பொருந்திய பொன்னால் ஆகிய மாலையைக் கொடுத்தான் என பொருநராற்றுப்படை (161-162) கூறுகின்றது.

மகளிர் வளையல்கள் அன்று முதல் இன்றுவரை அணிந்து வருகின்றனர். வளையலில் சங்கினால் ஆகிய வளையலைப் பாண்டிமாதேவி அணிந்திருந்தாள். இதனை,

> **"பொலந்தொடி தின்ற மயிர்வார் முன்கை**
> **வளையொடு கடிகை நூல்யாத்து"[35]**

என்ற வரிகள் மூலம் அறிய முடிகின்றது.

ஆண்களும், பெண்களும் அணிகலன்களை விரும்பினர். தங்க அணிகளும், வெள்ளி அணிகளும், சங்கு அணிகளும் இருந்தன. தொய்யகம், புல்லகம், வலம்புரி போன்றவற்றையும் காதுக்குப் பூங்குலை, கழுத்துக்கு மாலை, மார்புக்குக் கற்கள் பதித்த மார்பணி, தோள்வாளைகள், மேகலை, தொடிகள், சிலம்புகள், கொலுசு போன்றவற்றைப் பெண்கள் அணிந்தனர். குண்டலம் ஆண்களின் முக்கிய அணியாகியது.

தனி மனிதனுக்கு அங்கீகாரத்தையும் அடையாளத்தையும் உண்டு பண்ணுபவை ஆடைகளும் ஆபரணங்களுமாகும். இவை மக்களின் வாழ்க்கைத்தரம், பொருளாதார வளம், பண்பாடு, கலைத்திறன் ஆகியவற்றை வெளிக்காட்டும் முகமாக அமைகின்றன.

பிரபஞ்சன் நாவல்களில் அணிகலன்கள் இடம்பெறுகின்றன.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



**“வைரம் பதித்த கணையாழிகள் இரண்டு, காதில் அணியும் கா்ண சூரிகைகள் நாலு, கையில் அணியும் கங்கன வளையல்கள் ஆறு இருந்தன”[36]**

திருச்சி அரசி இதனை ஆனந்தரங்கப்பிள்ளையின் மனைவியிடம் கொடுத்தார். துரை துய்மா புதுச்சேரியை விட்டு கிளம்பும்பொதும் ரங்கப்பிள்ளை.

**“மரகதம் இழைத்த கண்டிகையைப் பரிசாக”[37] அளித்தார்.**

**போக்குவரத்து சாதனங்கள்**

மனித செயற்பாட்டில் ஊர்திகளின் பயன்பாடு இன்றியமையாதது. பொருட்களை ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குக் கொண்டு செல்வதற்கும், மக்கள் இடம்பெயர்ந்து செல்வதற்கும் ஊர்திகள் உதவின.




என இரு வகைப்படுகின்றன. தங்கள் இருப்பிடங்களில் வைத்திருந்த விலங்குகளை ஊர்தியாகப் பயன்படுத்திக் கொள்வது இயற்கை ஊர்திகள் எனப்பட்டன.

பிரபஞ்சனின் *காந்த வண்டி* என்ற சிறுகதையில் மாடுகளை வண்டியில் கட்டி ஊர்தியாகப் பயன்படுத்தினதைக் காணமுடிகின்றது.

**“வண்டி மாடுகளை அவிழ்த்து வைக்கோல் வைத்து தண்ணீர் காட்டினார்கள்”[38]**

என கூறப்படுகின்றது.




மனிதன் தன் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளும் முகமாக முயற்சியாலும், அறிவுத் திறனாலும் உருவாக்கிக் கொள்பவை செயற்கை ஊர்திகள் எனப்படும். நிலவழி சாதனங்களாக கார், ரயில் போன்ற ஊர்திகள் அறியக் கிடைக்கின்றன.

நீர் வழிப் போக்குவரத்து சாதனங்களாக, கட்டுமரம், படகு, கப்பல் போன்றவை அறியப்படுகின்றன.

**“துய்மா படகில் ஏறி அமர்ந்தார்”**

**“படகு நகரத் தொடங்கியது. கப்பலை அனுகி, துய்மா அதில் ஏறிக்கொள்ளும்மட்டும் வழி அனுப்ப வந்தவர்கள் கரையிலேயே நின்று கொண்டிருந்தார்கள் கப்பல் பாய் எடுத்து ஓடத் தொடங்கிற்று”[39]**


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com


**பல்லக்கு**

உயர் அதிகாரிகள் பல்லக்கில் அழைத்துச் செல்லப்பட்டனர். மனிதர்கள் பல்லக்குத் தூக்கிகளாக இருந்தனர்.

> **"பல்லக்கு மேல் எழுந்தது. முன்பக்கத்து தூக்கிகள் இருவரில் முதல்வன் ஏழு மலையான் தாங்கு என்று கூவினான். அடுத்திருந்த இரண்டாமவன் வரதராசா தாங்கு என்று குரல் கொடுத்தான். பின்னால் இருந்த இருவரில் ஒருவன் கிருஷ்ணசாமி தாங்கு என்று கத்தினான். நாலாமவன் ராமமூர்த்தி தாங்கு என்று முணுமுணுத்தான்"[40]**

**வில் வண்டிகள்**

> **"காளை பூட்டிய... வில்வண்டிகள்..."[41]**

அக்காலத்தில் புதுச்சேரியில் இருந்துள்ளன.

**சைக்கிள்**

பிரான்சிலிருந்து வரவழைக்கப்பட்ட **"சைக்கிளை"[42]** மக்கள் பெருமையுடன் பயன்படுத்தியுள்ளனர்.

**புதுச்சேரி வீதிகள்**

> **"பெண்கள் எடுக்கும் வகிடு மாதிரி நேராகவும், நேர்த்தியாகவும் அமைந்திருந்தன புதுச்சேரிப் பட்டணத்து வீதிகள்"[43]**

**வீடுகள்**

> **"ஒழுங்கான பல் வரிசை மாதிரி அமைந்திருந்தன வீடுகள்"[44]**

வீட்டின் தரையிலும், சுவர்களிலும் பெண்கள் மாக்கோலங்களிட்டு அழகுறச் செய்துள்ளனர்.

> **"தரையிலும் சுவர்களிலும் வரையப்பட்டிருந்த மாக்கோலங்களை வழி அகல ரசித்துப் பார்த்தாள். தேர் ஒன்று கிளம்பத் தயாராகி நின்றிருப்பது போன்ற கோலம். பூக்கள் மிகுந்த கானகம் என்ற தோற்றத்தை ஏற்படுத்தும் பூக்காட்டுக் கோலம். பச்சைக் கிளி ஒன்று பழம் கொத்துவது மாதிரி ஒரு கோலம். புலியை மறவன் ஒருவன் வேட்டையாடுவது போன்ற ஒரு கோலம் என பல தரப்பட்ட கோலங்கள் வரையப்பட்டிருந்தன".[45]**

**அறைகள்**

> **"மஸ்லீன், வெள்ளை சிவப்புத் துணிகளால் பூ வேலையுடன் தொங்கவிடப்பட்டு அலங்காரமாய் இருந்த அறைக்குள். ."[46]**
>
> **"பணப்பெட்டி அறை..."[47]**
>
> **"சமையல் உள்ளுக்குள்"[48]**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



**"சூடன், சாம்பிராணிப் புகையாலும், பன்னீர்த் தெளிப்பானாலும் மணத்தது"**[49]

அறைகள் வசதிக்கேற்ப தனியாக ஒதுக்கப்பட்டு உபயோகித்துள்ளனர்.

**சாமான்கள்**

உட்கார்ந்து உணவு உண்ண பந்திப்பாய் இருந்துள்ளது.

**"பந்திப்பாய்"**[50]

**"நீர்ச்சொம்புகள்"**[51]

**"முக்காலி"**[52]

**"அடுப்பு"**[53]

**"ரேழி விளக்கு"**[54]

**"லாந்தர் விளக்கு"**[55]

**"ஆளுயரக் கடிகாரம்"**[56]

இவ்வாறாக புதுச்சேரி மக்களின் பொருள் சார் பண்பாட்டினை பிரபஞ்சனின் கதைகளின் வாயிலாக அறிய முடிகின்றது.

**சான்றெண் விளக்கங்கள்**

1. பேரா. கார்த்திகேசு சிவதம்பி, தமிழ்ச் சமுதாயமும் பண்பாட்டின் மீள் கண்டுபிடிப்பும், ப.2.
2. தே. லூர்து. நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள், ப.357.
3. க.ப.அறவாணன், தமிழர் மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள், ப.54.
4. டாக்டர் அ.க.பெருமாள், நாட்டுப்புறவியல் சிந்தனைகள், ப.200.
5. மே.து.ராசுக்குமார். ரா.வசந்தாள் (ப.ஆ.) மயிலை சீனி வேங்கடசாமி தொகுப்பு நூல்கள் (தொகுப்பு 3), ப.166.
6. புலியூர்கேசிகன், அகநானூறு, ப.246.
7. பிரபஞ்சன், வானம் வசப்படும், ப.264.
8. மேலது, ப.249.
9. குறள், 1032.
10. பிரபஞ்சன், மானுடம் வெல்லும், ப.243.
11. பிரபஞ்சன், இன்பக்கேணி, ப.24.
12. பிரபஞ்சன், வானம் வசப்படும், ப.58
13. மேலது, ப.268.
14. பிரபஞ்சன், மானுடம் வெல்லும், ப.283.
15. மேலது, ப.304.
16. சே.நமசிவாயம், தமிழர் உணவு, ப.29.
17. பிரபஞ்சன், மானுடம் வெல்லும், ப.174.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



18. மேலது, பக்.255-256.
19. மேலது, ப.265.
20. பிரபஞ்சன், இன்பக்கேணி, ப.85.
21. மேலது, ப.19.
22. பிரபஞ்சன், மானுடம் வெல்லும், ப.389.
23. மேலது, ப.180.
24. மேலது, ப.299.
25. பிரபஞ்சன், வானம் வசப்படும், ப.21.
26. பிரபஞ்சன், இன்பக்கேணி, ப.33.
27. பிரபஞ்சன், கண்ணீரால் காப்போம், ப.192.
28. பிரபஞ்சன், மானுடம் வெல்லும், ப.274.
29. பிரபஞ்சன், வானம் வசப்படும், ப.56.
30. பிரபஞ்சன், இன்பக்கேணி, ப.139.
31. கே.பகவதி, தமிழர் ஆடைகள், பக்.20-21.
32. பிரபஞ்சன், மானுடம் வெல்லும், ப. 256-257.
33. பிரபஞ்சன், வானம் வசப்படும், ப.13.
34. ச.வெ.சுப்பிரமணியன், சங்க இலக்கியம் பத்துப்பாட்டு, பா.வ.33.
35. முனைவர் மோகன், மு.கூ.நூ.பா.வ. 141-142.
36. பிரபஞ்சன், மானுடம் வெல்லும், ப.390.
37. மேலது, ப.398.
38. பிரபஞ்சன், தபால்காரர் பெண்டாட்டி (சி.தொ.), ப.192.
39. பிரபஞ்சன், மானுடம் வெல்லும், ப.400.
40. பிரபஞ்சன், வானம் வசப்படும், ப.15.
41. பிரபஞ்சன்,மானுடம் வெல்லும், ப.86.
42. பிரபஞ்சன், அப்பாவின் வேஷ்டி (சி.தொ.), ப.13.
43. பிரபஞ்சன், வானம் வசப்படும், ப.19.
44. மேலது., ப.19.
45. பிரபஞ்சன், மானுடம் வெல்லும், ப.388.
46. பிரபஞ்சன், வானம் வசப்படும், ப.308.
47. மேலது, ப.516.
48. பிரபஞ்சன், மானுடம் வெல்லும், ப.388.
49. மேலது., ப.387.
50. மேலது., ப.173.


International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



# பெண்ணியமும், பெண்ணிய எழுத்தாளர்களின் படைப்பாளுமையும்

**இர.மணிகண்டன்,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
என்.பி.ஆர். கலை (ம) அறிவியல் கல்லூரி,
நத்தம், திண்டுக்கல் மாவட்டம்.

தற்கால இலக்கியம் பெண்களை உயர்த்தும் விதமாகவே பல கவிஞர்களால் எழுதப்படுகின்றன எனவும், பெண்கள் இச்சமுதாயத்தில் ஆண்களுக்கு நிகராகத் திகழவும், பெண்ணடிமைத் தன்மையிலிருந்து நீங்கவும், அதற்கான முயற்சியையும் செய்வதைக் காணலாகிறது. பெண்களின் முழு எதிர்பார்ப்பு எதுவெனில், விடுதலை, உரிமை, சுயசிந்தனை, கல்வி, சொத்து போன்றவைகளாகும். 20ம் நூற்றாண்டுக் கவிஞரான பாரதி காணவிரும்பிய புதுமைப்பெண்களைப் போல் இந்நாட்டில் உலா வரவும், எதிர்கால உலகம் பெண்களின் வாக்கினிலேயே இருக்கவேண்டும் என்பதையும், கல்வித்துறை, அறிவியல் துறை, அரசியல் துறை, வணிகவியல் துறை, ஆராய்ச்சியல் துறை, மருத்துவத்துறை, சட்டத்துறை, காவல்த்துறை போன்ற பணிகளில் ஏராளமான பெண்கள் கால்பதிக்க எண்ணுவதையும், முன்னைய அடிமைத்தனமும், பிரிவினையையும் உடைத்தெறியும் விதமாகத் தற்கால பெண்கள் முனைகின்றனர் என்பதைப் பற்றி இக்கட்டுரையின் மூலம் அறிய உள்ளோம்.

**பெண்ணியம் - பொருள்:**

ஆங்கிலத்திலுள்ள ‘Feminism’ என்ற சொல்லுக்கு இணையாகப் ‘பெண்ணியம்’ என்னும் சொல் வழங்கப்பட்டு வருகிறது. ‘பெமினிசம்’ என்ற சொல்லுக்குத் தமிழில் பெண்ணியம், பெண்ணிலை வாதம், பெண்ணிலை ஏற்பு, மகளிரியல், பெண்ணலக் கொள்கை என்று பல சொற்கள் வழங்கப்படுகின்றன. **(இரா.ரெங்கம்மாள் மற்றும் சி.வாசுகி, ‘பெண்ணியம்’ அணுகுமுறைகளும், இலக்கியப் பண்பாடும், ப.7)** என்று பெமினிசம் என்ற சொல்லுக்குப் பல சொற்கள் இருப்பதைப் பிரேமா குறிப்பிடுகின்றார்.

பெண்ணியம் என்பது பெண்களின் எல்லாச் சொற்களைப் புரிந்து கொண்டு, அவற்றை நீக்க முயல்வதாகும். அதன் மூலம் உலகளவில் அரசியலிலும், பண்பாட்டிலும், பொருளாதாரத்திலும், ஆன்மீகத்திலும் பெருத்த மாற்றத்தினை ஏற்படுத்த முடியும். **(மேலது, ப.132)** என்கிறார் சார்லட் பஞ்சு.

அடக்கம், பொறுமை, தியாகம், பரநலம், இரக்கம், அழகு, ஒப்புரவு, தொண்டு முதலியன அமைந்த ஒன்றே பெண்மை எனப்படும். மண், நீர், காற்று, ஒளி, முதலியன சேர்ந்து ஒரு விதை மரம் ஆவது போல, அடக்கம் முதலிய குணங்கள் சேர்ந்தது தான் பெண்மை ஆகின்றன எனவும், சிறு சிறு மழைத்துளிகள் கலந்து பரந்த நீர் நிலை என பெயர் பெறுதல் போலவும், சிறு சிறு கற்கள் கலந்து மலை என்னும் பெயர் பெறுதல் போலவும், அடக்கம் முதலிய குணங்கள் ஒன்றி, அவை பெண்மை என பெயர் பெற்றன எனலாம்.

**பெண்ணியத்தின் பண்புகள் :**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



பெண்மைக்கு என தொல்காப்பியர் இலக்கணம் வகுத்துள்ளார். அவை,

**'அச்சமும் நாணமும் மடனும் முந்துறுதல்**
**நிச்சமும் பெண்பாற் குரிய என்ப". (தொல்.களவு.96)**

என்ற நூற்பாவில், அச்சம், நாணம், பேதைமை இம்மூன்றும் நாள் தோறும் முன்னிலையாதல் பெண்டிற்கு இயல்பு எனவும்,

**"காமத் திணையிற் கண்நின்று வரூஉம்**
**நாணும் மடனும் பெண்மைய ஆகலின்**
**குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை**
**நெறிப்படவாரா அவள்வயின் ஆன". (தொல்.களவு.1054)**

என்ற நூற்பாவில், நாணமும், இளமை பண்பாகிய அடக்கத்தைக் காட்டும், மடமும் பெண்மைக்கே உரியது என்கிறார். மேலும்,

**"காமம் சொல்லா நாட்டம் இன்மையின்**
**ஏமுற இரண்டும் உளஎன மொழிப". (தொல்.களவு.1055)**

என்ற வரியிலும், ஒரு பெண்ணின் காம வேட்கையை அவளது கண்களே சொல்லிவிடும். அங்ஙனம் குறிப்புணர்த்தாத கண்களே இல்லையாதலால், அவளுக்குப் பாதுகாப்பாக முன்பு கூறிய நாணமும், மடமும் உள்ளது என்கிறார் தொல்காப்பியர்.

மகளிருக்கு இயற்கையாக அமைந்துள்ள பண்புகள் அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்று இறையனார் அகப்பொருள் கூறுகின்றது. இத்தகைய இலக்கண நூல்களில் பெண்ணிய கருத்துக்களை மையமாக கொண்டு, தற்கால கவிஞரான **பாலபாரதி** கூறுவது,

பண்பாட்டுக் கட்டுபாடுகளைப் பெண்ணினத்தின் மீது திணிப்பதாகவே பெண்ணியம் கருதப்படுகின்றது. இந்தப்பண்பாட்டு அடக்குமுறையை, முழு வேகத்துடன் நேரடியாக உடைத்தெறிக்கின்றது. இதை, கவிஞர் பாலபாரதி **'சில பொய்களும், சில உண்மைகளும்'** என்ற கவிதை நூலில் வெளிப்படுகிறார்.

**அச்சம்**
**மடம்**
**நாணம்**
**பயிர்ப்பு**
**போர்க்களத்தில் நிற்கும்**
**எனக்கு எதற்கு?**

என்ற கேள்வி எழுப்பி, பெண்மைக்கான பண்புகளைத் தனது கவிதையின் மூலம் உடைத்தெறிகின்றார்.

'பெண்' என்பது பெருமைமிக்க தன்மை உடையது என்று வள்ளுவரால் சொல்லப்பட்டுள்ளது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**"பண்டறியேன் கூற்திறன் பதனை இனியறிந்தேன்**

**பெண்டகையால் பேரமர்க் கட்டு". (குறள்.1083)**

என்ற குறளில், எமன் என்று சொல்லப்படுவதை முன்பே நான் அறிந்ததில்லை, அதை இப்பொழுது அறிந்துகொண்டேன். அது பெண் தன்மையுடன் போர் செய்யும் கண்களை உடையது என்றும்,

**"தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற**

**சொற்காத்துச் சோர்விலாள் பெண் ". (குறள்.56)**

என்ற குறளில், கற்பில் தவறாமல், தன்னைக் காத்து, தம் புகழையும் காப்பாற்றி, எந்நேரமும் சோர்வு இல்லாமல் இருப்பவளே சிறந்த பெண் என்கிறார் வள்ளுவர்.

**பாரதியார் - பெண்ணியம் :**

அச்சம், மடம், நாணம், பயிர்ப்புப் ஆகிய நான்கும் பெண்களுக்கு இருக்க வேண்டிய இயற்கைப் பண்புகள் என மகாகவி பாரதியார் தம் பாடலில் பின்வருமாறு கூறுகிறார்.

**"நாணமும் அச்சமும் நாய்கட்கு வேண்டுமாம்**

**ஞான நல்லறம் வீர, சுதந்திரம்**

**பேணுநற்குடிப் பெண்ணின் குணங்களாம்**

**பெண்மைத் தெய்வத்தின் பேச்சுக்கள் கேட்டிரோ". (பாரதி.பாடல்.1868)**

என்றும், நிலத்தின் தன்மை பயிர்க்கு உளதாகும். குலத்தின் தன்மை பெண்ணின் கற்பு இயல்பாகும் என்கிறார். மேலும்,

**"நிமிர்ந்த நன்னடைநேர்கொண்ட பார்வையும்**

**நிலத்தில் யார்க்குமஞ் சாத நெறிகளும்**

**திமிர்ந்த ஞானச் செருக்கு மிருப்பதால்**

**செம்மை மாதர் திறம்புவதில்லையாம்". (பாரதி.பாடல்.1871)**

என்ற வரியில், பாரதியார் பெண்ணிற்கே உரியது என்று கூறுவதில், பெண்கள் நிமிர்ந்த நடையோடும், நேரான பார்வையோடும், நிலத்தில் எவருக்கும் அஞ்சாமலும், திமிருடன் காணப்படும் பெண்களையும், அகந்தையுடன் காணப்படும் பெண்களையும், நேர்மையுடன் காணப்படும் பெண்களையும் நல்ல குடியில் பிறந்தோர் என்கிறார்.

**திரு.வி.கா - பெண்ணியம் :**

பொறுமைக்குப் பொருளாகிய பெண்ணைக் கிறிஸ்து என்றும், காந்தி என்றும் திரு.வி.கா போற்றுகின்றார். பெண்கள் தங்களுக்காக வாழாமல், பிறருக்காக பெரும்பாலும் வாழ்கின்றனர் எனவும், இத்தகைய குணம் அவர்களிடம் இயற்கையாக அமைந்தது என்கிறார். மேலும், பெண் அழகை இறைமை அழகு எனவும், அரக்கத் தன்மையை உடைய ஆண்களை ஒழிக்கப் பெண் தன்மை தேவை என்றும், பெண்ணியல்பு பெறாது கடவுள் நிலை பெறல் இயலாது என்கிறார். ஞானநிலையில் எவரும் பெண்மையாகும் ஒரு நிலையுண்டு. அதாவது



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 
Available at: www.ijtlls.com

அழுக்காறு – அவா – வெகுளி முதலியன கழிந்து, பொறுமை – அருள் - முதலியன படியும் ஒரு நிலையே பெண் என்கிறார். அத்துடன் பெண்மை என்று சொல்வதில் கல்வியைக் கலைமகள் என்றும், திருவைத் திருமகள் என்றும், ஞானத்தைப் பரை என்றும் நம் நாட்டார் கொண்டுள்ளனர். பெண்ணை கன்னி, வனதேவதை என்று வாழ்த்துவதும், பல்லுயிர்களைத் தாங்கும் நாட்டைத் தாய் என்றும், எல்லாவற்றிற்கும் மேலாக விளங்கும் கடவுளையும் பெண்ணாகவே பெரிதும் போற்றுகின்றனர் என்று தனது **'பெண்ணின் பெருமை'** என்ற நூலில் **திரு.வி.கலியாண சுந்தரனார்** கூறியுள்ளார்.

**இரட்டைக் காப்பியமும் - பெண்ணியமும் :**

கி.பி 2ம் நூற்றாண்டில் பெண்ணியத்தை மையமிட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் சமணக்காப்பியம் எழுதப்பட்டுள்ளது. இக்காப்பியங்களில் ஒன்றான சிலப்பதிகாரத்தில், தலைமைப் பாத்திரமான கண்ணகியைக் கற்புக்கரசியாக இளங்கோவடிகள் போற்றப்படுகின்றார். இக்காப்பியத்தில் துணைப்பாத்திரமான மாதவியைத் தேவதாசி என்று படித்தவர்களும், படிக்காதவர்களும் கூறிவருகின்றனர் என்ற கருத்திற்கு முரண்பாடாக, மாதவியைக் கோவலனுக்காகவே படைக்கப்பட்ட கற்புக்கரசி என்று கூற விழைகின்றேன்.

*மணிமேகலை* என்னும் காப்பியத்தின் தலைமைப் பாத்திரமான மணிமேகலையை, உதயணன் என்னும் மன்னன் காதல் கொள்ள விழைகின்றான். அதற்கு மணிமேகலை இடம் தராது, துறவறம் மேற்க்கொள்கின்றாள். இதற்குக் காரணம், தனது தாயான மாதாவியை மக்கள் கூறும் தேவதாசி என்ற வார்த்தைக்கு இடம் தராது, தான் துறவறம் மேற்கொண்டு இறைத்தன்மை அடைந்தது பெண்ணின் பெருமைக்குப் பறைசாற்றும் விதமாக, மணிமேகலை என்னும் பாத்திரம் அமையப்பெற்றுள்ளது எனலாம்.

**பெண்மை நெறி:**

பெண்மைக்குக் காவல் காக்க ஆண் தேவையில்லை என்பதை வள்ளுவர் பின்வருமாறு கூறுகிறார்.

> **"சிறைக்காக்கும் காப்பு எவன் செய்யும் மகளிர்**
> **நிறைகாக்கும் காப்பே தலை". (குறள்.57)**

என்ற வரியில், பெண்களை ஆண்கள் வீட்டில் வைத்து காவல் முதலானவற்றால் காக்கும் காவலால் என்ன பயனைச் செய்யும்? பொதுவாகப் பெண்கள் தம் நெஞ்சைக் கற்பு நெறியில் நிறுத்திக் காக்கும் காவலே தலைச் சிறந்தது என்றுரைக்கிறார் வள்ளுவர். இதைப்போன்றே அவ்வையாரும் பின்வருமாறு,

தையற் சொல் கேளேல் என்பதும், 'தாயிற் சிறந்ததொரு கோவிலும் இல்லை"(கொன்றை வேந்தன்.38), 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" (கொன்றை வேந்தன்.1), என்று பெண்மையைப் போற்றக்கூடியதாகும். இதில் தையற் என்னும் சொல் மனைவியைக் குறிப்பது. தையற் சொல் கேளேல் என்பதைப் புறவாழ்க்கைக்கான காரியங்களில் நீ உன் அறிவின் துணைக்கொண்டு செயல்படு என்பதாகும். மனைக்கு அரசி



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



மனையாட்டி! அதனால், குடும்பக் காரியங்களில் மனையாளைக் குற்றம் ஒன்றும் சொல்ல வேண்டாம் என்கிறார். துறவைக் கண்டிக்கும் போது பெண்ணினத்தை வெறுக்கும் பேதைமையைக் கடிந்து, இல்லமறமல்லது நல்லறமன்று என்பதும், மெல்லினல்லாள் தோள்சேர் என்றும் வாழ்வியலைக் சிந்தித்துக் கூறியுள்ளார். உண்டி சுருங்குதல் பெண்டிர்க்கு அழகு, மீதூண் விரும்பேல், காவல் தானே பாவையர்க்கு அழகு என்றும் **அவ்வையார்** தனது நூல்களில் கூறியுள்ளார்.

**பெண்ணின் உரிமை:**

உரிமை என்பது எல்லாருக்கும் பொதுவானது. அதாவது, வானத்தில் மேகம் தவழ்வது போலவும், கடலில் அலை எழுவது போலவும், பறவைகள் அழகிய சிறகை வீசிப் பறப்பது போலவும், பெண் தனது உள்ளத்தில் எழும், விரும்பும் வழி நடக்கும் உரிமை உடையவளாக வேண்டும். அவ்வுரிமையைச் சிறைப்படுத்துதல் பெரும் பாவம். பெண் அடிமை உணர்வுடன் காணப்பட்டால், அவற்றில் வயிற்றில் பிறக்கும் குழந்தைகளின் உரிமையும் தடுக்கப்படுகிறது. பெண்ணுரிமை பிடுங்கப்பட்ட நாடும், உரிமை இழந்த நாடாக கருதப்படும். பெண்ணுரிமையைக் குலைப்பதைப் போன்ற அறியாமை வேறொன்றுமில்லை. பெண்ணுரிமையைக் கெடுத்தல், பின்வரும் சந்ததியின் உயர்நிலையைக் கெடுப்பதாகும். எக்காரணத்திலும் பெண்ணுரிமைக்குக் கேடு விழைவித்தல் கூடாது; கூடாது: என்று **திரு.வி.க** தனது **பெண்ணின் பெருமை** என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். இதைப் போன்றே பாரதியாரும் பெண்ணுரிமையைப் பேச தவறியதில்லை,

**"மாதர் தம்மை இழிவு செய்யும்**
**மடமையைக் கொளுத்துவோம்**
**வைய வாழ்வு தன்னில் எந்த**
**வகையினும் நமக்குளே**
**தாதர் என்ற நிலைமை மாறி**
**ஆண்களோடு பெண்களும்**
**சரிநிகர் சமானமாக**
**வாழ்வம் இந்த நாட்டிலே!". (விடுதலை)**

என்ற கவிதையின் மூலம் பாரதியார், பெண்களின் உரிமையைத் தடுக்கும் சோம்பேறிகளைத் தீயிலிட்டு எரிப்போம் என்கிறார். மேலும், ஆணும் பெண்ணும் சமத்துவம் என்னும் நோக்கோடு 'சரி, நிகர், சமானம்' என்ற மூன்று சொற்களின் வழி, பெண்ணின் உரிமையை நிலைநாட்டுகின்றார் பாரதியார். மேலும், எல்லாவற்றிலும் முதன்மைப் பெற்று விளங்கும் பெண்ணிற்கு உரிமை வழங்க வேண்டுமா? வேண்டாவா? என்னும் ஆராய்ச்சியும், இவ்வுலகில் சில இடங்களில் நடைபெற்று வருகிறது.

உரிமை என்பது ஒருவர் கொடுப்பதுமன்று; மற்றொருவர் வாங்குவதுமன்று. அ∴து எவரிடத்தும் எல்லாவிடத்தும் இயல்பாய் அமைந்து கிடப்பது. சிலர் தமக்குள்ள வன்மையால்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



பிறர் உரிமையை மறித்தும், பறித்தும் வருகின்றனர். ஒருவர் உரிமைக்கு மற்றொருவர் கேடு சூழ்வதினும் கொடிய பாவம் பிரிதொன்று இருக்கிறது என்று தெரியவில்லை. உரிமையாவது அனைத்து உயிர்களுக்கும் கடவுளால் அளிக்கப்பட்ட ஒரு பெரும் இயற்கைக் கொடையாகும். தன்னைப் போலவே உயிர்களும் எவ்விதக் கட்டுப்பாடுமின்றி உலகில் வாழ வேண்டும் என்பதே கடவுளின் நோக்கமாகும். அவ்வருள் நோக்கத்திற்கு மாறுபட்டு பிறர் உரிமையைத் தடுப்பவர், கடவுளிடம் உண்மையில் உறுதி உடையவராக கருதப்படமாட்டார். எவ்வுயிர் உரிமைக்கும் எவர் கேடு நிகழ்த்தலாகாது என்பது பொது அறமாகும். இவ்வறம் நீங்கிய ஆண் மகன் பெண்களின் உரிமையைப் பல இடங்களில் மறித்தும், பறித்தும் வருகின்றனர். இயற்கை நியதிக்கு முரண் நின்று, பெண்ணுரிமையைக் கடிந்து, பெண்ணுக்கு எவ்வளவில் உரிமை வழங்கலாம்: எவ்வளவில் வழங்கல் கூடாது: என்னும் ஆராய்ச்சியை விடுத்து பெண்ணிற்கு ஆணிற்கு நிகரான உரிமையைப் பெண்ணுக்கும் வழங்கவேண்டும் என **திரு.வி.க** சுட்டுகிறார்.

இதனைப் போன்று, கவிஞர் திலகபாமா என்பவர், தம் கவிதையின் மூலம், இக்காலத்தில் பெண்களின் உரிமைகள் பறிபோவதையும், பறிக்கப்படுவதையும் காட்சிப்படுத்தியிருக்கிறார்.

**“கண்ணகி அதிர்ந்தாள்**
**பாண்டியனுக் கெதிராக**
**நகரமே நரகமானது**
**பாஞ்சாலி அதிர்ந்தாள்**
**துரியோதனுக் கெதிராக**
**வம்சமே துவம்சமானது”. (திலகபாமா.63)**

என்ற வரி, **‘நெஞ்சதிர்ந்ததேனம்மா’** என்னும் கவிதையில், கண்ணகியால் மதுரை எரிந்து அழிந்ததையும், பாஞ்சாலியால் கௌரவ வம்சமே அழிந்ததையும் காட்சிப்படுத்துகிறார். பெண்ணின் கோபம் மற்றும் சாபம் மதுரை அழியவும், வம்சம் அழியவும் காரணமாகியது என்கிறார் கவிஞர்.

**பெண்ணின் கடமை:**

இல்லறத்தில் இருந்து கொண்டு கணவனைப் போற்றுதல், மக்களை வளர்த்தல், காத்தல், விருந்து ஓம்புதல், இல்லறத்தை நடத்திச் செல்லல் போன்ற அனைத்தும் பெண்களுக்கே உரியதாக இருந்தன. இதனை, கற்பும் காமமும், நல்ல ஒழுக்கமும், பெண்மைத் தன்மை பொருந்திய பொறுமைப் பண்பும், நிறையுடைமையும், விருந்து போற்றும் மனநலமும், சுற்றத்தினரைத் தழுவும் வழக்காறும் பிறவும் தலைமகளுக்குரிய தலையாய பண்புகள் ஆகும்.

இதனை, இல்லற வாழ்வில் இருக்கும் பெண்ணின் பங்கு பெரும்பங்காக இருந்தது. மேலும், இல்லறத்திற்குப் பெண் விளக்குப் போன்றவள் **(நா.ம.க.103-1)** என்றும், மனையாள் இல்லாத வீடு பாழானது **(நா.ம.க.99-4)** என்றும் கூறுவதால் அறியலாம். இல்லறத்தின்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



பெருமையும், சிறுமையும் பெண்களைப் பொறுத்து அமையும் என்பது நான்மணிக்கடிகை மூலம் அறியப்படுகிறது.

**ஆணாதிக்கம்:**

பெண்களை இல்லறத்திற்கு மட்டும் என்று ஒதுக்கியிருந்தனர். சமயங்களின் செல்வாக்கும், அயலவர்களின் ஆட்சியும், ஆணுரிமைச் சமுதாயத்தின் இறுக்கமும், மேலும் மேலும் வலுவாகவே இருக்கிறது. பெண்களுக்கு நாணத்தை வலியுறுத்தியும் **(நா.ம.க.85-1),** கணவன் வழி நிற்க வலியுறுத்தியும் **(நா.ம.க.37-3)** ஆணுரிமைச் சமுதாயத்தை நிலைநாட்டுவதற்கான வழிமுறைகளாக அமைந்தன. கற்பொழுக்கத்தினை வற்புறுத்தி இல்லறத்தோடு பெண்கள் நிறுத்திவைக்கப்பட்டனர். மேலும், கற்புடைய பெண்கள் தன் கணவனை மட்டுமே தெய்வமாக வணங்கவேண்டுமே தவிரப் பிற தெய்வங்களை வணங்க கூடாது **(நா.ம.க.89.4)** என்பது ஆணாதிக்கச் சமுதாயத்தின் வெளிப்பாடாக அமைந்திருந்தன.

**திருமணம்:**

ஆணும், பெண்ணும் திருமணம் செய்துகொள்வதற்கு உகந்த இலக்கணமாக தொல்காப்பியர் 10 பண்புகளைக் கூறியுள்ளார். அவை,

> **“பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு**
> **உருவுநிறுத்த காமவாயில்**
> **நிறையே அருளே உணர்வொடு திருவென**
> **முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே”. (தொல்.நூற்.1219)**

என்ற வரியில், குலப்பிறப்பு, ஒழுக்கம், பண்பாடு, ஆள்வினையுடைமை, வயது, வடிவம், வனப்பு, காம ஒழுக்கத்திற்குரிய உள்ளக் கிளர்ச்சி, சால்பு, அருளுடைமை, உள்ளக் குறிப்பை அறிந்தொழுகும் நுண்ணறிவு, தெய்வப்பொலிவு ஆகிய அனைத்திலும் ஒத்தவர்களாகத் திகழ வேண்டும் என்பதே இந்நூற்பா தரும் பொருளாகும்.

திருமணம் ஆவதற்கு முன்பு இளம்பெண்கள் ஒருவகைச் சிலம்பு அணிந்து இருப்பர். திருமணம் முடிவானப் பிறகும், திருமண வாழ்விற்கு முன்னரும், ஒரு நன்னாளில் அச்சிறு சிலம்பினை நீக்கும் விழா மணமகள் இல்லத்தில் நடைபெறும். இதனை சிலம்பகழி நோன்பு என்பர். இவ்விழா வயது முதிர்ந்த இல்லத்தரசியர் சிலர் ஒன்றாகக்கூடிச் செய்த சடங்காகும். இச்சடங்குகளின் மூலம் பெற்றோர் தம் மகள் மணவாழ்விற்குரிய தகுதியைப் பெற்றுவிட்டாள் என்பதை உலகிற்கு உணர்த்தினர். இதனை,

> **“நும்மனைச் சிலம்பு கழிஇய அயரினும்**
> **எம்மனை வதுவை நம்மணங் கழிகெனச்”. (ஐங்.399)**

என்ற வரி, ஐங்குறுநூறு தெளிவுப்படுத்துகிறது.

ஆணாதிக்கச் சமுதாயத்தில், முழுமையாக ஆண்களின் கட்டுப்பாட்டில் வாழ்ந்தாலும், பாதுகாப்பு நிச்சயமின்மையை,

> **குடும்பம் துறந்த**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019  Available at: www.ijtlls.com

**சித்தார்த்தன்**

**புத்தனாக மாறினான்**

**நம்பி வந்த**

**யசோதா**

**என்ன ஆனாள் ?**

என்ற கேள்வியை முன்மொழிகின்றார் கவிஞர் **பாலபாரதி.** திருமண பந்தத்தில் இணையும் போது, புரட்சிகரமானப் பெண்ணியப் படைப்பாளர்களும், சமுதாயக் கட்டுப்பாடுகளுக்கு ஆட்படும் சூழல் ஏற்பட்டு விடுகிறது. கவிஞர் தாமரை **'தொலைந்து போனேன்''** என்ற கவிதையில் தனது மணவாழ்வு பற்றிப் பதிவுச் செய்கின்றார்.

என்மணவாழ்வில்

நான் தொலைந்து போனேன்

ஆனால் யாரும் என்னைத் தேடவில்லை,

என்ற கவிதையின் மூலம் பெண்களின் திருமணம் அவர்களது வாழ்வில் பெரும் ஏமாற்றத்தை ஏற்படுத்திவிடுகிறது என்பதைக் குறிப்பிடுகின்றார்.

**வரதட்சணை:**

திருமணத்திற்கு வரதட்சணைக் கொடுக்க முடியாமல், எத்தனைக் காலம் வரைப் பெண்கள் முதிர்கன்னியர்களாய் வலம் வருகின்றனர் என்று எண்ணி, சமூகத்தின் மீது கோபம் கொண்டு, எல்லாப் பெண்களும் ஒன்று சேர்ந்து இக்கொடுமைக்கு எதிராகப் புரட்சி செய்தல் வேண்டும் என்கிறார் கவிஞர். இதனை,

**"இந்த**

**வரதட்சணை வில்லை**

**வளைப்பது யார்?**

**ராமர்களுக்கு இன்று ரத்தமில்லை**

**ஜனகனோ பாவம்**

**சாய்வு நாற்காலியில்**

**இனி**

**நாமே ஒடிப்பதே**

**நியாயம்**

**எங்கே**

**சீதைகளே கொஞ்சம்**

**சேருங்களேன்''.**

கவிஞர் வைரமுத்து என்ற கவிதை வரிகளில், தொன்மக் குறியீடுகளைப் பயன்படுத்தித் தனது உள்ளக் குமுறலை வெளிப்படுத்தியுள்ளதைக் காண முடிகிறது.

**இல்லற மாண்பு:**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



இந்தியச் சமுதாயத்தின் அடிப்படையில் ஆணும், பெண்ணும் இணைந்தது குடும்ப வாழ்க்கை என்றாலும், இல்லறத்தில் பெண் என்பவளின் பங்கேற்பு மிகவும் முக்கியமான ஒன்றாகும். கணவன், மக்கள், சுற்றம் போன்றோரை உபசரிப்பதும் இல்லாளின் பண்பாகும்.

**“அறுசுவை உணவைக் கணவனுக்கு ஊட்டுதல் இல்லாளின் கடமை”.**

**(நாலடி.1)**

**“இல்லக் கிழத்தி இல்லாத வீடு கொடுங்காடு”. (நாலடி.361)**

இல்லறத்தில் பெண் நல்லவளாககவும், கடமைத் தவறாதவளாகவும் இருத்தல் வேண்டும். இல்லறக் கடமையினை உணர்ந்து அதன் வழி ஒழுக வேண்டும் என்பதை, நாலடியார் பல பாடல்களில் எடுத்துரைக்கிறது. தமிழரின் பண்பாட்டினைப் பறைசாற்றுவனவாக நாலடியார் திகழ்கின்றது.

இல்லறமே நல்லறம், ஆண்மை என்ற வீரமும், பெண்மை என்ற பொறுமையும் இணைந்து வாழ்வதே இல்லறம். இல்லறத்தில் பெண்மைக்கு முக்கியத்துவத்தை அளிப்பதை நாலடியாரில் அறியப்படுகிறது. பெண் நினைத்தால் எதுவும் நடக்கும். இரும்புத் தன்மை கொண்ட ஆடவரையும் மயிரிழை மங்கை அடக்கிவிடுவாள் என்பதை,

**“இரும்புத் தொடரையும், எரித்துச் செல்லும்**
**ஆடவர் மனமெனும் மதயாணை ஓர்**
**மங்கை இட்ட மயிரிழை அதனுக்கு**
**அடங்கி நின்றிடும் ஐயமொன்று இல்லை”. (ஆசிய.ஜோதி:பா.46-49)**

என்று பெண்மையைப் போற்றியதால் தான், மங்கையராய்ப் பிறக்க மாதவம் செய்திடல் வேண்டும் என்கிறார் **கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை**.

**வாழ்க்கைத்துணை:**

இனிய வாழ்க்கைத் துணை என்று கூறுவதற்குப் பதிலாகத்தான், வள்ளுவப் பெருந்தகை வாழ்க்கைத் துணை நலம் என்று சிறப்பித்துக் கூறுகிறார். வாழ்வின் இனிய துணையில் எவ்வளவோ சிறப்புகள் உள்ளன என்பதைக் கூறாமல் கூறவே இவ்விதம் நலம் என்று குறிப்பிட்டுப் பெருமைப்படுத்துகிறார். இந்த வாழ்க்கைத்துணை, இல்லறத்துக்கு வேண்டிய அனைத்து நற்குணங்களையும் கொண்டவளாகத் திகழ்ந்து, தன்னை மணந்து கொண்டவனுடைய கணவனின் வருவாய்க்குத் தக்க வாழ்க்கையை நடத்த வேண்டும். இவ்வாறு நடத்தினால் தான் இல்வாழ்க்கை இனிய வாழ்க்கையாக, ஏற்றமிகு வாழ்க்கையாக அமைந்து இனிமை நிலவும் என்பதை உணர்த்துகிறார்.

**“மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை”. (குறள்.51)**

மனைத்தக்க மாண்பு என்பது, இல்லறத்தை இனிது நடத்தும் உயர் பண்புகளும் செயல்களும் மட்டுமன்றி, வரும் விருந்தினரைச் சிறப்பான முறையில் உபசரித்துப் போற்றுவதுமாகும்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



நல்ல மனைவி அமைவது என்பது, இறைவன் கொடுத்த ஒப்பற்ற வரம் என்று கூறுவார்கள். இல்லறத்தான் ஒருவன் சிறப்புற்றுத் திகழ, பிற செல்வங்களால் எந்தவிதப் பயனும் இல்லை. நல்ல மனைவியை, உயர் பண்பாடுள்ள மனைவியை, ஒருவன் பெற்றுச் சிறப்பதே உயர்வாகும் என்று வள்ளுவர் சுட்டியுள்ளார்.

**பிள்ளைப் பேறு:**

கற்புடைய மகளிரால் மட்டுமே இல்லத்தைப் பொலிவிக்கும், மனையை மாண்புறச் செய்யும் நன்மக்களைப் பெற்றுத்தர இயலும் என்பது வள்ளுவர் கருத்தாகும். இதனை,

**"மங்கலம் என்ப மனைமாட்சி மற்று அதன்**
**நன்கலம் நன்மக்கட் பேறு". (குறள்.60)**

என்று வள்ளுவர் கூறுகிறார். மேலும்,

**"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய்". (குறள்.69)**

என்ற குறளில், தன் மகனைப் பிறர் சான்றோன் என்று சொல்லக் கேட்ட தாய், தான் அவனைப் பெற்ற காலத்துக் கொண்ட மகிழ்வைவிட மிகுதியாக மகிழ்வாள். மேலும்,

**"இம்மை உலகத்து இசையோடு விளங்கி**
**மறுமை உலகமும் மறுவின்றி எய்தும்**
**செறுநரும் விழையும் செயிர் தீர்க் காட்சி**
**சிறுவர்ப் பயந்த செம்மலோர்". (அகம்.66:1-4)**

என்ற வரியில், திருமண வாழ்வில் முதன்மையானது, மக்கட்பேறு பெறுவதே என்பது பெண்களின் எண்ணமாகும். ஒரு பெண் தாய்மையில் தான் முழுமையடைகிறாள் என்பது மரபு வழி சிந்தனையாகும். இம்மைப் புகழும், மறுமை இன்பமும் குழந்தையால் மட்டுமே கிட்டும் என மக்கள் நம்புவதை அகநானூற்று வழி அறியப்படுகிறது.

**பிறன்மனை நாடாமை:**

திருமணமான பெண்களை வேற்றொரு ஆடவன் விரும்புவதை வன்மையாக திருவள்ளுவர் கண்டிக்கும் விதமாக,

**"அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்**
**பெண்மை நயவாமை நன்று". (குறள்.150)**

ஒருவன் அறவழியினின்றும் மாறிப் பல தீமைகள் செய்வானாயினும், பிறன் மனையாளைக் கெடுத்தான் என்ற, தீய பழி வாராமலாவது நடந்து கொள்வானாக என்று அறம் கூறுகிறது. இதனால் தீய செயல்கள், பொய், களவு, கொலை முதலான அனைத்தினும், பிறன் மனை நயக்கும் தீச்செயலே மிகக் கொடியது என்று கூறியவறாம். எனவே, இல்லறத்தானுக்கு ஒழுக்கம் என்பது பிறர் மனைவியரை விரும்பாத நற்குண வாழ்க்கையே என்று வள்ளுவர் கூறியுள்ளார்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal


E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com

சங்கம் மருவிய காலத்தில் பிறன்மனை நயத்தல் என்ற பண்பானது அதிகம் இருந்தது. பிறர் மனை நயவாமை பற்றிய கருத்துக்கள் நாலடியாரில் அதிகம் உள்ளன.

**"பிறன் மனை நயத்தல் பாம்பின் தலையை நாவினால் நக்குதல்". (நாலடி.87)**

**"பிறன் மனை நயப்பவர்க்கு எப்போதும் அச்சமே". (நாலடி.83)**

என்ற நாலடியாரின் கருத்துக்கள் மூலம், பிறன் மனை நயப்பதால் குடிப் பழி உண்டாதல், கை, கால் குறைதல், அச்சம் தருதல் போன்றப் பாவச் செயல்கள் ஏற்படும் என்று நாலடியார் கூறுகின்றது. சமுதாயத்தில் உள்ள மக்களைப் பிறன்மனை நோக்குதல் கூடாது, ஒருவனுக்கு ஒருத்தி என்ற தமிழரின் உயர்ந்த பண்பாட்டினைப் பறைசாற்றுவதாக பெண்ணியம் அமைந்துள்ளது என நாலடியார் குறிப்பிடுகின்றது. மேலும்,

**"அறம்புகழ் கேண்மை பெருமைஇந் நான்கும்**
**பிறன்தாரம் நச்சுவார்ச் சேரா பிறந்தாரம்**
**நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவன்என்று**
**அச்சத்தோ பிந்நாற் பொருள்". (நாலடி.82)**

என்ற வரியில், தருமம், கீர்த்தி, சிநேகம், மேம்பாடு ஆகிய இந்த நான்குப் பொருளும் பிறன்மனையாளை விரும்புகிறவர்களைச் சேரமாட்டா; பகையும் நிபந்தனையும் பாவமும், அச்சமும் ஆகிய இந்த நான்கு பொருளும் பிறன் தாரத்தை விரும்புகிறவர்களைச் சேரும்.

**ஒருதார மணமுறை:**

ஒருவன் - ஒருத்தி மணமுறையானது நாகரிக வளர்ச்சி நிலையின் ஒரு கட்டத்தில் தோன்றியது ஆகும். இம்முறையில் அதிகக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. இதனால் பெண்களும், ஆண்களும் ஒழுக்கம் தவறும் நிகழ்ச்சிகளும் நடந்தன. மேலும், இல்லத்திலிருந்து கொண்டே கற்பினைக் கெடுத்த பெண்களும் இருந்துள்ளனர். இவ்வாறு ஒழுகுபவர்களை,

**"கணவனுக்குக் கூற்று கற்பு கெடும் மனைவி". (நா.ம.க.83.4)**

என்று விளம்பி நாகனார் வசை பாடியுள்ளார். ஆண்மகன் மனைவியை இழந்தால், அவன் எவ்வளவு வயதான கிழவனாயிருப்பினும், ஓரிளங் கட்டழகியை மணந்து இனிது வாழலாம்! இளம் பெண்ணொருத்தி கணவனை இழந்தாலோ, அவள் மொட்டையடித்து, உண்டி கெடுத்து, உலகைத் துறத்தல் வேண்டும்! என்ன அநியாயம்! விதி என்றால் இருபாலார்க்குமன்றோ இருத்தல் வேண்டும்? ஒருவன் பல பெண்களை மணந்து கொள்ளும் உரிமை பெற்றிருக்கிறான்! அநியாயம்! அநியாயம்! ஒருத்தி ஒருவனோடு வாழ்தலே அறவொழுக்கம். அவ்வாறே ஒருவனும் ஒருத்தியுடன் வாழ்தல் வேண்டும். 'ஒருவன் பல பெண்களை மணக்கலாம்' என்னும் விதி, பெண்ணுலகை இழிவுபடுத்துவதாகும். பெண், தவறி நடந்தால் தண்டனை! ஆண், தவறி நடந்தாலோ தண்டனையில்லை! இஃது அநீதி! தண்டனை இருபாலார்க்கும் விதிப்பது நீதியாகும்.


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com


**ஆண் - பெண்:**

'பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும் பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்" என்று பாரதியார் முழங்குகின்றனர். 'ஆண்களோடு பெண்களும் சரிநிகர்" என நிறுபிக்கும் வகையில் பல முன்னேற்றம் கண்டு வருகின்றனர்.

'பெண்களை வற்புறுத்திக் கட்டிக்கொடுக்கும் வழக்கத்தைத் தள்ளி மிதித்திடுவோம்" என்பது இன்றைய பெண்ணுலகப் பேச்சு. 'வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி வைப்போம்" என்பவர்கள் விந்தையான மனிதர்களாகிவிட்டனர். அவர்களுக்கு இந்த நாட்டிலே வேலை இல்லை எனவும்,

'கற்பு, கற்பென்று சொல்ல வந்தார், இந்த கட்சிக்கும் அஃது பொதுவில் வைப்போம்" என்றார் பாரதியார். 'கற்பென்னும் திண்மை" என்றார் திருவள்ளுவர். கற்பு என்றால் கற்றுக்கொள்ளுதல் என்றே பொருள். உலக ஞானத்தை, குடும்பக் கலையை, அரசியல் - சமூக பொருளாதாரக் கலைகளைக் கற்றுக் கொள்ளுதல் முதலியனவும், பெண்களின் குணம், மனம், செயல்கள் வேறு; ஆண்களின் குணம், மனம் செயல்கள் வேறு என்பர்.

பெண்கள் இளகிய மனம்; அன்பில் மாறாதிருப்பது; துன்பங்களைப் பொறுமையுடன் சகித்துக்கொள்வது; அவசரமற்ற தன்மை - இவற்றையெல்லாம் பெண் தன்மையென்றே கூறலாம்.

ஆணும், பெண்ணும் ஒன்றே என்பதைப் பற்றி வள்ளலார் கூறும் உண்மைகள் மிகச் சிறந்தவை என்பதோடு,

'பெண்ணினுள் ஆணும் ஆணினுள் பெண்ணும்
அண்ணுற வகுத்த அருட்பெரும் சோதி!

பெண்ணுருவத்தில் ஆண்தன்மைகளும், ஆண் உருவத்துள் பெண்தன்மைகளும் ஒன்றுபட்டிருக்கும்படி செய்த அருட் பெரும் சோதி எனவும்,

"பெண்ணியல் மனமும் ஆண்இயல் அறிவும்
அண்ணுற வகுத்த அருட்பெரும் சோதி!

ஆண் பெண் இருபாலாரிடமும், பெண்தன்மையான இளகிய மனமும், ஆண் தன்மையான தெளிந்த உறுதியான அறிவும் ஒன்றுபட்டிருக்கும்படி செய்த அருட்பெரும் சோதி எனவும்,

"தனித்தனி வடிவனும் தக்கஆண் பெண்செயல்
அனைத்துற வகுத்த அருட்பெரும் சோதியே!

ஒவ்வொரு ஆண் பெண்களிடமும் சிறந்த ஆண் தன்மைகள், பெண் தன்மைகள் அனைத்தும் அமைந்திருக்கும்படி செய்த அருட்பெரும் சோதி வள்ளுவர் ஆவார்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



இவ்வாறு, ஆண் பெண்கள் இருவரிடமும், இரு தன்மையான குணங்களும் உண்டென்றே கூறுகின்றார். இதனால் இரு பாலாரும் சமத்துவமுடன் வாழத் தகுதியுடையவர்கள் என்பதே வள்ளலார் உள்ளம். ஆகையால்,

'பாடகக்கால் மடந்தையரும் மைந்தரும் சன்மார்க்கப்

பயன்பெற நல்அருள் அளித்தபரம் பரனே".

என்று வள்ளலார் புகழ்கின்றார். பெண்களும் ஆண்களும் சன்மார்க்கத்தில் தொண்டாற்றிப் பயன் பெறத்தக்க தகுதியுடையவர்கள் என்கிறார். மேலும், வள்ளலாரின் வாய்மொழியானது, பெண்களுக்கு உடல் உறுதி வேண்டும். இதற்கு யோகப் பயிற்சி, தேகப் பயிற்சி முதலின வேண்டும். பெண் கல்வி, ஆண்கல்வி என்ற பிரிவினையின்றிப் பொதுக்கல்வி பயில வேண்டும். இருவரும் கூட்டுக்கல்வி பயில்வதே சிறந்தது என்றும், ஆணும் பெண்ணும் சமமானவர்கள்; இருவருக்கும் சம உரிமை உண்டு; ஆற்றலிலும் அறிவிலும் இருவர்களும் ஒத்தவர்கள்தாம் என்கிறார் வள்ளலார்.

ஒரு பெண்ணை ஒருவனுக்கு மணம் பேசி முடித்துவிட்டால் போதும்; திருமணம் முடிந்துவிட்டதாகவே கொள்வது பண்டைய வழக்கம் என்று குறிப்பிடுகின்றனர். **(சாமி சிதம்பரனாரின், வள்ளலார் கூறும் வாழ்க்கை நெறி. பக்.158-160)**

**உடன்கட்டை ஏறுதல்:**

உடன்கட்டை ஏறும் வழக்கம் பண்டைத் தமிழ் நாட்டிலும் உண்டு. உண்மையிலேயே காதலன் பிரிவுக்கு ஆற்றாமல் கணவனுடன் சேர்ந்து மடிவது உடன்கட்டை ஏறுதல். இது பெண்கள் தாமாகவே மணம் விரும்பிச் செய்யும் செயல். இது நாளடைவில் மாறி, உயிர்விடச் சம்மதிக்காத பெண்களையும், பலவந்தமாக பிடித்துக் கணவனுடன் சேர்த்துவைத்துக் கொளுத்தியுள்ளனர்.

இவ்வாறு உடன்கட்டை ஏற்றும் நிலையைப் பெண்களும், சமூக சீர்திருத்தக்காரர்களும் எதிர்ப்புத் தெரிவித்தனர். அவ்வெதிர்ப்பின் காரணமாக உடன்கட்டை ஏற்றும் வழக்கத்தை மூடநம்பிக்கை உள்ளவர்கள் கைவிடலானார்கள். 04-டிசம்பர்-1829ம் ஆண்டு முதன்முதலில் உடன்கட்டை ஏற்றும் கொடுமையைச் சட்டத்தின் மூலம் ஒழித்தவர் இராஜாராம் மோகன்ராய் என்பவர் ஆவார். மேலும், 1803ம் ஆண்டு சென்னையின் ஆளுநராக நியமிக்கப்பட்ட வில்லியம் பெண்டிங் பிரபு என்பவரோடு உறுதுணையாக இருந்து உடன்கட்டை ஏறும் வழக்கத்தை ஒழித்தனர்.

இராஜாராம் மோகன்ராய் என்பவர், குழந்தைத் திருமணத்தையும், பெண் சிசுக் கொலையையும் கடுமையாக எதிர்த்தவர் ஆவார். மேலும், விதவைகள் மறுமணம், பெண்கல்வி, பெண்களுக்கான சொத்துரிமைப் போன்றவற்றையும் ஆதரித்துள்ளார். இந்தியாவின் ஒருமைப்பாட்டிற்குச் சாதிமுறை பெரும் தடைக்கல்லாக இருப்பதை உணர்ந்தார். அதனால், மனித குலத்தின் சமத்துவத்தில் இவர் அசையாத நம்பிக்கை கொண்டிருந்தார். பின் கலப்புத் திருமணத்தையும் ஆதரித்தார். அதன் விளைவாக தாமே ஒரு முஸ்லீம்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



குழந்தையைத் தத்தெடுத்து வளர்த்து வந்துள்ளார். இவர் பெண்களின் விடுதலைக்குக் குரல் கொடுத்ததோடு, பெண்களுக்கு என தனிப் பள்ளியையும் அமைத்தவர் என குறிப்பிடப்படுகிறது.

இராஜாராம் மோகன்ராயைப் போல், நம் நாட்டில் சமூக சீர்திருத்தத் துறையில் உழைத்த பெரியவர்கள் பலர் உள்ளனர். அவற்றுள், பெரியார், டாக்டர்.முத்துலட்சுமி அம்மையார், பாரதியார், பாரதிதாசன், சி.சுப்பிரமணிய ஐய்யர், வை.மு.கோதைநாயகி அம்மாள், ருக்குமணி இலட்சுமிபதி, அம்புஜத்தம்மாள் போன்றோர்கள் பெண்ணடிமைக்குக் குரல் கொடுத்தவர்கள் ஆவார்கள்.

சி.சுப்பிரமணிய ஐய்யர் என்பவரின் மகள் இளமையிலேயே விதவைக்கோலம் கொண்டாள் என்பதால், இவர் பம்பாய்க் காங்கிரஸ் மாநாட்டில், தேசத் தலைவர்கள் முன்னிலையில் தனது மகளுக்கு மறுமணம் செய்துவைத்தார். இதன் மூலம் இவருக்கு ஏற்பட்ட தொல்லைகள் பல இருந்தன. இவரின் சமூகத்தார்கள் இவரை எதிர்த்து குறைகூறலானார்கள். மேலும், சமூகத்திலிருந்து விலக்கிவைப்பதாகவும் பலர் பயமுறுத்தினார்கள். இவர் எதற்கும் அஞ்சாமல், உறுதியுடன் இருந்து தனது மகளுக்கு மறுமணம் செய்துவைத்து, மகிழ்வோடு இருந்தார் என்பதை அறியமுடிகிறது. இதை போன்றே, வள்ளலாரும் விதவையை ஒழிக்கும் விதமாக பின்வருமாறு, **'கைம்மையைத் தவிர்த்து மங்கலம் அளித்த கருணையே!'** என்பது வள்ளலாரின் வாக்காகும். கைம்மையாவதை – அதாவது விதவையாவதை ஒழித்து, மங்கலத்தைக் கொடுப்பதை இரக்கம் என்று கூறுகிறார். மேலும், **'கணவன் இறந்தபின் பெண்களுக்குத் தாலி வாங்கக்கூடாது'** என்றும் கூறுகிறார். அதாவது, விதவைக் கோலம் கொள்வதையே தடுத்துள்ளார் வள்ளலார். (சாமி சிதம்பரனாரின், வள்ளலார் கூறும் வாழ்க்கை நெறி. பக்.162-164)

**மறுமணத்தை ஆதரித்தோர்:**

கணவனை இழந்த இளம்பெண்கள் விதவையாக வாழ்வதால், பாதுகாப்பு இல்லாமல் பல்வேறு துன்பங்களுக்கு ஆளாக்கப்படுகின்றனர். கணவனை இழந்த பெண்கள் சமூக ஒழுக்ககேடும் அடையக்கூடும் என்பதால், இத்துன்பங்கள் தீர வேண்டும் என்றால், பெண்கள் மறுதிருமணம் செய்துகொள்வது எத்தீங்கும், எப்பழியும் ஏற்படாமல் தன்னைக் காத்துக்கொள்ளலாம் என்று கீழ்காணும் பல கவிஞர்கள் குரல் கொடுத்துள்ளனர்.

**பாரதிதாசன்:**

துணைவி இறந்தபின் வேறு துணை தேடும் ஆண்களைப் போல், துணைவர் இறந்தப்பின்னர் வேறு துணையை நாடும் உரிமையைப் பெண்களும் பெற வேண்டும் என்கிறார். அதாவது, கணவனை இழந்த பெண்களுக்கு மறுமணம் செய்வதற்கு உரிமை அளிக்க வேண்டும். தடை விதிக்கும் பொழுது விருப்பம் உடைய பெண்களால் விதிமீறல் கட்டாயம் ஏற்படும் என்றும் பாரதிதாசன் கூறியுள்ளார்.

**சுத்தானந்த பாரதியார்:**

'கைம்பெண் இல்லையெனில் மூலை காக்கும் கொடுமை இல்லை' அதாவது,



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



கணவனை இழந்த பெண்கள் மறுமணம் செய்து கொண்டால், வீட்டின் மூலையில் அமர்ந்திருக்க வேண்டிய கொடுமை நீங்கும் என்பதால், இவர் மறுமணம் ஆதரிப்பு கருத்தினை முன்மொழிந்துள்ளார்.

**அ.குமரப்பன்:**

'கைம்பெண் துயர் நீக்கிக் காதல் மணம் செய்துவைத்து பைம்பொன்னனையார் இடர் அகற்றல் எக்காலம் என்று நெற்குப்பை' என்றுரைக்கின்றார்.

**தே.பா.பெருமாள்:**

வெள்ளாடை அணிந்து, கூந்தலை மழித்து விட்டால் விதவையின் உள்ளுணர்வுகள் யாவும் மறைந்துவிடுவதில்லை என்றார்.

**பெண்மையும் - கற்பும்:**

நான்மணிக்கடிகை என்னும் நூலில், பெண்களின் கற்புப் பற்றி சிறப்பாக கூறப்பட்டுள்ளது. பெண்கள் தன் கணவனை அல்லாத வேறு தெய்வங்களை வணங்கியது இல்லை எனவும், நல்ல இயல்புடைய பெண்கள் நாணத்தின் எல்லையிலேயே நிற்பார்கள் எனவும், நற்பண்புடையவள் கற்பு ஒழுக்கத்திலிருந்து சிறிதும் தவறமாட்டாள் எனவும், பண்புடைய மனைவி இல்லாத வீடு பாழாகிப் போய்விடும் என்று விளம்பிநாகனார் என்பவர் பின்வரும் பாடலில் குறிப்பிடுகிறார்.

> **"……பாழொக்கும்**
> **பண்புடையார் இல்லா மனை" (நா.ம.க.101)**

என்ற வரியில், இல்லறத்திற்கு ஒளி வீசும் விளக்கு மனைவி ஆவாள் எனவும், பெண்மைக்கு அழகு நாணமும், கற்பில் சிறந்து விளங்குவதற்காக, தன் நெஞ்சை ஒரு வழிப்படுத்தி கற்புடையவளாக திகழ்வாள் என்றுரைக்கிறார்.

**பெண் - கல்வி:**

பெண்கள் கல்வி கற்பதற்கு, ஆண்களுக்குக் கிடைத்திடும் அனைத்து வசதிகளையும், வாய்ப்புகளையும் அதே அளவில் பெண்களுக்கும் கிடைக்கச் செய்வதே பெண் கல்வி எனப்படும். ஆரம்ப காலத்தில் பெண்களுக்குக் கல்வி வழங்கப்படாமல், வீட்டின் அனைத்துப் பணிகளைச் செய்யவும், வீட்டை விட்டு வெளியே செல்லாத அளவிற்கு, வீட்டிலேயே இருக்கவும் செய்துள்ளனர். இந்நிலைத் தற்போது மாறி, பெண்கள் கல்வியில் முன்னேறி, பெண்கள் இல்லா துறைகளே இல்லை என்ற அளவிற்குப் பெண்கள் கல்வியில் முன்னேறி வந்துக்கொண்டிருக்கின்றனர்.

நேர்கொண்ட பார்வையும் யாருக்கும் அஞ்சாத ஞானச் செருக்கும் உடைய புரட்சிப் பெண்ணை அடையாளம் காட்டியவர் பாரதியார்.

> **"ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமை என்று**
> **எண்ணியிருந்தவர் மாய்ந்துவிட்டார்**
> **வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டிவைப்போம் என்ற**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**விந்தை மனிதர் தலை கவிழ்ந்தார்". (கும்மிப்பாட்டு.பா.106)**

என்று பாரதியார், பெண்கள் புத்தகத்தினைத் தொடுவது தீமை என்று நினைத்தவர்களை, இக்கால பெண்கள் தலைக்குனிவை ஏற்படுத்தும் விதமாக பெண்கள் இல்லாத் துறைகளே இல்லை என்னும் அளவிற்கு உயர்ந்த நிலையையும், பாரதி கண்ட கனவினை நினைவாக்கியும் வருகின்றனர்.

**ஜவஹர்லால் நேரு:**

முன்னால் இந்திய பிரதமர் பண்டிட் ஜவஹர்லால் நேருவின் கூற்றுப்படி,

**"ஓர் ஆணுக்கு அளிக்கப்படும் கல்வியால்,**
**அவருக்கு மட்டுமே பயன்; ஆனால்,**
**ஓர் பெண்ணுக்கு அளிக்கப்படும் கல்வி**
**அவரது குடும்பமே கல்வி பெற்றதற்கு சமம் ஆகிறது".**

எனவும், பெண்கள் குடும்ப வாழ்க்கையை நலமுறச் செய்யவும், குழந்தைகளின் அறிவு வளர்ச்சிக்கு சிறந்த அடித்தளத்தை அமைத்திடவும், அக்கம் பக்கத்தினரின் எழுத்தறிவின்மையைப் போக்கிடவும், சிறு குடும்ப நெறியைப் பரப்பிடவும், சமூக விளிப்புணர்வைப் பெருக்கிடவும், சமூதாய நலத்திட்டங்களை வெற்றிடையச் செய்யவும், பெண் கல்வி மிகவும் அவசியமாகிறது என்கிறார். **(பேரா.கி.நாகராஜன் என்பவரின், வளர்ந்து வரும் இந்திய சமுதாயத்தில் கல்வி பக்.391)**

**காந்தியடிகள்:**

இந்தியா சுதந்திரத்திற்குப் பெரிதும் தொண்டாற்றிய மகாத்மா காந்தி அவர்களும், பெண் கல்வியைப் பற்றி உயர்ந்த எண்ணத்துடன் வெளிப்படுத்தியுள்ளார். **"பெண்களுக்கும் ஆண்களுக்கு இணையான கல்வியை வழங்கிட வேண்டும்; முடிந்தால் அவர்களுக்கு சிறப்பான கூடுதல் கல்வியை அளித்திடல் நலம்" எனவும், 'பெண்ணுக்கு அளிக்கப்படும் கல்வியின் பயன் அவளது அடுத்த தலைமுறையையும் சென்றடையும்"** என்று கூறியுள்ளார். (பேரா.கி.நாகராஜன் என்பவரின், வளர்ந்து வரும் இந்திய சமுதாயத்தில் கல்வி பக்.391)

**கோத்தாரிக் கல்விக்குழு:**

கல்வியில் பெரும் மாற்றத்தினை ஏற்படுத்தும் விதமாக கோத்தாரிக் கல்விக்குழு அமைக்கப்பட்டது. இக்கல்விக்குழுவும் பெண்களின் கல்வியைப் பற்றி பெரிதும் பேசியுள்ளது. மனித வள ஆற்றலின் முழுமையான வளர்ச்சிக்கும், குடும்ப உறுப்பினர்களின் மனிதத் தரத்தை மேம்படுத்தவும், சிறு வயதிலேயே குழந்தைகளிடம் நல்லொழுக்கத்தை வளர்த்திடவும் ஆண்களின் கல்வியை விட, பெண் கல்வியே முக்கிய பங்காற்றுகிறது என்று இக்கல்விக்குழு, பெண் கல்வியைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளது. (பேரா.கி.நாகராஜன் என்பவரின், வளர்ந்து வரும் இந்திய சமுதாயத்தில் கல்வி பக்.391)


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



'எந்தக் குழந்தையும் நல்ல குழந்தைதான் மண்ணில் பிறக்கையிலே; அவர் நல்லவராவதும், கெட்டவராவதும் அன்னை வளர்ப்பினிலே' என்று கவிஞர் கூறுவது போல, குழந்தைகளை நல்ல குழந்தைகளாக உருவாக்கி, தலைசிறந்த குடிமகனாக்குவது கல்வியறிவு பெற்ற பெண்களால் தாம் இயலும். பெண்களுக்கு எதிரான சமூகக் கொடுமைகளை எதிர்க்கும் ஆற்றலும், துணிவும் கல்வியறிவு பெற்ற பெண்களுக்கு ஏற்படுகிறது. பெண் கல்வியின் சிறப்பை உணர்ந்த அரசு, பெண் கல்விக்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்கிறது.

பெண் கல்வி, பெண்கள் முன்னேற்றம் பற்றி எல்லோரும் அறியும்படி கூறி, பெண் விடுதலைக்குப் பாடுபட்ட பெரியார், பெண்கள் முன்னேற்றம், அவர்கள் முயற்சியினாலேயே முடியும் என்று கூறினார். பாவேந்தர் படித்த பெண்கள் உள்ள குடும்பம் "அவள் வாத்திச்சி, அறைவீடு கழகம், தவழ்ந்தது சங்கத் தமிழ்ச் சுவை" என்று போற்றுவார்.

பாரதியார் பெண்கள் பற்றிக் கூறாதக் கருத்துக்களே இல்லை எனலாம். அவற்றுள், அடுப்பூதும் பெண்களுக்குக் கல்வி எதற்கு? என்று கூறிய மூடர்கள் மத்தியில், பெண்களை அறிவும், வீரமும் மிக்கவர்கள் என்று கூறும் விதமாக,

**"அறிவு கொண்ட மனித உயிர்களை**
**அடிமையாக்க முயல்பவர் பித்தராம்!" (புதுமைப்பெண்.3)**

என்ற கவிதை வரியின் மூலம், அடிமைப்பட்ட, அறிவீனம் நிறைந்த பெண் மக்கள் வயிற்றில் எப்படி வீரர்கள் பிறக்க முடியும்? எனவே, அறிவும் வீரமும் நிறைந்த பெண்கள் தாம், ஆண்மை மிக்க மக்களையும் ஈன்று தர முடியும் என்கிறார் பாரதி. மேலும், பெண்ணின் அறிவை வளர்ப்பது அவசியம் என்பதைப் பின்வருமாறு வலியுறுத்துகிறார்.

**"பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான் - புவி**
**பேணி வளர்த்திடும் ஈசன்**
**மண்ணுக் குள்ளே சில மூடர்-நல்ல**
**மாதர் அறிவைக் கெடுத்தார்".**
**'கண்கள் இரண்டினில் ஒன்றைக்-குத்திக்**
**காட்சி கெடுத்திட லாமோ?**
**பெண்கள் அறிவை வளர்த்தால்-வையம்**
**பேதமை அற்றிடும் காணீர்". (முரசுப் பாட்டு 9,10)**

என்ற கவிதையில், ஆணும் பெண்ணும் சமமாக வாழாவிட்டால், வீட்டில் அமைதி இராது, வாழ்க்கையும் சிறக்காது எனவும், பெண் கல்வியையும் பாரதி உயர்வாக கருதுவதைக் காணமுடிகிறது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



**பழமொழியும் - பெண்ணியமும்:**

பெண்களைக் குறித்து, பல்வேறு பழமொழிகள் நாட்டுப்புறத்தில் கூறப்படுவதை அறியமுடிகிறது. பழமொழிகள் மூலம் பெண்களைப் போற்றுவதையும், இகழ்வதையும் கண்கூடாக காணமுடிகின்றது.

**தாயைப்போல் பிள்ளை, நூலைப் போல் சேலை.**

**அடக்கமே பெண்ணுக்கு அழகு.**

**அடங்காப் பெண் சாதியால், அத்தைக்கும், நமக்கும் பொல்லாப்பு.**

**பெண் சிரிச்சால் போச்சு, புகையிலை விரிச்சால் போச்சு.**

**கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருசன்.**

என்ற பழமொழிகளின் மூலம், பெண்களின் தன்மைகள் விளக்கப்படுகிறது. மேலும், கணவன், மாமியாரிடையே பெண்கள் படும் துன்பங்களை எடுத்துரைக்கும் விதமாக இப்பழமொழிகள் அமைந்துள்ளது. அத்துடன், ஆண்களுக்குப் பெண்கள் அடிமைப்பட்டிருப்பதையும் இப்பழமொழிகள் எடுத்துரைக்கிறது. அடிமையாகிய பெண்ணின் நிலையைப் பின்வரும் பழமொழிகள் மூலம் அறியப்படுகிறது.

**அடித்தாலும், உதைத்தாலும் அப்பன் அப்பனே.**

என்ற பழமொழியில், ஆண் முறையற்றவனாகத் திகழ்ந்தாலும், என்றைக்கும் உயர்ந்தவனாகவே மதிக்கப்படுகின்றான். இத்தகைய அப்பாவை எதிர்த்துப் பிள்ளைகளும் பேசுவதில்லை; மனைவியும் பேசுவதில்லை என்ற நிலையும்,

**மாமியார் உடைத்தால் மண்குடம், அதையே**

**மருமகள் உடைத்தால் பொன்குடம்.**

**உரலுக்கு ஒரு பக்கம் இடி, மத்தளத்திற்கு இரண்டு பக்கமும் இடி.**

என்ற பழமொழிகளின் மூலம் மாமியார், தன் மருமகளைத் தண்டிக்கும் விதமாக உள்ளதைக் காணமுடிகிறது. மேலும், ஒரு பெண் மத்தளம் போல கணவரிடமும், மாமியாரிடமும் இடிபட்டுக் கிடப்பதின் மூலம் பெண்களின் துயரை அறியமுடிகிறது.

**தொகுப்புரை:**

‘பெண்கள் இந்நாட்டின் கண்கள்” என்பதை உணர்த்தும் விதமாக பெண்கள் அடிமைத்தன்மையிலிருந்து நீங்கி வருவதையும், தம் எண்ணங்களின் செயலுக்கு ஏற்ப நடந்துகொள்ளவும், இதற்கு உறுதுணையாக பல கவிஞர்களின் கருத்துக்களை முன்மொழிந்து, பெண்கள் சமுதாயத்தில் வலம் வரவிரும்புவதைப் பற்றி இக்கட்டுரையின் மூலம் அறியப்படுகின்றோம்.

**அடிக்குறிப்புகள்**

1. இரா.ரெங்கம்மாள் மற்றும் சி.வாசுகி, ‘பெண்ணியம்’ அணுகுமுறைகளும், இலக்கியப் பண்பாடும், ப.7
2. மேலது, ப.132.



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



3. தொல்காப்பியம்.களவு. 96.
4. மேலது.1054.
5. மேலது.1055.
6. சில பொய்களும், சில உண்மைகளும், பாலபாரதி.
7. திருக்குறள்.1083.
8. திருக்குறள்.56.
9. பாரதியார்.பாடல்.1868.
10. பாரதியார் பாடல்.1871.
11. பெண்ணின் பெருமை' என்ற நூலில் திரு.வி.கலியாண சுந்தரனார்.
12. அவ்வையார்.கொன்றை வேந்தன்.38,1.
13. திலகபாமா.நெஞ்சதிர்ந்ததேனம்மா.63.
14. விளம்பி நாகனார்.நான்மணிக்கடிகை.103-1.
15. மேலது.99-4.
16. மேலது.85-1.
17. மேலது.37-3.
18. தொல்காப்பியம்-1219.
19. ஐங்குருநூறு-399.
20. பாலபாரதி. தொலைந்து போனேன்.
21. வைரமுத்து.கவிதைகள்.
22. சமண முனிவர்கள்.நாலடியார்.1,361.
23. கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை-ஆசியஜோதி.பா.46-49.
24. அகநானூறு.66:1-4.
25. சமண முனிவர்கள்.நாலடியார். 87,83,82.
26. விளம்பி நாகனார்.நாண்மணிக்கடிகை. 83.4.
27. சாமி சிதம்பரனாரின், வள்ளலார் கூறும் வாழ்க்கை நெறி. பக்.158-160.
28. பாரதியார் கவிதைகள்.கும்மிப்பாட்டு.106.
29. பேரா.கி.நாகராஜன் என்பவரின், வளர்ந்து வரும் இந்திய சமுதாயத்தில் கல்வி பக்.391.
30. பாரதியார் கவிதைகள்.புதுமைப்பெண்.3.

**துணைநூற்பட்டியல்**

1. திருக்குறள் (உரை விளக்கம்)
   ஜி.வரதராஜன்,
   பழனியப்பா பிரதர்ஸ்
   ஏசியன் அச்சகம்
2. நாலடியார் மூலமும் உரையும்
   சாரதா பதிப்பகம்,
   ஜி.டி.சாந்தி அடுக்கம்,



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



சென்னை – 600 014.
5-ம் பதிப்பு 2007.

2/3 ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை – 600 014.

3. பாரதியார் கவிதைகள்,
தமிழவேல் ச.மெய்யப்பன்,
மாணிக்கவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ்,
சென்னை - 600 021.
6-ம் பதிப்பு 2008.

4. பாரதிதாசன் பாடல்கள்,
பேரா.தொ.பரமசிவன்,
நியூ சென்சுரி புக் ஹவுஸ், (பி.லிமிடெட்)
41.பி சிட்கோ இன்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை – 600 098.

5. பெண்ணின் பெருமை,
திரு.வி.கலியாண சுந்தரனார்,
சாரதா பதிப்பகம்,
6/16 தோப்பு வேங்கடாசலம் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை – 600 005.
3-ம் பதிப்பு 2008.

6. பாரதியும் ஷெல்லியும்,
தொ.மு.சி ரகுநாதன்,
நியூ சென்சுரி புக் ஹவுஸ், (பி.லிமிடெட்)
41- பி சிட்கோ இண்டஸ்டிரியல்
எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை – 600 098.

7. வள்ளலார் கூறும் வாழ்க்கை நெறி,
சாமி சிதம்பரனார்,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை,
சென்னை – 600 108.
1-ம் பதிப்பு 2003.

8. இனிய நீதி நூல்கள்,
கவிஞர்.பத்மதேவன்,
கற்பகம் புத்தகாலயம்,
4/2 சுந்தரம் தெரு,
தியாகராாய நகர்,
சென்னை – 600 017.
பதிப்பு – 2017.

9. மனித நேய கலை இலக்கியம்,
சங்கை வேலன்,
பாவை பப்ளிகேசன்ஸ்,
142, ஜானி ஜான் கான் சாலை,
ராயப்பேட்டை,
சென்னை – 600 014.
1-ம் பதிப்பு டிசம்பர் 2004.

10. பண்முக நோக்கில் பெண்ணியப்
பதிவுகள்,
சி.வாசுகி, சி.அயோத்தி,
நியூ சென்சுரி புக் ஹவுஸ், (பி.லிமிடெட்)
41- பி சிட்கோ இண்டஸ்டிரியல்
எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை – 600 098.
1-ம் பதிப்பு செப்டம்பர் 2007.


International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



11. வளர்ந்து வரும் இந்திய சமுதாயத்தில் கல்வி,
பேரா.கி.நாகராஜன்,
இராம் பதிப்பகம்,
பிளாட் G1, ஸ்ரீ அபார்ட்மெண்ட்ஸ்,
எண்.10.பாரதியார் தெரு,
காவேரி நகர்,
சாலிகிராமம்,
சென்னை – 600 093.
3-ம் பதிப்பு 2011.

12. பெண்ணியம் அணுகுமுறைகளும்,
இலக்கியப் பண்பாடும்,
இரா.ரெங்கம்மாள் மற்றும் சி.வாசுகி,
அறிவுப் பதிப்பகம்,
சென்னை – 600 014.
பதிப்பு -1 வருடம்-2005.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# தொல்காப்பியரின் எழுத்தியல் நெறி

**இரா.மணிகண்டன்,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
காஞ்சிமா முனிவர் பட்டமேற்படிப்பு மையம்,
புதுச்சேரி,

மானுட வாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாததும், அடிப்படையானதுமாகக் கருதப்படுவது மொழியேயாகும். அந்நிலையில் தமிழில் மக்களின் வாழ்வியல் மற்றும் மொழியியலுக்கு இலக்கணம் கூறும் தொல்காப்பியம் தமிழ் நெறியில் நின்று எழுதப்படும் எழுத்துக்களுக்கான நெறிகளையும் நூற்பாவழி பட்டியலிடுகின்றன என்பதை விளக்கும் விதாமாக இக்கட்டுரை அமைகின்றன.அவற்றில் எழுத்தியல் நெறிகளாவன

1. **மொழி முதல் எழுத்துக்கள்.**
2. **மொழி இடை எழுத்துக்கள்.**
3. **உடனிலை மெய்ம்மயக்கம்.**
4. **வேற்றுநிலை மெய்ம்மயக்கம்.**
5. **மொழி இறுதி எழுத்துக்கள்.**
6. **சார்ப்பெழுத்துக்கள் .**
7. **அளபெடை எழுத்துக்கள் .**
8. **எழுத்தின் முடிபு.**
9. **சொற்புணர்ச்சி விதிகள்.**
10. **அயலெழுத்துக் கலவாமை**

**மொழி முதல் எழுத்துக்கள்:**

பன்னிரெண்டு உயிர் எழுத்துக்கள் மொழிக்கு முதலில் வரும். உயிர்மெய் அல்லாத தனிமெய்கள் மொழிக்கு முதலில் வரா. க,த,ந,ப,ம என்னும் ஐந்து மெய்களும் பன்னிரெண்டு உயிர் எழுத்துகளுடன் மொழிக்கு முதலில் வரும். ச, என்னும் மெய் அ,ஐ,ஔ, இவைகளைத் தவிர ஏனைய ஒன்பது உயிர்களுடனும் முதலில் வரும். உ,ஊ,ஒ,ஓ ஆகிய நான்கு உயிர்களைத்தவிர மற்ற எட்டு உயிர்களுடன் வ என்னும் மெய் மொழிக்கு முதலில் வரும். ஞ என்னும் மெய் ஆ,எ,ஒ என்னும் மூன்று உயிகளுடன் மொழிக்கு முதலில் வரும். ய என்னும் மெய் ஆ காரத்துடன் மட்டும் மொழிக்கு முதலில் வரும். இவற்றில் மொழி முதலில் உயிர் எழுத்துக்களும், உயிர்மெய்யெழுத்துகளும் வரும். ஆய்தமும், மெய்யும் ங,ட,ண,ர,ல,ழ,ள,ற,ன என்னும் உயிர்மெய்யெழுத்துகளும் மொழிமுதலில் வராது.

**மொழி இடை எழுத்துகள்:**

மொழி இடை எழுத்துகள் என்பதனை தொல்காப்பியர் தனியாக குறிப்பிடாமல் எழுத்ததிகார நூன்மரபில் மெய்ம்மயக்க குறிப்பிடுகிறார்.


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com


**மெய்ம்மயக்கம்:**

தொல்காப்பியர் மொழியிடை நிற்கும் எழுத்துகளாக மெய்ம்மயக்கத்தை சுட்டுகிறார். இவற்றில் மயக்கம் என்ற சொல்லுக்குக் கூடுதல் என்பது பொருள். எந்தெந்த மெய்யெழுத்துக்கள் எந்தெந்த மெய்யெழுத்துக்களோடு சேர்ந்து வரும் என்பதைக் கூறுவது மெய்ம்மயக்கமாகும். இது உடனிலை மெய்ம்மயக்கம், வேற்றுநிலை மெய்ம்மயக்கம் என இரண்டாகப் பகுக்கிறார். இதனை

**அம்மூ வாறும் வழங்கியன் மருங்கின்**
**மெய்ம்மயங் குடனிலை தெரியுங் காலை. (தொல்.எ.22)**

என்னும் நூற்பாவில் குறிப்பிடுகிறார்.

**உடனிலை மெய்ம்மயக்கம்:**

**மெய்ந்நிலைச் சுட்டின் எல்லா வெழுத்தும்**
**தம்முன் தாம்வரூஉம் ரழ அலங்கடையே.(தொல்.எ.30)**

இவற்றில் மெய்கள் தம்மொடு தாம் மயங்கும் மயக்கம் உடனிலை மெய்ம்மயக்கம் எனப்படும். ர,ழ என்னும் இரண்டு மெய்களும் தவிர ஏனைய பதினாறு மெய்களும் தம்மோடு தாம் மயங்கும். இவற்றுள் க,ச,த,ப என்பன உடனிலை மெய்ம்மயக்கத்திற்கே உரியன. எ.கா. காக்கை-க்க்.

**வேற்றுநிலை மெய்ம்மயக்கம்:**

**டறலள வென்னும் புள்ளி முன்னர்க்**
**கசப வென்னும் மூவெழுத்துத் துரிய. (தொல்.எ.23)**

ஒரு மெய்யெழுத்து பிற மெய்யெழுத்தோடு மயங்குவது வேற்றுநிலை மெய்ம்மயக்கம் என்பர். க,ச,த,ப தவிர்த்த ஏனைய பதினான்கு மெய்களும் வேற்றுநிலை மெய்ம்மயக்கதிற்கு உரியன. இவற்றின் மூலம் மொழியின் இடையில் ஆய்தமும் மெய்யும் உயிர்மெய்யுமே வரும். தனியுயிர் மொழியிடையில் வராது. மேலும் உயிருள் குறில் மட்டும் அளபெடைக் குறியாக வரும் என்பது புலனாகிறது.

**மொழி இறுதி எழுத்துக்கள்:**

ஔ தவிர்த்த ஏனைய பதினொன்றும் உயிர்களும் மொழி இறுதியில் வரும். க,வ ஆகிய மெய்களுடன் ஔவும் இறுதியில் வரும். எ என்ற உயிர் தானே ஈறாகும். ஒ என்ற உயிர் நகர மெய்யுடன் மட்டும் இணைந்து ஈறாகும். ஞ கரம் ஏ,ஓ என்ற உயிர்களுடன் ஈறாகுவதில்லை ந,வ என்னும் மெய்களுடன் உ,ஊ என்ற உயிர்கள் ஈற்றில் வருவதில்லை, ச என்ற மெய் உ என்ற உயிருடன் இணைந்து இரண்டு சொற்களில் இறுதியில் வரும். த என்ற மெய் உகரத்துடன் இணைந்து ஒரு சொல்லில் வரும். ஞ,ண,ந,ம,ன,ய,ர,ல,வ,ழ,ள என்னும் பதினொரு மெய்களும் மொழிக்கு ஈறாகும். ந கரம் இரு சொல்லிலும், ஞ காரம் ஒரு சொல்லிலும், வ கரம் நான்கு சொல்லிலும் ஈறாகும்.

**சார்பெழுத்துக்கள்:**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



தானே தனித்து இயங்கும் ஆற்றல் இன்றி பிறவற்றை சார்ந்து வருவது சார்ப்பெழுத்துக்கள் ஆகும்.

**சார்ந்து வரல் மரபின் மூன்றலங்கடையே**

**அவைதாம்**

**குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற**

**முப்பாற் புள்ளியும் எழுத்தோரன்ன.**

என்று குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்ற மூன்றினை மட்டும் தொல்காப்பியர் சார்ப்பெழுத்துக்களாகக் குறிப்பிடுகின்றார்.

**அளபெடை எழுத்துக்கள் :**

**குன்றிசை, மொழிவயின் நின்றிசை நிறைக்கும்**

**நெட்டெழுத்திம்பர் ஒத்த குற்றெழுத்தே.**

என்று செய்யுளில் ஓசை குறையும்போது அதனை நிறைவு செய்ய நெட்டெழுத்தின் பின்னாக அவற்றின் இனம் ஒத்த குற்றெழுத்துக்கள் வரும் என்று அளபெடைப் பற்றிக் கூறுகிறார்.

**எழுத்தின் முடிபு கூறல்:**

மொழி முதலெழுத்து, இடையெழுத்து, இறுதி எழுத்து என்று கூறும் தொல்காப்பியர் தாம் கூறிய எழுத்துகளின் முடிபாக ஆராய்ந்து கண்டதில் தமிழ் மொழியில் மூன்று மாத்திரை அளபு பெறும் எழுத்துக்கள் இல்லை என்கிறார்.

**மூவளபிசைத்தல் ஓரெழுத்தின்றே.**

என்ற நூற்பாவை முன்னிருத்தும் தொல்காப்பியர். மேலும் நீண்ட மாத்திரையுடைய அளபெடை எழுத்துப்பெற வேண்டின் இரண்டளபுடைய நெடிலையும், ஓரளபுடைய குறிலையும் கூட்டி எழுதவேண்டும் என்று முன்னோர் கூறுவதாகத் தொல்காப்பியர் கூறுகிறார்.

**நீட்டம் வேண்டின் அவ்வளபுடை**

**கூட்டி யெழு உதல் என்மனார் புலவர்.**

**சொற்புணர்ச்சி விதிகள்:**

தொல்காப்பிய எழுத்ததிகாரத்தின் முதல் மூன்று இயல்கள் தவிர ஏனைய ஆறு இயல்கள் எழுத்துக்கள் புணரும் விதத்தை புணரியல் பற்றிய செய்திகளாக விவரிக்கிறார். உயிர் மற்றும் மெய் எழுத்து வடிவிலான சொற்கள் வேற்றுமை மற்றும் அல்வழியில் புணரும் பாங்கினை புணரியியல், தொகைமரபு, உருபியல்,உயிர் மயங்கியல், புள்ளி மயங்கியல், குற்றியலுகரப் புணரியல் என்று சொற்கள் புணரும் விதத்தை ஆராந்துள்ளார். பொதுமையில் சொல்லின் இறுதியில் உள்ள எழுத்தோடு புணர்மொழி ஈற்றும், வருமொழி முதலெழுத்தும் குறித்துவருகிளவியோடு இணையும் முறை புணரியல் விதிகளாக விளக்கப்படுகின்றன.

**அயலெழுத்துக் கலவாமை:**

ஒரு மொழியில், அதற்கென்று வரையறுக்கப்பட்ட எழுத்தொடு வேறொரு மொழிக்குரிய எழுத்தைக் கலந்து எழுதக் கூடாது என்பது மொழிகளின் பொது மரபாகும். ஓர்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



அயற்சொல்லுக்கு ஏற்ற சொல் அதனைக் கொள்ள விரும்புவார் மொழியில் இல்லை எனினும்,ஏற்றசொல்லை ஆக்கிக் கொள்ள முடியாத அரிய சொல்லாக இருந்து அச்சொல்லை எடுத்துக் கொள்ளவில்லை என்றால், அப்பொருளை விளக்கிக் கூற இயலாநிலையில் ஏற்றச் சொல்லை கொள்ள விருப்பும் மொழிமரபுக்குத் தகுமாறு கொள்ள வேண்டும் என்பது மொழிக்காப்பாளரின் கடமையாகும்.இந்நிலையில் தமிழ்மொழியில் எச்சொல்லிலும் எவ்விடத்தும் பிறமொழியெழுத்தும் எழுத்துமுறையும் வருதல் கூடாது. என்பதை வலியுருத்தும் விதமாக தொல்காப்பியர் நான்கு வகையான சொல்வகைகளைப் பற்றி குறிப்பிடும்போது வடசொல் என்பதை

**“வடசொற் கிளவி வடவெழுத்துத் தொரீஇ**
**எழுத்தோடு புணர்ந்த சொல்லாகும்மே.”**

என்கிறார்.வடசொல் தமிழுக்கு வேற்றுச் சொல்லாகவும், வேற்றெழுத்துச் சொல்லாகவும் தொல்காப்பியர் காலத்தே இருந்தமை புலனாகிறது. தனித்து இயங்க ஆற்றல் வல்ல தமிழ் மொழியில் பிறமொழிச் சொற்கள் இன்றியமையாததும், மொழிபெயர்கக முடியாதது மாயின் அச்சொல்லை கட்டாயம் எடுத்தால வேண்டும் என்னும் நிலையில் மகப்பேறு வாயாதவர் ஒரு குழந்தையை மகவாகக் கொள்ளும் போது தம் குடும்பத்துக் குழந்தை என்பதை முற்றிலும் காக்கும் வகையில் அக்குழந்தையின் முன்னைத் தொடர்பை விலக்கித் தம் குடும்பத்திற்கு தகுபெயர் சூட்டித் தம் குடிமை உறுப்பாகவே வளர்த்து வருதல் போல் அயற் சொல்லைத் தம்மொழிக்குத் தகக் கொண்டு ஆள வேண்டும் இதனை **“எழுத்து ஓரீஇ” ‘எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே’** என்கிறார்.

பிறமொழிச் சொற்களைத் தழிழில் எழுத நேருங்கால் மொழிமரபைப் பேணுகின்றவகையில் நான்கு நிலைகளை மொழிகாப்பாளர் முன்மொழிகின்றனர். அவை

1. **வடவெழுத்து நீக்கல்.**
2. **வடமொழி வியாகரணம் விலக்கல்.**
3. **தற்சமம்.**
4. **தற்பவம்.**

தமிழ் மொழியில் சொல் முதல் வரா எழுத்துக்களை முதலிற்கொண்ட பிறமொழிச் சொற்கள் தமிழ் மொழியில் எழுதப்பெறின் அவற்றின் முதலெழுத்து நீக்கப் பெறும் (எ.கா.ரிக்ஷபம்-இடபம்) அல்லது மாற்றப் பெறும்(எ.கா.ஹரி-அரி) மேலும் அதன்முன் ஓர் உயிர்க்குறில் சேர்க்கப்பெறும்(எ.கா.ராமன் - இராமன்) அயலெழுத்து இறுதி கொண்ட சொல்லாயின் உயிர் எழுத்துக்கள் சேர்க்கப் பெறும் (எ.கா.மாலா -மாலை)மெய்ம்மயகத்தை இடையில் கொண்ட சொல்லாயின் அது தமிழுக்கேற்றவாறு மாற்றப் பெறும்.(எ.கா. க்ஷேக்பியர் - சேக்கசுப்பியர்).

**தற்சமம்:**

வடமொழிக்கும் தமிழ் மொழிக்கும் பொதுவான எழுத்துகளைக் கொண்டு அமையும் சொற்களை தற்சமம் என்பர். எ.கா. காரணம், குங்குமம்,அமலம்,கமலம்.


International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**தற்பவம்:**

வடமொழிச் சிறப்பெழுத்தாலும் பொதுவும் சிறப்புமாகிய இருவகை எழுத்தாலும் தமிழில் சிதைந்து வரும் வட சொற்களைத் தற்பவம் என்பர். எ.கா. சுகி,போகி,(சிறப்பு) அரன், அரன் (பொதுவும் சிறப்பும்)

**வியாகரணம்:**

ஒரு வாக்கியத்தின் பகுதியவான சொற்களை வேறாக்கி மற்றைப் பகுதியோடுள்ள தொடர்பினைத் தெளிவாகக் காட்டுவது வியாகரணம் ஆகும்.ஓர்ப்பு, எளிமை, ஐயம் தீர்த்தல் என்பன சொற்றொடரமைதியை ஆராய்ந்தறிந்து வழுவில்லாத சொற்களையும் அவற்றின் தொடர்பையும் எளிய முறையில் ஐயமக் கூறுதலாகும்.

மேற்கூறப் பட்டயாவும் மொழிமரபைப் பேணுகின்றவகையில் தொல்காப்பியர் மொழி முதல், இடை, இறுதி எழுத்துக்களாக பகுத்து கூறியதின் மூலம் தழிழ் மொழியில் முதலிலும், இறுதியிலும் இன்ன இன்ன எழுத்துகள் தாம் வரும் என்ற வரையறையும், மொழிகளின் இடையில் இன்ன எழுத்துக்குப் பக்கத்தில் இன்ன எழுத்து வரும் இன்ன எழுத்து வராது என்ற வரையறையும், பிறமொழிச் சிறப்பெழுத்துக்களைத் தமிழில் இயன்ற துணைக் கொண்டு தமிழ் வரிவடிவுகளாகவும், தமிழ் ஒலி மரபிற்கேற்பவும் எழுதுதல் வேண்டும். என்பன போன்றவை எழுத்தியல் நெறிகளாக சுட்டப்பெறுகின்றன.

**பார்வை நூல்கள்:**

1. இளம்பூரணம், தொல்காப்பியம் எழுத்ததிகாரம் , தமிழ்மண் பதிப்பகம், சென்னை.2003.
2. நச்சினார்க்கினியம், தொல்காப்பியம் எழுத்ததிகாரம், தமிழ்மண் பதிப்பகம், சென்னை.2003.
3. கோபாலையர் தி.வே, தழிழ் இலக்கணப் பேரகராதி எழுத்து (தொகுதி.1,2,), தமிழ்மண் பதிப்பகம், சென்னை. 2003



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



# நாலடியாரில் அறநெறிக்கூறுகள்

**கு.மதியரசி,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
கிருஷ்ணசாமி மகளிர் அறிவியல் கலை
மற்றும் மேலாண்மையியல் கல்லூரி,
கடலூர்.

## முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் அற இலக்கியங்கள் தோன்றிய காலமாகக் களப்பிரர்காலம் குறிக்கப்பெறுகிறது. பதினெண்கீழ்க்கணக்கு என அவை அழைக்கப்பெறும். இதில் பதினொன்று அற இலக்கியங்கள் இடம்பெற்றுள்ளன. இவ்வற இலக்கியங்கள் எல்லாம் மக்களின் வாழ்வினைச் செம்மைப்படுத்த உதவும் இலக்கியங்களாக விளங்குகின்றன. விண்ணளவு உயர்ந்து மனிதன் வாழ விரும்புகிறான். விண்ணுலக வாழ்வை இம்மண்ணுலகிலும் பெறலாம். அத்தகைய வாழ்வினை அடைவதற்கு அவன் மேற்கொள்ள வேண்டிய வாழ்க்கை முறையினையும் சமுதாய ஒழுக்கங்களையும் எடுத்துக்கூறும் அற இலக்கியமாக நாலடியார் தலைசிறந்து விளங்குகிறது. திருக்குறள் இரண்டு அடிகளால் ஆகியது. நாலடியார் நான்கு அடிகளால் ஆகியது. இந்த அடி கணக்கை வைத்துக் கொண்டு இரண்டு நூலையும் ஒருங்கே போற்றும் பழமொழி ஒன்று உண்டு.

**“ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி**
**நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி” என்பதாகும்.**

தனிமனிதப் பண்புகள் ஒருமனிதனை சிறப்பாக செயலாற்றுவதற்கும் தன்னைப் பற்றிய மதிப்பீட்டை செய்துகொள்வதற்கான நம்பிக்கை இலக்கணமாகும். சமூகத்தில் அமைதியும் மகிழ்ச்சியும் நிலவவேண்டுமெனில் ஒவ்வொரு தனிமனிதனும் தனக்கென்று நில கடமைகளையும் கட்டுப்பாடுகளையும் ஒழுக்கங்களையும் விதித்துக் கொள்ள வேண்டும். ஒருதனிமனிதன் பிறரிடம் எந்தெந்தப் பண்புகளை எதிர்பார்க்கின்றானோ அந்தப் பண்புகளைத் தானும் பெற்றிருக்க வேண்டும். அவ்வகையில் ஒவ்வொரு மனிதனும் பெற்றிருக்க வேண்டிய அறப்பண்புகளை நாலடியாரின் வாயிலாக விளக்க முற்படுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## அறம் பற்றிய கருத்துக்கள்

மனித இனம் வரையறுத்துக் கொண்ட ஒழுக்க நெறியே அறம் எனப்பட்டது. அந்த அறமானது தனி மனித வாழ்விலும் சமூக வாழ்விலும் பின்பற்ற வேண்டும் என்பதை வலியுறுத்துவதே அற இலக்கியங்களின் கடமையாக அமைந்தது. சிந்தனை, செயல், சொல், தியானம், உணர்வு, ஈடுபாடு என அனைத்து நிலைகளிலும் அறம் உயிர்நாடியாக விளங்குகிறது. மனித வாழ்வில் செய்கின்ற நற்காரியங்கள் அறங்களாகக் கருதப்பட்டன.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



நம் முன்னோர் அறம் என்னும் சொல்லிற்குத் தந்துள்ள விளக்கத்தோடு எதிக்ஸ் **(Ethics)** என்னும் ஆங்கிலச்சொல்லிற்குத் தரப்படும் பொருள் விளக்கம் மிகவும் பொருந்துவதாக உள்ளது. நல்ல அல்லது தீய செயல்கள் மூலம் தானே வெளிப்படும் மக்களுடைய நடத்தையைப் பற்றிய ஆய்வில் கலையை 'எதிக்ஸ்' என்பதாகும். இதைத் தமிழில் அறவியல் எனலாம்.

எதிக்ஸ் என்னும் சொல் கிரேக்க மொழிச்சொல்லாகும். முதன்முதலில் இச்சொல் பழகிப்போன நடத்தை, வழக்கம், மரபு என்னும் பொருள்களையே உணர்த்தி வந்தது. பின்னர் நடத்தை என்னும் பொருளே போற்றப்பட்டது. ஒழுக்கத்தைக் குறிப்பிடும் Moral என்னும் ஆங்கிலச்சொல்லும் பழக்க வழக்கம் என்னும் பொருளையே குறித்தது. இதனால் மனித நடத்தை குறிப்பிட்ட ஒரு சமுதாயத்தில் வாழும் மக்கள் வழக்கமாகக் கொள்ளும் முடிவையே ஒழுக்கமாகக் (Morality) கொண்டனர் என்பது புலனாகிறது. இதனால் தனி மனித நடத்தை பெரும்பாலோரால் பின்பற்றப்பட்ட பொழுது ஒழுக்கமெனும் பண்பாக மலர்ந்தது. வாழ்க்கை நெறியாக மாண்புற்றது எனலாம்.

**நாலடியார் கூறும் அறக்கருத்துக்கள்**

1. செல்வம் நிலையாமை
2. இளமை நிலையாமை
3. யாக்கை நிலையாமை
4. பொறையுடைமை
5. அறன் வலியுறுத்தல்
6. ஒழுக்கம்
7. சினமின்மை
8. கல்வி
9. ஈகை
10. தற்பெருமை வேண்டாம்
11. நட்பாராய்தல்
12. பிறன்மனை நயவாமை

**செல்வம் நிலையற்றது**

முன்பு தம் இல்லத்தில் மனைவி விருப்பத்துடன் ஊட்ட அறுசுவை உணவை மறுபிடி தேவையின்றி உண்ணும் அளவுக்குச் சிலர் வளமாக வாழ்ந்திருப்பர் பின்னர், அந்நிலை மாறிவிட அவரே, ஏழையாகி மற்றொருவர் வீட்டு வாயிலை அடைந்து, தமக்குக் குடிக்க கூழ் தருமாறு யாசிப்பர். எனவே, உலகில் ஒருவர் பெறுகின்ற செல்வம் நிலையானது அல்ல. செல்வம் தன்னை ஈட்டியவரிடம் நிலைத்து நில்லாமல் வண்டிச் சக்கரம் போல் பலரிடமும் சுழன்று செல்லக்கூடியது.எனவே மக்கள் நிலத்தை ஏற்பூட்டி உழவுத்தொழில் செய்தல் மூலம்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



நல்வழியியல் உற்பத்தி செய்த செல்வத்தையும் உணவையும் பலருக்கு பகிர்ந்த கொடுத்துத் தாமும் துய்க்க வேண்டும் என்பதை,

**"அறுசுவை யுண்டி அமல்நிதில்லாள் ஊட்ட**
**மறுசிகை நீக்கியுண்டாரும் வறிஞராய்ச்**
**சென்றிரப்பர் ஓரிடத்துப் கூழ்எனின் செல்வம் ஒன்**
**றுண்டாக வைக்கற்பாற் றன்று"**[1]

என்று நாலடியார் பாடல் விளக்குகிறது.

எமன் மக்களின் உயிரைக் கவர்ந்து செல்லச் சினத்துடன் என்றும் வருவான். எனவே மக்களின் வாழ்க்கை எந்த ஒரு நாளிலும் முடியலாம். ஆதலால், மக்கள் இன்று தம்மிடம் உள்ள செல்வம் நிலையற்றது என உயர்ந்து தம்மால் இயன்ற அளவு அறச்செயல்களை விரைந்து செய்ய வேண்டும். இறைவன் உலக மக்கள் ஒவ்வொருவரும் எவ்வளவு நாள்கள் வாழ வேண்டும் என வகுத்துள்ளான். அக்காலத்திற்கு அப்பால் யாராலும் தப்பி வாழ முடியாது. இன்று செல்வம் பெற்றிருப்பவர் மறுநாளே தமது இல்லத்தில் சாவுப்பறை முழங்கலாம் என உணர்ந்து இன்றே அச்செல்வத்தை ஏழைகளுக்குக் கொடுத்து உதவ வேண்டும்.

**இளமை நிலையாமை**

கூன் வளைந்து, தலை நடுங்கி, தடியினை ஊன்றி நடக்கிறாள் முதியவள் ஒருத்தி. இவளும் இளமையில் கண்டோர் வியக்கும் தெய்வப் பெண்ணாக இருந்திருப்பாள். அழகும், இளமையும் நிலைத்து நில்லாதது என்பதைனைக் காட்டுகிறது.

**"தாழாத் தளராத் தலைநடுங்காத் தண்டு ஓன்றா**
**வீழா இறக்கும் இவள்மட்டும் காழ்இலா**
**மம்மரகொள் மாந்தர்க்கு அணங்காடும் தன்னகச் கோல்**
**அம்மனைக் கோல் ஆகிய ஞான்று"**[2]

என்ற பாடலின் வழி அறியலாம்.

கடுங்காற்று அடிக்கும்போது முதிர்ந்த பழங்கல் உதிர்கின்றன. பிஞ்சுகளும் உதிர்ந்து பிடுதல் உண்டு.கூற்றுவன் முதியவரை மட்டுமல்லாது இளைஞரையும் எடுத்துக் கொள்வதுண்டு. அதனால் நாம் இளைஞர் பின்னால் அறம் செய்து கொள்ளலாம் என்று காலம் தாழ்த்த வேண்டாம். எனவே இப்போதே அறம் செய்ய வேண்டும் என்பதை,

**"மற்றுவாம் நல்வினை யாம்இளையோம் என்னாது**
**கைத்துண்டாம் போழ்தே கரவாது அறம்செய்ம்மின்**
**முற்றி யிரந்த கனியொழியத தீவளியால்**
**நற்காய் உதிர்தலும் உண்டு"**[3]

விளக்குகிறது. எனவே இளமையிலேயே அறம் செய்ய வேண்டும் என்கிறது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**யாக்கைநிலையாமை**

பிறப்பு உண்டென்றால் இறப்பும் உண்டு. பிறந்தவர் யாவரும் இறந்து தான் ஆக வேண்டும். இதை யாராலும் தவிர்க்க இயலாதது. ஒரு நாள் கழிந்தது என்றால் வாழ்நாளில் ஒரு பகுதி குறைந்தது என்று பொருள். நிலையாமை என்னும் அதிகாரத்தில் வள்ளுவரும் உயிரைப் பறவைக்கு ஒப்பிட்டுச் சொல்கிறார். முட்டைக்குள் இருக்கும் கரு உரிய காலம் வந்த போது முட்டை தனித்து கிடைக்கும். இது போன்ற உறவு தான் உடம்புக்கும் உயிருக்கும் இடையே இருக்கிறது. செல்வம், இளமை, யாக்கை ஆகியவற்றின் நிலையாமையை உயர்ந்து செய்யும் அறத்தின் பயன் மிகப்பெரியது. மிகச் சிறிய ஆலம் விதை வளர்ந்து மரமாகிப் பெரிய நிழலைத் தரும். அதுபோல தகுதியுடையவர்கருச் செய்யும் அறமும் அளவால் சிறியதாயினும் அதன் பயன் வானத்தை விடப் பெரியதாகி வளர்ந்து நிற்கிறது.

மழைநீரில் தோன்றும் நீர்க்குமிழி போன்று தோன்றி உடனே மறையும் தன்மைக் கொண்டது இவ்வுடல். இவ்வுண்மையை உயர்ந்து தம் இளமைப்பருவத்திலேயே அறங்கள் பல செய்து அறநெறியில் நின்று வீடுபேறு பெற முயலுதல் வேண்டும். இதனை

**“யாக்கையை யாப்புடைத்தாய் பெற்றவர்தாம் பெற்ற**
**யாக்கையா வாயபயன் கொள்க”**[4]

என்ற வரியானது கூறுகிறது.

வீட்டில் திருமணத்தின் போது கேட்கும் மணப்பறையின் ஒலியானது நீங்கி சாவுப்பறையின் ஒலியும் பிற்காலத்தில் கேட்கும். ஆகவே மனிதன் இந்த உடம்பு நிலையானது என்று எண்ணாமல் வாழும் காலத்தில் பிறருக்கு நல்லது செய்ய வேண்டும் என்பதை மனதில் கொள்ள வேண்டும்.

**பொறையுடைமை**

நன்கு கற்று அறிய வேண்டியதை அறிந்து அடக்கம் உடையவராய், பயப்பட வேண்டியதற்குப் பயந்து, நம்மை இகழ்பவர்களையும் தீமை செய்பவரையும் பொறுத்துக் கொள்ளுதல் வேண்டும். மேலும் தமக்கு தகுந்தவாறு உரிய செயல்களை உலகம் மகிழுமாறு செய்து, அதனால் அடையத்தகும் பயனைப் பெற்று இனிமையோடு வாழ்பவரின் வாழ்க்கையில் துன்பம் என்பதே இல்லை என்பதை,

**“பேதையோடி யாதும் உரையற்க பேதை**
**ஊரைப்பிற் சிதைந் துரைக்கும் வகையான**
**வழுக்கிக் கழிதலே நன்று”**[5]

என்ற பாடலின் மூலம் அறிவில்லாதவன் முறை தவறித் தவறாகப் பேசினாலும் அவனுடன் பேசாமல் முடிந்தவரையில் அவனைவிட்டு நீ விலகி இருப்பதே உனக்கு நன்மையைத் தரும்.

**“நிறையுடைமை நீர்மையுடைமை தொடையே**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



**பொறையுடைமை பொய்மை புலாற்கண்"[6]**

என்ற பொறையுடைமையின் மாண்பை ஏலாதி உரைக்கிறது.

**அறன் வலியுறுத்தல்**

பிறருக்கு உதவி வெய்வதால் மனமானது இதமான இன்பத்தை அனுபவிக்கிறது. மனித குலத்தினுடைய மாண்புகளில் சிறந்தவற்றில் ஒன்றாக இருப்பது பிறர் மீது இரக்கம் கொள்வது ஆகும். இன்றைய சூழலில் அனைத்து குணங்களும் சுருங்கிக் கொண்டே வருகின்றன. புகழ் பாராட்டுக்காக என்று இல்லாமல் மனப்பூர்வமான உதவி செய்ய வேண்டும் என்ற ஆர்வம் வரவேண்டும். அழிய கூடிய உடலைக் கொண்டு அழியாதச் செயல்களைச் செய்ய வேண்டும் என்பதை,

**"அரும் பெறல் யாக்கையைப் பெற்றபயத்தால்**
**பெரும் பயனும் ஆற்றவேகொள்க-கரும்புஊர்ந்த**
**சாறுபோல சாலவும் பின்உதவிமற்று அதன்**
**கோதுபோல் போகும் உடம்பு"[7]**

என்கிறது நாலடியார். உடம்பால் பயனுடைய அறச்செயல்களை செய்து முடித்தல் வேண்டும் என்பதை உணர்த்துகிறது.

**ஒழுக்கம்**

சான்றோர்கள் யாரேனும் நமது இல்லத்திற்கு வந்தால் அவர்களைப் பார்த்ததும் மரியாதையின் நிமித்தமாக நம் இருக்கையை விட்டு எழுவதும் அவர்களை வரவேற்பதற்காக எதிரே செல்வதும் மற்றும் அவர்களுக்கு விடை கொடுப்பதற்காக அவர்களோடு செல்லுதலும் ஆகிய இந்நற்பண்புகளை நற்குடியின்கண் பிறந்தவர்கள் கடைபிடிக்கின்றன. இப்பண்புகளை பின்பற்றாதவர்களிடம் எந்தவித ஒழுக்கத்தையும் காண இயலாது என்பதை

**"இருக்கை எழலும் எதிர்செலவும் ஏனை**
**விடுப்ப உழிதலோ டின்ன-குடிப்பிறந்தார்**
**குன்றா ஒழுக்கமாகக் கொண்டார் கயவரோடு**
**ஒன்றா உணரற்பாற் றன்று"[8]**

இப்பாடல் தரும் விளக்கமாகும்.

கரிகாலன் மன்னன் கூட தன்னை நாடி வந்தவர்களை வரவேற்று உபசரித்து வழியனுப்பும் முறையினை பொருநர் ஆற்றுப்படை பதிவு செய்துள்ளார். இவற்றின் மூலம் சங்க இலக்கியங்களும் தமது வாழ்வியல் ஒழுக்கத்தின் மேன்மையையே நன்கு உணர்த்தியுள்ளதை அறிய முடிகிறது.

**சினமின்மை**

பொறுமை ஒருவனை வலிமை உடையவனாக ஆக்குகிறது என்று கூறலாம். ஆரோக்கியமான மனித உறவுகள் வாழ்வில் வெற்றிக்கான அடித்தளம். தம்மோடு ஒப்பு



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal 

E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com

இல்லாத பண்பற்ற சிறியோர் கடுஞ்சொற்களால் திட்டும் போது உயர்ந்தோர் வேர்த்துப் பதிலுக்கு வெகுளமாட்டார். ஆனால் கீழோர் செவிமடுத்தகடும் சொல்லை மனத்தில் அசைப்போட்டு நினைத்துப் பார்த்து ஊரில் உள்ள பலரும் கேட்கும்படி சொல்லிச் சுவர் முதலியவற்றில் அடித்து மோதி துள்ளிக் குதித்துத் தூணின் மேலும் முட்டுவர் என்பதை

**“நேர்த்துநிகர் அல்லார் நீர் அல்லசொல்லிக்கால்**
**வேர்த்துவெகுளார் விழுமியோர் ஓர்த்துஅதனை**
**ஒள்ளத்தான் உள்ளி உரைத்து உராய் ஊர்கேட்ப**
**துள்ளி தூண்முட்டுமாட் கீழ்”[9]**

என்று நாலடியார் கூறுகின்றது.

**கல்வி**

ஒரு மனிதனை அழகாகக் காட்டக்கூடியது கல்வியே ஆகும். புற அழகுகள் அல்ல. அகத்தை நடுநிலைமைக்குக் கொண்டுவரும் கல்வி அழகே அழகே ஆகும்.

**‘கல்விகரை இல் கற்பவர் நாள் சில’[10]**

என்ற வரிகளுக்கேற்ப வாழக்கூடிய நாட்களிலே நல்லனவற்றைத் தெரிவுச் செய்து கற்றல் பிறந்த பிறப்பிற்குப் பயனுடையதாக அமையும். தான் மகிழ்ச்சி அடைவதற்குக் காரணமான கல்வியால் உலகமும் இன்புறுவதைக் கண்டு கற்றறிந்த அறிஞர் மேன்மேலும் அக்கல்வியை விரும்புவர் என்பதை வள்ளுவர்,

**“தாம்இன் புறுவதுஉலகுஇன் புறக்கண்டு**
**காமுறுவர் கற்றறிந் தார்”[11]**

என்கிறார். இயற்க்கையாகவே ஒவ்வொரு மனிதனுக்கும் அறிவாற்றல் நிறைந்து காணப்படுகிறது. ஒரு மனிதன் பெறுகின்ற உலக அனுபவங்களிலிருந்து அறியும் ஆற்றலைப் பெற்றுக்கொள்கிறான். அதை மேலும் பெருக்கிக் கொள்ள கல்வி உதவுகிறது.

**“பிச்சைபுக்கு ஆயினும் கற்றல் மிக இனிதே**
**நல்சபையில் கைக்கொடுத்தல் சாலவும் முன்இனிதே”[12]**

என கற்றலின் இனிமையை சிறப்பை இனியவைநாற்பது புலப்படுத்துகின்றது. மக்களாகப் பிறந்தோர் அனைவரும் இவ்வுலகத்து இயற்கையினை உள்ளவாறு உணர்ந்து தெளிந்து தம்முடைய மனத்தைப் பண்படுத்தி உடலையும் உயிரையும் ஒன்றுபட்டு வாழ்வாங்கு வாழ்வதற்குக் கல்வி அறிவு இன்றியமையாதது வேண்டப்படுகிறது.

கல்வி என்பது சில நிகழ்ச்சிகளையும் பொருள்களையும் அவற்றின் இயல்புகளையும் அறிவது மாத்திரம் அன்று. ஊக்கமும் மகிழ்ச்சியும் விளைத்து உள்ளத்தைப் பண்படுத்தி உயர்ந்த எண்ணங்களைத் தோற்றுவித்து உயர்நெறியில் செலுத்துவதே உண்மையான கல்வியாகும் என்று கூறும் நாட்டார் ஐயா அவர்களின் கருத்து நம் சிந்தனையைத்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



தூண்டவல்லதாகும். **(பேரா.பி.விருத்தாசலம் சிந்தனைச்சுடர். பக்-52,53)**[13] தனிமனிதனின் மனத்தில் அமைதி தவழ வேண்டுமானால் கல்வி அவசியமாகும்.

**ஈகை**

இரப்பார்க்கென்று ஈதல்; ஈதல் அவர் வேண்டுவது ஈதல். அவர் கேட்பதற்கு முன்பாகவே அவர் முகக்குறிப்பு அறிந்து எவ்வகைப் பயனும் கருதாது ஈவதே ஈகை. இத்தகைய பண்புகள் ஒருங்கு சேர்ந்ததே ஈகை அறமாகும். வாழ்வியல் அறங்கள் பல இருந்தாலும் வறியவர்களுக்கு கொடுக்கும் சிறந்த பண்பே ஈகையாகும். எவ்வித எதிர்ப்பார்ப்பும் திரும்பப்பெறும் தண்மையும் அற்றது ஈகை. தாய் இழந்தபிள்ளை, மனைவியை இழந்த தலைவன், வாய் பேச முடியாத ஊமைகள், வாணிகம் செய்து தன்பொருளை இழந்தவர்கள், உணவு உண்பதற்கே ஆதரவு இல்லாதவர்கள், பார்வையற்றவர்கள் இவர்களே ஈதலுக்கு உரியவர்களாக அறஇலக்கியங்களில் கூறப்பட்டிருப்பினும் நம்முடைய முன்னோர்கள் எவ்விதப்பாகுபாடுமின்றி அனைத்து உயிர்களுக்கும் ஈகை செய்த செய்திகள் இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

உதாரணமாகச் சொன்னால் பலம் நிறைந்த பாரியின் செல்வங்களை மூவேந்தர்களும் சேர்ந்து போர் செய்து வெல்லக் கருதினாலும் முடியாது. இத்தகைய சிறப்புப் பொருந்திய பாரி, சிறிய யாழை மீட்டி இசைப்பாடி வரும் பாணர்களுக்கு நாட்டையும் குன்றையும் சேர்த்து பரிசாகத் தந்தான் என்பதை,

> **'விரைஒலி கூந்தல் நும் விறலியர் பின்வர**
> **ஆடினீர் பாடினீர் செலினே'**[14]

என்ற புறநானூறு பாடல் அடிகள் வாயிலாக அறியலாம்.

தம்மிடம் பொருள் இல்லாத போதும் தம்மை நாடி இரந்து கேட்பவர்களுக்கு இல்லையென்று கூறாமல் தம்மால் இயன்ற அளவு பொருள் உடையவர் போன்று பெரிதும் மகிழ்ந்து கொடைத்தன்மை கொண்ட ஈகைக்குணம் உடையவரை வானுலகத்தேவர்களும் போற்றுவர்.

ஈகை என்பதற்கு இண்டங்கொடி, கற்பகமரம், காடை, கொடை, பொன், முகில், வண்மை, இல்லாமை, ஈதல், கொடுத்தல் என்று பொருள் தருகிறது **மெய்யப்பன் தமிழ் அகராதி.(ப.168)**[15]

ஊருக்குள்ளே ஓர் உயர்ந்த இடத்தில் எல்லோரும் வந்து பயன் பெற்றுச் செல்லுமாறு காய்த்துக் குலுங்கும் பயனுடைய பனைமரம் போன்றவர்கள் பலரும் விரும்பி வந்து பயன் பெறும்படி பிறர்க்கு உதவி வாழ்கின்ற பெரியோர்கள் ஆவர். அப்படி இல்லாது மிகப் பெரிய அளவு செல்வச்சிறப்பிருந்தும் பிறருக்கு உதவி வாழாதவர்கள் ஒருவருக்கும் பயன்படாது ஊருக்கு வெளியே சுடுகாட்டில் இருக்கும் வெற்றுப்பனைமரம் போன்றவர்களாவர். எனவே செல்வம் இருக்கும் போது பலருக்கும் பயன்படும்படி இருக்க வேண்டும் என்பதை



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**“நடுவூருள் வேதிகை சுற்றக்கோட் புக்க**

**படுபனை யன்னர் பலர்நச்ச வாழ்வார்**

**குடிகொழுத்தக் கண்ணுங் கொடுத்துண்ணா மாக்கள்**

**இடுகாட்டுன் ஒற்றைப் பனை”[16]**

என்ற நாலடியார் பாடல் மூலம் அறியலாம். இக்கருத்திற்கு ஏற்ப வள்ளுவர் பிறருக்கு உதவி செய்வனிடத்தில் செல்வம் உண்டாகுமானால் அஃது ஊரின் நடுவே உள்ள பயன் மிக்க மரத்தால் பழம் பழுத்தது போன்றதாகும் என்று,

**‘பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்**

**நயனுடை யான்கண் படின்’[17]**

என்று குறள் வழி அறிவுறுத்துகிறார்.

**தற்பெருமை வேண்டாம்**

பணிவும் அடக்கமும் பெரியோருக்கு உரிய பெருமைகள். பணிவுடைமை ஒன்றிற்கு உரிமை உடையராய் அடங்கி இருக்கும் அடக்கமுடைமை. தன்னைப் பற்றி பிறர் தான் நல்லவிதமாகச் சொல்ல வேண்டும். தானே தன்னைப் பற்றி பெருமைப் பேசிக் கொள்ளக்கூடாது. எமக்கு நிகரானவர் எவரும் இல்லை என்று தமக்குத் தாமே பெருமை பேசிக் கொள்வது சிறப்பு அன்று. அறன் அறியும் சான்றோர் பலர் ஒருவர் தம் அருமை அறிந்து பெரியதாகப் போற்ற வேண்டும். அவ்வாறு பலரால் போற்றப் பெறுபவரே பெரியோர் என்பதை,

**“எம்மை அறிந்திலிர் எம்போல்வார் இல்என்று**

**தம்மைத் தாமே கொள்வதுகோள் அன்றுதம்மை**

**அரியராநோக்கிஅறன் அறியும் சான்றோர்**

**பெரியாராக் கொள்வதுகோள்”[18]**

என்கிறது நாலடியார்.

**நட்பாராய்தல்**

நம் வாழ்க்கையின் உயர்வுக்கும் தாழ்வுக்கும் காரணமாக அமையக் கூடியவர்கள் நண்பர்கள். எத்தகைய நட்பைப் போற்ற வேண்டும். யாருடைய நட்பை நீக்க வேண்டும் என்று வாழ்வு சிறக்க வழி கூறுகிறது நாலடியார். யானையை ஒத்தவர் நட்பினை நீக்குக. நாயைப் போன்றவர் நட்பினைப் போற்றுக என்னும் நண்பரைத் தேர்ந்தெடுக்க வழி கூறுகிறது.

யானை தினம் தனக்கு உணவு கொடுக்கும் பாகன் ஏதேனும் ஒருநாள் தவறு செய்யின் அவனையே அழித்துவிடும். எவ்வளவு உயர்ந்த மனிதனும் ஏதேனும் தவறு செய்யக் கூடும். ஆதலால் ஒருவன் தான் செய்த உதவியினை உள்ளத்தில் கொண்டு தீங்கு செய்தாலும் பொருட்படுத்தாத ஒருவனையே தன் நண்பனாகக் கொள்ளுதல் வேண்டும். உதவிகள் பல செய்தாலும் ஒருபோதும் செய்த தீங்கினையே கருத்திற்கொண்டு காலம்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



பார்த்து அழிப்பவன் யானை போன்றவன். எனவே யானை போன்றவன் நட்பினை நீக்க வேண்டும். ஒருவேளை உணவிட்டாலும் அதையே நினைத்திருக்கும் நாய் அந்த நன்றியை மறவாது. அந்த நாயை வேல் கொண்டு எறிந்தாலும் வாலைக் குழைத்துக் கொண்டு நிற்கும். அப்படிப்பட்டவரின் நட்பினையே போற்ற வேண்டும் என்று வாலடியார் கூறுகிறது.

**"யானை யானையவர் நண்பொரீஇ நாயனையார்**
**கேண்மை கெழீஇக் கொளல் வேண்டும் யானை**
**அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் எறிந்தவேல்**
**மெய்யதா வால்குழைக்கும் நாய்"**[19]

மூவகை மரங்களை உவமையாக்கி மூவகை மக்களின் பண்புகளை வெளிப்படுத்தும் நாலடியார் பாடல் நயமுடையது. பண்பிலாமக்கள் நாள்தோறும் நீர் பாய்ச்சப் பயன்தரும் கமுக மரத்தை ஒப்பர். இடைப்பட்டவர் விட்டுவிட்டு நீர்பாய்ச்சப் பயன்தரும் தென்னை மரத்தை ஒப்பர். விதையிட்ட நாளில் நீர் பட்டதன்றி தானே வளர்ந்து பயன்தரும் பனைமரம் ஒப்பர் என்று உவமையாக கீழ்வரும் பாடல் அமைந்துள்ளது.

**"கடையாயார் நட்பிற் கமுகனையார் ஏனை**
**இடையாயார் தெங்கின் அனையர் தலையாயார்**
**எண்ணரும் பெண்ணைபோன்று இட்டஞான்று இட்டதே**
**தொன்மை யுடையார் தொடர்பு"**[20]

**பிறன்மனை நயவாமை**

ஒருவனுக்கு ஒருத்தி என்பதே தமிழர் பண்பாடு. பிறர் மனை நயப்பது தமிழ் பண்பாட்டுக்கு மாறுபட்டது. பிறர்மனை நயப்பதால் வரும் அச்சம் பெரியது. ஆதலால் நல்லோர் பிறர் மனைவியை விரும்பமாட்டார். பிறர் மனைவியை விரும்புவாரிடம் அறம், புகழ், நட்பு, பெருமை இந்நான்னும் வந்து சேராது. பகை, பழி, பாவம், அச்சம் ஆகிய நான்கும் சேர்வனவாகும் என்பதை,

**"அறம்புகழ் கேண்மை பெருமையிற் நான்னும்**
**பிறன்தாரம் நச்சுவார்ச் சேரா பிறன்தாரம்**
**நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென்**
**றச்சத்தோ டிந்நாற் பொருள்"**[21]

நாலடியார் பாடல் விளக்குகிறது. அறத்தின் எல்லைத்தாண்டி தவறுகளைச் செய்தாலும் செய்யலாம். ஆனால் மாற்றான் உரிமைக்கு உட்பட்ட ஒருத்தியின் பெண்மையை விரும்புதல் பெரும் பாவமாகும்.

**முடிவுரை**

அறஇலக்கியங்களில் நாலடியார் மிகவும் மேன்மையான சிந்தனைகளையும் கருத்துக்களையும் கொண்ட நூலாக விளங்குகிறது. நாலடியார் தனி மனிதன் எப்படி



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



அறத்தோடு வாழ வேண்டும் என்பது பற்றியும் சிறந்த நடைச்சிறப்பினையுடைய இக்கட்டுரையில் மனித வாழ்விற்கு வேண்டிய நீதிகளும் சிறந்த நெறியாக்கம் கூறப்பட்டுள்ளது. நல்ல குடும்பம் பல்கலைக்கழகம் என்பார்கள். அப்படியான இல்லறத்திற்கு வழிவகுக்ககூடிய மனிதனின் ஒழுக்கம், செல்வம் நிலையாமை, இளமைநிலையாமை, கல்வி, நட்பு, ஒழுக்கம் ஆகிய அறபண்புகளை ஒரு மனிதனுக்கு எவ்வாறு அமைய வேண்டும் என்ற நிலைபாடுகளை சிறந்த முறையில் எடுத்தியம்புகிறது. அறம் பொருந்திய வாழ்வே இன்பம் தரும். இயற்கை தன்நிலையில் மாறாமல் இருக்க வேண்டுமானால் மனிதன் அறநிலை தவறாமல் வாழ வேண்டும். இதையே பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் பறைசாற்றுகின்றன.

**அடிக்குறிப்புகள்**

1. நாலடி-பா-1
2. நாலடி-பா-14
3. நாலடி-பா-19
4. நாலடி-பா-28
5 நாலடி-பா-71
6 ஏலாதி-பா-5
7 நாலடி-பா-34
8 நாலடி-பா-143
9. நாலடி-பா-64
10. நாலடி-பா-135
11. திருக்குறள்-குறள்-399
12. இனியவைநாற்பது-பா-1
13. சிந்தனைச்சுடர்-பக்-52,53
14. புறம்-பா-109
15. தமிழ் அகராதி-ப-168
16. நாலடி-பா-96
17. திருக்குறள்-குறள்-216
18. நாலடி-பா-165
19.நாலடி-பா-213
20.நாலடி-பா-216
21.நாலடி-பா-82

**துணைநூற்பட்டியல்**


1. ச.வே.சுப்பிரமணியன். பதினெண்கீழக்கணக்கு நூல்கள். மெய்யப்பன் பதிப்பகம் சென்னை.
2. பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள். கழக வெளியீடு சென்னை.
3. பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் மூலமும் தெளிவுரையும்- வர்த்தமான பதிப்பகம் சென்னை.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# புறநானூற்றில் மறப்பெண்கள்

**ம.மலர்,**
உதவிப்பேராசிரா், தமிழ்த்துறை,
அதியமான் கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
சீனிவாசாநகர்,
ஊத்தங்கரை.

**தொடக்கம்**

தமிழரின் வாழ்க்கை வீரமும் காதலும் நிரம்பப்பெற்றது என்பதை சங்க இலக்கியப் பாடல்கள் பறைசாற்றுவதாய் அமைந்துள்ளது. அத்தகைய சங்க நூல்களில் பதினெண் மேற்கணக்கு நூல்கள் பதினெட்டனுள் எட்டுத்தொகையுள் குறுந்தொகை, நற்றிணை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு, மற்றும் பரிபாடலும் அகப்பொருள் சார்ந்து அமைந்துள்ளன. அதைப்போலப் பத்துப்பாட்டுள் முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, நெடுநல்வாடை முதலியனவும் அகம் தொடர்பானவையே. இதிலிருந்து பதினெட்டு நூல்களுள் செம்பாதி அகமும் புறமும் உள்ளது என்பது தெளிவு.

அக நூலானது எப்படி தலைவன், தலைவி இருவரிடையே ஏற்படுகின்ற உள்ளக்கிளர்ச்சி, உடற்கிளர்ச்சி அதற்கு உறுதுணையாய் இருக்கின்ற, தோழியர் கூட்டம், குடும்ப அமைப்பு, பழக்க வழக்கங்கள், கற்பனை, உவமை இவையெல்லாம் இணைந்து அறுசுவை ஊட்டுவது போன்று புறநூல்கள் அரசியல், சமுதாயம், கல்வி, நாகரிகம், பண்பாடு, கலை, வீரம், கொடை, ஆடை, அணி, பழக்க வழக்கம், வாணிகம், பெண்களின் நிலை, அவர்களின் வீரம், வீரத்தின் செயல்பாடுகள் முதலியவை பற்றியும் விரிவாக எடுத்தியம்புகின்றது.

அத்தகைய புறநூல்களுள் ஒன்றான புறநானூற்றிலிருந்து பெண்களின் வீர உணர்வையும் அரசனும் பெண்மைக்கு உயர்வு கொடுத்து போற்றிய விதத்தையும் ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாக அமைந்துள்ளது.

**வாளும் மார்பும்**

பெண்கள் மேன்மையைப் போர்வையாக்கி உள்ளே வீரத்தை அடக்கி இருத்தலைப் புறநானூறு பாடல்கள் தெளிவாக்கிக் காட்டுகின்றன.

போர் என்று வந்தாலும் மரணம் என்று வந்தாலும் ஓர் ஆண் மகன் பெறவேண்டியது ஒன்று வீரத்தின் விளைச்சலான வெற்றி இல்லையேல் வீரமரணம். வாழ்ந்தாலும் வீழ்ந்தாலும் வீரத்தை மையமிட்டதாக அமையவேண்டும். இதுவே வீரத் தமிழனுக்கு மட்டுமல்ல வீரத்தமிழச்சிக்கும் வாழ்க்கை நெறியாக இருந்தது.

ஒரு மறத்தமிழன் போர்க்களத்தில் பகைவர் வாளால் வெட்டுண்டு இறந்துவிட்டான். அவன் இறந்த செய்தியைப் போரினின்று ஊரில் வந்தோர் மறத்தமிழனின் தாயிடம் “நின் மகன் பகைவரோடு போரிட்டு புறமுதுகுகாட்டி மாண்டான்” என்று கூறினர். அது கேட்ட தாய்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



நெருப்பிலிட்ட புழுப்போலத் துடித்து தன் கண்களைத் தீயெழ நோக்கிக் கொண்டே தனது கால்களைப் போர்க்களம் நோக்கி செல்ல ஆணையிட்டாள். அவ்வயதான மூதாட்டி என் மகன் பகைவர்க்குப் புறமுதுகுகாட்டி இறந்தான் என்றால் அவன் வாய் வைத்துண்ட என் மார்பை அறித்தெறிவேன் என்று வஞ்சினம் கூறிக்கொண்டே வாளொடு பிணங்களைப் புரட்டிப் பார்த்து உவகை அடைந்தாள்.

போரினால் அமைதி கிடைக்காது என்ற கருத்து ஒருபுறமும், தன்நிலையும், எல்லையும் விரிவடைந்தால் பெருமையும் புகழும் உயரும் என்ற நிலையும் பண்டைக்காலந்தொட்டே இருந்துவரினும், பெண்களும் இதற்கு மாறானவர்களாய் ஒரு போதும் நில்லாமல் போர் அறத்தை மேற்கொண்டனர். மறக்குடியைச் சேர்ந்த கொக்கின் சிறகு போன்ற வெண்மையான நரைத்த கூந்தலையுடைய மறக்குல முதியவளின் மகன் தன்மேல் பாய்ந்த களிற்றினைக் கொன்று அவனும் இறந்துபட்டு வீழ்ந்தான் என்ற செய்தியைக் கேட்ட தாய் அவனை ஈன்ற பொழுதினைக் காட்டிலும் பெரு மகிழ்ச்சியடைந்தாள். இதனை திருவள்ளுவரும்

**"ஈன்ற பொழுதின் பெரிதுஉவக்கும் தன்மகனைச்**

**சான்றோன் எனக்கேட்ட தாய்" - (குறள்.69)**

என்று கூறுவதிலிருந்து பெண்கள் வீரமிக்கவராக இருந்திருப்பது அறியமுடிகின்றது. இதைபோலவே புறநானூற்றிலும் வீரபெண் ஒருத்தி தன் வீரத்தை அவள் கண்ணீர் வான் மழையினும் மிகுதி என்பதை,

**"மீன் உண் கொக்கின் தூவி அன்ன**

**வால் நரைக் கூந்தல், முதியோள் சிறுவன்**

**களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை**

**ஈன்ற ஞான்றினும் பெரிதே"- (புறம்- 277)**

எனும் பாடல் சுட்டுகிறது.

இதேபோல் காக்கை பாடினியார் நச்செள்ளையாரும் முகத்திலும் மர்பிலும் அம்பின்புண் பட்டு இறந்த மகனைக் கண்டு மகிழ்ந்த தாயின் நிலையை விவரித்துள்ளார். அவை,

**"நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்,**

**முளரி மருங்கின், முதியோள் சிறுவன்**

**புடை அழிந்து, மாறினன் என்றுபலர் கூற**

**முலைஅறுத் திடுவென் யானெனச் சினைஇக்**

**கோண்ட வாயொடு படுபிணம். (புறம். 278)**

மேலும் மற்றொருதாய் தன் மகன் போர்களத்தில் இறந்தான் என்ற செய்தி அறிந்து போர்களம் நோக்கிச் சென்றாள். அங்கே வீழ்ந்து கிடக்கும் வீரரிடையே அவள் மகன் சிறப்புறப் பொருததன் பயனாக உடல் சிதைக்கப்பட்டிருப்பது கண்டு சிறப்புடைய அவன்பால் உள்ளம் கரைந்தாள். அன்பின் முதிர்வில் வற்றி வாடிய அவள் மார்பில் பால் சுரந்தது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



**கடல்கிளர்ந் தன்ன கட்டூர் நாப்பண்**

**வெந்துவாய் மடித்து வேல்தலைப் பெயரி,**

**தோடு உகைத்து எழுதரூஉ, துறந்த எறி ஞாட்பின், (புறம்.295)**

என ஔவையார் கூறுகின்றார்.

**மூதின் மகளிர்**

மாசாத்தியர் என்ற பெண் புலவர் போர்காலச் சூழலில் மறக்குலப் பெண்ணின் வீட்டிற்குச் சென்றிருந்தார். அப்போது மறப்பெண்ணின் வீட்டிற்கு அருகில் செருப்பறை முழங்கிய சத்தம் கேட்டது. அதைக் கேட்டவுடன் அந்த மறப்பெண் ஓடிச்சென்று வீதியில் விளையாடிக் கொண்டிருந்த பால் மனம் மாறாத பிள்ளையை அழைத்து அவனது தலையில் எண்ணைய் தடவிக் குடுமியாக்கி இடையில் ஆடை அணிவித்துக் கையில் ஒரு வேலைக் கொடுத்து முதல் நாள் நடந்த போரில் பகைவர்களைத் தம் நாட்டின் ஆநிரைகளைக் கவர்ந்தவர்களோடு நின் தந்தை போரிட்டு வீர மரணம் அடைந்தார். அது போக அதன் முதல் நாள் தமையனும் முன்னாள் பெருங்களிறு தனைக்கொன்று தானும் இறந்துவிட்டார். அத்தகைய சிறப்புடைய குடும்பத்தில் பிறந்தவன் நீ என்று கூறி அவனைப் போர்க்களம் புறப்படச் செய்தாள் ஒரு தாய்.

ஒருவரின் வாழ்வில் எஞ்சி நிற்பது புகழ்தான். தான் மாய்ந்தாலும் தன் புகழ் நிலைக்க வாழ்வதே வாழ்வு என்பதைப் புறநானூறு முதன்மையாகப் போற்றி நிற்கின்றது. மறக்குடியில் பிறந்த ஆண்களுக்கே அல்லாமல் பெண்களுக்கும் வீரம் உண்டு என்பதை ஒரே மகன் என்றும் பாராமல், சிறுகுழந்தை என்றும் பாராமல் செருமுகம் அனுப்பும் துணிவுள்ளம் கொண்ட இப்பெண்ணின் சிந்தனையை ஓக்கூர் மாசாத்தியார் கூறும் பாடல் இதோ

**கெடுக சிந்தை கடிதிவ துணிவே**

**மூதின் மகளி ராத றகுமே**

**மேனா ளுற்ற செருவிற் கிவவள் தன்னை**

**யானை யெறிந்து களத்தொழிந் தனனே**

**நெருநலுற்ற செருவிற் கிவள் கொழுநன் - (புறம் -279)**

இவ்வாறு செயல்பட மறப்பெண்ணின் சிந்தையையும் துணிவையும் இப்பாடல் வழி உய்த்துணர முடிகின்றது.

சிறுபிள்ளையாக இருந்தபோது பால் உண்ணாமல் மறுத்து கோல் கொண்டு ஓச்சிய மகன், இந்நிலையில் பகைவருடன் போர்புரிந்து யானையை வீழ்த்தி, தன்மார்பின் மீது தைத்துள்ள அம்பினைக் கண்டு எப்போது பாய்ந்தது? ஏன் கேடயம் கீழே விழுந்து கிடக்க அதன்மேல் கிடந்த மகனின் வீர உரையைக் கண்டு பெருமிதம் கொள்ளும் வீரத்தாயின் நிலையை,

**உன்னிலன் என்னும் புண்ஒன்று அம்பு**

**மான் உளை அன்ன குடுமித்**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**தோல்மிசைக் கிடந்த புல்அண லோனே (புறம் -310)**

உயிரினும் மேலாக அரசனால் மதிக்கப்பட்ட தன் மகன், நன்றி கடனாக இன்னும் தன் உயிரைத் தருவதற்குரிய காலம் வரவில்லையே என்று துணிவு கொண்ட பெண் ஒருத்தி பாடுவதாக ஔவை பாடிய பாடல்,

**வெள்ளை வெள் யாட்டுச் செச்சை போலத்**
**தன் ஓர் அன்ன இளையர் இருப்ப,**
**பலர் மீது நீட்டிய மண்டை என் சிறுவனை (புறம்.286)**

ஒரு பெண் தன் கணவன் போர்களத்தில் போரிட்டு இறந்தான் என்ற செய்தி கேட்டவுடன் அந்த பெண் போர்களத்திற்குச் சென்று வீரப்போர் புரிந்து வீழ்ந்திருப்பானாக என்று எண்ணி போர்களத்தில் அவனது உடலை புரட்டிப்புரட்டி பார்த்து மார்பில் புண் பட்டு இறந்திருப்பதை அறிந்து போர்களத்தில் குருதி வடியும் தனது கணவனின் உடலை மார்போடு தழுவி மகிழ்ந்த பெண்ணின் உணர்வை கழாத்தலையார் பாடிய பாடல்,

**மண் கொள வரிந்த வைந் நுதி மருப்பின்**
**அண்ணல் நல் ஏற இரண்டு உடன் மடுத்து,**
**வென்றதன் பச்சை சீவாது போர்த்த - (புறம்.288)**

**நடுகல் வழிபாட்டில் பொதுமை**

நற்குடியில் பிறந்த இளநங்கை ஒருத்தி நாள்தோறும் தவறாமல் நடுகல் வழிபாட்டை பொதுமை நோக்கில் நிகழ்த்துதலை, அள்ளுர் நன்முல்லையார் பாடலில் புலப்படுகிறது.

**விருந்து எதிர் பெறுகதில் யானே, என்னையும்**
**ஓ .....வேந்தனொடு**
**நாடுதரு விருப்பகை எய்துக எனவே (புறம் 306)**

விருந்தினர்களை எதிர்கொண்டு வரவேற்று உபசரிக்கும் இனிய இல்லறம் தனக்கும், பகைவென்று, புகழ் பெற்று நாடு காக்க வாழும் நற்பேறு தன் கணவனுக்கும் நாடாளும் வேந்தனுக்கும் கிடைக்க வேண்டும் என்பதற்காக உயர்ந்த உள்ளம் கொண்ட மறக்குடிப் பெண்ணின் வீரவுணர்வு புலனாகிறது.

**ஔவையும் அதியனும்**

பெண்புத்தி என்பது அறியாமையை விளக்குவது அன்று. பின்னால் நடப்பதை முன்பே உணர்ந்து கூறுவதாகும். அதனால் தான் நம்நாட்டு பழமொழியும் "பெண்புத்தி பின்புத்தி" என்று பெண்மையைப் பாராட்டியது. அதனை உறுதிப்படுத்தும் வகையில் சங்க இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன. அதியன் அவ்வையைப் பாராட்டிய விதங்கள் இத்தகையனவாகும்.

அதியமான் தருமபுரியைத் தலைநகராக்கி ஆட்சி புரிந்து வந்தான். ஔவையின் புலமை நலத்தை அதியமானும், அதியமானின் வள்ளல் தன்மையை அவ்வையாரும் அறிந்திருந்தன. ஔவையாரைத் தன் அரண்மனைக்கு வரவழைத்துப் பல காலம் தன்னோடு



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



இருத்தி வைத்து அவரின் தமிழ்ப்புலமையைப் பருக நினைத்த அதியனின் எண்ணம் அறியாத ஔவையார் பரிசில் தர காலம் நீடித்ததை எண்ணி வருந்தி வாயில் காவலனிடம் உன் அரசன் தன்னுடைய தரத்தையும் என்னுடைய தகுதியையும் மறந்தனவாக உள்ளான். மிகப்பெரிய வள்ளல் தன்மை உடைய பெரியோர் இருப்பதால் இந்த உலகமானது அழிந்துவிடவில்லை. அதியனிடம் சொல்லுங்கள் நாங்கள் எத்திசைச் சென்றாலும் எங்களுக்கு உணவு கிடைக்கும். எனக்கு விடைத்தர கால நீட்டித்தால் தகுதியான செயல் அன்று என்று பயமின்றிக் கூறினார்.

**"வாயிலோயே! வாயிலோயே!**

**வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தாம்" (புறம்-206)**

இவ்வாறு சங்க கால மகளிர் அனைவரும் வீரமுடையவர்களகள உள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

**முடிவுரை**

ஆண்களுக்கு அழகு வீரம் என்ற கருத்தை போல பெண்களும் வீரத்தை உயிர்மூச்சாகக் கொண்டு விளங்கிய பான்மையை அறிய இயலுகிறது. இலக்கியங்கள் பெண்களைச் சிறப்பித்ததை போலவே தற்காலத்தில் பெண்கள் கல்வி செல்வங்களில் சிறந்தவர்களாகவும் வீரத்தில் சிறந்தவர்களாகவும் இருப்பதை அறிய முடிகின்றது. பெண்கள் அறிவின் இருப்பிடம், ஆற்றலின் உறைவிடம், சிந்தனையின் ஊற்று, இவ்வாறு எல்லாம் சான்றோர்கள் புகழ்வது பெண்களின் சிறப்புகளை உணர்ந்தே என்பது இக்கட்டுரையில் தெளிவாகும்.

**துணைநூற்பட்டியல்**

1. பரிமணம்.அ.மா - புறநானூறு,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை – 600 098.
2. வரதராசன்.மு - திருக்குறள்,
சைவசித்தாந்த நூற்பதிப்பு கழகம்,
மறுபதிப்பு- 204.


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com


# காலம் தோறும் மகளிரின் பணிகள்

**முனைவர். வ.மாலிக்**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
சதக்கத்துல்லாஹ் அப்பா கல்லூரி,
திருநெல்வேலி.

**முன்னுரை**

கற்றறிருந்த மக்களிடையே மகளிர் குறித்த ஒருவகை விழிப்புணர்வு, பெண்கள் குறித்த சமூக உணர்வு ஆகியன அண்மைய ஆண்டுகளில் வலுப்பெற்று வருகின்றன. பெண்களுக்கு ஆண்களும், சமூகமும் துய்க்கும் உரிமைகள் அனைத்தும் கிடைக்க வழி செய்யும் சமுதாயம் மாற்றங்கள், மகளிர் விடுதலை ஆகியவற்றைப் படைப்பாளிகள் தங்கள் படைப்புகளில் பதிவு செய்கின்றனர். மகளிர் வாழ்ந்த வரலாறு, அவர்களுக்குச் சமுதாயத்தில் அளிக்கப்பட்ட மதிப்பு, அவர்களிடம் சமுதாயம் எதிர்பார்த்த கடமைகள், அவர்களுக்கு அளித்த உரிமைகள், குடும்ப அமைப்பினுள் அவர்கள் வகித்த நிலை போன்றவை மாறிவருகின்றன. ஆரம்பகாலம் முதல் இக்காலம் வரை மாறிவரும் சமூகச் சூழலுக்கு ஏற்ப பெண்கள் தங்களுடைய பணிகளை மாற்றிக்கொண்டே இருக்கிறார்கள். காலத்தின் அடிப்படையில் மகளிரின் பணிகள் கீழ்க்கண்டவாறு பிரிக்கப்படுகிறது.

1. ஆதிகால மகளிரின் பணிகள்
2. சங்ககால மகளிரின் பணிகள்
3. இடைக்கால மகளிரின் பணிகள்
4. சுதந்திரகால மகளிரின் பணிகள்
5. இக்கால மகளிரின் பணிகள்

**ஆதிகாலமகளிரின் பணிகள்**

"நிமிர்ந்த நன்னடை
நேர்கொண்ட பார்வை
நிலத்தில் யாருக்கும் அஞ்சாநெஞ்சம்
நிமிர்ந்த ஞானச் செருக்கு"

என்பது மகாகவி சுப்பிரமணிய பாரதி புதுமைப் பெண்ணுக்குரிய இலக்கணமாகச் சொன்ன குணங்கள். இவை உண்மையில் புதுமைப் பெண்ணுக்கு உண்டான குணங்கள் இல்லை. கிட்டதட்ட ஒரு மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னால் தன் குலத்தைக் கட்டிக் காப்பாற்றி வந்தவள் நமக்கெல்லாம் கொள்ளோ கொள்ளு பாட்டியான மூதாதைய மனுக்ஷி. அவள் இப்படித்தான் நிமிர்ந்து நடந்து, நேராகப் பார்த்து, துணிந்து, திமிராகச் சுற்றிக் கொண்டிருந்தாள். அவள்தான் ஆதிகாலப் பெண், அது தாய் தலைமை பெற்றிருந்த காலம். அதுதான் புராதான காலம்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



அந்தப் புராதனப் பொதுவுடைமைக் காலத்திலே அவள் பொருள் உற்பத்தியின் அதிகாரியாக ஆணைவிட அதிகம் உழைக்கும் வாழ்வியல் திறன்களைக் கொண்டவளாக இருந்தாள். ஆதிகாலப் பெண் தனக்கும் தன் பிள்ளைகளுக்கும் தேவையான சைவ, அசைவ உணவுகளைத் தானே வேட்டையாடிக் கொண்டாள். உணவுத் தேவைகளுக்கு பெண் சுயசார்பாகத்தான் இருந்தாள்." (சாலினி இளந்திரையன்., 2006:80)

"பெண்களுக்கோ தங்கள் பிள்ளை குட்டிகளின் பசித்த வயிறுக்கு எதைக் கொண்டாவது நிரப்ப வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. அதனால் புதுப்புது உணவு வகைகளை ஆராய்ச்சி செய்து கொண்டே இருந்தார்கள்". "அப்போது தான் நுனிப்புல் பழம் அவர்கள் கண்ணில் பட்டது" அதனை கல்லால் இடிக்கும் போது பொடியாகிவிட்டது. அதனை எடுத்து வாயில் போடவும் ருசியாகவும், புத்துணர்ச்சி தருவதாகவும் இருந்தது. இதனை குழந்தைகளுக்குப் புகட்டும் போது குழந்தைகள் வளர்வதைக் கவனித்தார்கள் தாய்மார்கள். பின் இதில் **"தண்ணீர் கலந்து நெருப்புப் பக்கத்தில் வைத்தால் கெடாமல், இறுகிப் போய் சுவையாக இருந்தது. இந்தக் கவனிப்பால் உருவானதுதான் சமையற்கலை" (சாலினி இளந்திரையன் 2008., 80,81,82)** ஆகும்.

இதையெல்லாம் விட இந்த தானியத்தின் சிறப்புத் தன்மை என்னவென்றால் அதைத் தற்செயலாக மண்ணில் போட்டாலும் ஒரு புதுச்செடியாக முளைத்து நிறைய தானியமாகப் பெருகி நின்றது. இதைப் பார்த்து தானியத்தை மண்ணில் புதைத்தனர். அது வளர்ந்து செடியாக முளைத்து தலைநிறைய தானியம் சுமந்து நிற்பதைத் பார்த்து பெண்கள் இதில் மும்முரமாக இறங்கினர். இதுவே பயிர் சாகுபடி என்ற புதிய உத்தி உருவாக காரணமாக இருந்தது (மேலது ப-82). அடுத்தப்படியாக வேளாண்மை என்கிற மிகப் பெரிய உற்பத்தித் துறை உருவாயிற்று.

காட்டுமாடு, ஆடு, எருமை, காட்டுக்கோழி, வாத்து போன்ற பிராணிகள் பெண்களைத் தொடர்ந்து அவர்களது குகைக்குள் வந்தன. அப்போது பிராணிகளின்பால் மனிதக்குழந்தை ஒத்துப்போக அவற்றை வயிற்றுக்குப் பயன்படுத்த ஆரம்பித்தாள். இதுவே கால்நடைகளின் வளர்ச்சிக்கு வித்திட்டது. இப்படியாக காட்டுவிலங்கை செல்லப் பிராணியாக்கி வீட்டு விலங்காக மாற்றியது முதல் பயிர் வளர்ப்புமுறை உருவானது வரை எல்லாமே பெண்கள் முன்னின்று செய்யும் காலமாக இருந்தது புராதனப் பொதுவுடைமைப் பெண்ணின் காலம். இதனால்தான் **"அந்த நாள் முதல் இந்நாள் வரை எந்த நிலத்தின் மூலப்பத்திரத்தையும் தாய்ப்பத்திரம்" (சாலினி இளந்திரையன் 2006., 83)** என்றே அழைக்கின்றனர் என்கிறார் சாலினி இளந்திரையன்.

பெண்களின் மூளை வடிவமைப்பில் அவர்களுக்கு ஒரே சமயத்தில் பல வேலைகளைச் செய்ய முடிகிறது. ஒரே வேளையில் சம்மந்தம் சம்மந்தமில்லாத வெவ்வேறு தகவல் பரிமாற்றங்களை இணைத்து யோசிக்க அவளால் முடிகிறது. இதன் விளைவாகத்தான்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



அவளால், **"நாரில் உடையும், சில்லுகளில் உளியும், மிருகத் தோளில் வாரையும், இலையில் இடுப்பு மறைப்புத் துணியையும் காணும் திறனை அவளுக்குள் ஏற்படுத்தியது என்கிறார்"(மேலது ப-89).** இந்தப் பல்பொருள் பயன்படுத்தும் திறனே அவளைச் சமுதாயத்தில் உயர்த்தியது. அந்தக் காலப் பெண்கள் உயர்வாகவே இருந்தனர்.

மானுடவியலாளர் 'க்ளோத் லெவிஸ்திராஸ்' **"திருமணம் என்ற சடங்கு வந்த பிறகே பெண் அடிமைப்படுத்தப்பட்டாள். நாடோடியாய் வாழ்ந்த மக்கள் நிலையான வாழ்வு கண்டு தமக்கென நிலத்தையும், பொருள்களையும் சொந்தப்படுத்த தொடங்கிய காலம் முதல் பெண் இரண்டாந்தர நிலையை அடைந்து விட்டாள்" (மேலது ப-91)** கூறுகிறார். பெண் இல்லத்தில் முதன்மையானவள், அவளுக்கிருந்த உடலமைப்பு வேறுபாடுகள் இனவிருத்தியும் இன்னொருவர் துணை நாடிநிற்கும் நிலைக்குத் தள்ளியது. ஒருவனுக்கு ஒருத்தி என்ற மனக்கட்டுப்பாடு மக்களிடையே நிலை பெறவே, ஆண் பெண்ணிற்கு அவளுடைய இயலாமைக் காலத்தில் உற்ற துணையானான்.

ஆண் அளித்த பொருளாதார ஆதரவின் துணையுடனேயே பெண் தன் வாழ்க்கையை நடத்தும்போது இல்லத்தை நிலைப்படுத்தும் பணியைத் தானே முன்நின்று செய்யத் தொடங்கினாள். இனவிருத்தி செய்யும் ஆற்றல் பெண்ணிற்கே அமைந்திருந்தமையால் குழந்தைகளைப் பெற்று அவர்களைப் பாதுகாத்து வளர்க்கும் பொறுப்பும் தானாகவே அவளுக்கு அமைந்துவிட்டது. அத்துடன் இல்லத்திற்கு வேண்டிய உணவினைச் சேகரித்து அதை சமைக்கும் பணியையும் அவளே மேற்கொண்டாள். இவ்வாறாக மகளிரின் பணியில் மாற்றம் நிகழத் தொடங்கியது.

ஆதிகால மகளிரின் கண்டுபிடிப்புகளான, வேளாண்மை, கால்நடை வளர்ப்பு, சமையல் கலை என இந்த மூன்றும் பின்நாளில் மாபெரும் துறையாக வளர்ச்சியடையக் காரணமாக இருந்தது.

**சங்ககால மகளிரின் பணிகள்**

சங்க இலக்கியம் தமிழ்ப் பண்பாட்டின் களஞ்சியம் ஆகும். பாட்டும், தொகையும் எனப் போற்றப்பெறும் தமிழர் வாழ்க்கையை அகம், புறம் எனப் பிரித்தனர். தலைவனும் தலைவியும் கூடி வாழ்ந்து குடும்பத்தின் தேவைகளை பூர்த்தி செய்தனர். நடைமுறை வாழ்வில் மகளிர் தம் உடல்நலத்திற்கும் நிலச்சூழலுக்கும் ஏற்ற வகையில் இயன்ற தொழில்களைச் செய்துள்ளனர். ஐந்திணைகளுக்கும் ஏற்றவாறு தம் பணிகளைச் செய்துள்ளனர். குறிஞ்சி நிலத்து முக்கிய விளைபொருள் திணை ஆகும். இந்நிலப் பெண்டிரான கொடிச்சியர் காவல் தொழிலைச் செய்தனர். பரண் மீது இருந்து தினைப்புனம் காத்தலை பின்வரும் குறிஞ்சிப்பாட்டு சான்றாக கூறுகிறது.

**"துய்த்தலை வாங்கிய புனிறுதீர் பெருங்குரல்**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



**நள்கோன் சிறுதிணைப் படுபுள் ஓப்பி**
**எல்பட வருதியர் எனநீ விடுத்தலின்" (குறிஞ்சிப்பாட்டு 37-39)**

என்ற கபிலரின் பாடல் வழியாக பரண் அமைத்து தினைப்புனம் காத்தலை மகளிர் பணியாகக் கொண்டுள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

முல்லைநிலப் பெண்கள் ஆய்ச்சியர் என்று அழைக்கப்பட்டனர். கால்நடைகளை வளர்ப்பதில் ஆயர் மகளிர் பெரும் கவனம் செலுத்தினர். ஆடு மாடுகளின் மிகுந்து கிடைக்கும். பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் முதலானவற்றை உணவாக உட்கொள்வதோடு பண்டமாற்று முறையில் விற்பனையும் செய்தனர். ஒருத்தி நெய்யின் விலையாகக் கட்டிப் பசும்பொன் கொள்ளாது எருமை, பசு, நாகு ஆகியவற்றையே பெற்றுச் சென்றதாக பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது.

**"புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி**
**ஊறையடை தீந்தயிர் கலக்கி நுரைதெரிந்து**
**புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட் டிரீஇ**
**நாண்மோர் மாறுநன்மா மேணிச்**
**நெய்விலைக் கட்டிப் பசும் பொன்கொள்ளாள்**
**எருமை நல்லாள் கருநாகு பொறுஉம்**
**மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பின்" (பெரும்பாணாற்றுப்படை பா 155-165)**

என்ற வரிகளின் மூலம் அறியமுடிகிறது.

நானிலத்தில் வளம் நிறைந்த நிலம் மருதம், ஆற்றுநீரும், பொய்கை நீரும் மருத நிலத்தை வளமடையச் செய்கின்றன. இந்நிலத்தில் வாழும் பெண்கள் கடைச்சியர் என்றும் உழத்தியர் என்றும் அழைக்கப்படுகின்றனர். இவர்களின் முதன்மைத் தொழில் வேளாண்மையாக இருந்தது. உழுது விளைவிக்கும் உழவர்க்குத் துணையாக மகளிர் பல்வேறு பணிகளைச் செய்தனர். பெரும்பாணாற்றுப்படை, மதுரைக் காஞ்சி, மலைபடுகடாம் போன்ற நூல்கள் மருத நில இயல்பைக் கூறுகின்றன. உழவர்கள் மாடுகள் பூட்டிய ஏர்களைக் கொண்டு நிலத்தை உழுதனர். மகளிர் நெல்நடுமுன் தம் கால்களால் சேற்றை மிதிப்பர், பின் நெல் நாற்றுகளை நடுவர், களைகளைப் பறிப்பர், அறுவடை செய்து தலையில் சுமந்து வந்து களத்தில் சேர்ப்பர். நெல்லடித்த பின்பு முறத்தால் தூற்றி எடுப்பர். இவ்வாறு உழத்தியரின் பணியை 'பெரும்பாணாற்றுப்படை' கூறுகிறது. வயலில் களைகளாக முளைத்த நெய்தல், ஆம்பல் போன்றவற்றைக் கைகளால் களைந்த காட்சியை புறநானூற்றுப் பாடல் கூறுகிறது. (ப.160)

வயலை பலமுறை உழுது தொளியாக்கும் கடமை உழவர்களைச் சார்ந்திருந்தது. தொளியின் மேடு பள்ளங்களைச் சமன் செய்து நாற்று நடும் வேலையை உழத்தியர் செய்ததை பெரும்பாணாற்றுப்படை பின்வருமாறு கூறுகிறது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**"பைஞ்சாய் கொன்ற மண்படு மருப்பின்**

**கார்ஏறு பொருத கண்அகன் செறுவின்**

**உழாஅ நுன்தொளி நிரவிய வினைஞர்**

**முடிநாறு அகத்திய நெடுநீர்ச் செறு" (பெரும்பாணாற்றுப்படை பா 209-212)**

கடலும் கடல்சார்ந்த பகுதியுமாகிய நெய்தல் நிலத்தில் நடைபெறும் தொழில்களில் மீன்பிடித்தல் முக்கிய இடத்தினைப் பெறுகிறது. நெய்தல் நிலத்தில், வாழும் மகளிரைப் பரத்தியர், நுளைச்சியர் என்று குறிப்பிடுவர். ஆடவர்கள் கடலில் பிடித்து வந்த மீன்களை வீதிகளில் பரதவ மகளிர் விலை கூறி விற்றுள்ளனர். மீனிற்கு மாற்றாக நெல் பெற்று உள்ளனர் என்பதை ஐங்குறுநூறு மற்றும் புறநானூற்றுப் பாடல்கள் கூறுகின்றன.

**"சின்மீன் சொரிந்து பல்நெல் பெறாஉம்**

**யாணர் ஊரநின் பாணமகள்" (ஐங்குறுநூறு பா 36)**

**"மீன் கொடுத்து நெல்குவைஇ**

**மிசை அம்பியின் மனைமறுக்குற்து" (புறநானூறு பா 343)**

என்ற பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.

எஞ்சியுள்ள மீனை உப்பிட்டு கடற்கரை மணலில் உலர்த்தினர் பரதவ மகளிர் உலரும் மீனை உண்ணவரும் பறவைகளைக் கடற்கரை நிழலில் தங்கி விரட்டிக் காவல் செய்தனர். பாலை நிலம் என்று தனியான நிலம் இல்லை பிற நிலம் தன் வளம் இன்றி வறட்சி மிகுந்து காட்சி தருமேயானால் அது பாலை எனப்படும். பாலை நிலப் பெண்டிர் ஏனைய நிலமக்களைப் போல சிறப்பான தொழிலில் ஈடுபடவாய்ப்பில்லை. இதனால் இந்நில மகளிர் வாழ்க்கைக்காக கடினமான தொழில் ஈடுபட்டனர். இவர்கள் எறும்புகள் கொண்டு வந்து சேமிக்கும் உணவைத் தோண்டி எடுத்து சமைத்தனர்.

ஐந்திணைகளையும் அடிப்படையாகக் கொண்டு பணி செய்த மகளிர் சங்கஇலக்கியத்தில் காணப்பட்டாலும் பிற தொழில் செய்யும் மகளிரும் இருந்துள்ளனர். கள்ளினைக் காய்ச்சி விற்கும் பெண்களை அரியற்பெண்டிர் எனவும் அரியலாட்டியர் எனவும் அகநானூறு பாடல் (245:9) கூறுகிறது. ஆடை வெளுக்கும் பெண்கள் புலைத்தியர என்று அழைக்கப்பட்டனர். இத்தொழிலில் தமக்குத் துணையாக தம் புதல்வரையும் ஈடுபடுத்தியுள்ளனர் என்ற செய்தியை அகநானூற்றுப் ஆகிய பாடல் வரிகள் (34, 387 ) உணர்த்துகின்றனர்.

பருத்தி மிகப் பழங்காலத்திலிருந்தே தமிழ்நாட்டில் விளைந்து வருகின்றது அப்பருத்தியைக் கொண்டு மூதாட்டியரும் கைம்பெண்டிரும் நூல் நூற்கும் பணியை மேற்கொண்டிருந்தனர். அதனால் அப்பெண்டிரைப் பருத்திப் பெண்டிர் என்றனர் இதனை

**"பருத்திப் பெண்டின் பனுவல் அன்ன" (புறநானூறு 125:1)**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019  Available at: www.ijtlls.com

எனும் புறநானூற்றுப் பாடல் கூறுகிறது. இப்பருத்திப் பெண்டிர் மேற்கொண்டிருந்த நூல் நூற்கும் பணியினை இறையனார் அகப்பொருளுரை கீழ்கண்டவாறு கூறுகிறது.

**"நுண்ணிய பலவாய பஞ்சு நுனிகளால்**
**கைவன் மகருவத் தனது கைமான்பினால்**
**ஓரிழைப் படுத்தலாம் உலகத்து நூல்**
**நூற்றல் என்பது" (ப 26)**

கல்வியிலும் ஆண்களுக்கு இணையாகச் சங்கப் பெண் புலவர்கள் எழுத்துப் பணியைப் செய்துள்ளனர் என்பதை 'மகடுஉ முன்னிலை' என்ற சொல்லின் வழியாக அறிய முடிகிறது. வரியால் அறியலாம். சங்க காலத்தில் நாற்பத்தைந்துக்கும் மேற்பட்ட பெண் புலவர்கள் வாழ்ந்துள்ளனர் என்பதை ச.விசயலெட்சுமி (பெண்ணெழுத்து களமும், அரசியலும் ப-16) என்ற நூலில் ஆதாரப்பூர்வமாக கூறியுள்ளார். (ப.16)

அள்ளார் நன்முல்லையார், ஆதிமந்தியார் ஒக்கூர் மாசாத்தியார், ஒளவையார், காக்கை பாடினியார், நச்செள்ளையார், நக்கண்ணையார், பாரிமகளிர், பூங்கண்திரையார், வெள்ளி வீதியார், போன்ற பெண்பாற் புலவர்கள் குறிப்பிடத்தக்கவர்.

உலக நடப்புகளைப் பிறருக்கு எடுத்துக் கூறும் அறிவில் சிறந்த சான்றோர்களாகச் சங்கப் பெண்கள் இருந்துள்ளனர். அதியமான் நெடுமான் அஞ்சிக்கும், தொண்டைமானுக்கும் மனவேறுபாடு ஏற்பட்டது. தொண்டைமான், அதியமான் மேல் படையெடுக்க போர் ஆயத்தங்களை மேற்கொண்டான். அந்தப் போரை நடக்க விடாமல் ஒளவையார் தடுத்து நிறுத்தினார் என்பதை சங்க இலக்கியம் வழி அறியமுடிகிறது.

**"இவ்வே பீலி யணிந்து மாலை சூட்டிக்**
**கண்டிர ணோன்காழ் திருத்திநெய் யணிந்து" (புறம் 951:2)**

என்ற வரியின் மூலம் ஒளவையார் ஒரு பெண் தூதராகச் சென்று போர் நடைபெறாமல் நிறுத்தியது உலக வரலாற்றில் ஒரு மைல் கல்லாக திகழ்கிறது.

சங்ககாலத்தில் ஆடல், பாடல் கலைகளில் மகளிர் சிறந்து விளங்கியுள்ளனர். விழாக்காலங்களில் மகளிர் கயிற்றின் மேல் நின்று ஆடியுள்ளனர் என்பதைக் கபிலர் தன்னுடைய குறிஞ்சிப் பாட்டில் "சாறுகொள்... கறங்க ஆடுமகள்" (குறிஞ்சி 192) என்று கூறியுள்ளார். மன்னரின் அரண்மனைகளில் ஆடல் மகளிர்கள் இருந்துள்ளனர். கரிகாலன் புலவர்களுக்கு விருந்து வைத்த போது ஆடற்பெண்கள் ஆடியுள்ளனர் என்பதை பொருநராற்றுப்படையில் வேறுபல..... விறலியர் பாணி தூங்க" (பொ.ஆ. 108) என்ற வரியின் மூலம் தெரியமுடிகிறது.

'துணங்கை கூத்து' என்னும் ஒருவகை ஆடலை தெருக்களில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து நடனமாடியுள்ளனர். இதில் அரசரும் கலந்து கொண்டார் என்பதை 'முடிவு வியன் மறுகில் துணங்க' (ம.கா.327) என மதுரைக் காஞ்சி கூறுகிறது. திருமுருகாற்றுப்படையிலும்


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



மேய் மகளிர் தம் தோளை அசைத்து வெற்றிக்களத்தைப் பாடித் துணங்கைக் கூத்தாடிய செய்தி இடம் பெற்றுள்ளது.

இசைபாடும் மகளிரும் அதற்கேற்ப ஆடல் கொள்ளும் மகளிரும் இருந்துள்ளனர் என்பதை நக்கீரர் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.

**"ஆடல் மகளிர் பாடல் கொளப் புணர்மார்....**
**கருங்கோட்டுச் சீறியாழ் பண்ணுமுறை நிறுப்பப்" (நெடுநல் 67-70)**

என்னும் பாடல் மூலம் ஆடல், பாடல் பணியைச் சங்ககால மகளிர் மேற்கொண்டுள்ளனர் என்பதையும் தெரிந்து கொள்ள முடிகிறது.

குறிபார்க்கும் பழக்கம் சங்ககால மக்களிடையே இருந்தது. தலைவியினுடைய காமநோய்க்குக் காரணம் அறியாத தலைவியின் தாய் சுற்றத்தாரோடு கட்டுவிச்சியை அழைத்துக் குறி கேட்பாள். கட்டுவிச்சியார் தெய்வக்குறி சொல்லுதலும் உண்டு தலைவியினுடைய தாய் செம்மையும் முதுமையும் உடைய பெண்டிரோடு முற்றத்தில் நெல்லைப் பரப்பிக் கட்டு வைத்துக் தலைவியை எதிரில் நிறுத்திக் குறி கேட்பாள் இதனை "நல்லுதல் பரந்த பசலை கண்ட அன்னை" (நற்றினை 288) எனும் பாடல் வரி உணர்த்துகிறது.

சங்ககால மக்கள் தங்கள் வாழ்க்கையில் ஏற்படவிருக்கும் நிகழ்வுகளை முன்னதாகவே அறிவதற்கு முதுபெண்டிரைக் கொண்டு விரிச்சிக் கேட்பர் என்பதை தொல்காப்பியம் "படையியங்கு அபவம் பாக்கத்து விரிச்சி" (தொல் 104) என்று கூறுகிறது. கட்டுவிச்சி "அகவன் மகள்" என்ற பெயருடன் குறுந்தொகை பாடலில் வருகிறாள் "அகவன் மகளே அகவன் மகளே" (குறு.23) எனும் பாடல் வழி அறியலாம்.

சங்ககால மகளிர் நாடகத்தில் நடித்து சன்மானம் பெற்றதை பெரும்பாணாற்றுப்படை கீழ்கண்டவாறு கூறுகிறது.

**"நாடக மகளிர் ஆடுகளத்து அடுத்த**
**விசி வீங்கு இன்னயம் கடுப்சேரிதோறும்" (பெ.பா.55, 56)**

விழாக்களில் பொதுமகளிரும் ஆடல் நிகழ்த்துவதைத் தொழிலாகக் கொண்டிருந்தனர். ஆடற்கலையினைக் கற்று தொழிலாக நிகழ்த்தி வருவாய் பெற்றனர். அதனை "விழவு ஆடு மகளிரொடு" என அகநானூறு (176 15:18) கூறுகிறது. அரண்மனை மகளிருள் சிலர் ஏவல் பெண்டிராக இருந்து பிறருக்குப் பணிகள் செய்துள்ளனர் என்பதைத் தொல்காப்பியர் ஏவற்பணி செய்வோர்" என்று குறிப்பிடுகின்றார். ஏவல் மகளிர் மன்னனுக்குப் பொற்கலத்தில் மதுவை ஊட்டுவர், பாட்டாலும், கூத்தாலும் மன்னர் அவையை மகிழ்ச்சி செய்யும் 'இன்னகை மகளிர்' இருந்ததைப் பத்துப்பாட்டும், பதிற்றுப்பத்தும் கூறுகிறது.

பெரிய ஊர்கள், நகரங்கள் ஆகியவற்றில் அங்காடிகள் மூலம் வாணிகம் நடந்தன. காவிரிப்பூம்பட்டினம், மதுரை முதலிய பெரிய நகரங்களில் நாளங்காடி, அல்லங்காடிகளில்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



விற்பனை மகளிர்கள் இருந்துள்ளனர் என்ற குறிப்புகளும் இலக்கியங்களில் காணப்படுகிறது. பூக்களை விற்கும் மகளிர் "பூவினை மகளிர்" எனப்பட்டனர். நற்றினை, அகநானூறு மதுரைக்காஞ்சி, புறநானூறு போன்ற இலக்கியங்களில் காணப்படுகின்றன.

சங்க காலத்தில் ஒவ்வொரு நிலப்பகுதியிலும் வாழ்ந்த மகளிர் தத்தம் தொழில்களைத் தங்கள் திணை சார்ந்த பணிகளாக செய்துள்ளனர் என்பதை எட்டுத்தொகை, பத்துப்பாட்டின் மூலம் அறிய முடிகிறது. திணை சார்ந்த பணிகள் மட்டுமல்லாது பிற பணிகள் பலவற்றையும் இம்மகளிர் செய்து வந்துள்ளனர். சங்ககால சமுதாயத்தில் ஆடவரோடு இணைத்து மதிக்கும் நிலையில் இவர்களுடைய பணிகள் இருந்துள்ளன என்பதன் மூலம் ஆடவரோடு ஒப்ப மதிக்கும் நிலையை மகளிர் பெற்றிருந்தனர் என்பதை உய்த்துணர முடிகின்றது.

**இடைக்கால மகளிரின் பணிகள்**

இடைக்காலக் கட்டத்தில் மகளிரின் பணிகள் எவ்வாறு இருந்தன என என்பதை வரலாற்றுச் சான்றுகள் வழி அறிய முடிகிறது. வரலாற்று ஆசிரியர்களின் கூற்றுப்படி பெண்களின் பணியைக் கூறும்போது பல்லவர் காலத்தில் மகளிர்கள் நெசவுத் தொழில், நூல் நூற்றல், பூக்களை விற்றல், பால் விற்றல் போன்ற பணிகளைச் செய்துள்ளனர். நடனக்கலைகளிலும் இசைக்கலைகளிலும் பெண்கள் பெரும் பங்கு வகித்தனர். குறிப்பாக தேவரடியாள், கூத்தி, தளிச்சேர் பெண்டிர் நடனத்துறையில் மிகச் சிறந்து விளங்கியுள்ளனர். பிற்காலப் பாண்டியர் காலத்தில் பொது மற்றும் அரசியல் வாழ்வில் பெரியதொரு பங்கினைப் பெற்றிருக்கவில்லை. பெண்கள் பெருமளவில் மதிப்பு மிக்க மனைவியராகத் திகழ்வதையே விரும்பினார்கள். இவர்கள் தம்முடைய பணிகள், செயல்கள் ஆகியவற்றிக்குத் தமது கணவரையே சார்ந்திருந்தார்கள்.

பொருளில்லாதவர்கள், மிகவும் பின்தங்கியவர்கள் குடிசைத் தொழிலிலும் பிற தொழிலிலும் ஈடுபட்டார்கள். ஏழ்மை நிலையில் இருந்த பெண்கள் கூலி வேலை செய்தார்கள். பாய்முடைதல் நெசவு, தயிர், மோர் விற்றல், உப்பு மற்றும் காய்கறிகள் விற்றல் போன்ற பணிகளைச் செய்தனர்.

பாண்டியர் காலத்தில் **"பெண்களை கோவிலுக்கு 'பொட்டுக்கட்டி' அர்ப்பணிக்கும் வழக்கம் காணப்பட்டது"** என்பதை ஆசிரியர் டாக்டர் கே,தியாகராஜன் ('பெண்ணியல்' என்ற நூலில் ப.54) கூறியுள்ளார். தேவதாசி முறை வழக்கில் இருந்தது. அப்பெண்கள் இறைபணிக்குத் தம்மை அர்ப்பணித்து கொண்டனர். பெண்கள் அடிமைகளாக விற்கப்பட்டு செல்வந்தர்களின் இல்லங்களில் பணியாளர்களாகவும் பணிச் செய்துள்ளனர்.

பிற்காலச் சோழர் காலத்தில் பெண்கள் அடிமைகளாக கோவிலில் பணிகள் செய்து வந்தனர். **"வயலூர் கோவிலில் பணிகள் செய்தனர் என்றும் கோவிலில் திருப்பதிகம் பாடுவதற்கும், இறைவனுக்கு வெண்சாமரம் வீசுவதற்கும் பெண்கள் அடிமைகளாக**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



**வாங்கப்பட்டனர்"** எனவும் அறிகிறோம் (மேலது ப 55). பிற்காலச் சோழர் காலத்தில் பெண்கள் விவசாயக் கூலிகளாகப் பணிச் செய்துள்ளனர்.

நாயக்கர் காலத்தில் சமுதாயத்தின் அடித்தளத்தில் இருந்த மகளிர் வேளாண்மையோடு நெருங்கிய தொடர்புடைய பணிகளை விவசாய வேலைகளில் ஆண்களோடு இணைந்து, பாடுபட்டதாய்ப் பள்ளு நூல்கள் கூறுகின்றன. வேளாண்மைத் தொழிலோடு வீட்டிலிருக்கும் பொழுது ராட்டையின் மூலம் நூல் நூற்றதாகவும், காய்கறிகள் பயிரிட்டதாகவும், மீன்பிடித்தாகவும் கோழி வளர்த்தாகவும், தங்களுக்குத் தேவையான சட்டி, பானைகளைத் தயார் செய்ததாகவும் திருமலைமுருகன் பள்ளு தெரிவிக்கின்றது.

**"அல்லி பீற்றல் வீட்டையும்**
**தெற்றுப் பல்லி நற்ற ராட்டையும்**
**அன்னயிள் படுக்கும் பாம்பையும் பொய்கை**
**இடையில் அடுக்கும் சேம்மையும்....**
**நண்ட அவிச்ச சட்டியும்"**

என்று நாயக்கர் காலம் இலக்கியமும், வரலாறும் என்ற நூலில் (ப 164) அ.ராமசாமி மேற்கோள் காட்டுகிறார். மேலும் பரத்தைமைப் பணியிலும் பெண்கள் ஈடுபட்டுள்ளனர். இவர்கள் உடலை மூலதனமாக கொண்டு வாழ்வதோடு சமூக நிகழ்வுகளில் பங்கு கொண்டுள்ளனர்.

அப்துல் ரஸாக் என்ற பாரசீகப் பயணி குறிப்பிட்டவாறு பெண்கள் பரத்தமை தொழிலில் ஈடுபட்டுள்ளனர். இவர்களுக்கெனத் தனிச் சிறப்புரிமைகள் தரப்பட்டன. (மேலது. ப 59) குறிப்பிட்டுள்ளார்.

பெண்கள் கோவிலில் தினந்தோறும் பூஜை நேரங்களில் இறைவன் முன் ஆடிப்பாடினார்கள். விழாக் காலங்களில் கோவில் சப்பரத்தின் முன் கடவுள் சிலைகளைச் சுமந்து செல்லும் பொறுப்பும் அவர்களுடையதாயிருந்தது. இத்தகையப் பணிப்பெண்களுக்கு ஊதியம் கோவிலின் பணத்திலிருந்து தரப்பட்டது. இவர்களுக்கு 'தேவராயர்' என்ற பெயரும் இருந்தது.

இடைக்காலத்தில் பல்லவர்கள், பிற்காலப் பாண்டியர்கள், பிற்காலச் சோழர்கள், பிற்காலப் பல்லவர்கள், நாயக்கர்கள் போன்றோர் தமிழகத்தில் ஆட்சிப்புரிந்தால் அந்தந்த அரசர்களின் காலத்திற்கும் ஏற்றவாறு மகளிர் பணிபுரிந்துள்ளார்.

**சுதந்திரப் போராட்ட காலத்தில் மகளிரின் பணிகள்**

சுதந்திரப்போராட்ட காலத்தில் மகளிர் பலர் சுதந்திர வேள்வியில் ஈடுபட்டதை அறிய முடிகிறது. அவர்களில் குறிப்படத்தக்கவர்கள் அன்னிபெசன்ட், சகோதரி நிவேதிதா, பண்டித ரமாபாய், சரோஜினி நாயுடு, ருக்மணிதேவி அருண்டேல், மார்க்ரெட் கசின்ஸ், கஸ்தூரிபா காந்தி, கமலாநேரு விஜயலெட்சுமி பண்டிட், முத்துலெட்சுமி ரெட்டி, சாவித்திரிபாய் பூலே,



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



மேரிகினட் வாலா ஜாதவ், சௌந்திரம் இராமச்சந்திரன் இலட்சுமி என்மேனன், சரளாதேவி போன்றோர் விடுதலைப் போராட்டத்தில் பங்கு கொண்டுள்ளனர்.

தமிழகத்தைச் சேர்ந்த அஞ்சலையம்மாள் என்ற பெண்மணி காந்தியடிகளை நேரில் சந்தித்து 'வெள்ளையனே வெளியேறு' என்ற இயக்கத்தில் பங்கு கொண்டார். தன்னுடைய அனல் பறக்கும் பேச்சால் சென்னை உட்பட பல நகரங்களுக்கும் சென்று இயக்கத்தின் வளர்ச்சிக்கு உதவினார். குடும்பச் சொத்துக்களையும குடியிருந்த வீட்டையும் விற்று விடுதலைப் போராட்டத்திற்காகச் செலவு செய்தார். இவரைப் போலவே 'அம்புஜத்தம்மாள்' என்ற பெண்மணியும் குடும்பத்திலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டு நாட்டின் சுதந்திரத்திற்காக பாடுபட்டார். இவர் பாரதியின் பாடல்களைப் பாடி தெருமுனைப் பிரச்சாரத்தில் ஈடுபட்டு விடுதலையுணர்வை மக்கள் மத்தியில் உருவாக்கினார். இறுதியில் சிறை சென்றார். தமிழ்நாட்டில் மட்டுமின்றி வெளிநாடுகளில் இருந்து கூட இந்திய விடுதலைக்குப் பாடுபட்ட மகளிரும் உள்ளனர்.

**தற்கால மகளிரின் பணிகள்**

சுதந்திர இந்தியாவில் இன்று பெண்கள் இல்லாத துறைகளே இல்லை எனலாம். இந்தியப் பொருளாதாரத்தில் உலகில் பெண்கள் சாதனையாளர்களாகி வருகிறார்கள் முகம் தெரிந்த பெண்மணிகளை விட முகம் தெரியாத பெண்மணிகள் பலர் இந்தப் பொருளாதார வளர்ச்சியில் கணிசமாகப் பங்காற்றியுள்ளனர். இக்காலக்கட்டத்தில் ஒவ்வொருத்துறையிலும் மகளிரின் வளர்ச்சியை கீழ்காணும் பட்டியலில் டாக்டர் பி.சந்திரசேகர், டாக்டர் எஸ்.பழனிச்சாமி ஆகியோர் பெண் இயல் கல்வி என்ற நூலில் தருகின்றனர்.

1. ஆண்டுக்கு 1.25 பேர் மருத்துவர் பட்டம் பெறுகின்றனர். இதில் 50 சதவிகிதம் பெண் மருத்துவர்கள் ஆவார்கள்.
2. ஆண்டுக்கு 50 சதவிகிதம் இளங்கலை பட்டம் பெறுபவர்கள் பெண்கள் உள்ளனர்.
3. இந்தியாவில் கணினித் துறையில் 21 சதவிகிதம் பெண்கள் உள்ளனர்.
4. அறிவியல் மற்றும் தொழில் நுட்பத்துறையில் 25 சதவிகிதம் பெண்கள் உள்ளனர்,
5. 638 லட்சம் பேர் உறுப்பினர்களாக உள்ள பஞ்சாயத்தில் 77210 பேர் சிறப்பு பஞ்சாயத்துப் பெண் தலைவர்கள் உள்ளனர்.
6. ஒழுங்குப்படுத்தப்பட்ட துறையில் வேலை செய்பவர்களில் 18 சதவிகிதம் பெண்கள் உள்ளனர்.
7. விடுதலைக்குப் பிறகு 13 பெண்கள் மாநிலங்களில் முதல்வராகியுள்ளனர்.
8. இந்தியாவில் உள்ள 21 உயர்நீதி மன்றங்களில் உள்ள 647 நீதிபதிகளில் 19 பெண்கள் உள்ளனர். (பெண் இயல் கல்வி ப 163) மேற்கூறிய பட்டியலின் மூலம் அனைத்துத் துறைகளில் பெண்கள் பணிபுரிகின்றனர் என்பது உறுதி செய்யப்படுகிறது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



துறையில்லா நிறுவனங்களான பயிர்தொழில் 29.6% பெண்களும், விவசாயக் கூலிகள் 50.4% பெண்களும், தோட்டம் மற்றும் காட்டுத் தொழிலில் 2.5% பெண்களும், சுரங்கம் கல்லுடைத்தல் தொழிலில் 0.4% பெண்களும் குடிசைத் தொழிலில் 4.3% பெண்களும், தொழிற்சாலைகளில் 2.8% பெண்களும் பிற தொழிலில் 7.1% பெண்களும் பணியாளர்களாக பணிபுரிகின்றார்கள் (மேலது ப 164).

படித்தவர், படிக்காதவர் என்ற பாரபட்சம் இல்லாமல் அவர் அவர் தகுதிக்கு ஏற்ப இன்றையக் காலக்கட்டத்தில் அனைத்துப் பணிகளிலும் மகளிர் உள்ளனர்.

**முடிவுரை**

ஆதிகாலத்தில் பெண்ணே எல்லாப் பணிகளையும் செய்துள்ளாள். ஆண்களுக்கும் பெண்களுக்கும் சமூகப் பாகுபாடுகள் பெருமளவு இருந்ததாக தெரியவில்லை. நாடோடியாக வாழ்ந்த மக்கள் நிலையான வாழ்வுகண்டு தமக்கென நிலத்தையும் பொருளையும் அமைத்துக் கொண்டு திருமணம் என்ற சடங்கு உருவாகி, ஒருவனுக்கு ஒருத்தி என்ற மனக்கட்டுப்பாடு மக்களிடையே நிலைபெறவே ஆண் பெண்களுக்கு உற்ற துணையானாள். மேலும் தொடக்க காலங்களில் இனக்குழுக்களிடையேயும், நாட்டு மக்களிடையேயும் நடைபெற்ற இடைவிடாப் போரும் தம் தனித்தன்மையை நிலைநாட்டும் ஆர்வமும் வெளியுலகில் ஏற்பட்ட எதிர்ப்புகளும் ஆணுக்குத் தன் ஆற்றலை வளர்த்துக்கொள்ள வேண்டிய கட்டாயத்தை உண்டாக்கியது. அத்துடன் ஆண் குடும்பத்தின் பொருளாதாரத் தேவைகளையும் பார்த்துக் கொண்டான். பெண் குழந்தைகளைப் பெற்று அவர்களை வளர்க்கும் பொறுப்பும் தானாகவே அமைந்ததால் பெண்கள் பணியில் மாற்றம் ஏற்பட்டது. அதுமட்டுமின்றி விவசாயம், கால்நடை வளர்ப்பு சமையற்கலை என்ற மூன்று பெரும் துறைகள் உருவாகக் காரணமாக இருந்தவர்களும் ஆதிகாலப் பெண்கள் ஆவார்கள்.

சங்ககாலத்தில் பெண்கள் பலப்பணிகளைச் செய்துள்ளனர். இதற்கு சங்ககால இலக்கியமான பாட்டும் தொகையும் சிறந்த எடுத்துக்காட்டாகும். பெண்கள் அவர்கள் நிலம் சார்ந்தும் அகவாழ்வு சார்ந்தும் பணிகளை மேற்கொண்டுள்ளனர். அந்த அந்த நில மகளிர் தங்கள் நிலங்களில் கிடைக்கும் பொருள்களை மற்ற நில மகளிருக்கு கொடுத்து அங்கு உற்பத்தியாகும் பொருள்களை வாங்கியுள்ளனர். இவையே பண்டமாற்று முறை என்ற மிகப்பெரிய வணிகத்துறை உருவாகக் காரணமாக இருந்தது சங்ககால மகளிர் ஆணுக்கு இணையாக ஓரளவு மதிக்கப்பட்டுள்ளனர். சங்ககாலத்தில் நாற்பத்தைந்துக்கும் மேற்பட்ட பெண்புலவர்கள் இருந்ததாகக் கூறப்படும் கருத்து மிகவும் ஆச்சரியம் அளிப்பதாகவும் கல்வி கற்ற மகளிர் இருந்துள்ளனர் என்பதையும் உறுதி செய்கிறது. சங்ககாலத்தில் அனைத்து பணிகளிலும் பெண்கள் இருந்துள்ளனர்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



இடைக்காலத்தில் தமிழகத்தில் பல்லவர்கள், பிற்காலப் பாண்டியர், பிற்காலச் சோழர், நாயக்கர் என ஆட்சி மாற மாற மகளிரின் வாழ்விலும் பல மாற்றம் நிகழத் தொடங்கியது. மதத்தின் பெயரால் மகளிருக்கு பல விதிமுறைகள் விதிக்கப்பட்டது. இடைக்கால மகளிர் பெரும்பாலும் தேவர் அடியார்கள் என்ற பெயரில் கோவிலில் பணியையும், பரத்தையர் என்ற பெயரில் பரத்தமை தொழிலையும் மேற்கொண்டனர். இடைக்காலத்தில் பெண்கள் பெரும் அளவில் எந்தத் துறையிலும் வளர்ச்சிப் பெற்றதாகத் தெரியவில்லை.

சுதந்திரக் காலக்கட்டத்தில் தொடக்கமாக பெண்களும் சுதந்திரப் போராட்ட பணிகளை மேற்கொண்டுள்ளனர். இதில் குறிப்பிடத்தக்கவர்கள் தமிழகத்தைச் சேர்ந்த அஞ்சலையம்மாள். அம்புஜத்தம்மாள். ருக்குமணிதேவி, ஆவார்கள். உப்புசத்தியாகிரகம், வெள்ளையனே வெளியேறு போன்ற இயக்கங்களில் மகளிர் பங்கு பெற்றுள்ளனர். இந்த சுதந்திர முன்னோடிகளின் மூலம் அவர்கள் அமைத்துத் தந்த அடித்தளமான இயக்கங்களே இன்று பெண்ணின் மேம்பாட்டிற்கு துணை புரிகின்றது.

19ஆம் நூற்றாண்டு வரை மகளிர் மேம்பாட்டில் மந்தமான போக்கு இருந்தது. பல தலைவர்களின் முயற்சியால் பல மாற்றங்கள் ஏற்பட்டு மகளிர் இன்று அனைத்து துறைகளிலும் கால்பதித்துள்ளனர். இதனை இன்றைய நாவல் இலக்கியமும் கூற தவறவில்லை. குறிப்பாக பெண் எழுத்தாளர்கள் தங்கள் படைப்புகளில் மகளிரின் சிக்கல்களை எடுத்துக்கூறி அதற்கான தீர்வுகளைப் பதிவு செய்யவும் தயங்குவதில்லை.

**துணைநூற்பட்டியல்**

1. டாக்டர் ந.சுப்பிரமண்யன், சங்ககால வாழ்வியல், நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை-600098.

2. முனைவர் ந.இராணி, சங்க இலக்கியத் தொகுப்பு நெறி, நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை-600098.

3. ஞானி, தமிழ் வாழ்வியல் தடமும் திசையும், காவ்யா புத்தக நிலையம், சென்னை-600024.


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# குமரகுருபரர் பார்வையில் - முயற்சியும் பயிற்சியும்

**முனைவர்.சீ.மாலினி,**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
கிருஷ்ணசாமி மகளிர் அறிவியல், கலை
மற்றும் மேலாண்மையியல் கல்லூரி,
கடலூர்.

**முன்னுரை**

'***முயற்சி***' என்ற சொல் வெறும் எழுத்துக்களின் கூட்டமைப்பு அன்று. உதாரணமாக '***மு***' என்ற சொல்லினைக் கொண்டு பிறக்கும் நேர்மறை சொற்களைப் பற்றி பார்ப்போம்.

- முன்னேறு
- முள்
- மூச்சு
- முனை
- மூலவர்

என்று பட்டியலை நீட்டலாம். ஆனால் அதன் தாத்பரியம் என்ன? '***மு***' என்ற எழுத்து முதலில் வருவதால் மட்டுமன்று. அதன் செயல் வடிவத்தையும் மனக்கண்ணில் காணும்போது அனைத்திற்கும் முதன்மையானதாகத் தெரியும். எ.கா. முள் ⟹ வடித்தின் முனை முன்னேறி முதன்மையானதாகத் தெரிகிறது. இது ஒரு காரணப்பெயர். சரி அற்கென்ன இப்போது? – என்ற கேள்வி எழுகிறது அல்லவா? அத்தகைய மு-மூ-முயற்சி பற்றிய ஒரு தேடல் இதோ! முயல் ஆமை கதை தெரியும் அதில் முயல் ஏன் தோற்றது? அதனுடைய அலட்சியத்தினால் ஆன முயலாமையால் தான். முயன்றால் முடியும். இது நம் அன்றாட வாழ்வில் பழமொழி வடிவிலும் இடம் பெறும்.

***"எறும்பு ஊர கல்லும் தேயும்"***

***"அடிமேல் அடி அடிச்சா அம்மியும் நகரும்"***

என்று தொடரில் நம் முன்னோர்கள் முயற்சியினைப் பற்றி பதிவிட்டுள்ளனர்.

வள்ளுவரும் "***முயற்சி திருவினையாக்கும்***" என்ற சத்திய வாக்கினைப் பறை சாற்றி நிற்கிறார். நாம் எண்ணியதை அடைய மனம் அல்லது உடல் திண்மையாக இருத்தல் வேண்டும். மிகக் கடுமையானப் போராட்டமானச் சூழலில் மனதை அலைபாய விடாமல் விடாமுயற்சியோடு போராட வேண்டும். கடைசி சொட்டு இரத்தம் இருக்கும் வரையும் நாம் முயற்சி செய்து பார்த்தல் நன்றாம். இறுதியாக மூச்சுப்பிரியப் போகிறது என்று தெரிந்தும் நாம் சும்மா இருத்தல் கூடாது அப்போதும் ஏதாவது முயற்சி செய்து உயிர்க்காக்கும் மருந்தோ! அல்லது ஏதோ ஓர் உயிர் காக்கும் செயலில் முயல வேண்டும். அது வெற்றியைத் தரவல்லது. சில நேரங்களில் நன்மை தரும் செயல்கள் முடிவதற்குக் காலம் கடப்பினும்


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



அதனைக் கைவிடாமல் இறுதி வரை முயற்சி செய்து முடிப்பது அறியுடையார் செயலாகும். குமரகுருபரரர்,

*"உறுதி பயப்ப படைபோகா ஏனும்*
*இறுவரை காறும் முயல்ப - இறும் உயிர்க்கும்*
*ஆயுள் மருந்தொழுக்கல் தீ தன்றால் அல்லனபோல்*
*ஆவனவும் உண்டுசில. "* (நீதிநெறி விளக்கம்-48)

என்ற செய்யுளின் வழி விளக்குகிறார்.

நடப்பது நடக்கட்டும் எல்லாம் விதியின் பயன் என்று வாழ் நாளை சலித்துக்கொண்டு சிலர் இருப்பர். ஆனால் சான்றோர்கள் அத்தகைய செயலைச் செய்யமாட்டார்கள். ஏனெனில், விதியை சோதிக்க எண்ணி நன்றாக எரியும் விளக்கு ஒன்றைக் காற்று வீசும் திசையில் வைத்து விட்டு எரிவதும், அணைவதும், விதியின் செயல் என்று அறிவற்ற நிலையில் சிந்திக்கக் கூடாது. மேலும் நமக்கு கிடைக்க வேண்டியது கிடைக்காமல் இருக்காது. கிடைக்க கூடாதது எப்போதும் கிடைக்காது என்று வியாக்கியானம் பேசுவதும் சான்றோர் மற்றும் அறிவுடையோர் மரபு அன்று. அவர்கள் எப்போதும் ஊழ்வினையால் வரக்கூடிய நன்மைகள் முயற்சி செய்யாமல் இருந்தால் கைவிட்டுப்போகாது என்ற எண்ணம் வைப்பதில்லை. இதனை,

*"முயலாது வைத்து முயற்றின்மையாலே*
*உயலாகா ஊழ்த்திறத்த என்னார் – மயலாயும்*
*ஊற்றாமில் தூவிளக்கம் ஊழன்மை காண்டுமென்று*
*ஏற்றார் எரிகால் முகத்து"* (நீதிநெறி விளக்கம்-49)

என்ற குமரகுருபரரின் செய்யுள் அடிகள் உணர்த்திற்று.

**முயற்சி தரும் கூலி**

*"தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்*
*மெய்வருத்தக் கூலி தரும்"* (குறள்-619)

என்னும் குறளிலிருந்து, விதி வசத்தால் ஒரு காரியம் கைகூடவில்லை எனினும் நாம் அதற்காகப் பட்ட மெய் வருத்தம் வீணாகாது. முயற்சியின் நற்பயனை அடைந்தே தீருவோம். முயற்சியே நமக்கு பெறும் கூலியாகிவிடும். முயற்சியின் பெருமை என்னவென்றால் அது ஒரு காரியத்தில் வெற்றி பெறும் வழி, அது முடியாது போயினும் நாம் செய்த முயற்சி நம்முடைய மனம், உடல், இரண்டின் பலத்தை உயர்த்தும். அதுவே பெரிய லாபம். எந்த நல்ல முயற்சியும் நம்முடைய ஆன்ம சக்தியை வளர்க்கிறது. எண்ணிய கருத்து பயன் பெறவில்லையாயினும், ஆன்ம சக்தியை வளர்த்த பயன் உண்டு. அதுவே பெரும் பயன். விதியின் போக்கை கண்டு மயங்க வேண்டாம்! என்கிறார் வள்ளுவர். இது:

1. ***பொருள் தேடும் முயற்சி,***
2. ***மனதை அடக்கும் முயற்சி*** என அனைத்து வகை முயற்சிக்கும் பொருந்தும்.

இதனைக் ***கீதையில் கண்ணனும்,***



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019  Available at: www.ijtlls.com

***"கடமையைச் செய்! பலனை எதிர்பாராதே"***

என்ற நோக்கில் தொடர் முயற்சியை வலியுறுத்துகிறார்.

மேலும்,

***"உன் ஜீவதாகம் எதுவோ***
***அதன் பின்னே செல்***
***மற்றவைத் தொடரும்......"*** **- மார்த்தா சைனிடா**

என்ற வெளிநாட்டு தத்துவ ஞானியும் முயற்சியே வாழ்க்கையை வழிநடத்தும் என்ற நோக்கில் ஆழங்கால் பட்ட நிலையில் கூறியுள்ளார். எங்கேயோ கேட்ட இக்கருத்து, இங்கு பொருத்துவதாக அமைகிறது. எண்ணியது எண்ணியாங்கு எய்த வேண்டுமெனில் எண்ணியவர் திண்ணியவராக இருக்க வேண்டும் என்பது வள்ளுவரின் வாக்கு. இங்கு ***திண்ணிய*** என்ற சொல் - உறுதி – தொடர்முயற்சி – விடாமுயற்சி என்று அதன் நீட்சியைக் கூறலாம்.

குமரகுருபரரும் விதியை வெல்லும் ஆற்றல் ***"முயற்சி"*** – என்ற சொல்லுக்குண்டு என்கிறார். சோர்வில்லாத முயற்சியைத் தொடர்ந்து பற்றிக் கொண்டால் முன்வினையின் வலிமையை அழிக்கின்ற வலிமை உண்டு என்கிறார். உலகம் அறிந்த பழமையானப் புராணக் கதையான, வினையின் தோற்றமாகிய முனையைத்தின்று இயமனின் உயிரையும் எடுத்த மார்க்கண்டேயனே இதற்குச் சான்றாவான். எனவே முயற்சி செய்தால் கடுமையான விதியையும் வெல்லமுடியும் என்பதைக் கீழ்க்கண்ட செய்யுள் வாயிலாக அறியலாம்.

***"உலையா முயற்சிகளை கனைகணா ஊழின்***
***வலிசிந்தும் வன்மையும் உண்டே – உலகறியப்***
***பால் முனை தின்று மறவி உயிர்குடித்த***
***கால் முனையே போலுங்கரி"*** (நீதிநெறி விளக்கம்-50)

முயற்சி வெற்றி பெற காலம், இடம், துணை இவை அனைத்தும் இன்றியமையாததாகும். ஒரு வினையைச் சரியாக முடிக்க எண்ணுவோர், எச்செயலையும் செய்வதற்குச் சரியான காலத்தை உணர்ந்திருத்தல், செயலை வெற்றியுடன் முடிப்பதற்குச் சரியான இடத்தைத் தேர்வு செய்தல், செயலின் ஒவ்வொரு பாகத்தையும் கவனமாக ஆராய்தல், செயலால் விளையும் பயனை அறிதல், அதன்பின் ஆராய்ந்து தெளிவடைய வேண்டியவற்றை ஆராய்ந்து தெளிவு பெறுதல், செயலை முடிக்கத் துணையாக இருப்பவர்களின் வலிமையை அறிந்திருத்தல், எனப் பல வியூகங்களை வகுத்து, தாம் எண்ணியபடி வினை முடிக்க எண்ணுவோரின் செயல்களாகக் கொள்வார். இதனையே குமரகுருபரர்,

***"காலம் அறிதாங் கிடமறிந்து செய்வினையின்***
***மூலம் அறிந்து விளைவறிந்து – மேலும்தாம்***
***சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்து***
***ஆள்வினை ஆளப்படும்"*** (நீதிநெறி விளக்கம்-51)



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



என்னும் செய்யுளின் வழியாக நிறுவியுள்ளார். இதன் மூலம் வெற்றியின் வியூகங்களை எளிமையாக வகுத்தளித்துள்ளார்.

இதனை நம் முன்னோர்கள் அன்றாட வாழ்வில் ***"பருவத்தே பயிர் செய்"*** என்ற ஒற்றை அடியால் காலத்தின் பயனை எடுத்து இயம்பியுள்ளனர். இது போன்ற பழமொழிகளின் வாயிலாக தத்துவங்களை எளிதாக புரிய வைத்துள்ளனர். ஒரு செயலைக் கையில் எடுத்துக்கொண்டு செய்ய முன்வரும் போது பலவகையான இடர்பாடுகள் நம்மை தாக்கும். அதற்கெல்லாம் நாம் அசைந்து விடக்கூடாது. நாம் கொண்ட இலக்கில் முயன்று கொண்டே இருத்தல் வேண்டும். நாம் எப்போதும் எடுத்து கொண்ட ஒரு காரியத்தில் ***பசியுடனும், தனித்தும், விழித்தும்*** இருத்தல் வேண்டும்.

குமரகுருபரர் பெருமான் கூறுகையில்- ஒருவர் தாம் எடுத்துக்கொண்ட செயலைத் திறம்பட முடிக்கும் வல்லமை கொண்டவர்களாகவும், உடலால் ஏற்படும் சோர்வைக் கவனத்தில் கொள்ள மாட்டார்தவர்களாகவும், மேலும் பசியைத் துன்பமாய் கருதி அதன் மேல் கவனம் கொள்ள மாட்டார்கள். உறக்கம் கொள்ள மாட்டார்கள். தனக்கு யார் துன்பம் செய்தாலும் அவற்றை ஒரு பொருட்டாக நினைக்க மாட்டார்கள். காலத்தின் அருமையினையும் பார்க்க மாட்டார்கள். கடமையை முடிக்க கருதியவர்கள் அதனையே கண்ணாகக் கொண்டிருப்பர். துன்பங்களைக் கண்டு பின்வாங்க மாட்டார்கள் என்று முயற்சி அதற்கானப் பயிற்சி முறை உத்திகளைப் பதிவிட்டுள்ளார். சான்று:

***"மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்***
***எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார் – செவ்வி***
***அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்***
***கருமமே கண்ணாயி னார்"*** (நீதிநெறி விளக்கம்-52)

இச்சூழலைத் தான் பின்னாளில் வந்த விவேகானந்தரும் இரத்தினச் சுருக்கமாக:

- ***பசித்திரு***
- ***தனித்திரு***
- ***விழித்திரு***

என்று கூறுகிறார். இதன் மூலம் இம்மூன்றும் நம்முடைய ***மூச்சு – காற்று*** போல் நம்மைத் தொடர்ந்தால் நம்முடைய இலக்கினை எளிதாக எட்டிவிடலாம். மேலும் ***பதவி*** என்ற கனியைப் பறிக்க தேவையில்லை, அது தானே பழுத்து மடியில் விழும்.

**முயற்சி – பயிற்சி**

ஒரு செயலைச் செய்வது *முயற்சி* எனில் அச்செயல் வெற்றிபெற *பயிற்சி* வேண்டும். சான்றாக, *மகாபாரதத்தில் மனதை பிசையும் ஒரு நிகழ்வு, ஏகலைவன் துரோணாச்சாரியாரிடம் வில்வித்தைக் கற்றுக் கொள்ள முடியவில்லை. அதற்காக அவன் விடவில்லை தொடர் வேட்கையினால் முயற்சி செய்து அவரையே தன் குருவாக எண்ணிக்கொண்டு தன் அருகில்*



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



*இருந்து கற்றுக்கொடுப்பது போன்ற எண்ணதை உருவாக்கி நம்பிக்கையோடு பயிற்சி செய்து அர்ச்சுனனுக்கு நிகரானான்.* எனவே இதிலிருந்து ***முயற்சியும் - பயிற்சியும்*** ஒன்றுக்குள் ஒன்றுபோல் தெரியும். ஆனால் ஒன்று இல்லையெனில் மற்றொன்று இல்லை.

எந்த ஒரு செயலும் முயற்சி செய்தவுடன் கிட்டாது. அச்செயலை நோக்கி சீரான முறையில் பயிற்சி செய்யும்போது அதனுள் இருக்கும் சூட்சமங்களைப் புரிந்து வெற்றி பெற முடியும். ஒரு விளையாட்டு வீரன் வெற்றி கொள்ள முயற்சி வேண்டும். இது மறுக்க முடியாத உண்மை. ஆனால் அவன் விளையாடுவதற்கு முன்பும், விளையாட்டின் இடையிடையேயும், உடலையும் மனதையும் புதுப்பிக்க முறையானப் பயிற்சியை மேற்கொண்டு விளையாடினால், கவனச் சிதறல் இன்றி எண்ணிய இலக்கை எளிதாக அடையலாம். நம் நாட்டின் எல்லைப்படை வீரன் ஒருவன் பனிமலைப் பகுதியில் பணியாற்ற தகுந்த பயிற்சிபெற்று பிறகுப் போரிட முயற்சி செய்ய வேண்டும். இவ் விதி எல்லா நேரங்களிலும் பொருந்தாது. சில நேரங்களில் எதிர்பாராத தாக்குதலைச் சந்திக்கும் வேளையில் ***"வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்"*** என்பது போல எப்படியாவது முயற்சி செய்து வெற்றி பெற வேண்டும். அந்த இடத்தில் நின்று கொண்டு பயிற்சி செய்த பின்பு தாக்கலாம் என்று எண்ணுவது உயிருக்கு இறுதியாகி விடும்.

எல்லாவற்றிக்கும் மேலாக ***இடம் - பொருள் - ஏவல்*** என்பதை மனதில் பதியவைத்துக்கொண்டுப் பயணிக்க வேண்டும்.

இத்தருணத்தில் தான் குமரகுருபரரின்,

- ***"பசிநோக்கார்"***
- ***"கண்துஞ்சார்"***
- ***"கருமமே கண்ணாயினார்"***

என்ற சொல்லாட்சி நம்மை உள் நோக்கி இழுத்துச் செல்கிறது. மேற்கூறிய செயல் நிகழ பயற்சி வேண்டும் என்பதை உணர்த்துகிறது. ஏனெனில் இச்சொல்லாட்சியின் **உட்பொருள் புறத்தே நிகழும் நிகழ்வல்ல, மனதின் அகத்தே நிகழ்வது.** எந்த ஒரு இலக்காக இருந்தாலும், அந்த இலக்கைச் சுற்றியுள்ள அகப்புற காரணிகளை ஆராய்ந்து, அதன் பின் தன் வலியுணர்ந்து முயற்சியும், பயிற்சியும் செய்தால் வெற்றி என்ற சொல் நம் விரல் அசைவிற்காகக் காத்திருக்கும். எனவே, காரியத்தில் கவனமோடு முயல வேண்டும் என்ற மறைபொருள் பொதிந்துள்ளது. எனவே இறைவன் தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், ஞானிகள், மகான்கள், சான்றோர்கள், புலவர்கள் என அனைவரும் முயற்சி செய்யும்போது வரும் இன்னல்களைத் தகுந்த பயிற்சி மூலம் சோர்வுறாது விடாமுயற்சி செய்து வெற்றி பெற வழிகூறுகின்றனர்.

**முயற்சி சிறிதெனினும் - பயிற்சியினால் பயன் பெரிதாகக் கிட்டும்**

***" சிறுமுயற்சி செய்தாங் குறுபயன் கொள்ளப்***



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



***பெறுமெனில் தாழ்வரோ தாழார் - அறனல்ல***

***எண்மைய வாயினுங் கைவிட் டரிதெனினும்***

***ஒண்மையில் தீர்ந்தொழுக லார் "*** (நீதிநெறி விளக்கம்-69)

என்ற குமரகுருபரரின் செய்யுள் அடிகள் - சிறு முயற்சியினால் கிட்டும் பெரிய பயன் குறித்து விளக்கி நிற்கிறது,

செய்வதற்கு எளியவையாக இருப்பினும் அறமற்ற செயல்களை ஒதுக்கியும், செய்வதற்கு அரிதாக இருந்தாலும், அறவழியில் இருந்து விலகிப் போகாமல், பயனடைகின்ற சான்றோர்கள் குறைந்த அளவு முயற்சிகளை மேற்கொண்டு அத்தகைய முயற்சியினால் அதிகமான பயனைப் பெற முடியுமானால் அத்தகு முயற்சியினை மேற்கொள்ளப் பின்வாங்க மாட்டார்கள்.

நம் அன்றாடவாழ்வில் நிகழும் பல் வேறு நிகழ்வுகள் வாயிலாக சிறு முயற்சியின் பெரிய பயன் குறித்து உணரலாம். சான்றாக, ஒளிதரும் விளக்கு தூண்டுதல் என்னும் முயற்சியின் மூலம் நீண்ட நேரம் சுடர் விட்டு வெளிச்சம் தரும். அதுபோல் இராமாயணத்தில், *இராமபிரானுக்கு அணில் உதவியது போல* சிறு முயற்சியினால் கிட்டும் பெரிய பயன் குறித்து விளக்குகிறது.

குமரகுருபரரின் வாழ்விலும் அவர் ஐந்து வயது வரை பேசாதிருந்த போது விதியை நொந்து கொண்டிராமல் அவரது பெற்றோர்கள் தங்களின் வழிபாடு கடவுளான திருச்செந்தூர் முருகனிடம் தொடர் பிராத்தனை செய்தனர் அதனால் பேச்சு வந்தது. இதன் மூலம் சிறு முயற்சியின் பெரிய பயன் குறித்து உணரலாம். அதன் பின்பு குமரகுருபரரின் முயற்சினாலும் முருக பெருமானின் அருளாளும் திருச்செந்தூர் முருகன் மீது அத்தலத்திலேயே ***கந்தர் கலிவெண்பா*** இயற்றினார். அதன்பின் ***மதுரையில் திருமலை நாயக்கர் தலைமையில் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்*** என்னும் நூலை அரங்கேற்றம் செய்கையில் அந்நூலில் இடம் பெற்ற வருகைப் பருவத்தின் ஒன்பதாம் பாடலான. ***"தொடுக்கும் கடவுட் பழம்பாடல்"*** - என்னும் பாடலைப் பாடியபோது மீனாட்சியம்மை சிறு பெண் குழந்தையாகத் தோன்றி, திருமலை ***நாயக்கர் கழுத்தில் இருந்த மணிமாலையைக் கழற்றி, குமரகுருபரரின் கழுத்தில் அணிவித்து மறைந்தாள்.*** மீனாட்சியின் அருள் பெற்று மீனாட்சியம்மைகுறம், மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை மதுரைக் கலம்பகம், என இன்னும் பல நூல்கள் இயற்றிய பெருமை அவரது முயற்சியால் தான் என்றால் அது மிகையாகாது.

**முடிவுரை**

குமரகுருபரர் தம் வாழ்நாளில் நல்முயற்சியால் அறத்திலிருந்து வழுவாமல் தொடர்ந்து இறைப்பணி வாயலாகத் தமிழ்த்தொண்டு செய்தமையை யாரும் போற்றாமல் இருக்க முடியாது. ***முயன்றால் முடியாதது உண்டோ? முயற்சி – பயிற்சி = உயர்ச்சி.*** இந்த பாதையில் உண்மையோடு உழைத்தால் அனைவரின் வாழ்விலும் வெற்றி நிச்சயம்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com

**துணைநூல் பட்டியல்**

1. குமர குருபரர், நீதிநெறி விளக்கம், மூலமும் உரையும், கதிர் முருகு (உ.ஆ) (சாரதா பதிப்பகம், சென்னை: 2007)
2. திருக்குறள், (1999), நாமக்கல் கவிஞர், (உ.ஆ) (வர்த்தமானன் பதிப்பகம், சென்னை: எழாம் பதிப்பு 2000)



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# இலக்கிய திறனாய்வுக் கொள்கை

**முனைவர். செ.வில்சன்,**
உதவிப்பேராசிரியர்,
அரசு கல்வியியல் கல்லூரி,
ஒரத்தநாடு.

## முன்னுரை

இலக்கியம் ஓர் இல்லம் என்றால் அதற்குரிய முகவரி இலக்கியம் குறித்த திறனாய்வு எனலாம். இலக்கியத்தின் தரம், பாடுபொருள் பற்றிய நிறை, குறைகளைக் கண்டுணர்ந்து குறைகளைக் களையும், கருவியே திறனாய்வு, குறைகள் உள்ள இலக்கியத்தை "ஊன இலக்கியம்" என்பர். இந்தப் பெயர் மாற வேண்டுமானால் வன்முகத்தன்மையுடன் திறனாய்வு செய்வது மட்டுமே சிறந்தவழி. தமிழில் பல்வேறு துறைகளிலும் உரைநடை நூல்கள் தோன்றின. மேலும் மேல்நாட்டாரின் கூட்டுறவால் மேலை மொழிகளின் இலக்கிய வகைகளும் தமிழில் புகத் தொடங்கின. அவற்றுள் ஒன்றே நாவல். நூறு ஆண்டுகளுக்கு முன் எட்கார் ஆலன் போ அமெரிக்காவில் சிறுகதை எழுதத் தொடங்கினார். அவர் விதைத்த வித்து நன்றாக வளர்ந்து உலகம் முழுவதும் பரந்து இன்று ஆலமரமாக விரிந்துள்ளது. நாட்டுப்புற இலக்கியமும், பயண இலக்கியமும் தமிழ்மொழி வளர்ச்சிக்கு உதவியது. கணினி வழி கற்றல், கற்பித்தல் இன்று வேகமாக பரவி வருகின்ற தொழில்நுட்பமாகும்.

## நோக்கங்கள்

1. திறனாய்வின் தோற்றம் வகைகள் போன்றவற்றினை அறிந்து கொள்வீர்கள்.
2. கற்றல், கற்பித்தலில் திறனாய்வின் தோற்றம் வகைகள கணிப்பொறி, இணையத்தின் பயன்களை அறிந்து வகுப்பறையில் பயன்படுத்த அறிந்து கொள்வீர்கள்.

## இலக்கியத் திறனாய்வு

ஓர் இலக்கியத்தைப் படைப்பவர் ஒரு பொருளில் சிந்தித்து எழுதி இருப்பார். அதனைப் படிப்பவர் ஒரு வகையாக அறிந்து கொள்வார். இலக்கியப் படைப்பாளியையும் அவர் படைத்த இலக்கியத்தையும் திறனாய்வாளர்கள் படிப்பவர்களுக்கு மிகவும் நெருக்கத்தில் கொண்டு வருகின்றார்கள். தொல்காப்பியத்திற்கும், சங்க இலக்கியங்களுக்கும் பழைய உரைகள் இல்லாவிட்டால் அவற்றை நம்மால் முழுமையாக அறிந்து கொள்ள முடியாது. சிலப்பதிகாரத்தில் காணப்பெறும் அரங்கேற்று காதைச் செய்திகள் புரியாமலே போய் இருக்கும். திருக்குறளில் அவ்வளவு நுண்மையான செய்திகள் இருப்பதால்தான் பத்துப்பேர் அதற்கு உரை எழுதி இருக்கின்றார்கள். தொல்காப்பியம் சொல்லதிகாரத்திற்கு ஐந்து உரையாசிரியர்கள் உரை எழுதி இருக்கின்றார்கள். எனவே உரையாசிரியர்கள் ஒரு நூலுக்கு உரை எழுதி இருந்தாலும் அவர்களும் திறனாய்வாளர்களே ஆவர்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



**1. திறனாய்வுக் கலை**

மேலை நாடுகளில் கிரேக்க மொழி போன்றவற்றில் திறனாய்வுக் கலை என்பது ஒரு தனிக் கலையாகப் பன்னெடுங் காலத்திற்கு முன்பே வளர்ந்துள்ளது. தமிழில் தனிக்கலையாக வளரவில்லையே தவிர உரையாசிரியரின் உரைகளில் திறனாய்வுக் கூறுகளை நிறையக் காணலாம். திறனாய்வுக் கலை தொடர்பாகப் பல நூல்கள் இன்று தமிழில் காணப்பெறுகின்றன.

| | | |
|---|---|---|
| மு. வரதசராசன் | : | இலக்கிய ஆராய்ச்சி |
| அ.ச.ஞானசம்பந்தன் | : | இலக்கியக் கலை |
| தா. ஏ. ஞானமூர்த்தி | : | இலக்கியத் திறனாய்வியல் |
| தொ.மு.சி.ரகுநாதன் | : | இலக்கிய விமர்சனம் |
| க.பாலசந்திரன் | : | இலக்கியத் திறனாய்வு |
| தமிழவன் | : | தமிழ்க் கவிதையும் மொழிதல் கோட்பாடும் |
| ஜெயமோகன் | : | நவீனத் தமிழ் இலக்கிய அறிமுகம் |

**2. திறனாய்வின் தோற்றம்**

இலக்கியம் எவ்வளவு பழமையானதோ அவ்வளவு பழமையானதாகும் அதன் திறனாய்வும், யாராவது ஒருவர் ஒரு பாடலையோ, உரைநடையையோ படைத்திருப்பின் அதனைக் கற்ற ஒருவர் அது சிறந்தது என்றோ, மட்டமானது என்றோ கூறும்பொழுது தினறாய்வு அங்கே தோன்றிவிடுகிறது. ஆகவே, திறனாய்வு என்று கூறினால் 'முடிவு கூறல்' அதனுள் அடங்கியிருத்தல் கண்கூடு. இலக்கியத் திறனாய்வாளன், ஓர் இலக்கியத்தை நன்கு கற்றுத் தனது கூர்ந்த அறிவினாலும், அக் கலையை அனுபவிக்கத் தனக்குள் தனிப்பட்ட உணர்வினாலும், நன்கு ஆராய்ந்து, அவ்விலக்கியத்தின் குறை, நிறைவுகளை மதிப்பிட்டு, அது சிறந்தது என்றோ மட்டமானது என்றோ கூறுபவனாவான். இத்திறனாய்வு என்ற சொல் இலக்கியத்தில் பயன்படும்போது, குறைவு-நிறைவு கூறும் நூல்களை மட்டும் குறிக்காமல் இலக்கியத்தைப் பற்றிக் கூறும் இலக்கியங்களையும், அதுபற்றி வெறும் ஆராய்ச்சி செய்யும் நூல்களையும், அதன் பேருரைகளையும் உட்கொண்டு குறிக்கிறது. எனவே, திறனாய்வு செய்யும் நூலுக்கும், எதனைப் பற்றி இத் திறனாய்வு நிகழ்கிறதோ அந்த இலக்கியத்திற்கும் உள்ள வேறுபாடு என்னவென்று அறிய வேண்டும். வாழ்க்கையைப் பற்றி ஆராய்ந்து அதன் சிறந்த பண்புகளைக் கூறுவது இலக்கியம் எனப்படும். அவ்விலக்கியத்தை ஆராய்வது திறனாய்வு எனப்படும்.

இலக்கியத் திறனாய்வும் ஓர் இலக்கியமாகலாம். ஒரு நூலைத் திறனாய்வு செய்யப் புகுந்த நூல் அம் மூலநூலை நாம் கற்கத் தூண்ட வேண்டும். மூலநூலைப் பற்றி அறிய நம்மை அது தூண்டினாலும் தூண்டாவிட்டாலும் நடுவுநிலை பிறழாமல் எழுதப்பட்டிருந்தால்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



அத் திறனாய்வாளன் கருத்தைக் கூறுகின்றமையால் அதுவும் ஓர் இலக்கியமென்றே கூறுதல் வேண்டும். இக்கருத்தைப் பழந்தமிழர் நன்கு உணர்ந்திருந்தனர்.

**3. இன்றைய திறனாய்வின் நிலை**

இன்று தமிழ்மொழியில் தோன்றியுள்ள திறனாய்வு நூல்களைப் பார்த்துவிட்டால், பழந்தமிழன் முறையே மிகச் சிறந்தது என்ற எண்ணம்கூடத் தோன்றுகிறது. 'நூல் மதிப்புரைகள்' என்ற தலைப்பில் பத்திரிக்கைகளிலும், வானொலியிலும் வெளிவரும் திறனாய்வுகளைக் காண்கிற தமிழன் எவர்தான் வியப்படையாமல் இருக்க முடியும்? பெரும்பாலும் நூலைப் படியாமலே திறனாய்வு செய்யப்படுகிறது. நூல் எழுதித் திறனாய்வுக்கு அனுப்பியவர்க்கே இவ்வனுபவம் தெரியும். ஒருவேளை அதனை ஒரு திறனாய்வாளர் படித்துவிட்டாலும், அவர் ஆய்வு, ஒரே புகழ்மாலையாக இருக்கும், அல்லது ஒரே ஒப்பாரியாக இருக்கும். முதல் வகையைச் சேர்ந்தவர், நன்கு அச்சியற்றம் பெற்றிருக்கிறது அழகான புத்தகசாலைக்கும் கைக்கும் அணிகலம் என்ற முறையிலும் இதனைவிடச் சிறந்த ஒரு நூல் தோன்ற முடியாது' என்றும் 'விமர்சனம்' செய்வார். இரண்டாவது வகையார் 'ஏன் இந்நூல் தோன்றிற்று என்று தெரியவில்லை' என்பார்.

இவ்வாறு கூறுவதனால் திறனாய்வு நூலே தோன்ற வேண்டாம் என்று கூறுவதாக யாரும் நினைத்துவிட வேண்டாம், திறனாய்வு நூல்கள் இல்லையென்றால் இலக்கிய உலகின் சிறந்த ஓர் உறுப்பு இல்லை என்றே கூறுதல் வேண்டும். மேலைநாட்டைப் பொறுத்தவரை இக்குறைபாடு வேறு வகையில் இருக்கிறது. அங்குத் தோன்றும் இலக்கியங்களைக் காட்டிலும் திறனாய்வு நூல்கள் மிகுதியாக உள்ளன. திறனாய்வு நூலுக்கும் ஒரு திறனாய்வு நூல் தோன்றும் நிலைகூட அங்கே சாதாரணம்.

**4. இலக்கியத் திறனாய்வின் பயன்:**

திறனாய்வினால் சமுதாயத்திற்கும் இலக்கியப் படைப்பு வரலாற்றிற்கும் பயன்கள் உண்டாகின்றன. இலக்கியத் திறனாய்வில் கீழ்க்காணும் பயன்கள் உண்டாகின்றன.

1. சிறந்த கலைப்படைப்புத் தேர்ந்தெடுக்கப்படுகிறது.
2. இலக்கியக் கொள்கைகள் உருவாகின்றன.
3. புதிய இலக்கியங்களைப் படைக்கப் படைப்பாளிகள் தூண்டப்படுகின்றனர்.
4. இலக்கிய வரலாற்றிற்குத் தேவையான தகவல்கள் கிடைக்கின்றன.
5. இலக்கியத் திறனாய்வு வரலாறு உருவாகிறது.
6. இலக்கியப் பிழைகள், இலக்கணப் பிழைகள் நீங்குகின்றன.
7. சமூக வரலாற்றை அறிந்து கொள்ள முடிகிறது.
8. கலையின் சிறப்பும் அதனைக் கற்போர்க்கு உண்டாகும் மகிழ்வும் சமூக வளர்ச்சிக்கு உதவுகின்றன.
9. கலை, கலைக்காக மட்டுமன்று. கலை சமூகத்திற்காகவும் இருக்கிறது என்பதை வெளிப்படுத்தல்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



10. தனிமனிதரின் ஆளுமை, தனி இலக்கியச் சிறப்பு முதலியன அறிந்து கொள்ளப்படுகின்றன.

**5. திறனாய்வாளரின் தகுதிகள்:**

இன்றைய நிலையில் எண்ணற்ற இலக்கிய மலர்கள் மலர்கின்றன. ஊடகங்களின் வழியே அதிக அளவில் மக்களிடையே மணம் பரப்புகின்றன. 'நூல் விமர்சனம்' பற்றியே தனிபத்திரிகைகள் தொடங்கப் பெற்றுள்ளன. நூலகம், உங்கள் நூலகம், புத்தகம் பேசுது, நூல் விமர்சனம் போன்ற சிற்றிதழ்கள் நூல் விமரிசனத்திற்காக வெளி வருகின்றன. தினமணி போன்ற நாளிதழ்கள் நூல் விமரிசனங்களை எழுதி வருகின்றன. தற்காலத்தில் வெங்கட்சாமி, அசோகமித்திரன், அ.மார்க்ஸ், பொ. வேலுச்சாமி, பா.மதிவாணன், த.முருகேசபாண்டியன், க.பஞ்சாங்கம், ராஜ்கௌதமன் முதலியோர் நல்ல திறனாய்வாளர்களாகவும் விமர்சனம் செய்பவர்களாகவும் உள்ளனர். திறனாய்வாளர்களிடையே அமைய வேண்டிய தகுதிகள் கீழ்க்கண்டவாறு தரப்படுகின்றன.

1. திறனாய்வாளர், பல நூல்களைக் கற்றறிந்தவராகவும், பழுத்தப் புலமை உடையவராகவும், புதிது புதிதாய்ப் பயின்று இன்புறும் இயல்புடையவராகவும் இருத்தல் வேண்டும். விரிந்து பரந்துபட்ட நூலறிவு அவருக்கு மிகவும் இன்றியமையாதது.
2. ஒரு மொழி நூல்களில் மட்டுமன்றிப் பலமொழி நூல்களிலும் இலக்கிய அனுபவம் பெற்றவராய் இருப்பது நல்லது. அப்போதுதான் இலக்கியம் பற்றிய மதிப்பீடுகளைத் திறம்பட வெளியிட முடியும்.
3. கவிதை, நாடகம், புதினம் போன்ற எந்தத் துறையைப் பற்றித் திறனாய்வு செய்கின்றாரோ அந்தத் துறை சார்ந்த மற்றும் அதனோடு தொடர்புடைய பல நூல்களையும், கலை நுணுக்கச் செய்திகளையும் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும்.
4. தான் ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட இலக்கியத்தைப் பன்முறை பயின்று அதன் உயிர்ப்பான பகுதியைத் தெள்ளத் தெளிய உணர்ந்து கொள்ள வேண்டும்.
5. நூலின் நிலையான பகுதிகள் எவை, நிலையில்லாத பகுதிகள் எவை என்பதைப் பகுத்தறிய வேண்டும்.
6. இலக்கியம் படைத்தவர் சில கலை நுணுக்கங்களாலும், அறக்கோட்பாடுகளாலும் இயக்கப்பட்டிருந்தால் அவற்றைத் திறனாய்வாளர் தெரிந்து தெளிய வேண்டும்.
7. கால வெள்ளத்தைக் கடந்து ஒரு நூல் வாழ்வதற்குரிய காரணங்களை, நூலாசிரியரின் படைப்பாற்றலை மற்றவர்களும் கண்டு மகிழும் வகையில் வெளிக் கொணர வேண்டும்.
8. நூலாசிரியரின் தனிச் சிறப்பினையும், உள்ளத்து உணர்வுகளையும், கற்பனைத் திறனையும் கண்டறிய முனைய வேண்டும்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



9. வரலாற்றுப் பின்னணியையோ, குறிப்பிட்ட சமூகச் சூழலையோ மையமாகக் கொண்டு படைக்கப்பட்டிருந்தால் அப்பின்னணியை அல்லது சூழலைத் திறனாய்வாளன் நன்கு புரிந்து கொள்ள வேண்டும்.
10. மானிடவியலின் கடந்த கால வரலாற்றைப் பற்றி அறிவு தெளிவு மிக்கவராகவும், அருள் ஒழுக்கம் பூண்டவராகவும் இருத்தல் வேண்டும்.

இவை போன்றன திறனாய்வாளருக்குரிய இன்றியமையா தகுதிகளாகக் கருதப்படுகின்றன.

**6. திறனாய்வாளருக்குரிய பணிகள்:**

"இலக்கியத்தை நன்கு புரிந்து அனுபவிக்கும் இயல்பை வளர்ப்பதே இலக்கியத் திறனாய்வின் இன்றியமையாப் பணியாகும்" என்று திறனாய்வுப் பணி குறித்து டி.எஸ்.எலியட் என்பார் குறிப்பிடுகின்றார். இலக்கியத் திறனாய்வின் இன்றியமையாப் பணியினைக் காணும்போது உரையாசிரியர்களின் பணி திறனாய்வுப் பணியே என அறியலாம்.

1. திறனாய்வாளர்கள் செய்துள்ள பணிகளைக் கீழ்வருமாறு பகுத்துக் காட்டலாம்.
2. மூலநூற் பொருளைத் தெளிவாகக் காட்டுதல்.
3. சொல்லாட்சி, சொற்றொடர்களின் சிறப்பான பொருளை நன்கு விளக்கிக் காட்டல்.
4. நூல் கருத்துகளைத் தொடக்கத்தில் தொகுத்துச் சொல்லுதல்.
5. பிழையான கருத்துகளைத் தக்கச் சான்றுடன் மறுத்தல்.
6. குறிப்பிட்ட நூற்பொருளின் பின்னணியில் நமக்குத் தெரியாவண்ணம் மறைந்து கிடக்கும் அரிய செய்திகளை வெளிப்படுத்துதல்.
7. மூலநூலில் இடைச்செருகல் இருப்பின் அவற்றைக் களைந்து எறிய முற்படுதல்.
8. காப்பியம் போன்ற இலக்கிய வகையில் வரும் கதைக் கோப்பையும், பல்வகை மனிதரின் பல்வகைப் பட்ட பண்புகளையும் செயல்முறைகளையும் காவியக் கட்டுக்கோப்புக்கு ஏற்ற வண்ணம்படுத்திக் காட்டல்.
9. நூலின் போக்கிற்குப் பொருத்தமானவை இவை என்றும், பொருத்தமற்றவை இவை என்றும் சுட்டிக்காட்டுதல்.
10. உவமை, உருவகம், உள்ளுறை, இறைச்சி போன்றவற்றை நயமுடன் விரித்துக் காட்டுதல்.
11. மூலநூலில் மறைந்துவிட்டதாகக் கருதப்படும் செய்யுள்களைக் கண்டறிந்து கூறுதல்.
12. இசை, நாடகம் போன்ற துறைகளைப் பற்றிய அரிய கலைச் செல்வங்களை ஆங்காங்கே கொண்டு வந்து வெளிப்படுத்தல்.

மேற்கண்ட பணிகள் திறனாய்வாளரது பணிகளாகப் போற்றப்படுகின்றன.

**திறனாய்வின் வகைகள்**

1. வரலாற்று முறைத் திறனாய்வு
2. படைப்புவழித் திறனாய்வு
3. மரபுவழித் திறனாய்வு



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



4. விதிமுறைத் திறனாய்வு
5. அழகியல் திறனாய்வு
6. விளக்கமுறைத் திறனாய்வு
7. மூலப்பாடத் திறனாய்வு
8. பகுப்புமுறைத்திறனாய்வு
9. ஒப்பீட்டு முறைத் திறனாய்வு
10. மதிப்பீட்டு முறைத் திறனாய்வு

எனப் பல பிரிவுகளாகப் பிரிக்கின்றனர்.

**1.வரலாற்று முறைத் திறனாய்வு**

இத்திறனாய்வினை இருவகையாகப் பிரிக்கலாம். 1. நாட்டு வரலாற்றினை அறிதல் 2. ஆசிரியர் வரலாற்றினை அறிதல்

இலக்கியம் ஓர் காலக் கண்ணாடி. இலக்கியத்தினை முழுமையாகச் சுவைக்க வேண்டுமானால் அந்த இலக்கியம் தோன்றிய கால வரலாற்றை அறிதல் வேண்டும். படைப்பாளி ஏதோ சூழ்நிலைக் காரணிகளாலேயே ஒரு படைப்பினைப் படைப்பான். எனவே அவன் வாழ்ந்த கால சூழலை அறிய வேண்டும். ஆசிரியர் தன் உள்ள உணர்ச்சிகளையும், கிளர்ச்சிகளையும் படைப்பிலக்கியத்தில் வடித்தால், அவனது வாழ்வினை ஆராய்ந்து அறிதல் இன்றியமையாததாகும். விடுதலை கால மக்களின் வரலாற்றையும் உணர்வையும் அறிந்தால்தான் பாரதியின் பாடல்களை நாம் முழுமையாக சுவைக்க முடியும். ஒரு காலகட்டத்தில் ஒரு குறிப்பிட்ட சமுதாயம் ஏற்றுக் கொண்டனரா இல்லையா என்பதையும் அறிய வேண்டுமானால் வரலாற்றறிவு நமக்குத் தேவைப்படுகிறது.

**2.படைப்பு வழித் திறனாய்வு**

ஒரு இலக்கியத்தினை அந்த இலக்கியத்தின் அடிப்படை அமைப்புகளைக் கொண்டே ஆராய்வது படைப்பு வழித் திறனாய்வாகும். கம்பர், வால்மீகி போன்ற பெரும் புலவர்களின் சிறந்த படைப்புகளை ஆராயும்போது ஒவ்வொருவரின் படைப்பிலும் அமைந்துள்ள அடிப்படை அமைப்பினையும், நோக்கினையும், போக்கினையும் அறிதல் வேண்டும். அப்படியானால் தான் அப்படைப்பின் தன்மையினை நாம் உணரமுடியும். இத்திறனாய்வு படைப்பாளியின் படைப்புக்கு முக்கியத்துவம் தருகின்றது. ஆசிரியர் இந்த நோக்கில் படைப்பினை அணுகி மாணவர்களுக்கு கற்பிக்க வேண்டும்.

**3.மரபு வழித் திறனாய்வு**

முன்னோர்களால் வகுத்துரைக்கப்பட்ட இலக்கிய இலக்கண மரபுகளை அடிப்டையாக வைத்துக்கொண்டு ஒரு படைப்பினை ஆராய்வது மரபு வழித் திறனாய்வாகும். சங்க இலக்கியங்கள் பிற்கால இலக்கியங்களைத் திறனாயும்போது முறையே தொல்காப்பியம், நன்னூல் இலக்கண விதிகளை எடுத்துக்கொண்டு இலக்கியத்தில் பொருந்தி வரும் தன்மை பற்றி திறனாய்வது மரபு வழித் திறனாய்வாகும். ஒவ்வொரு காலங்களிலும் ஒவ்வொரு



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



வகையான இலக்கியங்கள் மலர்ந்தன. சமய வளர்ச்சியில் மக்கள் அதிக ஆர்வம் கொள்ளும்போது பக்தி இலக்கியங்கள் தோன்றின. கதைகளிலும் கற்பனைகளிலும் களித்திருக்கும்போது புராண இலக்கியங்கள் பிறந்தன. மறுமலர்ச்சி, காலங்களில் புரட்சிப் படைப்புகள் மலர்ந்தன. கட்டுப்பாடுகளையும் விதிகளையும் மீறி இன்று புதுக்கவிதைகள் புறப்பட்டன. கட்டுப்பாட்டை வலியுறுத்தி இத்திறனாய்வு அமைவதால் இது மிகுதியாகப் போற்றப் படுவதில்லை.

**4.விதிமுறைத் திறனாய்வு**

இலக்கியம் எவ்வாறு அமைதல் வேண்டும் என்று இலக்கியம் வகுக்கும் நெறிமுறைகளை அளவுகோலாகக் கொண்டு அமைவதே விதிமுறைத் திறனாய்வாகும். ஒரு இலக்கியம் இன்ன வகையில்தான் அமைய வேண்டும். இன்ன வகையான கலை நுணுக்கங்களைத்தான் பெற்றிருக்க வேண்டும். இன்ன போக்கில்தான் அதன் நடை அமைய வேண்டும் என்பன படைப்பாளியை விதிப்படுத்தி அதன்வழி நடத்திச் செல்வதே இத்திறனாய்வு முறை. இம்முறைப்படி இலக்கியங்கள் எழுதப்பட்டும், ஆராயப்பட்டும் வந்தால் ஒரு மொழியின் ஒழுங்கமைப்பு குறையாமல் பாதுகாக்க முடியும். நமது சங்க இலக்கியப் பாடல்கள் இவ்வகையைச் சார்ந்தவை. படைப்பாளி உருவாவதில்லை. மாறாக உருவாக்கப்படுகிறார். புறப்பொருள் வெண்பா மாலை இவ்வகையில் எழுந்த நூலாகும்.

**5. அழகு (அ) முருகியல் முறைத் திறனாய்வு**

இலக்கியத் திறனாய்வில் இதுவே நேரடித் திறனாய்வு என்று கூறப்படுகிறது. இத்திறனாய்வு முறையினை அறிஞர்கள் கொள்கையில் திறனாய்வு என்றும் அழைக்கின்றனர். ஒரு இலக்கியத்தின் சொற்சுவை, பொருட்சுவை, அணிநலம், உணர்ச்சி, கற்பனை வடிவம் முதலிய அழகு அமைப்புகளை ஆராயும் முறையே முருகியல் முறைத் திறனாய்வாகும்.

**6.விளக்க முறைத் திறனாய்வு**

ஒரு படைப்பின் படைப்பாளனையும், அவனது படைப்பில் அமைந்துள்ள பல்வேறு வகையான கூறுகளையும் விளக்கமான முறையில் ஆய்வு செய்தல் விளக்கமுறைத் திறனாய்வாகும். இன்று இவ்வகைத் திறனாய்வே பெரிதும் பின்பற்றப்படுகிறது. இத்திறனாய்வு முறையில் படைப்பாளியின் படைப்பு விவாதிக்கப்படுகிறது. படைப்பின் பல பகுதிகளும், அமைப்புகளும் பகுத்துக் காணப்படுகின்றன. சுருங்கச் சொன்னால் படைப்பவரின் படைப்புக் கருவூலத்தை திறந்து காட்டிப் படிப்பவர்களுக்குப் பல செய்திகளும் நன்கு தெரியும்படியாக விளக்குவதே விளக்க முறைத்திறனாய்வாளரின் கடமையாகும். ஆசிரியர் இவ்வகைத் திறனாய்வினை மேற்கொண்டு பாடப்பொருள் குறித்த கூடுதல் தகவல்களை மாணவர்களுக்கு வழங்குதல் வேண்டும்.

**7.மூலப்பாடத் திறனாய்வு**

ஒரு குறிப்பிட்ட படைப்பில் பாடவேறுபாடுகள் மிகுதியான நிலையில் அவற்றினை ஆராய்ந்து இன்ன கருத்துகள் படைப்பாளனால் அமைக்கப்பட்டது என்று கண்டறிவது



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



மூலப்பாடத் திறனாய்வாகும். நூலை மற்றொருவர் படி எடுப்பதாலும், பல்வேறு பதிப்புகள் வெளிவரும் போதும் ஏற்படும் அச்சுப் பிழைகளாலும், சமய, காழ்ப்புணர்ச்சிகளாலும் பாட வேறுபாடுகள் தோன்றுகின்றன. இதனால் படிப்பவர்களுக்கு குழப்பம் ஏற்படும். இக்குழப்பத்தை தவிர்க்க இத்திறனாய்வு பயன்படும். மனோன்மணியம் எழுதிய சுந்தரம் பிள்ளை வாழ்த்துப் பாடலாக "நீராடும் எனத் தொடங்கும் பாடலை எழுதினார். அதுவே தமிழ்தாய் வாழ்த்தாகவும் வைக்கப்பட்டுள்ளது. மூல நூலாசிரியர் "திரவிட நல் திருநாடும்" என எழுதியது இன்று "திராவிட நல் திருநாடும்" என அச்சிடப்பெற்று பாடப்படுகிறது.

**8.பகுப்பு முறைத் திறனாய்வு**

நூலின் ஒவ்வொரு கூறினையும் பகுத்து ஆராயும் முறையே பகுப்பு முறைத் திறனாய்வு ஆகும். அதிகாரத்திற்கு பத்து பத்து பாடல்களாக திருவள்ளுவர் பாடினார். இது ஓர் ஒழுங்கான முறைவைப்பு. சிந்தாமணி இலம்பகங்களாகவும், கம்பராமாயணம் படலங்களாகவும் பகுக்கப்பட்டுள்ளது. இத்தகைய அமைப்பினையும் தொடர்பினையும் ஆராய்தலே பகுப்பு முறைத் திறனாய்வாகும்.

**9.ஒப்பீட்டு முறைத் திறனாய்வு**

இதனைத் தமிழில் தீர்ப்பு உரைக்கும் திறனாய்வு அல்லது முடிவுநிலை கூறும் திறனாய்வு என அழைக்கின்றனர். இரு வேறு இலக்கியங்களை எடுத்துக் கொண்டு ஒப்பிட்டு ஆராய்தல் இத்திறனாய்வு முறை ஆகும். ஒற்றுமை வேற்றுமைக்கான பட்டியலிடலாமே ஒழிய இவ்விலக்கியம் தான் சிறந்தது என கருத்து கூறுதல் கூடாது. ஒரு காலத்தின் குறிப்பிட்ட இலக்கியப் போக்குகளை மற்றொரு காலத்தின் இலக்கியப் போக்கோடு ஒப்பிட்டு ஆராயலாம். வழிநூல் அல்லது மொழிபெயர்ப்பு நூலை மூல நூலுடன் ஒப்பிடலாம். திறனாய்வு செய்யும் இரு நூல்களுக்கிடையேயும் ஒரு பொதுத்தன்மை இருத்தல் அவசியம். தேசிய உணர்வினை மக்களிடையே பரப்புவதற்கும் இம்முறைத் திறனாய்வு பயன்படும்.

**10.மதிப்பீட்டு முறைத் திறனாய்வு**

சிறந்த படைப்புகள் குறித்து இரு திறனாய்வாளர்களிடையே வேறுபட்ட கருத்துக்கள் தோன்றினாலும் அவ்வேறுபாடுகளிடையேயும் சிறப்பான கூறுகள் பற்றியும், அதன் மதிப்பீடு பற்றியும் அடிப்படையான ஒற்றுமை இருப்பதைக் காணலாம். ஒரு படைப்பை உண்மையாகவே மதிப்பிடுவதற்கு விருப்பு வெறுப்பற்ற நடுநிலையான ஆராய்ச்சி மனப்பான்மை அவசியமாகும். ஒரு படைப்பைப் பலரும் பாராட்டுகின்றார்கள் என்பதற்காக ஆசிரியரும் பாராட்டக்கூடாது. பலரும் தூற்றுகிறார்கள் என்பதற்காக ஆசிரியரும் குறை சொல்லக் கூடாது. ஒரு படைப்பை சுவைக்கும் வாசகர் எண்ணிக்கை அதிகமாக இருந்தால் அதை சிறந்ததாகக் கொள்ளலாம். சில படைப்புகளை நன்கு புலமையுடையோர் மட்டுமே அணுகமுடியும். எனவே அப்படைப்பு தரம் தாழ்ந்ததாகாது. ஒரு இலக்கியம் தரும் இன்பம் தகுதியுடையதாகவும், தரமுடையதாகவும் அமையுமானால் அவ்விலக்கியத்தை சிறந்த இலக்கியமாகக் கொள்ளலாம். ஆசிரியர்களுக்கு இலக்கியத்தினை திறனாயும் புலமை மிக



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



அவசியம். ஒவ்வொரு இலக்கிய வகைகளுக்கும் ஒவ்வொரு வகையான இலக்கியத் திறனாய்வு முறை பயன்படும். ஆசிரியர் விளக்கும் செய்தியினை மாணவர்களுக்கு விளக்கமாகச் சொல்ல இலக்கியத் திறனாய்வுப் பயிற்சி ஆசிரியருக்குப் பயன்படும்.

பல்வேறு மொழிகளில் பல்வேறு காலங்களில் தோன்றிய இலக்கியங்களையும் புதுமை நோக்கோடு அன்றாடம் வெளிவந்து கொண்டிருக்கும் இலக்கியப் படைப்புகளையும், அறிந்து சிறந்தவற்றை மாணவர்கட்கு உரைக்க வேண்டும். எதிர்காலச் சந்ததியினருக்கு அறிவுக் கண் திறக்கும் ஞான சூரியர்களாகிய ஆசிரியர்கள் நல்ல திறனாய்வாளர்களாக இருக்க வேண்டும். சொற்களுக்காக தவிக்கும் புலவன் வெற்றி பெறுவதில்லை. தமிழ் திறனாய்வு செம்மை பெற்று செழுமையான நூல்கள் தமிழில் மலர வேண்டும். இதற்குரிய அடித்தளத்தை ஆசிரியர்கள் மாணவர்கள் மனதிலே விதைக்க வேண்டும். நற்றமிழ் பயிற்றலுக்கு துணைவருவதே இவ் இலக்கியத்த திறனாய்வுக் கலை ஆகும்.

**தொகுப்புரை**

இலக்கியம் இல்லம் என்றால் அதற்குரிய முகவரி இலக்கியம் குறித்த திறனாய்வு எனலாம். இலக்கியம் எவ்வளவு பழமையானதோ அவ்வளவு பழமையானது திறனாய்வு. இலக்கியம் மனிதனுக்குத் தரும் இன்பங்கள் அளவற்றவனவாகும். மகிழ்ச்சியளிப்பதோடு மட்டும் இல்லாமல் அறிவூட்டுவதும் நன்னெறி புகட்டுவதுமாகவும் நாவல் விளங்குகிறது. காலந்தோறும் இலக்கியங்களின் வடிவங்கள் மாறிக்கொண்டிருக்கின்றன. சிறுகதை இலக்கியம் உலகத்தில் தோன்றி வளர்ந்து ஒரு நூற்றாண்டுகளாகின்றது. இந்தியாவில் முதன்முதலாக வங்காள மொழியில் சிறுகதை இலக்கியம் தோன்றியது. இன்று குழந்தை இலக்கியம் தனித்தொரு இலக்கியமாக திகழ்கிறது. நாட்டுப்புற இலக்கியங்கள் மூலம் மக்களின் பழக்கவழக்கங்கள் பண்பாடுகள் நம்பிக்கைகளையும் அறிந்து கொள்ள முடிகிறது. பயணஇலக்கியமும் இலக்கியத்தை சிறப்பு செய்கிறது. இலக்கிய வளர்ச்சிக்கு அச்சு ஊடகங்களும் பிற தொடர்பு ஊடகங்களும் துணை நிற்கின்றன.

**பரிந்துரை நூல்கள்**

1. அடைக்கலசாமி (1997) இலக்கியவரலாறு, நால்நிலை பதிப்பகம், சென்னை.
2. கணபதி.வி. (1999) நற்றமிழ் கற்பிக்கும் முறைகள், சாந்தா பதிப்பகம், சென்னை.
3. வேணுகோபால் இ.பா.(1991) பைந்தமிழ் கற்பிக்கும் முறைகள், சகுந்தலா பதிப்பகம், வேலூர்.
4. கோகிலா தங்கசாமி (2000) தமிழ் கற்பித்தல், அனிச்சம் வெளியீடு, காந்திகிராமம்.
5. ஆர். எட்வின் ஜெயா, தமிழ் கற்பித்தலின் புதுமைகள். ரெத்தினா பதிப்பகம், கன்னியாகுமரி.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# தமிழ் வளர்த்த சைவம்

**முனைவர். மா. வீரமுருகன்,**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
தமிழ்நாடு மத்தியப்பல்கலைக்கழகம்,
திருவாரூர்- 610005.

## முன்னுரை

மொழி, இனம், சமயம் ஆகியன மக்கள் சமுதாயத்தினை இயக்கும் காரணிகள். இவைகள் மக்களை இயக்குவதோடன்றி இவை அனைத்தும் ஒன்றிணையும்போது ஒரு சமுதாயத்தை வலிமை மிக்கதாக மாற்றுகிறது. ஒரு சமுதாயத்தின் உண்மை மதிப்புகள் (Real Social values) அதன் பொருளாதார வளமையினால் அங்கீகரிக்கப்படுகிறது. இருந்தபொழுதிலும் அது மக்களுக்குள்ளான உறவை நிலைபடுத்தும் அல்லது ஒற்றுமை ஏற்படச் செய்யும் பூரணக் காரணியாக இருப்பதில்லை. சமூகம் எவ்வளவுதான் பொருளாதார வலிமையும் வளமையும் கொண்டிருந்தாலும் மக்களை எளிதில் அணுகும் காரணிகளாக மொழியும், மதமுமே திகழ்கின்றன. காரணம் இவையே அதிக உணர்ச்சி ஊட்டக்கூடிய அம்சங்களைப் பெற்றிருக்கின்றன. இதில் மதம் உணர்வுசார் சமூகத்தைக் கட்டமைக்கிறது. அறிவு, உணர்வு இரண்டும் கலந்த நிலையில் மொழி சாரந்தச் சமூகம் கட்டமைக்கப்படுகிறது.

இதனைத் தமிழ்நாட்டிற்குப் பொருத்திப் பார்த்தால் ‘தமிழ்கெழு மூவர் காக்கும் மொழி பெயர்தேஎம்’ (அகம். 31:14) என்ற தமிழ் குடிகள் வாழும் எல்லையை மொழிவழிக் கட்டமைத்தது முதல்நிலை. சங்கச் சான்றுகளை வைத்து அராய்ந்தால் அதன் தலைமையும் பொதுமையும் உணர்வுகளின் வழியில் கட்டமைக்கப்பட்டிருக்கிறது. இத்தாக்கத்தை அடிப்படைகாகக் கொண்டே, அயலவர்களின் வருகையினால் சீர்கேடு அடைந்துதிருந்தத் தமிழகத்தைப் பக்திக்காலம் புதிய பாதைக்கு அழைத்துச் சென்றது. இதற்குத் தமிழ் எடுத்த வடிவ மாற்றம் முதற்காரணமாகும்.

அவ்வடிவமாற்றம் தமிழோடு சமயம் இணைந்து புதிய தமிழகத்தை உருவாக்கி வெற்றிகண்டதாகும். இக்காலத்தில் தமிழ் தன்னைச் சமயத்தமிழாக மாற்றிக்கொண்டு வெற்றிக்கு வித்திட்டது. முத்தமிழும் ஒருசேர அழிந்துகொண்டிருந்தச் சூழலில் தமிழ் தன்னைச் சமயத் தமிழாக, குறிப்பாகச் *சைவத் தமிழாக* மாற்றிக்கொண்டு தமிழகத்தில் வெற்றிகண்டதோடு தமிழ்மொழி இன்றளவும் உயிர்ப்புடன் இருப்பதற்குக் காரணம் என்பதை இவ்வாய்வுக் கட்டுரை நிறுவுகிறது.

ஓவ்வொரு காலகட்டத்திலும் புதிய சித்தாந்தத்துடன் இயக்கங்கள் தோன்றுகின்றன. அவை மக்களிடத்தில் தங்களின் சித்தாந்தங்களின்மூலம் தாக்கத்தை ஏற்படுத்தி வெற்றியடைகிறன்றன. அதன்காரணமாக அவ்வியக்கத்தின் இருப்பு ஒரு குறிப்பிட்ட காலம் வரையில் தக்கவைக்கப்படுகிறது. சிறந்த இலக்கிய வளமை, செறிவான இலக்கண



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 
Available at: www.ijtlls.com

வரன்முறை, நீண்டதொரு இலக்கியத் தொடர்ச்சி அனைத்தும் கொண்ட தமிழ்மொழி இந்திய மொழிகளில் தனிச்சிறப்பானதொரு இடத்தைக் கொண்டுள்ளதேரடு, மரபுசார் செயல்பாடுகளில் உயரியப் பண்பினை வெளிப்படுத்துகின்றது. இதுவே தமிழ்ரகளையும் தனித்தன்மை உள்ளவர்களாக அடையாளப்படுத்துகிறது. *தமிழகம் தவிர்த்து இந்தியாவின் பிற பகுதியைச் சார்ந்த மக்களிடையே இருந்துவரும் தெளிவற்ற மரபுகள், புராணங்கள், இதிகாசங்கள் ஆகியவற்றைத் தவிர வேறு உயர்வான வரலாற்றுச் சான்றுகள் கிடையாது*[1]. என்ற வானமாமலையவர்களின் கூற்றினைக்கொண்டு மற்ற இந்திய மொழிகளோடு ஒப்பிட்டு அறியமுடியும். காலம்காலமாகத் தமிழகத்துடன் இணைந்திருந்த திராவிடக் குடும்பங்களின் *புவிக்குறியீடு* மொழிவழிக் கட்டமைக்கப்பட்டதாகும். *மொழியின் தன்மை அதன் இலக்கணம் ஆகியவற்றைக்கொண்டு அம்மொழி புழங்கும் சமுதாயம், தேசம், அவற்றின் பண்பாடு ஆகியவற்றின் தன்மைகளையும் வரலாற்றையும் அறிந்துகொள்ள முடியும்*[2] என்கிறார் ஹம்போல்ட்.

வரலாற்றில் தமிழ்மொழியின் பங்களிப்பு ஒரு தேசத்தினை வரையறை செய்யும் அளவிற்கு அதன் இறையாண்மைத் திகழ்ந்துள்ளது. தமிழ் மக்கள் தாம் பேசிய மொழியுடன் இணைந்து வாழ்ந்தனர். *தமிழர் வேறு, தமிழ்மொழி வேறு எனப் பிரிக்க முடியாதளவு அம்மொழியானது மக்களின் வாழ்வோடு இணைந்திருந்தது*[3] என்கிறார் கே.கே.பிள்ளை. தமிழகத்தில் இவ்வுணர்வு சங்க காலம் தொடங்கி மூவேந்தர்களின் ஆட்சிவரையில் வளர்ந்தவந்த உணர்வாகும். மூவேந்தர்களின் ஆதரவினால் தமிழ் பரந்த தளத்தில் நிலைத்து நின்றதோடு, நாகரீக அடையாளத்தை உலகிற்கு வழங்கியது. *தமிழரின் வாழ்வு, பேசிய மொழி, வாழ்ந்த நிலம் இம்மூன்றிற்கும் இயல்பானத் தொடர்பொன்று தமிழ் நாகரீகத்தின் அடிப்படைத் தத்துவமாக அமைந்திருந்தது*[4] என்கிறார் கே.கே.பிள்ளை. சங்ககாலத் தமிழகத்தில் மொழியே மக்கள் சமூகத்தை ஒன்றிணைக்கும் முதற்காரணியாகத் திகழ்ந்தது. *சங்ககாலத்திலிருந்தே தமிழர்கள் ஒரு செவ்வியல் தன்மையுடன் மொழியை வளர்த்துள்ளனர்*[5] எனக் கமில் சுவலபில் கூறுவதையும் இணைத்துப்பார்க்க முடியும். மொழியைப் போற்றியத் தமிழர்கள் கடவுட்கொள்கையையும் விட்டுவிடவில்லை. கடுமையான மூட நம்பிக்கைகளைப் பேசாது கடவுளையும் அவர்மேல் கொண்ட நம்பிக்கையையும் கலை இலக்கியத்தோடு இணைத்து வாழ்ந்தனர். ஓவ்வொரு சூழலிலும் தமது பண்பாட்டுச் சிறப்புகளை உயர் அங்கீகாரத்திற்கு உட்படுத்தவேண்டும் என்ற உள்ளுணர்வோடு எடுத்தியம்பியுள்ளனர். (உதா)

1. தமிழ் மொழியின் சிறப்புகளை எடுத்துக்கூறும் பொருட்டு ஆரிய அரசன் பிரகதத்தனுக்கு **குறிஞ்சிப்பாட்டு** என்ற அகநூலைக் கபிலர் படைத்தார்.

2. **குயக்கொண்டான்** என்பவன் *ஆரியம் நன்று தமிழ் தீது* என அடிக்கடிக் கூறிவந்தான். அதனைப் பலர் கடுமையாகக் கண்டித்தும் அவன் திருந்தவில்லை. ஒரு நாள் நக்கீரரிடம் பலர் சென்று கூற அவரும் இதனைக் கண்டித்தார். அவனோ அவ்வாறு கூறுவதைத் தொடர்ந்து செய்ததோடு, *தமிழ் வடமொழியைவிட உயர்வுடையதென நிரூபிக்க*



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



*முடியுமா? எனக் கேள்வி எழுப்ப, அதற்கு நக்கீரர் நிரூபிக்க முடியும் எனக்கூறி தமிழில் அறம் பாடி அவனை மாய்த்தார்*[6] என்கிறது சமஸ்கிருத ஆதிக்கம் என்ற நூல்.

மேற்கூறியவை அனைத்தும் பொதுப் பார்வை செலுத்திய சங்ககால தேச உணர்வின் வெளிப்பாடாகும். அவை தமிழுக்கு ஆதரவானச் சூழல்களில் நிகழ்ந்த நிகழ்வுகளாகும். அக்காலத்தில் பரந்த மனப்பான்மையுடன் கூடிய பொதுப்பண்புகள் நிறைந்திருந்த தமிழகம் அதனை இலக்கியங்களின் வழி வெளிப்படுத்தியுது. *பழையத் தமிழ் இலக்கியம் எமக்குத் காட்டும் நாகரீகம் வானின்று திடீரென்று வழுக்கி விழுந்ததன்று, யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற பொது நோக்கானது கணியன் பூங்குன்றனாரின் கற்பனையில் பிறந்ததன்று. குல மரபுகள் தனித்தனியாக குறுகிய வரம்புக்குள் வாழ்ந்த நிலை போன பின்பு அரசுகளும் தேச உணர்வும் உயர்ந்தபோது அக்கூற்று பரந்த மனப்பான்மையினால் ஏற்பட்டிருக்க முடியும்*[7] என்று கைலாசபதி கூற்றை ஆதாரமாகக் கொள்ளலாம். இது அயலவர்கள் தமிழ் எல்லைகளை ஆக்கிரமிப்பு செய்வதற்கு முன்பு தமிழகத்தில்லுள்ள பொதுப் பண்பு என அறியலாம். தமிழர்கள் எல்லையை மட்டுமல்லாது தமிழ் மொழியையும் பரந்த மனப்பான்மையுடன் காத்துவந்துள்ளனர். இம் மனப்பான்மை மக்களால் மட்டும் எழுப்பப்பட்டதன்று. *மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்* என்ற தலைமைப் பண்பை போற்றும் புலவர்களாலும் மக்களாலும் இணைந்து உருவானது. மன்னனும் மக்கள் வழி நடந்தான் என்பதற்கு அன்றைய தமிழ்ச் சமூகம் உதாரணம். அம்மன்னின் முன்னிலையில் இலக்கண இலக்கியங்கள் படைக்கப்பட்டன. மன்னன் கடவுளாகவே மாற்றப்பட்டு, போற்றப்பட்ட சூழலில், கடவுளின் முன்னிலையில் இலக்கியம் படைப்பது வழக்கமாயிற்று. தமிழ்க் குலமரபின் முதல் தலைவனான *திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள்* தலைவனாக இருக்க அவன் முன்னிலையில் தமிழ்மொழியின் படைப்புகள் இயற்றப்பட்டு அங்கீகாரத்திற்கு உட்படுத்தப்பட்டன. அவ்வகையில் தமிழ் இலக்கண இலக்கியங்களை இயற்றும் சங்கத்தின் தலைவனாக சிவபெருமானும், தலைமகனாக முருகக் கடவுளும் இருந்து நடத்தி வந்துள்ளனர் என்ற செய்தி நாம் வரலாற்றில் அறிந்த கதைச் செய்தியாகும். இதன் தொடர்ச்சியே *சமயமொழி* தமிழகத்தில் உருவாக அடிப்படையானது. இது பக்திக்காலத்தில் உயர் நெறியாக மக்கள் பேசும் மொழியுடன் இணைத்து அங்கீகரித்து *சைவ நெறி* எனப் பெருமைபடுத்தப்பட்டது. சிவம் - சிவன் - சைவம் - செம்மை - செந்தமிழ் என்பதற்கெல்லாம் ஓர் இணைப்பு நிலவுவதை ஆய்வு நோக்கில் அறிய முடியும். அவ்விணைப்பு ஒரு சில நூற்றாண்டளவில் நிகழ்ந்ததன்று, பலநூற்றாண்டுத் தொடர்ச்சியின் வெளிப்பாடாகும்.

தமிழகத்தில் வேற்றினத்தவர்ளின் அரசு ஏற்பட்டப்பின்பு (இருண்டகாலம்) சங்ககால மரபுகள் அழித்தொழிக்கப்பட்டன. மக்களின் அறிவுசார் சொத்துக்கள் பிறமொழியினரால் மடைமாற்றம் செய்யப்பட்டன. சமணத்தின் பிராகிருதமும், பௌத்தத்தின் பாலியும் பண்பாட்டு மரபுகளில் அதிகாரத்தின் வழியில் மாற்றத்தை ஏற்படுத்தின. அந்நியரின் அதிகாரச் சூழலினால் மாறுதல்களை ஏற்றுக்கொண்டத் தமிழக மக்களுக்கு அதுவே பழகிப்போய்விட்டது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



புறச்சமயமே அனைத்துமாக நின்ற நிலையில் பக்திக்காலம் அகச் சமயத்தின்வழி மாற்றம் செய்ய முற்பட்டது. கத்தியின்றி, இரத்தமின்றி மாறுதல்களைக் களைய முற்பட்டதன் விளைவாக உணர்ச்சியூட்டக்கூடிய *சமயநெறி* பேசியவாறு தாழ்ந்திருந்தத் தமிழை மீட்டுருவாக்கம் செய்ய முயன்று வெற்றிகண்டனர்.

தமிழ் நெறியாளர்கள் உணர்ச்சியூட்டும் சமயத்தை ஊடகமாகப் பயன்படுத்தியதன் பின்னணியில் நூற்றாண்டுகால உண்மைகள் இருந்தன. தமிழுலகில் மெல்லப் புகுந்து, ஆட்சிப் பீடத்தைக் கவர்ந்துகொண்ட வடமொழியானதுத் தமிழை இரண்டாம் மொழியாக மாற்றி வைத்திருந்ததோடு, அனைத்துத்தளத்திலும் அதுவே ஆட்சிசெய்தது. *தமிழகத்தில் அரசு மற்றும் அரசுசார் அமைப்புகள் பக்திக் காலத்திற்கு முன்பு அன்னிய மொழிகளுக்கு அனைத்துத் தளத்திலும் அங்கிகாரம் வழங்கியிருந்தன*[8] என்கிறார் ப.கிருஷ்ணன். மக்கள் மொழியான தமிழ் மூடநம்பிக்கையாலும், புரிதல் இல்லாத மத நெறிகளாலும் வழக்கொழிந்துகொண்டிருந்த நிலையில் அதிலிருந்து விடுபட முயன்றுகொண்டிருந்தச் சூழலில் திராவிடத்தைப் பிராக்கிருதமும் பாலியும் படையெடுப்பின் காரணமாக வசமாக்கிக்கொண்டு, தமிழ் மட்டுமல்லாது ஆரியத்தையும் ஒடுக்கியது. சற்றேரக்குறைய மூன்று நூற்றாண்டுகள் தமிழர்கள் அடிமைத்தளையிலிருந்து விடுபட முயற்சித்தனர். அம்முயற்சி பக்திக்காலத்தில் வெற்றிபெற்றது. பக்திக் கால சைவ நெறியாளர்கள் மக்களை எளிதில் அணுகும் வண்ணம் உணர்ச்சியூட்டக்கூடியச் சமய வடிவத்தோடு தமிழ் எழுச்சியைச் செய்தனர். அச்சமயவடிவத்தில் வைதீகம் சாராத *சிவன்* எனப் பெயர்மாற்றம் செய்யப்பட்ட *திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளே* முதன்மையானார்.

அரசிலிருந்து ஆண்டிகளையும் மாற்றி வைத்திருந்த சமண பௌத்தச் சமயங்களை வீழ்த்துவதற்கு அவர்களின் வழியே சைவநெறியாளர்களுக்கும் தேவைப்பட்டது. அவ்வாறு *சைவநெறி* தனக்கானத் தன்வயப்படுத்தும் செயல்களை வெற்றிகரமாக்கியது. *சிவன்* தமிழ் காக்கும் தெய்வமாக மாற்றப்பட்டு *தென்னாடுடைய தெய்வமாகப்* போற்றப்பட்டார். *சிவன்* என்ற தமிழ்காக்கும் தெய்வத்தின் துணைகொண்டு அக்குறியீட்டுடனே சமண, பௌத்தம் மட்டுமன்றி வட மொழியாளர்களையும் புறந்தள்ளவேண்டியச் சூழல்களை பக்திக்கால இயக்கம் சிறிது சிறிதாக உருவாக்கிக் கட்டமைத்தது.

சமூகப் பாரம்பரியத்தைக் காக்க முயலும் அனைத்து இனமும் மொழியை முதன்மையாகக் கொண்டுப் போராடுகின்றன. நீண்ட வரலாற்றைப் பெற்று விளங்கும் ஒவ்வொரு சமுதாயமும் தனது மரபினையும் பழமையினையும் எளிதில் விட்டுவிடுவதில்லை. *தமிழ்ச் சமூகமும் அத்தகைய தளத்திலே செயல்பட்டக் காரணத்தினால் மொழியின் மீது இயற்கையாகவே பற்றுணர்வு ஏற்படக் காரணமாயிற்று. அப்பற்றுணர்வு நாளடைவில் அதீதப் பற்றாக மாறி மொழியில் தெய்வத்தன்மையை ஏற்றிக்கூற காரணமாயிற்று*[9] எனக் கைலாசபதி கூறுவதை ஒப்பிட்டு அறியமுடியும். அத்தெய்வ உணர்வே தமிழ்மொழி மீண்டும் தன்னிலை அடையவும் மாபெரும் *பக்திமொழியாக* மாறவும் காரணமானது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



அவ்வெற்றியின் பின்னால் ஒருசில புனைவுகள் இருக்கச் செய்தன. தமிழ்மொழி தெய்வமொழி எனக் கருதியது, தமிழ்மொழியைக் கடவுள் படைத்தார் எனக்கூறியது. அப்புனைவுகள் *கடவுளும் மொழியும்* இணைக்கப்பெற்ற கற்பனை வாழ்க்கையைத் தமிழர்கள் போற்றும்படிச் செய்தன. இதனால் *இறைவனும் இறைத்தமிழும் ஒன்றோடு ஒன்று இணைந்து பிரிக்க முடியாத அளவில் ஒன்றையொன்று சார்ந்து, அதிகாரத்தைக் கொடுத்துப் பெற்றுக்கொள்ள வழி செய்தன*[10] என சுமதி ராமசாமி அவர்கள் கூறுவதை ஒப்பிட்டுப்பார்க்க முடியும். இத்தகையப் பரிமாற்றத்தின் விளைவாகத் தமிழரின் தொன்மைத் தலைவன் *திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் சிவன்* என்ற பெயரில் பிற்காலச் சமய இலக்கியங்களில் முதன்மைக் கடவுளாக சித்தரிக்கப்பட்டதோடு, அவரே தமிழாகவும் காட்டப்பெற்றார். இதன் மூலம் மொழியைப் போற்றும் மனநிலையை அனைத்து தரப்பு மக்களிடமும் எளிதாக உருவாக்கும் போக்கு அடங்கியிருந்தது. இவ்வுணர்வே பல்கிப் பெருகித் தமிழினத்தின் கூட்டுணர்வாகப் பிரதிபலித்தது.

இக்கூட்டுணர்வின் வெற்றியால் சைவ நெறியாளர்கள் முதல் வேலையாக இருண்டகால அரசுகளால் தடைசெய்யப்பட்டவற்றைப் பொதுமையாக்கினர். இதில் முக்கியமானது இசைவடிவங்களாகும். இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழ் உணர்வைத் திட்டமிட்டு வெளிக்கொணர்ந்தனர். பக்தியுணர்வில் தமிழையும் இசையையும் ஒன்றாக்கினர். *தென்னாடுடைய சிவனாக* சைவ நெறியின் கடவுளைக் கூறுகின்றபோதே இசைத் தமிழையும் சேர்த்துச் சொல்லும் வழக்கம் ஏற்பட்டது. தமிழைப் *பக்தியின் மொழி* எனக் கூறச்செய்தனர். சங்கக் காலத்ததிற்குப் பிறகு பக்திக் காலத்தில்தான் தமிழ் உணர்வு *பெருமை* பேசும் விதமாக வெளிப்பட்டது. பக்திக்காலத்திற்கு முன்பு அரசின் மொழிகளாக பிராக்கிருதம், பாலி, சமஸ்கிருதம் போன்றவை அங்கீகரிக்கப்பட்டிருந்ததால் அவ்விடத்தை தக்கவைக்கவேண்டி மக்களிடத்தில் *தமிழ்ப் பெருமையைப்* பேசவேண்டியக் கட்டாயம் ஏற்பட்டது. வெறும் பெருமை பேசினால் மொழி அரியணை ஏறாது என்பதால் *தன்னேறில்லாத் தலைவனாக* விளங்கிய சிவபெருமானின் மொழி *தமிழ்* எனப் பெருமை பேசவேண்டியக் கட்டாயம் ஏற்பட்டது. அதோடல்லாமல் *சமய இலக்கியங்களின் மூலம் சமூக மரபுகள், தமிழ் இலக்கிய வளம், மொழியின் தொன்மை ஆகியவற்றை ஒப்பீட்டு நோக்கில் பேசியது*[11] என க.சிவத்தம்பி கூற்றின் வழி அறியமுடியும். பக்தி இயக்கம் மொழியை அனைத்துத் தளத்திலும் இயங்கவைத்தது. குறிப்பாக இசைவெள்ளம் இக்காலத்தில் பெருகியது. தமிழ்மொழி இசைக்குரிய மொழியானதோடு இலக்கியத்தில் இசைக் கூறுகள் வெளிப்பட்டன. *சமயக் காலத்தில்தான் தமிழில் இசைவெள்ளம் பாயத்தொடங்கியது*[12] என்று கிரு'ணன் குறிப்பிடுவதும் மேற்கூறிய கருத்திற்குத் துணையாகும். இக்காலத்தில் இலக்கியங்களைத் தமிழர்கள் பெருமைக்குரிய ஒன்றாகக் கருதும் நிலையும் ஏற்பட்டது. மூன்று நூற்றாண்டுக் காலங்களில் (6, 7, 8) ஏற்பட்ட சமய மறுமலர்ச்சியின் தாக்கம் இன்றுவரை தமிழ் வாழ்வதற்குரியச் சக்தியைக் கொடுத்திருக்கிறது. *மொழிக்கு இலக்கியம் அவசியம், சமயத்திற்கு மொழி அவசியம்* என்பதை


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



உணர்ந்ததால் பக்திக்கால இலக்கியங்கள் சமயத்ததோடு மொழியை இணைத்து இரு நிலைகளையும் சமமாக்கி காக்கச்செய்தன.

பக்திக்காலத்தில் தமிழ்மொழிக்கு சைவத்தை மிஞ்சிய தொண்டினை வேறெந்த மதப் பிரிவும் செய்யவில்லை. தமிழ் உணர்வை *தெய்வ உணர்வாக* மாற்றியது *சைவ நெறியின்* முதல் மாற்றமாகும். தென்னாட்டின் கடவுளாகப் போற்றப்பட்ட *சிவனை* பாடுவதற்கு வடமொழியாளர்களும் உடன்பட்ட காலம் இதுதான். பெருவெற்றி கண்டுவரும் *சைவநெறியோடு* தங்களைத் தூயத் தமிழர்களாகத் தமிழினம் சாராதவர்களும் சொல்லத் துவங்கிய காலமும் இதுவே. அதுவரையில் வேற்றுமைப் பேசியவர்கள் பின்னாளில் *தென்மொழி வடமொழி என நிலைமாற்றிக்கொண்டு இரண்டையும் ஒப்பிட்டும் உறவுபடுத்தியும் காட்டும் நிலை ஏற்பட்டது*[13] எனக் ப.கிருஷ்ணன் கூறுவதன்மூலம் அறியமுடியும். பக்தி இயக்கத்தை வழிநடத்திய ஞானசம்பந்தர் உள்ளிட்ட மூவர்கள் புறச்சமய நூல்களையும் பிராக்கிருதக் கருத்துக்களையும் எதிர்த்தபோதிலும் சில சமயங்களில் வேதவேள்விக் கருத்துக்கள் அடங்கிய வடமொழி நூல்களை ஒதுக்கவில்லை. பிற்காலத்தில் தோன்றிய வைணவத்தில் ஏற்பட்ட வடகலை - தென்கலைப் போராட்டடம் வைணவர்கள் சார்ந்திருந்தத் தமிழ் - சமஸ்கிருதம் ஆகிய இருமொழிகளுக்குள் ஏற்பட்டக் கருத்து மோதல்கள் எனக்கருத இடமுண்டு. *ஆரம்பக் காலத் தென்கலை வைணவத்தில் தமிழ் மொழிச் சார்பாளர்களாக இருந்தவர்கள் வடமொழியிலும் நன்குப் புலமைப் பெற்றிருந்தார்கள்*[14] என்று இரா.தண்டாயுதம் கூறுகிறார். அவர்களில் *சிலர் நால் வருணப் பேதத்தை ஏற்றுக்கொண்ட வடமொழியாளர்களுடன் சேர்ந்து தாமும் உயர்குடிப் பிறப்பு என்று சொல்லிக்கொண்டு வடகலை வைணவப் பிரிவினை ஏற்படுத்தினார்கள் என்பது வரலாறு. அதுவே பின்னாளில் வளர்ந்து, நிலைத்ததொரு பிளவினை கொண்டுவந்தது*[15] இச்சூழலைச் சுட்டிக்காட்டி வெறுப்பினை வெளிப்படுத்துகிறார் தென்கலையைச் சார்ந்த மணவாள மாமுனிகள். மேலும் மொழியைப் பற்றிய விவாதங்களையும் வைணவத்தில் முன்வைக்கின்றார். *தமிழ் வடமொழிக்கு அடிப்படையாகும் எனக் கூறுவதோடல்லாமல் வடமொழிக்கு முற்பட்டது எனப் பொருள்படும் விதத்தில் அகஸ்தியமும் அநாதி*[16] என்ற கருத்தையும் அவர் பதியவைக்க முனைகின்றார்.

இத்தகையப் பிளவுகள், கருத்துருவாக்கங்கள் சைவத்தில் இல்லை. உதாரணத்திற்கு *கர்நாடகத்தின் வீர சைவமும், ஆந்திராவின் சைவ நெறியும் தமிழகத்தின் சைவ நெறியிலிருந்து சற்று வேறுபட்டாலும் வடமொழியின் தாக்கத்தினை ஏற்றுக்கொள்ளவில்லை. மேலும் தமிழ்நாட்டின் சைவ நெறிகளையே தங்களுக்கும் ஏற்றதாகத் திருத்தியமைத்துக் கொண்டன*[17] என்பதை முனைவர் சித்தலிங்கையாவின் *வீரசைவம்* என்ற நூலின் வழி அறிய முடிகிறது. தமிழகத்தைப் போலவே மற்ற பகுதியைச் சாரந்த சைவ நெறியாளர்கள் சாதி மறுப்பினைச் செய்ததையும் அறிய முடிகிறது. தமிழகத்தின் 63 நாயன்மார்கள் 9 தொகையடியார்களின் வரலாறு, அதனைத்தான் மறைமுகமாகச் சொல்கிறது. சைவ நெறியாளர்கள் சாதிவேற்றுமைப் பேசிய வடமொழியுடன் சமாதானப் போக்கையே



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



கடைபிடித்ததற்கு பின்னணி அரசியல் இருக்கச் செய்தது. ஒருகாலத்தில் வடமொழி அரசின் ஆதரவுபெற்ற மொழியாக இருந்தபோது அது தன் இருப்பினைத் தக்க வைத்துக்கொள்வதற்குத் தமிழை *நீச்சமொழி, காட்டுமிராண்டிகளின் மொழி* எனக்கூறி ஒதுக்கியதோடல்லாமல் வடமொழி *தேவமொழி*, அதன்வழிச் சென்றால் *கடவுளை* அடையமுடியம் என்று உணர்வு ரீதியாக ஆட்படுத்தியிருந்தது. இப்படி பல ஆண்டுகாலம் உணர்வு ரீதியாக மக்களைச் சிந்திக்க விடாமல் தமிழகத்தின் அதிகாரச் சூழலைத் தன் கட்டுக்குள் வைத்திருந்த நிலையினை சமண, பௌத்தம் சார்ந்த ஆட்சியாளர்கள் வந்தபிறகு புறந்தள்ளினர். வடநாட்டில் இருந்து வந்த சமணப் பௌத்த மதங்கள் அங்கே வடமொழியாளர்களால் ஏற்படுத்தப்பட்ட பாகுபாடுகளையும், அவர்களால் கடைபிடிக்கப்பட்டச் சாதீயத் தூண்டல்களையும் முன்பே அறிந்திருந்த காரணத்தினால் தமிழ்நாட்டில் அம்மொழியை அங்கீகரிக்க மறுத்ததோடு கடுமையாக எதிர்க்கவும் செய்தனர். *தென்னாட்டில் வடமொழி மற்றும் உயர்சாதியினர் எதிர்ப்பு என்பது வடநாட்டில் நிகழ்ந்தபிறகுதான் தென்னாட்டில் நிகழ்கிறது*[18] என்பதை குர்யே அவர்களின் கருத்துவழி ஒப்பிடமுடிகிறது. இருப்பினும் மக்களின் உணர்வில் கலந்துவிட்ட வடமொழி - வைதீக நெறிகளை நேரடியாகப் பகைத்துக்கொள்ளாமல் அவர்களை இணைத்துக்கொண்டு பக்தியியக்கம் சமண பௌத்த மதங்களுக்கு எதிரானப் போராட்டத்தில் ஈடுபட்டது.

வைதீக நெறியாளர்களும் சமண-பௌத்த மதங்கள் அகன்றால் இழந்த அதிகாரத்தை மீண்டும் கைப்பற்ற முடியும் என்ற கோணத்தில் தமிழ் நெறியாளர்களோடு இணைந்து போராட முனைந்தனர். சமயம் கலந்த தமிழ் நெறி உருவாவதற்கு அப்போது ஏற்பட்டச் சமரசம் காரணமாகும்.

*அதுவரைத் தமிழை ஒப்பிட்டு, தன்னை மட்டும் உயர்வு படுத்தி பேசிவந்த நிலைமாறி வடமொழியானது சரிசமமாகப் பார்க்கும் நிலை இக்காலத்தில் ஏற்பட்டது*[19] என்கிறார் ப.கிரு`ணன். இந்த வரலாற்றுப் பின்புலத்தினை உணர்ந்திருந்த சைவநெறியாளர்கள் பக்திக்காலத்தில் தமிழ்மொழியின் பெருமை குன்றாமல் பார்த்துக்கொண்டதோடு, வடமொழியாளர்கள் கடைபிடித்த சாதீய வேறுபாடுகள், பெண்களின் தாழ்வுநிலைகள், கல்வி கற்பதில் இருக்கும் பேதங்கள் ஆகியவற்றை நாசுக்காக அகற்ற முற்பட்டனர்.

கல்வி அனைவருக்கும் பொது என்ற கருத்தினை முன்வைத்ததோடு, கற்றவர்கள் அனைவரும் சபையேறி பாடல் புனையலாம் என்ற பொதுமை மீட்டுருவாக்கம் செய்யப்பட்டது. இக்காலத்தில் இலக்கியங்கள் மதச் சார்பு கொண்டவைகளாக இருந்தாலும் மொழிகாக்கும் இலக்கியங்களாக அவை அரங்கேறின. *பக்திக்காலம் இசைக்கு முக்கியத்துவம் கொடுத்தது. திருஞானசம்பந்தரால் தொடங்கப்பட்ட இவ்வியக்கம் இசை பரப்பி தமிழினை வாழவைத்ததோடல்லாமல் சாதீய பேதங்களை அழித்தொழித்தது. துப்புரவு, செப்பனிடுதல் எளிமையான முறையில் பூசை முறைகளைக் கையாளுதல், மக்களுக்குப் புரியாத மொழியில் சொல்லப்படும் மந்திரங்களை அகற்றி எளிய தமிழில் அழகியத் தமிழ்ப்பாக்களை அப்பர்*



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



*போன்றவர்கள் பாடவைத்தனர்*[20] என்கிறார் தமிழண்ணல். மேலும் *கீழான மக்கள் என ஒதுக்கி வைக்கப்பட்டவர்களின் நாட்டுப்புற வழக்கங்கள், இசைக்கூறுகள், சொல்வடிவங்கள் போன்றவை பக்திப் பாடல்களில் பயன்படுத்தப்பட்டன*[21] என விளக்குகிறார் ப.கிருஷ்ணன். இத்தகையச் செயல்பாடுகளால் *சைவ நெறி* இந்தியாவில் வேறெங்கும் இல்லாத வகையில் தமிழகத்தில் உணர்வுடன் கலந்து மிக வேகமாக வளர்ந்துத் தமிழை வாழவைத்தது.

**முடிவுரை**

பக்தியியக்கம் உணர்வினால் கட்டமைமைக்கப்பட்ட இயக்கம். அறிவினால் கட்டமைக்கப்பட்டதல்ல. எனவேதான் *சைவநெறியானது* மதச்சாயம் பூசிக்கொண்டு இன்றும் தமிழை வளர்க்கிறது. அவ்வகையில் கி.பி. 6 ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 9 ஆம் நூற்றாண்டு வரையில் வாழ்ந்த 63 நாயன்மார்கள் 9 தொகையடியார்களும் செய்த மறுமலர்ச்சியானது தமிழ்காத்த அரியச் செயலாகும். *முப்புரம் எரித்த விரிசடைக் கடவுள்* என்ற குறியீட்டை முன்னிறுத்தி. *சைவ நெறி* எனக்கொண்டு இவர்கள் செய்த அளப்பறியச் சேவை, தமிழை மீண்டும் அரியணை ஏறச்செய்தது. தமிழ் சைவநெறியாளர்கள் நேரடியாகச் சமண பௌத்தர்களுடனும், மறைமுகமாக வைதீகத்தாருடனும் ஆயுதம் ஏந்தாமல் போரிட்டு மொழிகாக்கும் முயற்சியில் வாழ்நாட்களை இழந்து, கடும் துன்பங்களை அனுபவித்து தமிழகத்தில் தமிழ் மறுமலர்ச்சியை உண்டாக்கினர். அவர்கள் அன்று செய்த அம்மறுமலர்ச்சியின் வீரியமானது திராவிட இயக்கங்கள் இந்த நூற்றாண்டில் செய்த மறுமலர்ச்சியைக் காட்டிலும் நூறு மடங்கு வீரியம் கொண்டது. ஒரு நூற்றாண்டிலேயே கலகலத்துப் போகும் சூழலுக்கு வந்துவிட்ட திராவிட இயக்கக் கோட்பாடுகளைவிட சற்றேறக்குறைய 3 நூற்றாண்டுகள் போராடியதன் விளைவாகப் பெற்ற வெற்றி இன்றுவரை நீர்த்துப்போகாமல் காப்பாற்றப்பட்டுக்கொண்டிருக்கிறது. தமிழர்களால் தமிழர்களுக்காக உருவான அப்புரட்சி எந்த மதத்திற்கும் சேவை செய்வதற்கு ஏற்படுத்தப்படவில்லை, மாறாகத் தமிழ் சமூகத்தின் *உயர் தனிச் செம்மொழியை* அன்றையச் சூழல்களுக்கு ஏற்றவாறு உணர்வு ரீதியாகக் காக்க ஏற்பட்ட *மொழி காக்கும் புரட்சிகர இயக்கம்* என மேற்கண்ட கருத்துக்களின் வழி பக்திக்கால வெற்றியைக் கூறமுடியும்.

**அடிக்குறிப்புகள்**

1. வானமாமலை. நா., பழங்கதைகளும் பழமொழிகளும். பக்.10.,1984.
2. Humpolt., The Language Activity. p. 28., 1972.
3. பிள்ளை. கே.கே., தமிழக வரலாறும் பண்பாடும்., பக்.129.,2000.
4. பிள்ளை. கே.கே.,மு.நூ.பக்.129.
5. Kamil.Swalabil., The Smile of Murugan on Tamil Literature of South India., p.2., 1973.
6. சமஸ்கிருத ஆதிக்கம்., பெரியார் திறந்த வெளிப் பல்கலைக்கழகும்., பக். 17.,1985.
7. பண்டையத் தமிழர்களின் வாழ்வும் பண்பாடும்., பக்.39.1998.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



8. கிருஷ்ணன். ப, தமிழ்நூல்களில் தமிழ் இனம் தமிழ்மொழி தமிழ்நாடு., பக்.132.1984.
9. கைலாசபதி.க., பண்டைத் தமிழர் வாழ்வும் பண்பாடும்., பக்..119.1998.
10. Sumathy Ramaswamy., The Passions of the Tongue; Language Devotion in tamil India., p.33.1998.
11. சிவத்தம்பி.,கா., பண்டைத் தமிழ்ச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி., பக்.87.1998.
12. கிருஷ்ணன், ப. தமிழ்நூல்களில் தமிழ் இனம் தமிழ்மொழி தமிழ்நாடு., பக்.135.1984.
13. கிருஷ்ணன், ப. முந்நூல்., பக்.140.
14. தண்டாயுதம்.இரா., ஆலய வழிபாடும் மொழியும்., பக்.46.1985.
15. ஆச்சார்யஹிருதயம்.,நூற்பா.40).
16. ஆச்சார்யஹிருதயம் - நூற்பா.40, 41.
17. சித்தலிங்கையா.டி.பி., வீரசைவம்., பக்.27.1998.
18. Ghurye.G.S., Cast and Race in India., p.72.1976.
19. கிருஷ்ணன். ப., பண்டைத் தமிழிலக்கியங்களில் தமிழ்மொழி தமிழினம் தமிழ்நாடு., பக்.140.1984.
20. தமிழண்ணல்., தமிழிலக்கிய வரலாறு., பக்.229.1992.
21. கிருஷ்ணன். ப. பண்டைத் தமிழிலக்கியங்களில் தமிழ்மொழி தமிழினம் தமிழ்நாடு., பக்.135.1984.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# இனக்குழுச் சமூகமும் வர்க்கச் சமுதாயமும்

**முனைவர். ந. வெண்ணிலா,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
கிருஷ்ணசாமி மகளிர் அறிவியல் கலை
மற்றும் மேலாண்மையியல் கல்லூரி,
கடலூர்.

**முன்னுரை**

தமிழ்ச்சமுகத்தில் ஐவகை நிலம் சார்ந்த இனக்குழுச் சமுதாயத்தைக் கடந்து வர்க்க சமுதாயம் தோன்றியது. உண்போர் உழுவோர் எனப் பல்வேறு வர்க்கப் படிநிலைகள் வரலாற்றுப் போக்கில் அமைந்து விட்டதனைச் சங்க இலக்கியம் எடுத்துக்காட்டுகிறது. சமுதாயத்தைக் கட்டமைத்துக் கடலையும், ஆற்றையும் வென்று ஆளுமை செலுத்தினர் என்பதைச் சங்க இலக்கியம் காட்டுகின்றது. மேலும், பண்டைத்தமிழர்கள் விண்கோள்களையும் அவற்றின் நிலைமாற்றங்களையும், பருவமாற்றங்களையும், கண்டறிந்தனர். வேளாண்மை, வாணிபம், கைத்தொழில் ஆகியவற்றுக்குப் பயன்படுத்தினர். போர், ஆடல், பாடல், ஓவியம், கட்டடம், அணை, புனைதெப்பம், ஓடம், நாவாய்,கப்பல் கட்டுதல், பானைவனைதல், நெசவு, உழுக்கருவிகள், போர்கருவிகள் படைத்தல் போன்று பல்வேறு கலைகளையும் கற்றுத் தேர்ந்தனர் என்பதையும் சங்க இலக்கியங்கள் தெள்ளத் தெளிவாகக் காட்டுகின்றன.

மனித சமுதாய வரலாறு ஒவ்வொரு சமுதாயத்திலும் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் அரசு என்பது இருந்ததில்லை என்பதை சங்க இலக்கியம் காட்டுகின்றது. பழங்குடிக் குழுக்களுக்கும், குல அமைப்புகளும் இருந்து மக்கள் கூட்டங்களை நெறிப்படுத்தி வழிகாட்டின. அவை சமுதாயத்திற்கும் வழிகாட்டியாகவும், வாழ்வியல் நெறிப்படுத்துவதற்கான விதிகளையும், உறவுகளையும், ஒழுகலாறுகளையும், பண்புகளையும் படைத்துக்கொண்டது. அரசு தோன்றிய பிறகு அவை அறநெறிகளாகவும், பழக்க வழக்கங்களாகவும், காலத்திற்கேற்ப மாறி வருகின்றன. உழைப்பு, நேர்மை, அறம், வாய்மை, உண்மை, இன்னா செய்யாமை, ஒப்புரவு போன்ற பண்புகள் எல்லாம் உருப்பெற்றுத் தொடர்ந்து வருகின்றன.

இரும்பு கண்டுபிடிப்பும், வேளாண்மையும் அதன் பண்பாடும் நாகரிகத்தையும் வர்க்கச் சமுதாயத்தையும் தோற்றுவித்தது. அந்த உண்மையைப் பண்டைய இலக்கியங்கள் சான்றுக்காட்டுகின்றன. பண்டைக் காலத்தில் வேளாண்மையும் கைவினைத் தொழில்களும் வாணிபமும் கைகோர்த்து இணைந்து வளர்ந்தன.

**இனக்குழுக்களும் - தலைமைகளும்**

தொடக்ககால மனிதன் ஒன்றுப்பட்ட, நிலையான சமூக அமைப்பினைப் பெற்றிருக்கவில்லை. நாடோடிகளாக மனம் போன போக்கில் வாழ்வியலை தொடங்கினர். வாழ்க்கைக்கென்றும், தம் உணர்ச்சிகளுக்கென்றும் வரையறையில்லாமல் வாழ்ந்தனர். அவர்கள் முறைப்பட வாழ்கையை வகுத்துக் கொல்வதற்கு காலங்கள் ஆகின. கால



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



வளர்ச்சியில் மனிதயினம் பண்பாட்டு நாகரீக நிலையை அடைந்த காலத்தையும், இனக்குழுவோடு ஒன்றுப்பட்டு உண்டு வாழ்ந்த உயர்ப்பண்புடைய வாழ்வியலையும் வாழ்ந்தனர்.

பண்டைக்காலச் சமுகத்தில் மூலதனத்தை ஒரே இடத்தில் குவிக்கவில்லை. அனைவருக்கும் கிட்டும்வகையில் அமைந்தது. பண்டைக் காலத்தில் பெண்கள் மேன்மைப் படுத்தப் பட்டனர். கல்வியில் பெண்கள் சிறந்திருந்தனர். திணைக்குடிகள் தம் தம் பொறுப்புகளை இயல்பாக மேற்கொண்டனர். ஆடவர்க்கு வினையே உயிர் என்பதற்கு முக்கியத்துவம் கொடுத்தனர். தம் பிறவி பயன் இதுவே என்று எண்ணினர். ஒருவர் மற்றொருவரை அடிமைப்படுத்தும் நிலையில்லை. இதனால்குடிகள் ஒழுக்க நெறிகளோடு வாழ்ந்தனர். முன்னோரையும் மொழியையும் நிலப்பரப்பையும், ஒன்றுப்பட்ட பண்பாட்டையும், வரலாற்றையும் உடைய மனிதர்களே இனக்குழுவாகும். ஒரு மனிதன் நவீன நாகரீக நிலையை அடைந்த ஒருவன் தன் வாழிடம், தாம் சார்ந்த சமுதாயம் போன்ற வழக்குகளையே முன்னிறுத்துவான்.

சமுதாயத்தின் அமைப்பு, பண்பாட்டு அமைப்புகள், மனிதர்கள் வாழும் இடங்கள் ஆகியவற்றின் தொகுப்பாக இனக்குழு அமைகிறது. இக்குழுவினர் ஒரு முழு கட்டமைப்பினை உடைய சமூகப் பண்பாட்டு வாழ்வினை மேற்கொண்ட போது, இச்சமூகத்தை நடத்திச்செல்லும் வகையில் குழுத்தலைமைகள் அமைகின்றன.

வினையே ஆடவர்க்கு உயிர் என்னும் பொருண்மைக்குயிணங்க, குழுத்தலைமைகள் பொருளீட்டும் வழக்கத்தை மேற்கொண்டன. ஐந்திணைக்குடி மாந்தர்களின் வாழ்வியல் தேவைகளுக்கு தலைமைகளே பொருளீட்டும் பொறுப்பை பெற்றுள்ளன. அவ்வாறு அமையும் தலைமைகளின் பண்புகளை சங்கஇலக்கியங்கள் சிறப்பாக எடுத்துரைக்கின்றன.

இனகுழுச் சமுகங்கள் தங்களது வளர்ச்சியில் இடப்பெயர்வு, தொழில் முறை, உறவுமுறைக் களப்பு, மோதல்கள் ஆகியவற்றாலும், கால மாறுதல்களினாலும், சில தனித்த அடையாளங்களைக் கைக்கொண்டு பின்பற்றுகின்றன. சில இனக்குழுக்கள் தமது பழம் தனித்துவங்களை இழக்கின்றன. சில தமது தனித்துவங்களைப் பிறவற்றுடனான கலப்பினால் துணிவுடன் இயங்குகின்றன. ஆக, இப்படி சில அரசு, சமயம், கால மாற்றம் போன்றவற்றால் திரிபு நிலைக்கு உள்ளாகின்றன. சில இவ்வாறான தாக்குதலினின்றும் தன் தனித்துவத்தை விடாமல் பின்பற்றும் இனக்குழுச் சமுகங்களிடையே ஏற்பட்ட மாறுதல்கள் பண்பாட்டுப் படிமலர்ச்சியில் ஏற்பட்ட மாற்றங்களையும், அரசியல், சமுக, சமயச் சூழல்களின் தாக்கத்தையும் நவீன உலகை நோக்கிய மனித அறிவின் விரிவாக்கத்தையும் இவ்வாறான சூழல்களிலும் அடையாளத்தைக் காக்கும் இனக்குழுத் தன்மையின் தனித்துவப் பண்பையும்காட்டுவனவாகும்.

எனவே, இனக்குழு சமூகம் தமிழக வரலாற்றின் முக்கியத்துவம் உடையதாகும். படிப்படியாக மனித முன்னேற்றப் பாதையை வகுத்தளித்ததில் இனக்குழுக்கள்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



சிறப்புபெறுகின்றன. இனக்குழுக்களும் தலைமைகளும் நிறைவான வாழ்வியலை கட்டமைத்துள்ளனர்.

**இனக்குழுச் சமுதாயம்**

சங்ககாலத் தொடக்கத்தில் பல இனக்குழுக்கள் தமிழகத்தில் இருந்தமைக்குச் சான்று பல உள்ளன. தலைவன் ஒருவனும் அவனைச் சுற்றிய சிறு கூட்டமும் அமைந்த இனக்குழுக்கள் பிரிந்து கிடந்தன. இவ்வினக்குழுக்களைச் சிறுகுடி, சீறூர் எனும் பெயரால் சங்க இலக்கியங்களில் சுட்டப்படுகின்றன. புன்செய் சூழந்துள்ள அழகிய குடிமக்கள் வாழும் சீறூரில், இடையன் கொளுத்திய விளக்கொளியில் பாணர் சூழ்ந்திருக்க நாணுடை நெடுந்தகை வீற்றிருந்தான் என்று (புறம்.324) கூறுகின்றது. நெடுந்தகை காக்கும் குடிகள் வாழும் சீறூர், இல்லை என்று இரந்து நின்றவருக்கு, ஈயும் தன்மையும் வளமையும் உடையது (புறம்.329).

சீறூர் மன்னன் எனும் சொல்லாட்சி, இனக்குழுத் தலைவர்களைக் குறிப்பாதாகும். இச்சொல்லாட்சியும் புறநானூற்றுப்பாடல்கள், 197,299,308,319,328 ஆகியவற்றில் வருகின்றது. “சிறுகுடி” எனும்சொல் இனக்குழு அமைப்புடைய சிறுகூட்டங்களைக் குறிப்பதாகும். சங்க இலக்கியத்தில் 49-இடங்களில் சிறுகுடி எனும் சொல் வந்துள்ளது. அவற்றில் அகநானூற்றில் 15 இடங்களிலும், நற்றிணையில் 20 முறையும் குறுந்தொகையில் 9 முறையும், கலித்தொகையில் 3 முறையும் பயின்று வருகின்றது.

*அடு புலி முன்பின் ,தொடு கழல் மறவர்*
*தொன்று இயல் சிறுகுடி மன்று நிழற் படுக்கும்*
*அண்ணல் நெடு வரை*
*முரம்பு அடைந்திருந்த மூரி மன்றத்து,*
*அதர் பார்த்து அல்கும் ஆ கெழு சிறுகுடி*

என்று அகநானூறு கூறும். ‘சிறுகுடி’ பற்றிய செய்திகள் கீழ்க்காணும் பாடல்களில் கூறப்பட்டுள்ளது. (அகம்.7,110,192,229,232,250,284,300,312,315,318,320,351)

*கல் முகைத் ததும்பும் பல்மலர்ச்சாரற்*
*சிறுகுடிக் குறவன் பெருந்தோட்டு குறுமகள்*
*பரு இலைக் குளவியொடு பகமரல் கட்கும்*
*காந்தள்அம் சிலம்பில் சிறுகுடி பசித்தென*

மேலும், 108,145,184,228,232,355,373 ஆகிய குறுந்தொகைப் பாடல்களில் ‘சிறுகுடி’ இடம்பெற்றுள்ளது. சிறுகுடி பற்றி நற்றிணை பின்வருமாறு உரைக்கின்றது.

*காணல் அம் சிறுகுடிக் கடல் மேம் பரதவர்.*
*படு சுடர் அடைந்த பகு வாய் நெடு வரை*
*முரம்பு சேர் சிறுகுடி*
*மறுகுதொறு புலாவும் சிறுகுடி அரவம்*



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



*வைகிக் கேட்டுப் பையாந்திசினே*

*நறுவீய நனஞ் சாரல் சிலம்பலின், கதுமென,*

*சிறுகுடி துயில் ஏழுஉம் சேண் உயர் விறல் வெற்ப*

சுற்றத்தார் அவ்விடத்தே உள்ள சிறுகுடியின் மன்றத்தின்கண் பண்ணமைந்த, இனிய தாளத்திற்கேற்ற குரவைக் கூத்து நிகழ்த்துவர், தேன்மிக்க பொதியை மலையை உடையவனின் சிறுகுடியில் வாழக்கூடியவர்கள் ஆயர்கள்,

*முறுவலாள் மென்தோள் பாராட்டி ,சிறுகுடி*

*மன்றம் பரந்தது உரை*

*ஆங்கு உணரார் நேர்ப; அது பொய்ப்பாய் நீ; ஆயின்*

*தேம் கொள் பொருப்பன் சிறுகுடி எம் ஆயர்*

என்று கலித்தொகை உள்ளிட்ட சங்க இலக்கியவரிகள் இனக்குழுப்பற்றிக் கூறுகின்றது.

**இனக்குழுத் தலைமைகள்**

தலைமைகளின் வழிக்காட்டுதலின் பெயரிலே இனக்குழுக்கள் இயங்கியுள்ளது. நானிலமக்கள் தங்கள் ஊர்தோறும் தங்களுக்கேற்ற தலைவனொருவனது காவலின் கீழ் அடங்கி வாழ்ந்தார்கள். குறிஞ்சி நிலத் தலைவன் வெற்பன் என்றும், முல்லை நிலத் தலைவனைக் குறும்பொறை நாடன் என்றும், மருத நிலத்தலைவனை ஊரன் என்றும் நெய்தல் நிலத் தலைவனைத் துறைவன் என்றும் வழங்குதல் மரபு. இத்தலைமக்களால் ஆளப்படும் சிற்றூராட்சியே முதன்முதல் தோன்றியது. ஒவ்வொரு சிற்றூர் மக்களும், தங்களால் நன்கு மதிக்கப்படும் அறிவும் ஆற்றலும் உடைய தலைமகன் ஒருவனது சொல்லுக்கு அடங்கி, அவனது காவலில் அச்சமின்றி வாழப்பழகினர். அவ்வகையில் சிறுகுடிகள். இனக்குழுத்தலைவர்கள் பெயர்களால் அழைக்கப் பெற்றனர்.

வாணன் சிறுகுடி, பண்ணன் சிறுகுடி, அருமன் சிறுகுடி என்று வழங்கப்பட்டதை சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன."வாணன் சிறுகுடி" என்னும் ஊர்,நெடிய அடிப்பகுதியை உடைய மாமரத்தின்றும் முறையாக முற்றிக் கனிந்து உதிர்ந்த வெள்ளிய பழத்தை வளைந்த காலினையுடைய யாமை தன் பார்ப்போடு கவர்ந்து உண்ணும் பொய்கைகள் சூழ்ந்தது, பொய்யாத புதுவருவாயைக் கொண்டது. அவ்வூர்க்கு வடபாலுள்ள இனிய நீரினையுடைய காட்டாற்றினை உடையது. சிறுகுடி காவிரியின் வடபால் உள்ள இவ்வூர் வாணன் என்பானுக்கு உரியது; கடற்கரைச் சோலை சூழ்ந்தது; நீர் வளஞ்சான்ற நெல் வயல்களைக் கொண்டது. இதனை,

*கொடுந் தாள் யாமை பார்ப்பொடு கவரும்*

*பொய்கை சூழ்ந்த, பொய்யா யாணர்,*

*வாணன் சிறுகுடி வடாஅது*

*தீம் நீர்க் கான்யாற்று அவிர்அறல் போன்றே*

*காய்நெற் படப்பை வாணன் சிறுகுடித், தண்டலை*



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



***பெரு நீர்க் கானல் தழீஇய இருக்கை***
***வாணன் சிறுகுடி வணங்குகதிர் நெல்லின்,***
***யாணர்த் தண்பணை***

என்று அகநானூறும்,

பிற ஊர்களினும் சிறந்தது வாணனுடைய சிறுகுடி.

***வாணன் சிறுகுடி அன்ன, என்***

என்று நற்றிணையும், வாணன் சிறுகுடி எனும் குழுத்தலைமைப் பற்றி கூறுகின்றது.

**பண்ணன் சிறுகுடி**

பண்ணன் என்பவன் தனக்கென வாழாது பிறர்க்கெல்லாம் உரிய குழுத்தலைமை பண்பினை உடையவன். இவனது சிறுகுடி அவனது ஊராகும்;

***தனக்கென வாழாப் பிறர்க்கு உரியாளன்***
***பண்ணன் சிறுகுடிப் படப்பை***

என்று அகநானூறு கூறுகின்றது.

**அருமன் சிறுகுடி**

காக்கைகள் கவர்ந்து கொள்ளுமாறு கரிய கண்ணையுடைய கருணைக் கிழங்கின் பொரியலோடு செந்நெல்லாற் சமைத்த வெண்மையான சோற்றுப்பலியைத் தெய்வத்துக்கிடுவர். அவ்வாறு தெய்வத்திற்கு இடும் குறுகிய கால்களை உடையது, மிக்க உணவுப் பொருளை உடையதுமான நல்லமனைகள் பலவாக அமைந்த பழமை மிக்க சிறுகுடி என்னும் ஊர் என்று கூறுவதால், அருமனின் குழுத்தலைமையின் பண்பை உணரமுடிகிறது. இச்சிறுகுடியின் தொன்மை குடிச்சிறப்பு விருந்தோம்பல் என்பதையும் அறியமுடிகிறது. சான்று,

***கருங் கண் கருணைச் செந்நெல் வெண் சோறு***
***சூருடைப் பலியொடு கவரிய,குறுங் கால்***
***கூழுடை நல் மனைக் குழுவின இருக்கும்***
***மூதில் அருமன் பேர் இசைச் சிறுகுடி.***

என்று நற்றிணை கூறுகின்றது.

***ஆதி அருமன் மூதூர்.***

என்று அருமன் சிறுகுடி என்னும் பழமையான ஊர் சிறப்பு உடையது என்று குறுந்தொகை கூறுகின்றது.

எனவே, பண்டைத் தமிழகத்தில் சிறு சிறு இனக்குழுக்கள் இருந்தமையையும் அவற்றுள் சில தலைவன் பெயரால் அழைக்கப் பெற்றமையையும் உணர்த்துகின்றன. இவை மட்டும் இல்லாமல் அதியர் குடி, ஆய்குடி, வேளிர்குடி போன்ற குறு நிலஅமைப்புகளும் இருந்தமையை சங்க இலக்கியம் பதிவு செய்கின்றன.


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



**இனக்குழுவின் மாற்றுருவாக்கம்**

சங்ககாலத் தமிழகத்தின் அரசியல், உரிமை வாழ்வினை வளர்த்தற்குரிய வேலியாக விளங்கியது. சிறுகுடி, சீறூர் முதலிய அமைப்புகள் திட்டுத்திட்டாக இருந்தன. அதனால், அக்காலத் தமிழ் மக்கள் பசியும் பிணியுமற்று, நல்ல வாழ்வினை வாழ்ந்தனர். வேட்டையாடி வரும் பொருள்களையும், விளைப்பொருள்களையும் பொதுவாகப் பங்கிட்டு வாழ்ந்து வந்தனர். இங்கு மக்கள் கூட்டமும் குறைவு; இடத்தின் பரப்பளவும் குறைவாக காணப்பட்டது; இனக்குழுக்களில் அமைய வாய்ப்புகள் இல்லை. உடல் வலிமையும், உள்ள வலிமையும், அறிவு வலிமையும் பெற்ற ஒருவன் இக்குழுகளுக்குத் தலைவனாக விளங்கினான். மக்கள் கூட்டம் குறைவாக இருந்தமையால் அவர்களை ஆள்வது அவனுக்கு எளிதாக இருந்தது.

இந்த இனக்குழு அமைப்பு ஒருகாலக் கட்டத்தில் சிதையத் தொடங்கியது. இக்குழுக்களுள் வலிமை வாய்ந்த ஒன்று, பிற குழுக்களை வென்று தன்னுடன் இணைத்துக் கொள்வதற்குக் காரணமாக அமைந்தது.

இனக்குழுக்கள் அரசு அமைப்பின் கீழ் வந்தமைக்குத் தலையாலங்கானத்துப் போரைச் சான்றாகக்கொள்ளலாம். சேர, சோழ மன்னர்களையும், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் ஆகிய குழுத்தலைவர்களையும் தோற்கடித்த பாண்டியன் நெடுஞ்செழியன், இடப்பரப்பு அளவிலும் மக்கள் தொகை அளவிலும் மிகுதி உடைய ஓர் அரசை நிறுவிருக்க வேண்டும். இப்போர் வெற்றியை நக்கீரர், பாண்டியன் நெடுஞ்செழியன், கத்திரிகையில் நறுக்குண்ட பிடரிமயிரினையுடைய குதிரைகள் பூட்டப்பெற்ற கொடி அசைந்தாடும் தேரினை உடையவன்; அவன், தலையாலங்கானம் என்னும் ஊரின் பரந்துபட்ட இடமெல்லாம் சிவக்குமாறு சேரன், சோழன், சினம் மிகுந்த திதியன் போரில் வலியான யானைப் படைகளையுடைய பொன்னாலான பூண் அணிந்த எழினி,பன்னாடையால் அரிக்கப்பெற்ற கள்ளினையுடைய எருமையூர்க்குத் தலைவன், மார்பிலே பூசிப் புலர்ந்த தேன் மணங்கமழும் சந்தனத்தையுடைய இருங்கோ வேண்மான், விரைந்து செல்லும் தன்மை வாய்ந்த தேரினையுடைய பொருநன் எனக் கூறப்பட்ட எழுவரையும் போரிலே வென்றான்; அவர்களுடைய வலிமையெல்லாம் அடங்குமாறு ஒருநாள் ஒரு பகலிலே அவர்தம் முரசமோடு வெண்கொற்றக் குடைகளையும் ஒருசேர வயப்படுத்திக் கொண்டான்; தன் வெற்றிப் புகழ் பெற்று, பகைவரது படைகளைக் கொன்று களவேள்வி செய்த காலத்துச் செழியனின் வெற்றி சிறப்பிக்கப்பட்டது.

***கொய் சுவல் புரவிக் கொடித் தேர்ச் செழியன்***
***ஆலங்கானத்து அகன் தலை சிவப்ப,***
***சேரல்,செம்பியன்,சினம் கெழு திதியன்***
***போர்வல் யானைப் பொலம் பூண் எழினி***
***நார் அரி நறவின் எருமையூரன்,***



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



*தேம் கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்*
*இருங்கோ வேண்மான் ,இயல் தேர்ப்பொருநன் ,என்று*
*எழுவர் நல்வலம் அடங்க ,ஒரு பகல்*
*முரைசொடு வெண்குடை அகப்படுத்து,உரை செல,*
*கொன்று,களம் வேட்ட ஞான்றை,*
*வென்றி கொள் வீரர் ஆர்ப்பினும் பெரிதே*

என்று அகநானூற்றுப் பாடல் விளக்குகிறது. மேலும், அகனாநூற்றுப்பாடல் 175 ஆம் பாடல் மற்றும் நற்றிணை 387 ஆம் பாடலும் இனக்குழுக்கள் அரசு அமைப்பின் கீழ் வந்தமைக்குத் தலையாலங்கானத்துப் போர் காரணமாக அமைந்ததை உணர்த்துகின்றது. தமிழகத்தில் சங்ககால இறுதியில் மதுரையை மையமிட்ட ஒரு விரிந்த அரசு உருப்பெற்றிருந்தமையைப் பின் வரும் சான்றுகளால் அறியமுடிகிறது.

1. *மதுரையை மையமிட்ட சங்க இலக்கியப்படைப்புகள் மதுரைக் காஞ்சி, கலித்தொகை, சிலப்பதிகாரம் முதலிய இலக்கியங்கள், மதுரையை அரசுத் தலைநகராக வருணனை செய்கின்றன.*

*2. மதுரையைச் சுற்றியுள்ள பகுதியில்தான் கூடுதல் எண்ணிக்கையிலான சங்க கால கல்வெட்டுகள் கிடைத்துள்ளன*

*3. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுந்செழியன், தலையாலங்கானத்துப் போரில் எழுவரை வென்று விரிந்த அரசொன்று உருவாகக் கால்கோள் செய்திருக்கக்கூடும்.*

*4.களப்பிரர்கள் மதுரையைக் கைப்பற்றிய பின்னர்த் தமிழகம் முழுவதும் அவர்தம் ஆட்சிக்கு ஆளாகியது. இது, தமிழகத்தில் மதுரை பெற்றிருந்த முதன்மையையும் உய்த்துணர வைக்கிறது.*

*சங்ககாலக்கல்வெட்டுகள் 22 இடங்களில் கிடைத்துள்ளன. இவற்றுள் 17 இடங்கள் மதுரையை மையமிட்ட இடங்களாகும் என்கிறார் க.ப.அறவாணன்.*

மேலும், மதுரையை ஆண்ட பாண்டியனின் தலையாலங்கானத்து அரசுருவாக்கம் பற்றிய புறச்சான்றுகள் நிரம்ப கிடைக்கின்றன. இச்சான்றுகள் யாவும் மதுரையை மையமிட்ட விரிந்த அரசு ஒன்று சங்க கால இறுதியில் தோன்றியதைப் புலப்படுத்துகின்றன.

எஞ்சிய இனக்குழுக்கள் அரசோடு முட்டி மோதி இணைந்திருக்க வேண்டும். இனக்குழுக்களுக்கும், அரசுக்கும் தொடர்ந்து போர் நடந்து வந்ததைச் சங்க இலக்கியம் பலவாறு சான்று பகர்கின்றன. மகள் மறுத்து மொழிதல் என்னும் புறத்துறை மறைமுகமாக இனக்குழுக்கள் அரசோடு இணைந்தமையை விளக்குகின்றன. இனக்குழுத்தலைவனது மகளை, மன்னர்கள் திருமணம் செய்து கொள்வதன் மூலம் அக்குழுக்கள் அரசோடு இணைக்கப்பெற்றன.

**அரசு உருவாக்கமும் சமூக மாற்றமும்**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



அரசு என்னும் சமூக நிறுவனம் பெரிய அளவில் உருப்பெற்ற போது மூன்று பிரிவினர் பெரும் திறனுடன் தமிழகத்தில் தோன்றலாயினர். இனக்குழு ஆட்சி அமைப்பிற்கும் விரிந்த அரசு ஆட்சி அமைப்பிற்கும் பெரும் வேறுபாடுகள் உண்டு. மக்கள் தொகையின் பெருக்கம், இடப்பரப்பளவின் கூடுதல் முதலியன அரசு அமைப்பில் அடித்தளங்களாக அமைந்தன. அவ்வாறு அமைந்த பல்வேறு இனக்குழு மக்கள் அனைவரையும் ஒரு கட்டுக்கோப்புக்குள் கொண்டு வருவது தேவையாயிற்று; கட்டாயமாயிற்று; இம்மக்களின் தத்தம் தலைமையை விடுத்துக் குறிப்பிட்ட அரசன் ஒருவனை ஏற்க வேண்டுமாயின் அரசத் தலைமை இறைமையோடு தொடர்புடையதாகக் கற்பிக்கப் பெறுதல் வேண்டும். அப்பொழுதான் அரசத் தலைமை மதிக்கப்பெறும்; மக்களால் ஏற்கப்பெறும்.

இனக்குழு அமைப்பில் தலைமை எப்பொழுதும் வலிமையும் அறிவுக் கூர்மையும் உடையதாக இருந்தது. அரசு, தலைமுறைச் சொத்தாக்கப் பெற்றபோது வலிமையும், அறிவுக் கூர்மையும் பாரம்பரியத்தைத் தந்து விடமுடியாது. அவ்வாறு வலிமையும், அறிவுக்கூர்மையும் தரவில்லை என்பதால் வலிமைக்குத் தளபதிகளும் அறிவுக்கூர்மைக்கு அமைச்சர்களும் தோன்றினர். இதனை எண்பேராயம் ஐம்பெருங்குழு ஆகிய அமைப்புகள் விளக்குகிறது. இந்த அரசு அமைப்பு மக்களைத் தன் கட்டுப் பாட்டுக்குள் வைத்துக்கொள்ள முயன்றது. இம்முயற்சியில் சமயங்களும், ஆரியப் பண்பாடும் பங்கெடுத்துக் கொண்டன. பங்கேற்கவே சமய ஆரியப்பண்பாட்டுக் கலப்புத் தோற்றம் பெற்றன.

**அரசு தோற்றத்தால் ஏற்பட்ட மாற்றங்கள்**

அரசு தோற்றத்தால் பொருளாதார உற்பத்தி பெருகிய உற்பத்திக்கு ஒருசிலர் உரிமையுடையவராக மாறினர். பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் உள்ள இனக்குழுக்கள் இணைந்தபோது ஏற்றத்தாழ்வுகள் மறைந்தன. உழைப்புச்சக்தி பெருகியது. மருத நில வருவாய் ஒருபுறம் நிற்க, நாட்டின் விரிந்த பரப்பளவால் வணிகம் செழித்து வளர்ந்தது. ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு உற்பத்திப் பொருளைக் கொண்டு செல்வது எளிமையானது. இதற்குப் போக்குவரத்துச் சாலை அமைப்புகள் துணையாக அமைந்தன. இனக்குழு அமைப்பின் எல்லைகளின் தடுப்புகள் உடைக்கப்பெற்றதால் வணிகர்கள் நீண்ட தொலைவு சென்று பொருளீட்ட முயற்சித்தனர். கடல் தாண்டிய வாணிபம் சங்க காலத்தில் நிகழ்ந்தது தெளிவுப்படுகிறது. இதனால், செல்வவளம் ஒரே இடத்தில் குவியத் தொடங்கியது. அரசனுக்கு இணையான செல்வவளம் படைத்தவர்கள் சமூதாயத்தில் தோன்றினர். அவ்வாறு தோன்றியதால் மேல்நிலையில் இருந்த அரசரும் செல்வந்தர் பிறரும் தம்மை நிலைநிறுத்திக்கொள்ளப் பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டனர்.

**மேல்மட்ட பண்பாட்டுத் தோற்றம்**

இனக்குழுக்கள் இணைந்து அரசு உருப்பெற்றபோது அரசப்பிரிவு, வணிகப்பிரிவு வலிமைப்பெற்றதோடு இவற்றை முறையுறுத்த எழுந்த அந்தணப் பிரிவும் நிலைப்பெற்றது. இதன் விளைவாக அரசன் கடவுளரோடு இணைத்துப் பேசப்பெற்றான். நிலையான படை



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



அமைப்புத் தோன்ற மறவர்களின் தியாக மனப்பான்மை தேவையாயிற்று. இதனால் வீரசொர்க்கம் பற்றிய சிந்தனைகள் தோற்றம் பெற்றன. பொருளாதார ஏற்றத்தாழ்வுகளை நிலைநிறுத்த மறுபிறப்புச் சிந்தனைகள் வேண்டிதாயிற்று. இவை யாவற்றையும் தமிழினத்தவர்கள் ஏற்றுக் கொண்டனர். அரச இனமும் வணிக இனமும் பிறப்பு வழித் தம் உரிமையை நிலைநாட்ட விரும்பின. எனவே தொழில்வழி இனப்பிரிவுகள் நிலவிய தமிழகத்தில் பிறப்பு வழிப் பிரிவுகள் ஏற்பட்டன. அரசர்,அந்தணர்,வணிகர் ஆகிய வருணாசிரம முறை ஏற்கப் பெற்றமைக்கும் மறுபிறப்பு முதலிய கோட்பாடுகளைப் பரப்புவதற்கும் ஆரியர்காரணிகளாயினர். எனவே ஆரியப் பண்பாடு எளிதாகத் தமிழகத்தில் கலக்கத்தொடங்கியது. ஆரியர்கள் அரசர்க்கும், வணிகர்க்கும் இடையே நின்று கீழ்மட்டச் சமூகத்தைத் துண்டித்தனர். இதனால் மேல்மட்ட பண்பாடு பரவியது. பின்னாளில் அனைத்து மக்களும் மேல்மட்டப் பண்பாட்டைப் பின்பற்றினர்.

### முடிவுரை

தமிழகத்தில் சமூக மாற்றங்கள் நிகழுத் தமிழ்ச் சமுதாயம் தானே இடம் கொடுத்தது என்பதை உணரமுடிகிறது. சமூக மாற்றத்தை விளைவிக்கும் காரணிகளாகச் சமுதாய சிந்தனையாளர்கள் பின் வரும் காரணங்களை கூறுகின்றனர். பாரம்பரியம், சூழ்நிலை, இனம், பண்பாடு, நாகரிகம், சமூகத்தரப்பிரிவு ஆகியன சமூக மாற்றக்காரணிகளாக் கருதத்தகுவன. பெற்றோர்களிடமிருந்து குழந்தைகள் உயரியப் பண்புகளையும் உள்ளப் பண்புகளையும் பெறுவது உற்பத்திச் செய்கையின் இயல்பான போக்காகும். இவ்வாறு பரம்பரையாகப்பெற்ற பண்புகளின் முழுமையைப் பாரம்பரியம் என்பர். ஒரு பொருளைச் சூழ்ந்திருந்து பாதிக்கின்ற தன்மையைச் சூழ்நிலை என்பர். இது, இயற்கைச் சூழ்நிலை, செயற்கைச் சூழ்நிலை, சமூகச் சூழ்நிலை, உளவியல் சூழ்நிலை என நான்கு வகைப்படும். மார்க்சியக் கொள்கை பொருளாதார சூழ்நிலைக்கு முதன்மை கொடுக்கிறது. பாரம்பரியத்திற்கும், சூழ்நிலைக்கும் இடைப்பட்ட ஒரு பிரச்சனையான இனம் என்பதை அறிஞர் கருதுவர். பாரம்பரியத்தின் மூலம் வழி வழியாகக் கொண்டு செல்லப்படக்கூடிய புலனாகக் கூடிய பொதுவான உடற்கூற்று அமைப்புப் பண்புகளை உடைய மனிதக் குழுவே இனம் எனப்படும். மனிதன் தன்னுடைய குறிக்கோள்களை அடைய உருவாக்கிய பொருள் சார்ந்த, பொருள் சாராத வினைத்திட்டங்கள் ஆகியவை பண்பாடு எனப்பெறும். மனிதன் தன் ஆழ்ந்த விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ள உருவாக்கிய தொழில்துறை, பொருளாதாரம், அரசியல், பல்வேறு வினைத்திட்டங்கள் முதலியவற்றின் முழுமையே நாகரிகமாகும்.

### *அடிக்குறிப்புகள்*

1. பக்தவத்சலபாரதி. 2005-289-90.
2. தட்சணாமூர்த்தி.அ- காவியா இதழ்.
3. சமூகவியல். மேல்நிலை முதலாமாண்டு. 152.
4. அகம். 75



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



5. அகம். 103
6. குறுந். 93
7. குறுந்.100
8. நற். 4
9. நற். 33
10. நற். 114
11. கலி. 45
12. கலி. 102
13. கலி. 108
14. அகம். 117
15. அகம். 204
16. அகம். 269
17. நற். 240
18. அகம். 54
19. நற். 367
20. குறுந். 293
21. அகம். 36
22. சிலம்பு. நா. செல்வராசு. பக்: 69-70
23. சைனரின் தமிழிலக்கண நன்கொடை. ப. 36

**துணைநூற்பட்டியல்**

1. சங்க இலக்கியம் உ.வே.சா. உரை கழக வெளியீடு, சென்னை.
2. சங்க இலக்கியம் நச்சினார்க்கினியர் உரை. கழக வெளியீடு, சென்னை.
3. சிலம்பு நா.வெல்வராசு ஆய்வுக்கட்டுரை புதுச்சேரி மொழிபுலம் ஆராய்ச்சி நிறுவனம். லாஸ்பேட்டை, புதுச்சேரி.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# சிலம்பில் பதிந்த சமணம்

**இரா. யசோதா,**
முனைவர்பட்டஆய்வாளர்,
தமிழாய்வுத்துறை,
பிஷப் ஹீபர் கல்லூரி,
திருச்சி.

**முன்னுரை**

தமிழில் தோன்றிய முதல் காப்பியமாகவும், அநீதிக்கு எதிராகப் போராடுவதில் புரட்சிக் காப்பியமாகவும், மக்களின் எளிய வாழ்க்கை முறையை விளக்குவதில் குடிமக்கள் காப்பியமாகவும் விளங்குவது சிலப்பதிகாரமாகும். பெண்ணின் பெருமையினையும், பிறர்மனை நாடும் ஆண்மகனால் நாட்டிற்கும், வீட்டிற்கும் ஏற்படும் இன்னல்களையும் சித்தரிக்கும் இக்காப்பியம் கோவலன், கண்ணகியின் வாழ்க்கை முறையினையும் பலவாறு ஆராய்கிறது. இதில் சமண சமயம் சார்ந்த கொள்கைகள், வழிபாடுகள், பழக்க வழக்கங்கள், சடங்குகள், நம்பிக்கைகள், தொடர்பான பல தகவல்களும் இதில் பதியப்பட்டுள்ளன. இத்தகு சமணச் செய்திகள் சிலம்பில் பதிந்த விதத்தை இக்கட்டுரை வாயிலாக ஆராயலாம்.

**சமணம்**

மக்கள் வாழும் வாழ்க்கை நெறியே சமணமாகும். இது தலைமுறை தலைமுறையாக இந்திய மக்களால் போற்றிக் காக்கப்பட்டு, சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற ஒரு புதிய சமூக அமைப்பிற்கு அடித்தளமாக்கப்பட்டு வருகிறது. **“சமண சமயத்திற்கு ஜைன மதம், ஆருகத மதம், நிகண்ட மதம், அநேகாந்த வாதமதம், சியாத்வாத மதம் என்னும், பெயர்களும் உள்ளன. சமணம் என்பது ‘ச்ரமண’ என்னும் பாகதச் செல்லிலிருந்து தோன்றியது என்பர். (த.ரமேஷ், நடுநாட்டுச் சமணக் கோயில்கள், ப.9) “சமஸ்கிருத ‘ச்ரமண’ தமிழில் ‘சமண’” ஆகிறது என்பது காஞ்சிப் பெரியவர் சந்திரசேகரேந்திர சரசுவதியின் கருத்தாகும் (தெய்வத்தின் குரல் தொகுதி 2, ப.39).** அதாவது எல்லா உயிர்களையும், நிலைமைகளையும் சமமாகக் கருதி மதிப்பவன், தன் முயற்சியால் வீடுபேறு அடைய முயற்சி செய்பவன் என்னும் பொருளில் “ஸமனோ” எனப் பாகத மொழியில் குறிக்கப்படுகிறது. இதில் “ஸமனோ” என்கிற சொல் ‘சமணம்’ என்பதின் பொருத்தச் சொல்லாகும்.

இத்தகைய சமண சமயமானது அகிம்சை, வாய்மை, களவு செய்யாமை, பிரமசரியம், தவம் என்னும் 5 விரதங்களாக சமணர்களுக்குரிய ஒழுக்கங்களை வரிசைப்படுத்தியுள்ளது. இதை பின்பற்றி வாழ்க்கை நடத்துபவர்களையே அறநெறியில் வாழும் சமணர்களாக ஏற்றுக்கொள்ளப்படுகின்றனர்.

**சிலம்பில் சமணம்**

கோவலன், கண்ணகியின் வாழ்க்கையினை அடிப்படையாகக் கொண்டு தமிழர்



International Journal of Tamil Language and Literary Studies 

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140

Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com

மரபையும், பண்பாட்டையும் சார்பாக அமைத்து இடையிடையே சமண சமயக் கொள்கைகளைப் புகுத்தி சிலப்பதிகாரத்தை அமைத்துக் காட்டியுள்ளார் இளங்கோவடிகள்.

புகாரைவிட்டு மதுரைக்குச் செல்லும் வழியில் இடைப்பட்ட பிற சமயக் கடவுளர்கள், 7 இந்திர விகாரைகள் போன்றவற்றை மணிவண்ணன் கோட்டத்தில் வலம்வந்து வணங்கிச் செல்கின்றனர். அதே நேரத்தில்,

**"உலக நோன்பிகள் ஒருங்குடன் இட்ட**

**இலகு ஒளிச் சிலாதலம் தொழுது வலங்கொண்டு" (சிலம்பு. 10, 24-25)**

என சமணக் கடவுளை வலம்வந்து வணங்கிச் சென்றனர். அதோடு, மதுரைக்குச் செல்வம் வழியில் கோவலன், கண்ணகி, கவுந்தியடிகள் மூவரும் பஞ்ச நமஸ்கார சமண மந்திரத்தை **"மொழிப்பொருள் தெய்வம் வழித்துணை ஆக" (சிலம்பு. 10, 100) என தியானம் செய்து கொண்டிருந்தனர். பின்னர் சாரணரைக் கண்டதும் "பண்டைத் தொல்வினை பாறுக" (சிலம்பு. 10,164) என்று கூறி கவுந்தியின் காலில் விழுந்து வணங்கினர். சாரணர்கள் அருகக் கடவுள் துதியினை மேற்கொண்டு "பவந்தருபாசம் கவுந்தி கெடுக" (சிலம்பு, 10, 213)** என்று வாழ்த்துகின்றனர்.

இவ்வாறு கோவலனும், கண்ணகியும் சமணக் கடவுளைத் தொழுவதும், சமண மந்திரங்களைத் துதிப்பதும் அவர்களை சமணத்தை பின்பற்றி அறநெறியில் ஒழுகுபவர்களாகக் காட்டுகிறது என அறிய முடிகிறது.

**சமண விரதங்கள்**

சமணர்களின் வாழ்க்கையில் பின்பற்றக்கூடிய 5 விரதங்களான ஒழுக்க நெறிகளை அறியலாம்.

**அகிம்சை (கொல்லாமை)**

அகிம்சை என்னும் சொல்லுக்குப் பொருள் விளக்கமாக **"யாதோர் உயிருக்கும் ஊறு செய்யாமை" எனப்பொருள் காண்பர். எல்லா உயிர்களையும் சமமாகப் பாவித்தல் என்ற பொருளையும் அறிஞர்கள் கூறுவது மிகவும் பொருத்தமே" (சோ.ந.கந்தசாமி, இந்தியத் தத்துவக் களஞ்சியம், ப.181)** என்று சோ.ந.கந்தசாமி கூறுகிறார்.

**"கொல்லாக் கோலத்து உயிர் உய்ந்தோர்" (சிலம்பு. 28, 93).**

**"அமர்க்களம் அரசன தாகத் துறந்து**

**தவப்பெருங்கோலம் கொண்டோர்" (சிலம்பு. 28, 104-105)**

என்ற சிலப்பதிகார பாடற்வரிகள் கொல்லாமலேயே உயிர் பிழைத்துப் போன சமணர்களைப் போன்று தவவேடம் கொண்டு உயிர் பிழைத்து அரசர்கள் ஓடிய செய்தியை விளக்குகின்றன.

**பொய்யாமை (அசத்தியத் தியாகம்)**

பொய்யா விரத்தினையே வாய்மையின் வழுவாத நிலையாக கவுந்தியின் வழி எடுத்துரைக்கிறார் இளங்கோவடிகள்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019



Available at: www.ijtlls.com

**"வாய்மையின் வழாது மன்னுயிர் ஓம்புநர்க்கு**

**யாவதும் உண்டோ எய்தா அரும்பொருள்" (சிலம்பு. 11, 158-159)**

இத்தகு அகிம்சை, பொய்யாமை என்ற இரு விரதங்களையும் கடைபிடிப்பவர்களை "இட்டசித்திகள் எய்த வல்லவர்" என்று கவுந்தி கூறும் விதம் சமண சமயத்தின் நெறியாகக் காட்டப்படுகிறது என அறியலாம்.

**கள்ளாமை (அஸ்தேயம்)**

சிலம்பில் கள்வர்களைத் தண்டிப்பதற்கு வெள்ளிடை மன்றங்கள் இருந்ததாக கூறப்படுகிறது. மேலும் கோவலனை பார்த்தால் கள்வனாகத் தெரியவில்லையோ என்று காவலன் ஒருவன் சொல்கின்றான். அதற்கு பொற்கொல்லனோ கள்வனுக்கான இலக்கணம் களவு நூலில் கூறப்பட்டுள்ளதை எள்ளி நகையாடி எடுத்துரைக்கின்றான். கொலைகளக் காதையில்,

**"மந்திரம் தெய்வம் மருந்தே நிமித்தம்**
**தந்திரம் இடனே காலம் கருவியென்று**
**எட்டுடன் அன்றே இழக்குடை மரபில்**
**கட்டுண் மாக்கள் துணையெனத்திரிவது**
**மருந்தின் பட்டீராயின் யாவரும்" (சிலம்பு. 16, 166-170)**

என்று இழிவான தொழிலைச் செய்யும் கள்வர்கள் மந்திரம், தெய்வம், மருந்து, நிமித்தம், தந்திரம், இடம், காலம், கருவி என்ற எட்டுச் சூழ்நிலைகளையும் துணையாகக் கொண்டு செய்பவர்கள். இதில் மந்திரத்தை கடைபிடிப்பதால் தேவகுமாரர்கள் போன்று யார் கண்களுக்கும் அகப்பட மாட்டார்கள். இதுபோன்று இந்த எட்டுச் சூழ்நிலைகளையும் பயன்படுத்துவதால் அவர்களை விரைவில் கண்டறிவது அறிது என களவு நூலில் கூறப்பட்டுள்ளதை எள்ளலோடு பொற்கொல்லன் விளக்குகிறான். இது கள்ளாமை உயிர்க் கொலைக்கு ஒப்பான அறச்சட்டம் என சமண அறம் போதிப்பதாக சிலம்பு நமக்கு உணர்த்துவதை அறிய முடிகிறது.

**பிறனில் விழையாமை (காமம் இன்மை)**

கோவலன் தனக்கு உரிமையான கண்ணகியை விடுத்து பிறர் மனையான மாதவியை நாடிச் செல்கின்றான். இதனால் தனது வான் பொருள் அனைத்தையும் இழந்த பொருளை மீட்பதற்காக மதுரைக்குச் சென்று மரணத்தைத் தழுவுகிறான். இதில் ஒருவன் பிறர்மனை நாடுவதால் வீட்டிற்கும், நாட்டிற்கும் எந்த அளவு பாதிப்பினை உண்டுபண்ணும் என்கிற உண்மையை சமண அறக்கருத்துகளின் வழி சிலம்பு நமக்கு தெளிவுபடுத்துகிறது என அறியலாம்.

**பொருள் வரைதல் (மிகுபொருள் விரும்பாமை)**



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019  Available at: www.ijtlls.com

ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்கள் அனைத்தையும் அறநெறியில் ஈட்டுதலே மகாவீரரின் போதனையாகும். அதன்வழி சிலம்பில் மிகுந்த பொருள் ஈட்டுவதற்கான செய்திகள் இடம்பெறவில்லை என்றாலும் தாம் ஈட்டிய பொருளை பிறருக்குத் தானம் செய்யும் நிலையை அதிகமாகக் காணலாம். அந்த வகையில் கோவலன், கண்ணகியின் பெற்றோர்கள் தாங்கள் சேர்த்த செல்வங்களை பிற மக்களுக்கு வாரி வழங்கும் விதம் அவர்களில் அறநெறியை காட்டுவதாக அமைகிறது எனலாம்.

கள்ளத்தனமாக, பேராசையால் பொருள் ஈட்ட எண்ணி கோவலனைக் கொலை செய்த பொற்கொல்லன் அவனோடு சேர்ந்து தன் குலமும் அழியக் காரணமாயினான். ஆகவே முறைதவறி ஈட்டும் பொருளைக் காட்டிலும், வரையறைக்கு உட்பட்டு ஈட்டும் பொருளே மிகச் சிறந்த வாழ்க்கையைத் தரும் என சிலம்பு உணர்த்தும் சமணக் கருத்து போற்றுதலுக்குரியதாக அறிய முடிகிறது.

இது போன்று 5 வகையான விரதங்களான ஒழுக்கக் கூறுகளை சமண சமயமானது சிலம்பின் வழி நமக்கு உணர்த்துகிறது என்பதை அறியலாம். இது மட்டுமல்லாது திசை விரதம், தியான விரதம், மகாவிரதம், மௌனவிரதம், அளித்தல் விரதம் போன்ற பல விரதங்களையும் சமண அறநெறியின் வழி மக்கள் பின்பற்றுவதாக சிலம்பில் எடுத்துரைப்பதையும் அறிய முடிகிறது.

**சமணத்தின் வழி பக்தி நெறி**

சிலப்பதிகாரத்தில் சாரணர்கள், கவுந்தியடிகள் கூற்றுகளின் வாயிலாக அமையும் பாடல்பகுதிகள் சமணரின் பக்தி நெறிக்கு ஆதாரமாக அமைகின்றது.

**"அறிவன் அறவோன் அறிவுவரம் பிகந்தோன்**
**செறிவன் சினேந்திரன் சித்தன் பகவன்**
**....... விண்ணவன் வேதமுதல்வன் விளங்கு ஒளி"** (சிலம்பு. 10,176-189)

அருகதேவன் அனைத்துப் பொருள்களையும் அறியக் கூடியவன், அனைத்து உயிர்களிடத்தும் அருளுடையவன், எட்டு வினைகளை வென்றவன், கர்மங்களை கழலியவன், தருமங்கள் செய்யக்கூடியவன், எல்லாவுயிருக்கும் தலைவன், குண விரதங்களை அருளியவன் எனப் பல்வேறு சமணப் பண்புகளை உடையவன் அவனது ஆகம விதிகளை பின்பற்றாவிடில் பிறவி என்னும் சிறையிலிருந்து விடுதலைப் பெறமாட்டார்கள் என்று சாரணர் தலைவர் உபதேசம் செய்வதும்,

**"சாரணர் வாய்மொழி கேட்டுத் தவமுதற்**
**காவுந்தி கைதன் கைதலை மேற்கொண்டு**
**ஒருமூன் றவித்தோன் ஓதிய ஞானத்**
**....... பந்தம் அறுகெனப் பணிந்தனர் போந்து"** (சிலம்பு. 10,192-213)



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



சாரணர் தலைவர் கூறிய அறிவுரைகளைக் கேட்ட கவுந்தியடிகள் தமது இரு கரங்களையும் குவித்து, "எனது செவிகள் காமம், வெகுளி, மயக்கம் ன்ற மூன்றினையும் கெடுத்தவனான அருகதேவன் அருளிய அறிவுரைகளைத் தவிர பிறவற்றை கேட்காது, எனது நாவானது அருக தேவனின் 1008 பெயர்கள் தவிர வேறொன்றினை ஓதாது, கண்களோ அருகதேவனின் திருவடிகளைத் தவிர வேறொரு கடவுளைக் காணாது எனப் பலவாறு அருகதேவனின், சமண பக்தி நெறியை எண்ணி வியந்து பேசும் கவுந்தியின் வரிகள் நமக்கு சமண நெறியின் உச்சக்கட்ட சிறப்பினை தெளிவுபடுத்துவதை அறிய முடிகிறது.

**சமணத்தின் வழி முக்தி நெறி**

பற்றுதல் தான் பிறப்பிற்குக் காரணம். பற்று என்னும் ஆசையினை விட்டால் வீடுபேறு என்னும் முக்தி நிலையானது எளிதில் கிடைக்கும் என எல்லாத் தத்துவங்களும் விளக்குகின்றன. பௌத்தமானது ஆசையே துன்பத்திற்குக் காரணம் என்கிறது. திருமந்திரமானது "ஈசனோடு ஆயினும் ஆசை அறுமின்" என உரைக்கிறது. எனவே ஆசை நீங்கினால் தான் துன்பம் தீரும், பாசம் நீங்கினால் பாவம் தீரும் என சாரணர்கள் கவுந்தியடிகளுக்கு அறிவுரை வழங்கும் போது,

**"பவந்தரு பாசம் கவுந்தி கெடுகென்று**
**அந்தரம் ஆறாப் படர்வோர்த் தொழுது**
**பந்தாம் அறுகெனப் பணிந்தனர் போந்து" (சிலம்பு. ப.102, 10 காதை)**

என கோவலன், கண்ணகி, கவுந்தியடிகள் என மூவரும் 'பாசம் கெடுக' எனச் சொல்லி சாரணரை வணங்கி விடை பெற்றனர். இவ்வாறு சமண நெறியின் வழி பின்பற்றும் அனைத்து உயிர்களும் மோட்சம் என்னும் முக்தி நிலையை அடைவர் என்று சிலம்பின் வாயிலாக அறிய முடிகிறது.

**சிலம்பு காட்டும் ஆசிவகம்**

இளங்கோவடிகளின் காலத்தில் சமணமானது பல பிரிவுகளாக இருந்தன. அதில்,

- ஆடை அணியாதவர்களைத் திகம்பரர் என்பர்.
- தூய வெள்ளாடை அணிந்த துறவிகளை சுவேதாம்பரர் என்பர். மணிமேகலையில் இதுபோல் இரண்டு பிரிவு உள்ளது.
- ஆசீவகம்
- நிகண்ட வாதம் எனவும் இரு பிரிவுகளாக பகுக்கின்றனர். (துரைசாமி. மு., இரட்டைக்காப்பியத்தில் சமணம், ப.145)

**அசீவகம்**

தானங்கள் பல புரிந்து ஆசீவகத்தில் இணைந்து அறவாழ்க்கை மேற்கொண்டவனான மாநாய்கனின் மனைவி, கண்ணகியின் துயரநிலை கண்டு உடல் வருந்தி உயிர்விட்டாள். இதனை,



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**"கண்ணகி தாதை கடவுளர் கோலத்து**
**அண்ணலம் பெருந்தவந்து ஆசீ வகர்முன்**
**புண்ணிய தானம் புரிந்து அறம் கொள்ளவும்**
**தானம் புரிந்தோன் தன்மனைக் கிழத்தி**
**நாள் விடூஉ நல்லுயிர் நீத்து மெய் விடவும்" (சிலம்பு. 27, 98-102)**

இவ்வாறு விளக்குகிறது சிலம்பு. இதில் ஆசீவகம் என்பதற்கு அடியார்க்கு நல்லார் சமண சமயத்தின் பாகுபாடுகளுள் ஒன்று என்றும் இம்மதத்தினர்க்குத் தெய்வம் மற்கலி என்றும், நூல் நவகதிர் என்றும் கூறுவர் (துரைசாமி.மு., இரட்டைக்காப்பியத்தில் சமணம், ப.145).

**மற்கலி**

**"என்றலும் மற்கலி தானே யிறையினி**
**ஒன்பது வாங்கதிர் நூல்யா முடையன**
**மன்பெரு நுண்பொரு ளைந்தியல் பாயவை**
**இன்ப நிகழ்ச்சியுங் காழ்பா டெனச் சொல்" (சிலம்பு. அடி. நல்லார், ப.547)**

என்று கூறுவதன் வாயிலாக ஆசீவக சமணம் அக்காலக்கட்டத்தில் பெரு வழக்கத்திலிருந்ததாக அறிய முடிகிறது. அதோடு மற்கலியை "மகாவீரரை மீறித் தனிச் சமணம் ஏற்படுத்திய மாணவர்" என்று அறிஞர் ஹோர்ன்லே சமய ஒழுக்கத்துறைப் பேரறித் தொகுதியில் குறிப்பிட்டுள்ளார் என்பர். நிகண்ட வாதம் என்பது மற்றொரு பிரிவு. இதனைத் திகம்பர சமணம் என்பர் (துரைசாமி. மு., இரட்டைக் காப்பியத்தில் சமணம், ப.146).

இவ்விரு குறிப்புகளும் சிலப்பதிகாரத்தில் இடம் பெறுவதால் இளங்கோவடிகள் காலத்திலேயே சமண சமயத்தில் இரு பிரிவுகள் இருந்ததென அறிய முடிகிறது. அதோடு மணிமேகலையின் இரு பிரிவுகளின் தத்துவங்களும், "சமயக் கணக்காதம் திறம்கேட்ட காதையில்" விரிவாக விளக்கப்படுகிறது எனவும் அறியலாம்.

**சிலம்பில் காணலாகும் சமண வழிபாடு**

அருகதேவன் கோயிலில் வண்டுகள் சேரும்படி தேன் நிறைந்த பூவினையும், நறுமணப் புகையினையும் காட்டி இல்லத்தார் வழிபடும் விதத்தினை மதுரைக்காஞ்சி எடுத்துரைக்கிறது.

**"வண்டுபடப் பழுநிய தேனார் தோற்றத்துப்**
**பூவும் புகையுஞ் சாவகர் பழிச்ச" (மதுரை காஞ்சி, அடி 475-476)**

இதுபோல் சிலம்பில், பசுமையான அருட்பார்வையினையுடைய இயக்கி என்னும் யக்ஷி தேவதைக்கு பால்சோறு படைக்கப்படும் வழிபாட்டினை,

**"புறஞ்சிறை மூதூர்ப் பூங்கண் இயக்கிக்குப்**
**பால்மடை கொடுத்துப் பண்பின் பெயர்வோள்**
**ஆயர் முது மகள் மாதரி என்போள்" (சிலம்பு. 15, 116-118)**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



(பால்மடை = பால் சோறு) இதில் ஆயர் குலப்பெண்ணான மாதரி என்பவள் சமணர் வழிபாட்டின் படி யக்ஷிக்குப் பால்சோறு படைக்கும் விதம் மற்ற சமய வழிபாடுகளுக்கு ஏற்றதாக காட்டவதாக அமைகிறது.

**யக்ஷி என்பது**

சிலம்பில் குறிப்பிடப்படும் "யக்ஷி" என்னும் மாதரி வழிபடும் கடவுளானது இங்கு 'இயக்கி' என்னும் பொருளில் அமைகிறது. அதாவது இயக்கி என்பதன் பொருள் ஆரியாங்கனை என்பதாகும். ஆரியாங்கனை என்பது பெண் துறவி யாரும் **"கணவன் இருக்கும் பொழுது துறந்தவள்" (சிலம்பு. 15, 115-118)** கணவன் உயிரோடு இருக்கின்ற காலக்கட்டத்திலே தன் இல்லற வாழ்வினைத் துறந்து, துறவு வாழ்க்கை வாழும் பெண்களின் துறவி நிலை குறிப்பதாகும் அத்தகையப் பெண் துறவிக்கு பால்சோறு படையலிட்டு மாதரி வழிபடும் நிலையானது சிலம்பில் சமணர் வழிபாடாகக் காட்டப்படுகிறது என அறியலாம்.

**சிலம்பில் காணும் பஞ்ச பரமேட்டிகள்**

பஞ்ச பரமேட்டிகளை சமணர்கள் போற்றிக் காத்தனர். இவர்களது கோயில் இருந்த செய்திகளையும் சிலப்பதிகாரம் நமக்குத் தெளிவுபடுத்துகிறது.

**"புலவூண் துறந்து, பொய்யா விரதத்து,**
**அவலநீத்து, அறிந்து அடக்கிய கொள்கை,**
**மெய்வகை உணர்ந்த விழுமியோர் குழீஇய**
**.......... உலக நோன்பிகள் ஒருங்குடன் இட்ட**
**இலகு ஒளிச் சிலாதலம் தொழுது" (சிலம்பு. 10, 15-25)**

புகார் நகரில் அருகதானமும், பஞ்சபரமேட்டிகள் கோயில்களும், சாவக நோன்பிகள் கூடியிருந்து சாரணர்கள் வருகைக்குக் காத்துக் கொண்டிருக்கும் சிலாதலமும் இருந்த செய்திகள் இடம்பெறுகின்றது. மேலும் இதில் பஞ்ச பரமேட்டிகள் என்று கூறப்படுவது அருகர், சித்தர், ஆச்சாரியர், உபாத்தியாயர், சாதுக்கள் போன்றோர்களே ஆவர்கள். இவர்களுக்கான கோயில்கள் இருந்த செய்தியும், சமணத்தைப் போற்றும் இவர்களை தெய்வமாக வழிபடும் முறையும் இருந்ததை சிலம்பு நமக்கு உணர்த்துகிறது என அறியலாம்.

**சமண சீலங்கள்**

சிலம்பின் இறுதிக்காதையில் சமண தருமங்கள் அனைத்தையும் தொகுத்து சமண சீலங்களாக இளங்கோவடிகள் அமைத்துக் காட்டியுள்ளது மிகவும் போற்றுதலுக்குரியதாகும்.

**"பரிவும் இடுக்கணும் பாங்குறநீங்குமின்**
**தெய்வம் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின்**
**பொய்யுரை அஞ்சுமின் புறஞ்சொல் போற்றுமின்" (சிலம்பு. 30, 186-202)**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



சமணர்கள் மட்டுமின்றி பிற மக்களும் நல்வாழ்வு வாழவும், நல்லவற்றை பேணி உலக அறங்களை காக்கவும் சொல்லி முக்தி உலகுக்கு வழி காட்டுகின்றார் இளங்கோவடிகள் என அறியலாம்.

**முடிவுரை**

சமணர்கள் மேற்கொள்ளும் ஒழுக்கக் கூறுகளான கொல்லாமை, பொய்யாமை, பிரமச்சரியம், தவம், பிறன்மனை பேணாமை போன்ற விரதங்களைப் பற்றியும், சமணர்களின் வாழ்க்கை நிலையையும், அவர்களை வழிபடும் முறைகளைப் பற்றியும் சிலம்பின்வழி இக்கட்டுரை நமக்குத் தெளிவுபடுத்துகிறது. அதோடு சமணத்தின் வழி பின்பற்றும் மக்கள் அடையும் பலனையும், முக்தி நிலையையும் பற்றி கவுந்தியடிகள், கோவலன், கண்ணகிக்கு உரைக்கும் அறிவுரைகளின் வாயிலாகவும் சிலம்பின் மாந்தர்கள் பின்பற்றுவதன் மூலமாகவும் இளங்கோவடிகள் சமணத்தை நம் மனக்கண் முன் பதியச் செய்வதை அறிய முடிகிறது.

**பார்வை நூல்கள்**

1. சாமிநாதையர். உ.வே., சிலப்பதிகாரம், நூல் நிலையம், சென்னை, 1978.
2. துரைசுவாமி.மு., இரட்டைக் காப்பியத்தில் சமணம், நாம் தமிழர் பதிப்பகம், திருவல்லிக்கேணி, சென்னை, 2016.
3. ரமேஷ்.த., நடுநாட்டுச் சமணக்கோயில்கள், மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2005.
4. கந்தசாமி.சோ.ந., இந்தியத் தத்துவக் களஞ்சியம், தொகுதி-I, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2003.
5. அங்கமுத்து.தி.நா., சங்க இலக்கியம் சிலப்பதிகாரம், ஜெயமணி முதலியார் வெளியீடுகள், சென்னை, 2009.


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# தமிழ் மொழியின் தோற்றமும் வளர்ச்சியும்

**முனைவர் கு. ரதீஸ்வரி**
உதவிப் பேராசிரியர், விழுமக் கல்வித் துறை,
தமிழ்நாடு ஆசிரியர் கல்வியியல் பல்கலைக்கழகம்,
காரப்பாக்கம், சென்னை-600097.

**முன்னுரை**

மனித வாழ்வில் பிறப்பு முதல் இறப்பு வரையிலும் மொழி பெரிதும் பயன்பட்டு வருகிறது. வாழ்வில் பெரிதும் பயன்படும் மொழியைத் திறமையுடன் கையாள மொழிக்கல்வி இன்றியமையாததாகிறது. கேட்டல், பேசுதல், படித்தல், எழுதுதல் போன்ற மொழியின் அடிப்படைத்திறன்களை வளர்க்க மொழிக்கல்வி பயன்படுகிறது. மொழித்திறன்களில் கற்றவர்களே மற்றவர்களிடம் இருந்து வேறுபட்டுக் காணப்படுகின்றனர். உலகின் பழமையான மொழிகளுள் தமிழ் மொழியும் ஒன்றாகும். மொழியானது கருத்துப் மாற்றத்திற்கும் சிந்தனையை வளர்ப்பதற்கும் எண்ணத்தை வெளியிடுவதற்கும் கற்பதற்கும் கற்பிப்பதற்கும் பயன்படுகிறது. மக்களின் பழக்க வழக்கங்களுக்கு ஏற்ப ஒலி வடிவங்களும், வரி வடிவங்களும் தோன்றின. மொழியின் வளர்ச்சியில் பேச்சுமொழியை அடுத்து எழுத்துமொழி தோன்றியது. மொழி பல்வேறு தனித்தன்மைகளை கொண்டு விளங்குகிறது. நாட்டின் தேசிய இலக்கை மையமாக வைத்தே கலைத்திட்டங்கள் வடிவமைக்கப்பட்டன. கலைத்திட்டத்தை பயன்படுத்தியே தமிழ் பாடத்திட்டங்கள் வடிவமைக்கப்படுகின்றன. தேசியக் கல்விக் கொள்கைகளை பாடத்திட்டத்தின் மூலம் மறுமலர்ச்சியடைகிறது என்பதை அறியலாம்.

**மொழி**

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே தனக்கென ஒரு வாழ்வையும் வரலாற்றையும் வகுத்துக்கொண்ட பெருமை கொண்டது தமிழ்மொழி. இலக்கியத்திலும் இலக்கணத்திலும் தனக்கெனத் தனியொரு பாரம்பரியத்தைக் கொண்டு வாழ்ந்தது தமிழ்மொழி. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே தொல்காப்பியரைப் பெற்றெடுத்தது தமிழ்மொழி. தமிழ் மொழி நீண்ட ஒரு வரலாற்றினையும் நெடிய ஓர் இலக்கண, இலக்கியப்பாரம்பரியத்தையும் பெற்றுள்ளது. தமிழ்மொழி சீனம், இலத்தீன், கிரேக்கம், எபிரேயம் போன்றது. திராவிட மொழிகளுள் தமிழ் மொழியே பண்டைக் காலம் முதல் பயின்று வருவது. பழமைக்கும் பழமையாய்ப் புதுமைக்கும் புதுமையாய் விளங்கும் நமது தமிழ்மொழி உலக அரங்கிலே தனியொரு நிலையை எய்தி நிற்கிறது. இந்தியத் துணைக்கண்டத்தில் மட்டுமின்றி இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், மாலத்தீவு, தென்னாப்பிரிக்கா போன்ற நாடுகளில் பேசப்படுகின்ற நிலையிலும் உயர் தனிச் செம்மொழியாக விளங்கும் நிலையிலும் தமிழ் மொழியை உலக மொழியாகக் கருதலாம் என அறிஞர்கள் பலர் கருதுகின்றனர்.

பேச்சாலும் எழுத்தாலும் மனிதன் தனது கருத்தைப் பிறருக்குத் தெரிவிக்கும் கருவி மொழியாகும். அவன் வாழ்ந்ததும் வாழப் போவதும் மொழியாலேதான். மக்கள் வாழ்வில்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



பிறந்து மக்களால் வளர்க்கப்பட்டு மக்களின் வாழ்வை நாகரிகமுடையதாக உயர்த்தி வரும் அரிய கலை மொழியே. ஆறறிவு பெற்ற மனித சமுதாயத்தையும் ஐந்தறிவு கொண்ட விலங்குகளையும் வேறுபடுத்துவது மொழி. நினைப்பிற்கும் எட்டாத நெடுங்காலத்திலிருந்தே அவனோடு பின்னிப் பிணைந்து வாழ்ந்து வளர்ந்து வரும் மொழி, மனிதனின் வாழ்க்கையில் இல்லையேல் மனிதன் மனிதனாக வாழமுடியாது. மொழி இல்லாவிட்டால் மனித நாகரிகமே இல்லை. மொழி இல்லாத மனித சமுதாயத்தையோ, சமுதாயம் இல்லாத மொழியையோ காண்பது அரிதாகும். மொழி சமூகச் செயலாக விளங்குகிறது. நமது முன்னோர்கள் விட்டுச் சென்ற அறிவுக் கருவூலங்களை நாம் கண்டு துய்ப்பதற்கும் நாம் இன்று பெற்றுள்ள அறிவுச் செல்வத்தை நமது வழித்தோன்றல்களுக்கு வழங்குவதற்கும் மொழி பெருந்துணையாக அமைந்து உள்ளது. மனித வரலாற்றின் தொடக்க காலத்திலிருந்தே மனிதன் தன் கருத்தைப் பிறருக்குத் தெரிவிக்க வேண்டிய உணர்வோடு முயன்று வந்த முயற்சியின் முற்றிய வளர்ச்சியே இன்றைய மொழியாகும்.

**மொழியின் பண்புகள்**

மொழி மனிதன் உருவாக்கிய அரிய கலை. மனிதனைப் பிற உயிரினங்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டுவது மொழியே. மனிதர்களைச் சமுதாயமாக இணைப்பதும் மொழியே. ஒருவர் தம்முடைய எண்ணங்களை வெளியிடவும், பிறருடைய எண்ணங்களைப் புரிந்து கொள்ளவும் மொழி வாயிலாக விளங்குகிறது. சிந்தனை, கற்பனை ஆகியவற்றுக்கும் அடிப்படையாக அமைவது மொழி. ஒரு சமுதாயத்தின் பண்பாடு, தத்துவம், சமயம், நம்பிக்கை முதலியவற்றோடு இரண்டறக் கலந்ததாக மொழி விளங்குகிறது. இன அடையாளமாகவும், தேசியத்தைக் கட்டமைப்பதற்கான அடிப்படையாகவும் மொழி அமையக்கூடும்.

ஒரு மொழி குறிப்பிட்ட ஒரு காலத்தில், ஒரு குறிப்பிட்ட கூட்டத்தினரால் எவ்வாறு பேசப்படுகிறது என்பதனை, உள்ளது உள்ளவாறே ஆராய்ந்து விளக்கும் முறை, விளக்கமுறை மொழியியல் எனப்பட்டது. மொழியின் பல்வேறு காலகட்டங்களில் ஏற்படும் மாறுதல்களை ஆராய்வது வரலாற்று மொழியியல் எனப்பட்டது. உறவுடைய மொழிகளுக்கிடையே காணப்படும் உறவினர் நெருக்கம், ஒன்றிலிருந்து ஒன்று பிரிந்த காலம் முதலானவற்றைக் கணக்கிடுவது, ஒப்பீட்டு மொழியியல் எனப்பட்டது. இசை வளர்ச்சியுற்ற பின்னர் இரண்டு மொழிகளையும் ஒப்பிட்டு அவைகளுக்கிடையே காணப்படும் ஒற்றுமை, வேற்றுமைகளை கணக்கிடுவதற்காக, வேறுபாட்டு மொழியியல் எனும் பிரிவு வளர்ந்தது.

பொருள் பொதிந்த பேச்சே மொழி எனப்படுகிறது. விலங்குகளின் கருத்துப்பரிமாற்ற முறையில் பல்வேறு வகையான ஒலிகள் உள்ளன. விலங்குகள் வெவ்வேறு வகையான குரல்களை எழுப்புகின்றன. இவற்றை நாம் மொழி எனக் கருதுவதில்லை. மொழியானது விலங்குகளின் கருத்துப் பரிமாற்ற முறைகளிலிருந்து எந்தெந்த முறையில் வேறுபடுகிறது என்பதைப் பண்புகள் சிலவற்றின் அடிப்படையில் விளக்கலாம்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



**வளர்ப்புத் தன்மை**

மொழி ஒலிகளால் ஆனது. ஒலிகளைக் கொண்டு சொற்களும், சொற்களைக் கொண்டு தொடர்களும் வளர்க்கப்படுகின்றன. அதாவது மனிதப்பேச்சை ஒலியாகவும், சொல்லாகவும் பகுத்துக் காட்ட இயலும். ஒலிகளையும், சொற்களையும் இடம் மாற்றி வேறுவகையாக அமைக்க முடியும். விலங்குகள் பொருள் பொதிந்த குரல்களை எழுப்பினாலும் அவற்றை அசைகளாகவோ, சொற்களாகவோ பகுத்து விளக்க இயலாது.

**ஆக்கத்திறன்**

ஒலிகளையும், சொற்களையும் பல்வேறு வகையில் இணைப்பதன் மூலம் புதிய சொற்களையும், தொடர்களையும் மனித மொழியில் உருவாக்க இயலும். இலக்கண நியதிகளை மனதில் கொண்டு ஒவ்வொரு மனிதனும், ஒவ்வொரு நாளும் புதிய புதிய சொற்றொடர்களை மொழியில் படைக்க முடிகிறது. இத்தகைய ஆக்கத்திறனுக்கான சாத்தியம் விலங்குகளின் கருத்துப்பரிமாற்ற முறையில் குறைவு.

**இடுகுறித்தன்மை**

பொதுவாக சொல்லுக்கும், அந்தச் சொல் சுட்டும் பொருளுக்கும் உள்ளார்ந்த தொடர்பு இருப்பதில்லை. இவைகளுக்கிடையேயான தொடர்பு மரபு வழிப்பட்டது. காகம் "காக்கா" எனத் தமிழில் வழங்கப்படுவதும், குயில் "குக்கூ" என ஆங்கிலத்தில் வழங்கப்படுவதும் இதற்கு விதி விலக்குகள் ஆகும்.

**சூழல் சாராத தன்மை**

விலங்குகள் எழுப்பும் குரலோசைக்கும், அவற்றின் உணர்விற்கும் நேரடியான தொடர்பு உள்ளது. பசியில்லாத வேளையில் பசிப்பது போல குரலெழுப்ப விலங்குகளுக்குத் தெரிவதில்லை. பொய்யும், புனைவும் விலங்குகளின் மொழியில் இல்லை. காலம், இடம் ஆகிய சூழ்நிலைகளைச் சார்ந்தே அவற்றுக்குரிய அனுபவங்களை விலங்குகளால் வெளியிட முடியும். சூழல் சாராது ஒன்றை வெளிப்படுத்த மனித மொழியில் மட்டும் முடியும்.

**மாறும் தன்மை**

விலங்குகளின் கருத்துப் பரிமாற்ற முறை காலங்காலமாக ஒரே விதமாக இருந்து வருகிறது. ஆனால் மனித மொழியில் காலந்தோறும் மாற்றங்கள் நிகழ்ந்துகொண்டே இருக்கின்றன. சில சொற்கள் மொழியில் புதிதாகத் தோன்றுகின்றன. சில வழக்கிழந்து போகின்றன. மனித சமுதாயத்தின் தேவைக்கேற்ப இம்மாற்றங்கள் மொழியில் நிகழ்கின்றன.

**பண்பாடு பேணும் பண்பு**

ஒரு சமுதாயத்தின் பல்வேறு கலைகளும் வாழ்வியல் கூறுகளும் அந்தந்தச் சமுதாயத்தின் பண்பாட்டையும், பண்பாட்டுக் கூறுகளையும் வெளிப்படுத்துகின்றன. மொழியின் இலக்கணக் கூறுகள் சமுதாய உறவுகளைக் காட்டுகின்றன. வணக்கம் தெரிவித்தல், மரியாதையாகப் பேசுதல் பற்றிய மொழி வழக்குகள் அந்தந்தச் சமுதாயத்தின் பண்பாட்டைக் காட்டி நிற்கின்றன.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**மொழியும் சமூகமும்**

தனி மனிதர்களை இணைப்பதற்கும், சமுதாயத்தின் இயக்கத்திற்கும் மொழியே அடிப்படையாக விளங்குகிறது. சமுதாயத்தைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகவும் மொழி திகழ்கிறது. மனித சமுதாயத்தின் வளர்ச்சிக்கும் நாகரிகத்திற்கும் மொழியே அடிப்படையாகும். மொழியின் வாயிலாக சமுதாயத்தின் எல்லா வகையான பணிகளும் நிறைவேற்றப்படுகின்றன. சமுதாயச் சூழலுக்கேற்ப மொழிப் பயன்பாடுகளும் வேறுபடுகின்றன. மொழியானது சமுதாயத்தின் கருத்துப்பரிமாற்றச் சாதனமாக மட்டுமின்றி, சமுதாயத்தின் பயன்பாட்டு, அரசியல், சமய, இன, அடையாளமாகவும் விளங்குகிறது.

வணக்கம் தெரிவித்தல், விடைபெறுதல், மங்கல வழக்குகள், மரபுத் தொடர்கள் போன்றவை அந்தந்த மொழிச் சமூகத்தின் கட்டுக்கோப்புக்கு உட்பட்டு அமைகின்றன. மொழிப்பயன்பாடுகள் சமுதாயத்தின் சூழ்நிலைக்கு ஏற்பக் கையாளப்படுவதையும் காணமுடிகிறது. வழிவழியாக வரும் சிந்தனைகளைப் பேணுவதற்கும், பயன்பாட்டு, பழக்கவழக்கங்களை அடுத்தடுத்த தலைமுறையினருக்கு எடுத்துச் சொல்வதற்கும் மொழியே அடிப்படையாக அமைகிறது. பயன்பாட்டு ரீதியாகவோ, அரசியல் ரீதியாகவோ ஒரு சமுதாயத்தின் மீது ஆதிக்கம் திணிக்கப்படும்போது அதிலிருந்து தம்மைக் காத்துக்கொண்டு மீட்சி பெறுவதற்கான ஆதாரப் பொருளாகவும் மொழி விளங்குவதை வரலாற்றில் காணமுடிகிறது.

**மொழியின் தோற்றக் கொள்கைகள்**

மொழியின் தோற்றம் பற்றி ஒவ்வொரு சமூகத்திலும் ஒவ்வொரு கதை வழங்குகிறது. மொழியின் தோற்றம் பற்றிய கதைகள் பல சமயச் சார்புடையதாக விளங்குகின்றன. சிவபெருமான், தமிழை அகத்தியருக்கும் படைத்துக்கொடுத்தார் எனப் புராணங்கள் குறிப்பிடுகின்றன. மேலை நாடுகளிலும் இதனையொத்த நம்பிக்கைகள் பல நிலவுகின்றன.

முதன்முதலில் சமயச் சார்பற்ற நிலையில் மொழியின் தோற்றம் பற்றி ஆராய்ந்தவர்களுள் அரிஸ்டாட்டில் குறிப்பிடத்தக்கவர். மொழியானது மரபாலும், உடன்பாட்டாலும் உண்டானது என அரிஸ்டாட்டில் கூறினார். இவரது ஆசிரியரான பிளாட்டோ பெயருக்கும், அது சுட்டும் பொருளுக்கும் தொடர்பு இருப்பதாகக் கருதினார். சாக்ரடீஸ் ஒலிக்குறிப்புச் சொற்களே மொழித் தோற்றத்திற்குக் காரணம் என்றார். கிரேக்கர்களது ஆய்வுமுறை ஊக முறையிலும், தத்துவ முறையிலும் அமைந்தது. வரலாற்று ரீதியாக மொழியின் தோற்றத்தை விளக்க இயலாது.

**சைகை மொழி**

மனித சமூகம் குழுக்களாக வாழ்ந்த காலத்தில் சைகைகள், முகபாவங்கள் போன்றவை கருத்துப் பரிமாற்றத்திற்குப் பயன்படுத்தப்பட்டன. இவை போதுமானதாக இல்லாத நிலையில் குரல் வாயிலாகக் கருத்தைத் தெரிவிக்கும் முறை ஏற்பட்டிருக்க



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



வேண்டும். இது படிப்படியாக மொழியாக வளர்ச்சி பெற்றிருக்க வேண்டும் எனக் கருதுபவர்கள் உண்டு.

**குழந்தை மொழி**

இயல்பாகவே குழந்தைகளிடமிருந்து மொழி வெளிப்படுகிறது. இது இயற்கையாக, தாமாகவே வெளிவருகிறது என்று கருதுபவர்களும் உண்டு. ஆனால் பிறக்கும் குழந்தை, தான் வளருகிற சூழலில்தான் மொழியைக் கற்றுக்கொள்கிறது. சமுதாயத்தோடு மொழி இரண்டறக் கலந்தது.

மொழியின் தோற்றம் குறித்த ஐவகைக் கோட்பாடுகள் மேலைநாடுகளில் கூறப்படுகின்றன. ஆட்டோ ஜெஸ்பர்சன் தம்முடைய நூலில் இவற்றை விளக்கியுள்ளார்.

1. போலி மொழிக்கொள்கை
2. உணர்ச்சி மொழிக்கொள்கை
3. பண்பு மொழிக்கொள்கை
4. தொழில் ஒலிக்கொள்கை
5. இன்பப்பாட்டு மொழிக்கொள்கை

**போலி மொழிக்கொள்கை**

போலச்செய்தல் காரணமாகச் சொற்கள் தோன்றியிருக்கலாம் என இக்கொள்கையாளர்கள் கருதுவர். கா..கா எனக் கரையும் பறவை "காக்கா" என்று தமிழில் அழைக்கப்படுவதையும், "கூக்கூ" எனக்கூவும் பறவையை "குக்கூ" என ஆங்கிலத்தில் வழங்கப்படுவதையும் இதற்குச் சான்றாகக் குறிப்பிடுவர். எகிப்தியர் பூனையை "மியா" என்ற சொல்லைப் பயன்படுத்துவதும் இம்முறையிலே அமைகிறது. ஆயினும் மொழியினர் அளப்பரிய சொற்களஞ்சியத்தின் இத்தகைய சொற்கள் மிகக்குறைவு. எல்லாச்சொல்லுக்கும் இப்படிப்பட்ட தொடர்புப்பொருள் அமைவதில்லை.

**உணர்ச்சி மொழிக்கொள்கை**

மனிதன் பல்வேறு வகையான உணர்ச்சிகளை வெளிப்படுத்துகின்றனர். ஒவ்வொரு வகையான உணர்ச்சிக்கும் ஏற்ப வெவ்வேறு வகையான ஒலிகளை அவன் எழுப்புகிறான். இத்தகைய ஒலிகளிலிருந்தே மொழியின் தொடக்கம் அமைந்தது என்பது உணர்ச்சி மொழிக்கொள்கையாகும்.

**பண்பு மொழிக்கொள்கை**

ஒவ்வொரு பொருளும் ஒருவகை ஓசைப்பண்பை இயல்பாகவே பெற்றுள்ளது என்ற எண்ணத்தின் அடிப்படையில் இக்கொள்கை கூறப்படுகிறது. ஒலிக்குறிப்புச் சொற்கள் இவ்வகையில் அடங்கும். ஆயினும் பொருளுக்கும், அதைச் சுட்டும் சொல்லுக்கும் இடையிலான ஓசையை எல்லா இடங்களிலும் விளக்க இயலாது. இக்கொள்கையை முன்மொழிந்த மாக்ஸ் முல்லரே பிற்காலத்தில் இதனை மறுத்தார்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**தொழில் ஒலிக்கொள்கை**

குழுவாக உடல் உழைப்பில் ஈடுபடுவோர் தாம் ஈடுபடும் தொழிலுக்கேற்ப சில ஒலிகளை எழுப்புவதுண்டு. ஏலேலோ, ஜலசா போன்ற சொற்களைப் படகினைச் செலுத்துவோர் எழுப்புகின்றனர். இதுபோன்றே ஏற்றம் இறைப்பவரும், நெல் குத்தும் மகளிரும் தனித்தனி வகையான ஒலித்தொடர்களைப் பயன்படுத்துவர். இத்தகைய தொழிலோடு தொடர்புடைய ஒலித்தொடர்களே மொழித்தோற்றத்திற்குக் காரணமாகக் கூறப்படுகின்றன. ஆயினும் இத்தகைய சொற்கள் மொழியில் மிகக்குறைவாகவே உள்ளன.

**இன்பப்பாட்டு மொழிக்கொள்கை**

மனிதப்பேச்சுக்கு முந்தையது பாட்டாகும். மகிழ்ச்சியான வேளைகளில் மனிதர்களுக்குப் பாட்டு தொடக்கத்தில் பொருளற்ற குரலிசையாக வெளிப்பட்டபோதிலும் பின்னர் பொருளுணர்த்தும் சொற்களாகப் படிப்படியாக மாறின என்பது இன்பப்பாட்டு மொழிக்கொள்கையாகும்.

மொழியறிவு மூளையின் செயல்பாட்டோடு தொடர்புடையது. மனிதனின் மொழிப்புலம் இடப்பக்க மூளையில் அமைந்திருப்பதை அறிவியல் ஆய்வுகள் உணர்த்துகின்றன. மனித மூளையில் படைப்பிலேயே மொழியைக் கற்றுக்கொள்ளும் இயல்யூக்கம் அமைந்திருப்பதையும், அதனாலேயே குழந்தைகள் தாம் வாழும் சூழலிலிருந்து மொழியைக் கற்றுக்கொள்கின்றன என்றும் அண்மைக்கால ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

**மொழியின் வளர்ச்சி**

இனி ஒரு குறிப்பிட்ட மொழி நன்கு வளர்ந்த மொழி என்றும், மற்றும் ஒரு குறிப்பிட்ட மொழி வளர்ந்துவரும் மொழி என்றும் - வளர்ச்சியடையாத மொழியென்றும் குறிக்கப்படுகிறது. இவ்வாறு ஒரு மொழியின் வளர்ச்சியை மதிப்பீடு செய்வது அம்மொழி கொண்டுள்ள மொழிப் பயன்பாட்டின் அடிப்படையாகக் கொண்டே அமைகிறது. ஒரு மொழி, ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தின் அன்றாட இயக்கத்தின் பணிகளை நிறைவேற்றுவதில் எந்த அளவுக்குப் பயன்படுகிறது என்பதையும் ஒரு சமுதாயத்தைச் சேர்ந்த மக்கள் தங்களது அன்றாட இயக்கத்திற்கு எந்த அளவிற்கு அந்த மொழியைச் சார்ந்துள்ளனர் என்பதைப் பொறுத்துமே அம்மொழியின் மொழிப் பயன்பாட்டின் தன்மையும் இன்றியமையாமையும் அறியப்படுகின்றன. இதிலிருந்து அம்மொழி கொண்டுள்ள வளர்ச்சியும் வெளிப்படுகிறது. ஆங்கிலம், பிரெஞ்சு போன்ற மொழிகள் இன்று உலக மொழிகளாக விளங்குவதற்குக் காரணம் இம்மொழிகளின் சொல்வளம் அம்மொழி பேசும் மக்களின் அன்றாடப் பேச்சு மற்றும் எழுத்து வழக்குத் தேவைகளுக்கு போதுமானதாக உள்ளது. மேலும் வேகமாக வளர்ந்துவரும் அறிவியல் முன்னேற்றங்களையும் சமுதாய முன்னேற்றங்களையும் வெளியிடுவதற்கு ஏற்ற வகையில் அம் மொழிகளின் சொல் வளம் போன்றவை பெருகியுள்ளன. இத்தகைய ஒரு வளர்ச்சி இந்திய மொழிகளில் பெரும்பாலும் ஏற்படவில்லை என்றே கருதவேண்டியுள்ளது. இந்நிலைக்குப் பல



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



காரணங்களைக் கூறலாம். முதலாவதாகவும் முக்கியமானதாகவும் உள்ள காரணம் மொழியின்பால் நாம் கொண்டுள்ள மனப்பாங்குகளே என்று சொல்லலாம்.

இந்திய மொழிகளுள் சில மிகவும் தொன்மை வாய்ந்தனவாகும். எனினும் இம்மொழிகள் நாளும் மாறிவரும் சமுதாய, அறிவியல் சூழ்நிலைகளுக்கேற்பத் தம் திறனை வளர்த்துக் கொள்ளவில்லை என்று கூறலாம். அல்லது, அம்மொழி பேசும் சமுதாயம் அம்மொழியைத் திறன் மிக்க வகையில் பயன்படுத்திக் கொள்ளவில்லை என்றும் சொல்லலாம். இந்திய மொழிகளின் வரலாற்றினை நோக்கின் பல மொழிகள் தத்தமக்குரிய மொழிப் பயன்பாட்டில் உரிய பங்கினைப் பெறாமல் இருந்து வந்ததனை நாம் காணலாம். குறிப்பிட்டுக் கூறவேண்டுமென்றால், கல்வித் துறை, ஆட்சித் துறை, செய்தித் தொடர்புத் துறை போன்ற மிகவும் முக்கியமான துறைகளில் இந்திய மொழிகள் மிகவும் குறைந்த அளவு மொழிப் பயனையே பெற்றிருந்தன. இந்நிலை இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதி வரை நீடித்தது. வளர்ச்சி குறித்துத் திட்டங்கள் சில தீட்டப்பட்டு நிறைவேற்றப்பட்டும் வருகின்றன. இத்தகைய மொழி வளர்ச்சித் திட்டங்கள் யாவும் நாட்டின் மொழிக் கொள்கைகளைச் சார்ந்தே அவற்றிற்கு ஏற்றாற்போலவே தீட்டப்பட்டு வருகின்றன. தற்போது மொழி வளர்ச்சியில் அரசாங்கமும் வேறு சில நிறுவனங்களும் ஓரளவிற்குத் தனியார் நிறுவனங்களும் ஈடுபட்டுள்ளதைக் காண்கின்றோம்.

மொழித் திட்டமிடுதலின் முக்கிய குறிக்கோள் மொழி வளர்ச்சி என்று கூறலாம். இக்குறிக்கோளை அடிப்படையாகக் கொண்டு ஒரு மொழியை, வேகமாக வளர்ந்து வரும் அறிவியல், சமுதாயவியல் துறைகளின் தேவைக்கு ஈடுகொடுக்கும் வகையில் முன்னேற்றமடையச் செய்யப் பல திட்டங்கள் மேற்கொள்ளப்படுகின்றன. மொழிகள் பல்வேறு நிலைகளில் நாளும் மாறி வருகின்றன. இம்மாற்றங்களில் பெரும்பாலானவை இயல்பாகவும் சில ஆக்கப்பட்டும் ஏற்படுபவை. சமுதாயத்தில் நாளும் ஏற்படும் மாற்றங்களுக்கும், முன்னேற்றங்களுக்கும் குறிப்பிட்ட சமுதாயங்களில் குறிப்பிட்ட சில மொழிக்கூறுகள் மொழிபேசும் சமுதாயத்தின் தேவைகளுக்கேற்ப அறிமுகம் செய்யப்படுகின்றன. இவ்வாறு செய்யப்படுவதனால் பேச்சு வழக்கிலும் எழுத்து வழக்கிலும் உள்ள மொழிக்கூறுகள் பெருக்கப்படுகின்றன.

மொழிப்பண்பாட்டில் உள்ள மொழிக்கூறுகள் அவை உபயோகிக்கப்படும் சமுதாயச் சூழல், துறை போன்றவற்றிற்கேற்பச் சுருக்கப்பட்டோ, விரிக்கப்பட்டோ, மொழிப்பயன்பாட்டில் பயன்படுத்தப்படுகின்றன. எடுத்துக்காட்டாகச் சில சமயங்களில் ஒரு மொழியின் தொடரியல் அமைப்பு முறைகள் சமுதாயத் தேவைகளுக்கேற்ப எளிதாக்கப்படுகிறது. வேறு சில சமயங்களில் பண்டைய இலக்கண வரம்புகள் மீறப்படுகின்றன அல்லது எளிதாக்கப்படுகின்றன. இன்னும் சில சமயங்களில் கலைச் சொற்களும் இன்னும் சில மொழிக்கூறுகளும் பயன்பாட்டில் விரிவாக்கப்படுகின்றன அல்லது சுருக்கப்படுகின்றன எனலாம். இதுபோன்று மொழிவளர்ச்சிக்கானத் திட்டங்கள் மொழியின் வளத்தையும் திறனையும் மேம்படுத்துவனவாக



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



அமைதல் வேண்டும் என இன்றைய சமுதாய மொழியிலாரும் மொழித் திட்டமிடுவோரும் கருதுகின்றனர்.

மொழி வளர்ச்சித் திட்டங்கள் யாவும் நாட்டின் மொழிக் கொள்கைகளைச் சார்ந்தே அவற்றிற்கு ஏற்றாற்போலவே தீட்டப்பட்டு வருகின்றன. தற்போது மொழி வளர்ச்சியில் அரசாங்கமும் வேறு சில நிறுவனங்களும் ஓரளவிற்குத் தனியார் நிறுவனங்களும் ஈடுபட்டுள்ளதைக் காண்கின்றோம்.

சில சமயங்களில் பிறமொழச் சொற்கள் அப்படியே நாட்டு மொழிகளில் கடன் வாங்கப்பட்டுப் பிறகுமொழிப் பயன்பாட்டில் ஈடுபடுத்தப்பட்டு வருவதை நாம் அறிவோம். இவ்வாறு பிறமொழிக்கூறுகளை கடன்வாங்குதல் மொழிவளர்ச்சிக்கு மிகவும் துணை புரிகிறது. எனினும் இவ்வாறு கடன் வாங்கப்பட்ட மொழிக்கூறுகள் நாட்டு மொழிகளின் தாக்கத்தினால் அம்மொழிகளின் ஒலியியல் போன்ற அமைப்புகளுக்கு ஏற்றவாறு மாற்றம் பெற்றுள்ளதையும் நாம் அறிவோம்.

நாளும் வளர்ந்து வரும் அறிவியல் துறையின் பல புதிய கண்டுபிடிப்புகளுக்கு அவ்வப்போது தேவைப்படும் சொற்கள் புதிதாக உருவாக்கப்பட்டு வருகின்றன. இவ்வாறு பல புதிய சொற்கள் ஆக்கப்பட்டு மொழிப்பயன்பாட்டில் ஈடுபடுத்தப்பட்டு வருவதை செய்தித்தாள்கள், வானொலி ஒலிபரப்புகள், வார, மாத இதழிகள் போன்றவற்றின் மொழி நடையைக் கூர்ந்து கவனிக்கும்போது நமக்கு நன்கு புலனாகிறது.

ஒரு மொழியின் வளர்ச்சிக்குத் திட்டங்கள் வரையப்படும்போது அந்நாட்டின் மொழி சம்பந்தமான பல பிரச்சினைகளையும் மனத்திற் கொள்ள வேண்டும். அவ்வாறு மனத்திற் கொள்ள வேண்டிய பிரச்சினைகளில் முக்கியமானவைகளாகப் பல மொழி வழக்குச் சூழல், ஆட்சித்துறை, கல்வித்துறை, செய்தித் தொடர்புத்துறை போன்றவற்றில் மொழிப் பயன்பாட்டில் தோன்றும் பிரச்சினைகள் ஆகியனவற்றைக் குறிப்பிடலாம். மொழி வளர்ச்சிக்கு என்று வகுக்கப்படும் திட்டங்கள் மேற்கூறிய துறைகளில் எழும் பிரச்சினைகளைத் தீர்க்கக்கூடியனவாக இருத்தல் அவசியம்.

**தமிழ் மொழி வரலாறு**

தமிழ் மொழி திராவிட மொழிகளில் பழமையான இலக்கியங்களையும் இலக்கணங்களையும் கொண்டுள்ளது. பழமைக்குப் பழமையாய்ப் புதமைக்குப் புதுமையாய் விளங்குகிறது. சங்ககாலத் தமிழுக்கும் தற்காலத் தமிழுக்கும் நிறைய வேறுபாடு உண்டு. மொழியானது காலத்துக் காலம் மாற்றமடைந்து கொண்டேயிருக்கிறது. 'கடி சொல் இல்லை காலத்துப் படினே' என்றார் தொல்காப்பியர். 'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையினானே' என்றார் நன்னூலார். மொழி பரிணாம வளர்ச்சியாலும், கடன் வாங்கலாலும் வளர்கிறது. மொழி வரலாறு என்பது மொழியில் ஏற்படும் ஒலியனியல் மாற்றம், உருபனியல் மாற்றம், சொற்றொடரமைப்பு மாற்றம், சொற்பொருள் மாற்றம், சொற்கோவை



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



மாற்றம் போன்ற மாற்றங்களை உள்ளடக்கியது. தமிழ் மொழியின் வரலாற்றை இலக்கியம், இலக்கணம், கல்வெட்டு போன்ற சான்றுகளின் அடிப்படையில் ஆராயலாம்.

தமிழ் மொழியின் வரலாற்றை மூன்று பிரிவுகளாகப் பிரித்து காணலாம்.

1. பழந்தமிழ்
2. இடைக்காலத்தமிழ்
3. தற்காலத்தமிழ்

**பழந்தமிழ்**

(அ) முன் பழந்தமிழ் அல்லது தொல் பழந்தமிழ் – தமிழ் பிராமிக் கல்வெட்டுக்களும் தொல்காப்பியமும்.

(ஆ) மத்திய பழந்தமிழ் பத்துப் பாட்டும், எட்டுத்தொகையும்

(இ) பின் பழந்தமிழ் திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை முதலியன.

**இடைக் காலத்தமிழ்**

(அ) முன் இடைக்காலத் தமிழ்

(ஆ) மத்திய இடைக்காலத் தமிழ்

(இ) பின் இடைக்காலத்தமிழ்

இடைக் காலத்தமிழைப் பல்லவர் காலத் தமிழ், சோழர் காலத் தமிழ், நாயக்கர் காலத் தமிழ் என்றும் பிரித்து ஆராய்வர்.

**தற்காலத் தமிழ்**

(அ) முன் தற்காலத் தமிழ்

சிற்றிலக்கியங்கள், மடங்களின் தொண்டு முதலியன

(ஆ) பின் தற்காலத் தமிழ்

போர்ச்சுக்கீசியர், டச்சு, பிரெஞ்சு, ஆங்கிலேயர் வருகையால் ஏற்பட்ட மொழி வளர்ச்சி 20- ஆம் நூற்றாண்டு – கினை மொழி ஆய்வு முதலியன. தற்கால தமிழில் நாடகம், சிறுகதை, புதினம், புதுக்கவிதை, குழந்தைப் பாடல்கள், நாட்டுப்புற பாடல்கள் பற்றிய ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

**எழுத்துச்சீர்திருத்தம்**

மனித சமுதாயம் மொழியால் கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்கின்றது. மனித சமுதாயத்தில் பேச்சு மொழி, எழுத்து மொழி என இரு வகையுண்டு. பேச்சு மொழினின்று வளர்ந்ததே எழுத்து மொழி. பேச்சு மொழி ஆறு போன்றது. எனின் எழுத்து மொழி அவ்வாற்றில் மிதக்கும் பனிக்கட்டி போன்றது என மொழியியலார் குறிப்பிடுகின்றனர். உலகில் பெரும்பாலான மொழிகள் எழுத்து வடிவம் பெற்றிருக்கவில்லை. சில மொழிகளே வரி வடிவம் பெற்ற மொழிகளாக உள்ளன. இருபத்து இரண்டு திராவிட மொழிகளிலே தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய மொழிகளுக்குத்தான் எழுத்து வடிவம் உண்டு.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



இலக்கிய வளமில்லாத துளு மொழி முதலில் மலையாள எழுத்திலும் பின்பு கன்னட எழுத்திலும் எழுதப்பட்டது. பழங்குடி மொழியான கூயி மொழியை ஒலியா எழுத்தில் எழுதுகின்றனர். மற்ற பழங்குடி மொழிகளுக்கும் வரி வடிவம் காண முயற்சிகள் நடைபெறுகின்றன. பேச்சு மொழியினை வரிவடிவில் காட்டுவது தான் எழுத்து மொழி. ஆனால், பேச்சு மொழிக்கு இல்லாத சில பண்புகள் எழுத்து மொழிக்கு உண்டு. நாடு கடந்து காலம் கடந்து நிற்கின்ற பண்பு எழுத்து மொழிக்கு உண்டு. நமது முன்னோர்கள் விட்டுச் சென்ற அறிவுக் கருவூலங்களை நாம் கண்டு துய்ப்பதற்கும் நாம் பெற்றுள்ள அறிவுச் செல்வத்தை நமது வழித் தோன்றல்களுக்கு வழங்குவதற்கும் எழுத்து மொழி பெருந்துணையாக உள்ளது. நம்மோடு உடன் வாழும் நெஞ்சங்களையும் நமக்கு முன்பு வாழ்ந்த நெஞ்சங்களையும் இணைக்கும் ஆற்றல் பெற்றது எழுத்து மொழி. ஓர் இனத்தின் அறிவும், பண்பாடும், கலையும் நாகரிகமும் அவ்வின எழுத்து மொழியில் பொதிந்து கிடக்கும். எழுத்து மொழி இல்லையேல் மனித வாழ்வில் தொடர்ச்சியான முன்னேற்றம் இருந்திருக்காது. இன்றைய மனிதன் இருபதாம் நூற்றாண்டு மனிதனாக வாழ்ந்திருக்க முடியாது. பேச்சு மொழி மனிதனை மனிதனாக்கியது எழுத்து மொழியோ மனிதனை நாகரிக மனிதனாக, இய்றகையையே வெல்லும் ஒரு சக்தியாக மாற்றியது என்றால் மிகையாகாது. பழமையையும் புதுமையையும் கொண்டு பழமைக்கும் புதுமைக்கும் ஒரு பாலமாக எழுத்துமொழி நிற்கக் காணலாம்.

எழுத்துருவம் பெற்ற மொழிகளையே நாகரிக மொழிகள் என்றும் சிறந்த மொழிகள் என்றும் கருதுகின்றோம். அதிலும் மிகப் பழங்காலத்தில் எழுத்து உருவத்தினைப் பெற்ற மொழிகளைப் பழமையான மொழிகள் என்றும் நாகரிகத்தைத் தோற்றுவித்த மொழிகள் என்றும் கூறுவதைக் காணலாம். திராவிட மொழிகளிலே தமிழ் மொழியிலேயே மிகப் பழமையான எழுத்துருவத்தைக் காண்கிறோம். இது மற்ற திராவிட மொழிகளின் எழுத்துருவத்திற்கும் மிக முந்தியது எனக் கூறலாம். தெலுங்கு மொழியின் எழுத்துருவம் கி.பி.ஏழாம் நூற்றாண்டைச் சார்ந்தது. கன்னட மொழியின் எழுத்துருவம் கி.பி ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டைச் சார்ந்தது. மலையாள மொழியின் உருவம் இன்னும் பிந்தியது. இந்நிலையில் தான் இந்திய மொழிகளில் தமிழ் மொழிக்குத் தனி இடம் இருப்பதும் சமஸ்கிருதத்திற்கு ஏற்ப இதற்குப் பெருமையும சிறப்பும் உளள்மையும் இங்குக் குறிப்பிடத்தக்கன. எழுத்து முறையினை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. பட எழுத்து முறை
2. எண்ண எழுத்து முறை
3. ஒலி எழுத்து முறை
    1) அசையெழுத்து முறை
    2) அகர எழுத்து முறை



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



எழுத்து முறையில் முதன்முதல் தோன்றிய முறை ‘பட எழுத்து முறையே’ எனக் கருதுவர். சூரியனைக் காட்ட ஒரு வட்டத்தை வரைந்து காட்டினர். படங்களை வரைந்து செய்தியைக் காட்டுதல் ‘பட எழுத்து முறை’ யாகும். இம்முறையினை எம்மொழியினரும் உணரலாம். குறிப்பிட்ட ஒருபொருளையோ கருத்தையோ உணர்த்தப் பயன்படுமே தவிர, பொருளின் பலவகை வேறுபாடுகளையோ நுட்பங்களையோ உணர்த்தப் பயன்படாது.

ஒலி எழுத்து முறையால்தான் பேச்சு மொழியில் காணப்படும் ஒலிகளுக்கும் எழுத்து முறையில் உள்ள வரிவடித்திற்கு மிடையே ஒரு தொடர்பு ஏற்பட்டது. ஒலி வடிவத்தை வரி வடிவில் காணத் தொடங்கிய நிலையில் தான் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டது.

அசைகளை வரிவடிவத்தில் எழுதிய நிலையில்தான் அசை எழுத்துமுறை உண்டானது. அசையெழுத்து முறையில் பல வடிவங்களின் நிலையை உணரலாம். சுமேரியன் ஆப்பு வடிவ எழுத்துக்கள்தான் அசையெழுத்து வடிவங்களுள் மிகவும் பழமையானதாகும். சுமேரியன், ஏலமைட், எகிப்திய மொழி, சீன, கிரேக்க மொழிகள் இவ்வெழுத்து முறையைக் கொண்டிருக்கின்றன.

பெரும்பாலான உலக மொழிகள் அகர எழுத்து முறையையே பின்பற்றுகின்றன. எத்தனையோ நூற்றாண்டு வளர்ச்சியில் தான் இன்றைய மொழிகள் அகர எழுத்து மொழியைக் கொண்டுள்ளன. அசையெழுத்து முறையில் ஏராளமான எழுத்து மொழியைக் கொண்டுள்ளன. அசையெழுத்து முறையில் ஏராளாமான எழுத்து உருவங்களை நினைவில் கொள்ளவேண்டும். அகரவகை எழுத்துக்களில் ஓர் உரு ஓர் ஒலியையே குறிக்கும். இவ்வெழுத்து முறைகளின்மூலம் எழுத்துக்களின் தோற்ற வளர்ச்சியைக் காணலாம்.

**தமிழ் எழுத்து**

தமிழ் நூல்கள் அச்சிடத் தொடங்கிய காலத்தே தான் தமிழ் எழுத்துக்கள் எல்லாம் இப்போது காணப்படும் நிலையான வடிவங்களைப் பெற்றன. ஒவ்வொரு நூற்றாண்டிலும் வரிவடிவங்கள் சில மாறுதல்களுக்கு உள்ளாகி வளர்ச்சியடைந்திருக்கின்றன. தமிழ் மொழியை எழுத இருவகை எழுத்துக்கள் வழக்கிலிருந்தன என அறிகிறோம். அரிச்சலூர் கல்வெட்டே இதற்குச் சான்றாகும். இக்கல்வெட்டில் தமிழ் எழுத்தும் வட்டெழுத்தும் கலந்து எழுதப்பட்டுள்ளன. தமிழ் எழுத்துக் கல்வெட்டுக்கள் தொண்டை மண்டலம், சோழ மண்டலம் ஆகிய இடங்களில் பல்லவர்களின் ஆட்சிக் கால முதல் காணப்படுகின்றன. கிபி7 ஆம் நூற்றாண்டில் ஆண்ட மகேந்திரனின் கல்வெட்டு முழுவதும் தமிழில் உள்ளது. பல்லவர் காலத்திலும் நிறைய கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. டாக்டர் நாகசாமி அவர்கள் சோழர் காலத்திய எழுத்துக்களை முற்காலச் சோழர் எழுத்து என்றும் பிற்காலச்சோழர் எழுத்து என்றும் இருவகையாகப் பிரிக்கின்றார். முற்காலச் சோழர் எழுத்துக்கள் பெரிய எழுத்துக்களாக இருந்தன. ராஜராஜன் காலம்வரை முற்காலச் சோழர் காலம் எனலாம். பிற்காலச் சோழர் காலக் கல்வெட்டுக்கள் அழகின்றிப் பிழை மலிந்து காணப்படுகின்றன. பல்லவர் ஆட்சியில் தமிழில் எழுதப்பட்டதுபோல வட்டெழுத்திலும் எழுதப்பட்டது. பாண்டியர்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



கல்வெட்டுக்கள் சில தமிழிலும் பல கிரந்தத்திலும் உள்ளன. அவர்களது செப்பேடுகள் அனைத்தும் வட்டெழுத்திலேயே உள்ளன. சோழரது கல்வெட்டுக்கள் பெரும்பாலும் தமிழிலும் கிரந்தத்திலும் உள்ளன. பாண்டி நாட்டைக் கைப்பற்றியபொழுது வட்டெழுத்திலேயே எழுதினர். பின்னர் பாண்டி மண்டலத்திலும் தமிழிலேயே எழுதத்தொடங்கினர். விசய நகரப் பேரரசர்களது காலத்தில் வட்டெழுத்து மறைந்து தமிழ், கிரந்தம், தெலுங்கு, கன்னட எழுத்துக்கள் வழங்கலாயின.

கிரந்த வரிவடிவத்திற்கும் தமிழ் வரிவடிவத்திற்கும் உள்ள உறவு மிக நெருக்கமானது என்பர். உ,ஊ,க,ங,த,ந,ய,வ என்பவை இருவடிவங்களிலும் ஒரே விதமாக எழுதப்படுகின்றன. அ,ஆ,ஈ,ஒ,ஔ,ட,ற,டு,ர,ல,ள என்னும் எழுத்துக்கள் இரண்டு வரிவடிவங்களிலும சிறிதளவே மாறுபடுகின்றன. எனவேதான் இதனைக் ‘கிரந்தத் தமிழ் வடிவம்’ என்பர். பல்லவ மன்னன் பரமேஸ்வரவராமனுடைய கூரம் சாசனத்திலுள்ள கிரந்த வடிவத்தையும் தமிழ் வரி வடிவத்தையும் ஒப்பிட்டால், உ,ட,ண,த,ந,ய,வ என்பவனவும் உயிர் மெய் வடிவங்களில் வரும் ஆ,இ,ஈ,எ,ஔ எனும் எழுத்துகளின் குறிகளும் வரிவடிவங்களும் ஒன்றாக இருப்பதைக் காணலாம். க,ர என்ற எழுத்துக்களே சிறிது வேறுபடுகின்றன. கிரந்த வடிவம் வடமொழியை எழுதப் பயன்படுத்தப்பட்டது. ஆரியர் தமிழ் வடிவத்தை ஏற்று வடமொழிக்குரிய எழுத்துக்களை இணைத்துக் ‘கிரந்தம்’ எனப்பெயரிட்டனர் எனக் கூறுகின்றார் எல்லீஸ். பல்லவர் கிரந்த வடிவத்தையும் தமிழ் வரிவத்தையும் தென்னிந்தியாவில் புகுத்தினர் எனக் கூறுகின்றார் தி.நா.சுப்பிரமணியம் அவர்கள்.

தமிழ் எழுத்துக்கள் காலப்போக்கில் அடைந்த மாற்றங்களைக் காண்போம் முதலில் கி.பி. ஏழாம் நூற்றாண்டுத் தமிழ் எழுத்துக்களையும் கி.பி.பதினோராம் நூற்றாண்டுத் தமிழ் எழுத்துக்களையும் ஒப்பிட்டு நோக்குவோம். மெய்யெழுத்துகளில் சில மேலே கிடைக்கோடும் இடது பக்கம் குத்துக்கோடும் பெற்றமையைக் காணலாம். இத்தகைய மாற்றம் ஏழாம் நூற்றாண்டு வரிவடிவத்திலிருந்து பதினோராம் நூற்றாண்டு வரிவடிவம் பெற்ற எழுத்துக்களாக க,ங,ச,த,ந,ர, போன்ற எழுத்துக்களைக் கூறலாம். பதினோராம் நூற்றாண்டு கல்வெட்டு எழுத்துக்களில் சில, கால் அல்லது கீழ்ப்பகுதி நீண்டமைந்துள்ளன. பதினோராம் நூற்றாண்டிலே ஞ,ண,ல,ள போன்ற எழுத்துக்கள் சுழிகளோடு காணப்படுகின்றன. தமிழ் வரிவடிவ மாற்றங்களுக்கு அலங்கார விருப்பமும் எளிமையான போக்கும் ஒரு காரணமாகும். அ,ஆ,இ என்ற உயிர் எழுத்துக்களிலும் ட,ப,ம என்ற மெய் எழுத்துக்களிலும் வளைவு நீக்கி எழுதப்பட்டது. எளிமையான போக்கின் விளைவாகும். கி.பி.பதினோராம் நூற்றாண்டுத் தமிழ் எழுத்துக்களையும் கி.பி.பதினைந்தாம் நூற்றாண்டின் தமிழ் எழுத்துக்களையும் ஒப்பிட்டு ஆராய்ந்தால், இடப்பக்கத்தில் ஒரு குத்துக்கோட்டுடன் தொடங்கும் க,ங,ச,த,ந,ர என்பன பதினோராம் நூற்றாண்டில் குத்துக் கோட்டைச் சிறிது வளைவாகப் பெற்றிருந்தன. பதினைந்தாம் நூற்றாண்டில் நேர்த்தன்மையுள்ள நீளமான குத்துக் கோட்டைப் பெற்றன. இந்த மாற்றத்திற்கும் அலங்கார விருப்பமே காரணமென்கின்றனர். க,ச,த ஆகிய



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



எழுத்துக்களின் வளைவுகளும் ஞ,ந,ம,ழ ஆகிய எழுத்துகளின் வலப்பக்க வளைவுகளும் பதினோராம் நூற்றாண்டைக் காட்டிலும் பதினைந்தாம் நூற்றாண்டில் செம்மையாக அமைந்துள்ளன. பதினோராம் நூற்றாண்டில் சிறிதளவு சுழியைப் பெற்ற அ,ஆ,எ,ஞ,னா,ல,ள,ண என்ற எழுத்துக்கள் பதினைந்தாம் நூற்றாண்டில் தெளிவாக உள்ளன. இவ்வாறு காலப்போக்கில் தமிழ் எழுத்துக்களில் நிகழ்ந்த மாற்றங்களைக் கல்வெட்டுத் துணை கொண்டு அறியலாம்.

**தொகுப்புரை**

மனிதன் பிறப்பு முதல் இறப்பு வரையில் மொழி பெரிதும் பயன்படுகிறது. வாழ்வில் பெரிதும் பயன்படும் மொழியைத் திறமையுடன் கையாள மொழிக்கல்வி பயன்படுகிறது. மொழி மனிதன் உருவாக்கிய அரிய கலை. மனிதனைப் பிற உயிரினங்களில் இருந்து வேறுபடுத்திக் காட்டுவது மொழியாகும். மொழி தோற்றக்குறித்து ஒவ்வொரு கதைகள் நிலவுகின்றது. தமிழ் மொழி திராவிட மொழிகளில் பல இலக்கியங்களையும் இலக்கணத்தையும் கொண்டுள்ளது. பழமைக்கு பழமையாகவும் புதுமைக்கு புதுமையாகவும் உள்ளது. மொழி காலந்தோறும் மாறி வருகின்றது. மாற்றங்கள் எழுத்தில் மெதுவாகவும், பேச்சு மொழியில் வேகமாகவும் வளர்கிறது. பேச்சு மொழியில் இருந்து தோன்றியதே எழுத்து மொழியாகும். நாட்டின் தேசிய இலக்கை மையமாகவே கலைத்திட்டம் வடிவமைக்கப்படுகிறது. கலைத்திட்டம் மாணவர்களின் எதிர்கால தேவைகளை நிறைவேற்றுவதாக உள்ளது என்பதை இப்பகுதியில் மூலம் அறிந்து கொள்ளலாம்.

**ஆய்வுக்குட்படுத்தப்பட்ட நூல்கள்**

1. அடைக்கலசாமி (1997) இலக்கியவரலாறு, நால்நிலை பதிப்பகம், சென்னை
2. கணபதி.வி. (1999) நற்றமிழ் கற்பிக்கும் முறைகள், சாந்தா பதிப்பகம், சென்னை
3. வேணுகோபால் இ.பா.(1991) பைந்தமிழ் கற்பிக்கும் முறைகள், சகுந்தலா பதிப்பகம், வேலூர்.
4. கோகிலா தங்கசாமி (2000) தமிழ் கற்பித்தல், அனிச்சம் வெளியீடு, காந்திகிராமம்.
5. ஆர். எட்வின் ஜெயா, தமிழ் கற்பித்தலின் புதுமைகள். ரெத்தினா பதிப்பகம், கன்னியாகுமரி.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# பெருங்கதையில் யூகியன் நட்பு நெறிகள்

**ரா.ராதிகா,**
உதவிப்பேராசியா், தமிழ்த்துறை,
அதியமான் மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
சீனிவாசா நகர், ஊத்தங்கரை.

**முன்னுரை**

மனிதா்கள் முதல் விலங்குகள் வரை நட்பு என்ற உறவு இல்லாமல் வாழ்வது மிகவும் கடினமான ஒன்று. உலகம் தோன்றிய நாள் முதல் இந்நாள் வரையிலும் நட்பின் நிலைகளானது பல்வேறு முறைகளில் மாற்றம் பெற்று வருவதை கண்கூடாகக் காண்கிறோம். ஒவ்வொருவரின் நட்பும் பல்வேறு வகையில் சிறப்பு வாய்ந்ததாக கருதப்படுகிறது. அவற்றில் எல்லாவகையிலும் தனது வாழ்வை நட்பிற்காகவே அா்பணித்தவா்களும் உண்டு என்ற செய்தியை நம் இலக்கியங்களின் வாயிலாக் காணமுடிகிறது. அவற்றுள் பெருங்கதையிலுள்ள யூகியின் நட்பு நெறிகள் இக்கட்டுரையின் மூலம் எடுத்துரைக்கப்படுகிறது.

**நட்பு பொருள்**

நட்பு என்ற சொல்லை 'Friendship' என்ற ஆங்கிலச் சொல் கொண்டும், தமிழில் தோழமை, சினேகம், கேண்மை போன்ற பல்வேறு சொற்களால் குறிப்பிடப்படுகிறது. நட்பு இருவரிடையோ, பலரிடமோ ஏற்படும் உறவாகும். சாதி, மதம், இனம், மொழி, நாடு, வயது, கல்வி, அறிவு, அழகு, பதவி என எந்த விதமான எல்லைகளும் இன்றி வருவதாகும். நட்பு கொள்ள அவசியமானது நல்லதொரு புரிதலாகும்.

**நட்பு தினம்**

நண்பா்களுக்கான ஒரு மந்திர உணா்வு மற்றும் கொண்டாட்டம் போன்றதே நட்பு தினம். நண்பா்கள் தினம் 1919 முதல் ஜாய்ஸ்ஹால் என்பவரால் முதன்முதலில் அறிமுகப்படுத்தப்பட்டது. அதன் பின்னா் ஐக்கிய நாடுகளின் சபையானது 1958 - ற்குப் பிறகு சூலை 30 அன்று நண்பா்கள் தினம் கொண்டாட ஆணை பிறப்பித்துள்ளது. இந்த அறிவிப்பினை ஐக்கிய நாடுகளின் செயலா் கோ.ஃபி அன்னன் அவா்களது மனைவி நானே அன்னன் வெளியிட்டுள்ளாா். எனினும் அமெரிக்கா மற்றும் இந்தியா உள்ளிட்ட நாடுகள் ஆகஸ்ட் முதல் ஞாயிற்றுக்கிழமை நண்பா்கள் தினம் கொண்டாடி வருகின்றன.

**நட்பு பற்றி அறிஞா்களின் கூற்று**

> **"அறிவாளியாகவும், ஒத்துப்பழகக்கூடியவனாகவும், அடக்கத்தோடும்,**
> **நல்லொழுக்கத்தோடும் ஒரு தோழன் கிடைப்பானாகில் எல்லா**
> **இடையூறுகளையும் கடந்து கருத்தோடும், மகிழ்ச்சியோடும் நட்புகொள்"**
>
> **- புத்தா்**

> **"தாய் தந்தை வாய்ப்பது விதி**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



**நண்பர்கள் வாய்ப்பதோ மதி'' – ஷெல்லி**

**''நீ உலகின் அதிபதியாய் இருப்பினும் நண்பர்கள் இல்லாவிடில் ஏழைதான்''**

**- யங்**

**நட்பு மூன்று நிலை**

1. உணவு எப்போதும் தேவை
2. மருந்து எப்போதாவது தேவை
3. நோய் எப்போதும் தேவையில்லை என நண்பர்களை தரம்பார்த்து அமைத்துக்காட்டுகிறார். **கஸாலி.**

**விலை மதிக்க இயலாதது, உடலுக்கும் உயிருக்கும் உறுதுணையாவது**
**இன்பதுன்பங்களில் கூட்டுறவு மனப்பான்மை உடையதே நட்பு**

- **வேதாத்ரி மகரிஷி**

**நட்பின் மேன்மை**

சங்ககால இலக்கியங்கள் முதல் இக்கால இலக்கியங்கள் வரை மிகவும் புகழும் சிறப்பும் மேன்மையும் கொண்ட நட்பு நெறிகளைப் பற்றி அறிந்ததில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் சிறந்ததாக இருப்பதை புரிந்துக்கொள்ளமுடிகிறது. ஆனால் நட்பு என்பது அனைத்து நிலைகளிலும் சிறந்தது என்ற முறையில் அமைய வேண்டியது. நட்பிற்காக வாழ்ந்து தானும் வாழ்வது என்றில்லாமல் நட்பிற்காக மட்டுமே வாழ்வது என்பதை கருத்தில் கொண்டு அவ்வழியே வாழ்ந்து நட்பிற்கு இலக்கணம் வகுத்தவர்கள் சிலர் என்பதை இலக்கியங்கள் சான்றுகாட்டுகின்றன.

**தற்கால நட்பு நிலை**

தற்காலச்சூழலில் நட்பு என்பது வாடிக்கை, பொழுதுபோக்கு, தற்பெருமை என்ற நிலையில் இருப்பதை ஊடகங்களின் வாயிலாக வெளியாகும் செய்திகள் மூலம் தெரிந்துக்கொள்ளமுடிகிறது. மேலும் நட்பு என்ற பெயரில் மற்றவர்களையும், மற்றவர்களது செயல்கள், எண்ணங்கள், திறன்கள் மட்டுமல்லாது ஒருவரது வாழ்க்கையையே அழிக்கத்துணிவதைக் கதைகளிலும், திரப்படங்களிலும் கேட்டும் கண்டும் வந்த நம் சமுதாயம் தற்போது அன்றாட வாழ்வில் கண்கூடாகக் காணமுடிகிறது. அது மட்டுமல்லாமல் நட்பு என்பது உலக நாடுகள் அனைத்தும் ஒற்றுமையுடன் நல்லிணக்கத்தோடு இருப்பதற்காக என்ற நிலை மாறி தற்போது நட்பு நாடுகள் என தனியானதொரு பிரிவுகளாக இருப்பதையும் நாம் காண்கிறோம்.

நட்பிற்காக எதையும் இழக்கத் தயாராக இருந்த காலம் மாறி நட்பிற்காக எதையும் செய்யும் காலம் வந்துவிட்டது. சான்றாக இளைஞன் ஒருவன் நண்பர்களோடு மகிழ்ச்சியாக இருப்பதற்குத் தேவையான பணம் கொடுக்க மறுத்த தாய், தந்தை இருவரையும் கொலை செய்து துண்டுத்துண்டாக வெட்டி மூட்டைக்கட்டி போடும் நிலையைப் பற்றி ஊடகங்கள்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



வாயிலாக நாம் கண்கூடாகக் கண்டு வருகிறோம். இதுபோன்ற இன்னும் பலவகையான நிகழ்வுகள் நடப்பதன் வாயிலாக தற்கால நட்பு நிலையைப்பற்றி தெரிந்துக்கொள்ள முடிகிறது.

**நட்பிற்கு இலக்கணமானவர்கள்**

சுயநலம், பிரதிஉபகாரம், போட்டி, பொறாமை, வெறுப்பு போன்ற குணங்களின்றி விட்டுக்கொடுத்தல், சகிப்புத்தன்மை, பொறுமை, நிதானம் தவறாமை போன்ற குணங்களைக் கொண்டு நிலைத்து நிற்கக் கூடியதே நட்பு. தீய எண்ணங்களையும், தகுதிகளையும் புறந்தள்ளி பரிசுத்தமான நற்குணங்களோடு நட்புக்கொள்பவர்களே நட்பிற்கு உரித்தானவர்கள். அப்படிப்பட்ட நட்பிற்குரியவர்களைப் பற்றி நம் தமிழ் இலக்கியங்கள் சான்று காட்டி நிற்பதைக் காண்கிறோம்.

மகாபாரதம் குறிப்பிடும் கிருஷ்ணர் - குசேலர், துரியோதனன் - கர்ணன் புறநானூறு குறிப்பிடும் அதியமான் - அவ்வை, பாரி-கபிலர், கோப்பெருஞ்சோழன் - பிசிராந்தையார் மேலும் சீத்தலைச்சாத்தனார்- இளங்கோவடிகள் ஆகியோரின் நட்புநிலையை பலகோணங்களில் இலக்கியங்கள் சான்று காட்டுகின்றன.

**திருவள்ளுவர் கூறும் நட்பு**

உச்சையினி வேந்தன் பிரச்சோதனன், கௌசாம்பி மன்னன் உதயணனை சிறைப்பிடித்தான் என்ற செய்தி அறிந்த உதயணனின் நண்பன் யூகி கடும்கோபத்தோடு மாபெரும் சபதம் கொள்கிறான். அதற்காக மாகாளவனக்காளி கோயிலில் தவக்கோலம் கொள்கிறான். பின்னர் உச்சையினியில் மாறுவேடத்தில் சென்று பேய் பிடித்தவன் போலவும், பித்துப்பிடித்தவன்போலவும் நகரெங்கும் பாட்டிசைத்து அலைந்து திரிகிறான். பின் தந்திரமாக நளகிரி யானையினைக்கொண்டு உதயணனை சிறையிலிருந்து தக்க சமயத்தில் மீட்கிறான். இச்செயலானது,

> **"உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே**
> **இடுக்கண் களைவதுஆம் நட்பு" – குறள்.788.**

உடை நெகிழ்ந்தவனுக்கு அப்பொழுது கைசென்று உதவி செய்வதுப்போல நண்பனுக்கு துன்பம் நேர்ந்தால் அப்பொழுதே சென்று அத்துன்பத்தை நீக்குவதுதான் நட்பு. இக்குறளினைக் கொண்டே கொங்குவேளிர்,

> **'உடையழி காலை உதவிய கைபோல**
> **நடலை தீர்ததல் நண்பனது இயல்பு' – (பெருங்கதை. 39-40)**

என்பதை இப்பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

துன்பம் நீக்குவதோடு விட்டுவிடாமல் தனது நண்பன் விரும்பிய வாசவதத்தையை திருமணம் செய்து கொள்வதற்கு சரியான திட்டம் தீட்டி சாமர்த்தியமாக செயல்படுத்துகிறான் யூகியின் இச்செயலானது பாஞ்சாலியைத் திருமணம் செய்ய பார்த்தனின் தோழனான கண்ணன் கூறிய உபாயத்தைப் போன்றது. இதனை,



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**"போன்னவிர் மேனிச் சுபத்திரை மாதைப்**

**புறய்கொண்டு போவதற்கே -இனி**

**என்ன வழியென்று கேட்கில் உபாயம்**

**இருகணத்தே யுரைப்பான்!" – கண்ணன் பாட்டு**

இப்பாடலின் மூலமாக பாரதியார் குறிப்பிடுவது நினைவு கொள்ள முடிகிறது.

உதயணனுக்கும் வாசவதத்தைக்கும் திருமணம் முடிந்தப்பின் மனைவியுடன் கூடிமகிழ்வதே இன்பமான வாழ்வு என்று வாழ்கிறான். அப்பொழுது யூகி தனது நண்பனை சரியாக வழிநடத்தி செல்வதற்காக வாசவதத்தையை சுரங்கப்பாதை வழியாக அழைத்து சென்ற பின் அரண்மனையைத் தீயிட்டு அழித்ததோடு வாசவதத்தை இறந்ததாகவும், தானும் செல்லும் வழியில் அவல் விக்கி இறந்து விட்டதாக உதயணனனுக்கு தெரியப்படுத்துமாறு எடுத்துரைக்கிறான். யூகியின் தந்திரத்தால் உதயணனின் காம மயக்கம் தெளிந்து தனக்குரிய அரசக்கடமையை உணர்கிறான். இறுதியாக யூகியின் எண்ணம் நிறைவேறுகிறது. யூகி உதயணனுக்கு கடமையை உணர்த்த தன்னையும் தம் வாழ்வையும் மறந்து செயல்படுகிறான். வாசவதத்தை என நினைத்து பதுமாவதியுடன் வாழும் உதயணனுக்கு நல்லதொரு அறத்தை எடுத்துக்கூறி ஒரு பெண்ணை மனதில் நினைத்துக்கொண்டு வேறொரு பெண்ணோடு வாழ்வது சரியாகுமோ என்று கூறி நல்வழியில் நடக்க நண்பனுக்கு அறிவுறுத்துகிறான். இதன்வழியாக வள்ளுவரின் வாக்கிற்கிணங்க இடுக்கண் களைவதாம் நட்பு என்ற நட்பின் இலக்கணமாக வாழ்ந்துக்காட்டியவன் யூகி என்பதை தெரிந்துக்கொள்ளமுடிகிறது.

**நாலடியார் கூறும் நட்பு**

**"சூட்டுக்கோல் போல எரியும் புகுவரே**

**நட்டார் எனப்படு வார்" - (நாலடி.208)**

அன்புள்ள நண்பர்கள், பொருளுடன் நெருப்பில் எரியும் சூட்டுக்கோலை போல தன்னை சார்ந்தவர்களுக்குத் துன்பம் வரும்போது நெருப்பிலும் மூழ்குவர். அதுபோல் யூகி தனது நண்பனின் நல்வாழ்வுக்காக தான் இறந்ததாக பொய் உறைத்ததோடு தனது இறுதி ஊர்வலத்தை மாறுவேடம் இட்டு தானே முன்னின்று நடத்துகிறான். யூகியைப் போன்றே உதயணனும் நண்பன் இறந்த செய்திக் கேட்டவுடன் 'அப்படியானால் என் வாழ்வு கெடுக!' என வாய்விட்டுப் புலம்பியதை

**"உதயணண் மாழாந்து உயிர்வாழ்வு ஒழிக எனச்**

**சிதர்பொறி யெந்திரம் போலச் சிதர்ந்து**

**தாரும் பூணும் மார்பிடைத் துயில்வரச்**

**சோருங் கண்ணினன் துளங்கி மெய்ம் மறப்ப" - (பெரு.108-111)**

இவ்வாறு இருவரும் ஒருவர் மீது ஒருவர் கொண்ட நட்பின் ஆழம் அளவிடமுடியாத நிலையில் திகழ்கிறது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



**யூகியின் செயல் திறம்**

தற்காலத்தில் பெற்றோர்கள் தங்களுடைய பிள்ளைகள் நண்பர்களுடன் சேர்வதால் தடம் மாறி விடுவார்கள் என்ற கருத்து நிலவி வருகிறது. ஆனால் பெருங்கதை வாயிலாக அறியக் கூடிய செய்தி உதயணன் தாய் மிருகாபதி தன் மகனின் நண்பன் யூகியை மகனுக்கும் மேலாக கருதுவதை

**"விளையாட்டு விரும்பி அளையின வாகிய**
**இன்சுவை அடிசில் உண்பதும் ஒரீஇ**
**மன்பெருங் கோவிலுள் வளர்ந்த காலை**
**வேக நம்பிக்கு விளக்குக அடிசில் என்று" (பெரு – 142 -145)**

இதில் தாய் மிருகாபதி 'என் மகன் யூகாந்தராயன்!"என யூகியை தன்னுடைய மகன் எனக் கூறுவதிலிருந்து யூகியின் செயல் திறனை அறியமுடிகிறது. இதே போன்று சீவகசிந்தாமணியிலும் நந்தட்டனை தன்னுடைய மகனாக விசையைக் கூறுவது நட்பின் சிறப்பை எடுத்துரைக்கிறது.

**நட்பில் யூகியின் சிறப்பு**

ஒவ்வொருவரது வாழ்விலும் நட்பு என்பது எப்பொழுது வேண்டுமானாலும் வரக்கூடியது. ஆனால் யூகி உதயணனிடம் கொண்ட நட்பானது பிறந்தது முதல் ஏற்பட்டதாகும். ஆதலால்

**"இவன் காப்பியத்தில் இரண்டாம் தலைவன்**
**போல் செயல்படுகிறான்" (தெ.பொ.மீனாட்சிசுந்தரம் பிள்ளை)**

**"இவனது நட்பின் பெருமை சொல்லில் அடங்காது'' (உ.வே. சாமிநாத ஐயர்)**

எனக் குறிப்பிடும் வகையில் காப்பியம் முழுவதும் யூகியன் நட்பு நெறிகள் வெளிப்படுகிறது. இறுதியில் உதயணன் துறவு மேற்கொள்ளும் போது யூகியும் துறவை மேற்கொள்வதிலிருந்து தோழமையின் மேன்மையை சிறப்புடையதாக காட்டுகிறது.

**பகைவா் பராட்டும் நட்பு**

உற்றாா், உறவினா்கள், நண்பா்கள், அறிந்தவா்கள், புரிந்தவா்கள் ஆகியோருடைய பாராட்டுதலை விட ஒருவருடையப் புகழைப் பன்மடங்கு உயா்த்திக் காட்டுவது பகைவா் பாராட்டாகும். அப்படிப்பட்ட புகழுக்குரிய நட்புடன் வாழ்ந்த யூகியின் பெருமையை பகையரசா் பிரச்சோதனன்,

**''ஏற்ற முகத்தின் இறைவனும் விரும்பி**
**நண்பின் மாட்சியும் கவ்வியது அகலமும்**
**பண்பின் தொழிலும் படைத்தொழில் மாண்பும்**
**காயும மாந்தா் ஆயினும் யாதும்**
**தீயவை கூறப்படாத திண்மையும்**
**இவா்களது இல்லை இவனாற் பெற்ற**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



**அவர்களது இல்லை அரசின் மாட்சி''- (பெருங்கதை-106-112)**

நட்பின் பெருமை, ஆழ்ந்தகன்ற கல்வியறிவு பண்பு மாறாத நிலை, வீரம், பகைவருடனும் இனிமையாக பேசும் மனப்பான்மை ஆகிய நற்குணங்களைக் கொண்ட அமைச்சன் கிடைப்பது அவனே நண்பனாக பொருந்திருப்பது அரிதான செயலாகும். ஆனால் இது போன்ற நற்குணங்களையுடைய நண்பனை அடையும் பெரும்பேறு உதயணனுக்கு அன்றி வேறு யாருக்கும் வாய்க்கவில்லை! என மனந்திறந்து பாராட்டுவதிலிருந்து யூகியின் நட்பு சிறப்பையும் புகழையும் புரிந்துகொள்ள முடிகிறது.

**முடிவுரை**

தற்காலத்தில் நட்பு என்றாலும் நண்பன் என்ற உறவு என்றாலும் அதனை போலித்தனம் வாய்ந்தது எனக் கருதுகின்றனர். அதற்கு மாறாக பெருங்கதையில் வரும் யூகி உதயணன் மீது கொண்ட நட்பானது பகைவரும் பாராட்டும் வகையில் அமைந்துள்ளதை அறிகிறோம். யூகியை போன்ற நண்பனும் நட்பு நெறியும் கொண்ட நண்பர்கள் தற்கால சூழலில் இருப்பார்களாயின் நட்பு நன்மதிப்பிற்குரியதாக மாறும் என்பதை இக்கட்டுரையின் வாயிலாக தெளிவுப்படுத்தப்படுகிறது.

**ஆய்வுக்குப் பயன்படுத்தப்பட்ட நூல்கள்:**

1. சாமிநாதஜயர் உ.வே. - பெருங்கதை
\- சாமிநாதஜயர் உ.வே
சாமிநாதஜயர் பதிப்பு - 2000.
2. ஸ்ரீசந்திரன். ஜெ. - பெருங்கதை சிறப்பியல்பு
வர்த்தமானன் பதிப்பகம் - 2005.
3 பரிமேழலகர் உரை - திருக்குறள்
அம்சா பதிப்பகம் - 2013.
4. நாலடியார் நாமக்கல் கவிஞர - நாலடியார்
ஸ்ரீசந்திரன். ஜெ.
வர்த்தமானன் பதிப்பகம் - 2005.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# தமிழ்மொழியும் பாடத்திட்டமும்

**ஆ. ரூபா**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
அதியமான் மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
சீனிவாசா நகர், ஊற்றங்கரை.

**தோற்றுவாய்**

பாடத்திட்டம் என்பது கல்வி ஏற்பாடு. கல்வி ஏற்பாட்டின் கூறுகள் அனைத்தும் உள்ளடக்கியதே பாடத்திட்டம். அதாவது மாணவன் ஒரு வகுப்பில் என்னென்ன திறன்களை அடைய வேண்டும் என்று கல்வியாளர்களாலும், ஆசிரியர்களாலும், அரசாலும், பெற்றோர்களாலும் நிர்ணயிக்கப்கப்படக் கூடிய ஒன்று. திட்டமிட்டு செயல்படுத்தக் கூடிய அக்கல்விமுறையே பாடத்திட்டம் ஆகும். அப்பாடத்திட்டமானது மொழி கல்வியிலும், கல்வியிலும் எம்மாற்றத்தை ஏற்படுத்துகிறது என்பதை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

**பாடத்திட்டம் தயாரித்தல்**

பாடத்திட்டம் தயாரித்தலில் அயல் நாடுகளில் ஆசிரியர்களையும் பெற்றோர்களையும் வைத்து திட்டமிடுகிறார்கள். சில நாடுகளில் மாணவர்களையும் முன்வைத்து திட்டம் தீட்டப்படுகிறது. ஆனால் இங்கு அரசால் மட்டுமே பாடத்திட்டம் வகுக்கப்படுகிறது. எனவே மாணவனுக்கு ஏற்ற பாடத்திட்டத்தை அவர்களால் பகுக்க இயலாது. ஆதலால் கற்பித்தலில் சிக்கல் உண்டாகிறது என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

“பாடத்திட்டங்கள் தயாரிப்பதில் பெரும்பாலான ஆசிரியர்கள், மாணவர்களை ஈடுபடுத்தக் கூடிய நடைமுறையை உருவாக்க வேண்டும். ஜனநாயக பூர்வமான விவாதங்கள் நடத்தி ஆசிரியர்கள் மாணவர் கருத்துக்களைத் திரட்டி தேசபக்தி, விடாமுயற்சி, தன்னம்பிக்கை, அறிவியல் பார்வை போன்ற அம்சங்களைச் சேர்த்து சிறந்த குடிமக்களை உருவாக்க முடியும்.” என்று அறிஞர்கள் கருதுகிறார்கள். எனவே பாடத்திட்டம் மொழியின் வளர்ச்சியிலும் வீழ்ச்சியிலும் பங்களிப்பை அளிக்கிறது என்பது வெள்ளிடை.

**மனப்பாடக் கல்வி முறை**

தற்காலத்தில் மாணவர்களுக்கு அளிக்கப்பெறும் கல்வி புரிந்து கொள்ளும் அளவிலும் வாழ்க்கைக்கு உபயோகிக்கும் அளவிலும் இல்லை. அனைத்தும் மனப்பாடம் செய்யும் முறையை மட்டும் அடிப்படையாகக் கொண்டு இருக்கிறது என்பதை “உழைப்பவர்களை அவமதிப்பது, அறிவுச் செருக்கு, தேச நலனில் அக்கறையின்மை, சோம்பேறித்தனம் போன்ற பண்புகள் மாணவர்களிடம் வெளிப்படக் காரணம் அதிகாரிகளை உருவாக்குவதற்கான மனப்பாடக் கல்விமுறை இந்தியாவில் நீடிக்கிறது என்பது தான்” என்று அறிஞர்கள் கருதுகிறார்கள்.

பாடத்திட்டத்தில் மரபு இலக்கியம், புது கவிதை, உரைநடை, இலக்கணம், துணைப்பாடம் என்று கொடுக்கின்றனர். ஆனால் அவற்றை மாணவர்களின் மனநிலைக்கும்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



வாழ்க்கைக்கும் ஏற்றவாறு கொடுத்தல் நன்றாக இருக்கும். மாணவர்களையும், ஆசிரியர்களையும் பாடத்திட்ட அமைப்பில் சேர்த்து பாட திட்டம் வகுத்தால் நலம். ஏனெனில் ஆசிரியர்களுக்கு தான் தெரியும் இப்பருவத்தில் மாணவனுக்கு ஏற்றப்பாடம் எது என்று. எனவே பாடத்திட்டக்குழுவில் ஆசிரியர்களைச் சேர்த்தல் நலம்.

**தொழிற் கல்வியுடன் இணைந்த பாடத்திட்டம்**

தொடக்கக் கல்வியில் தற்பொழுது போதிக்கப்படும் பாடத்திட்டங்கள் காலத்துக்கேற்ற முறையில் முழுமையாக மாற்றப்பட வேண்டும். கல்வி போதிப்பதோடு, பல்வேறு மற்றைய துறைச் செயல்பாடுகளில் மாணாக்கர்களை ஈடுபடுத்திட வேண்டும். இது மட்டுமின்றி கலை மற்றும் அறிவியலில் குறைந்தபட்ச அனுபவங்களைப் பெறுவதற்கேற்ப, பாடத்திட்டம் வடிவமைக்கப்பட வேண்டும். மேலும் கல்வி கற்ற பின்னர் ஏதாவது ஒரு வழியில் உடலுழைப்பைப் பயன்படுத்தும் வகையில், தொழிற் கல்வியும் கற்றுக் கொடுக்க வேண்டும். இத்தகைய இணைப்புதான் மாணவர்கள் மத்தியில் உடலுழைப்புப் பற்றி இருந்து வரும் தவறான கருத்துக்களை அடியோடு ஒழித்திடும்.

பள்ளியிலிருந்து கல்வி கற்று வெளிவரக் கூடிய ஒவ்வோர் ஆணும் பெண்ணும் மனோரீதியாக மட்டுமின்றி, உடல் ரீதியாகவும் தனது கிராமத்தில் ஓர் உருப்படியான தொழிலை மேற்கொள்ள தொடக்கக் கல்வி வழிவகை செய்வதாக இருக்க வேண்டும். ஏனெனில் தொழில் வளர்ச்சியில் ஓங்கி நிற்கும் ஜப்பான் போன்ற நாடுகள் தொழிற்கல்விக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கின்றனர். இம்முறையை இந்தியாவிலும் கடைப்பிடித்தால் நாடு நலம் பெறும். ஆனால் அவை குலத்தொழிலை அடிப்படையாகக் கொண்டதாக இருக்க கூடாது என்பது அறிஞர்களின் கூற்று. இன்றைய மாணவர் சமுதாயம் படித்து முடித்தவுடன் தனக்கு வேலை கிடைக்க வேண்டும் என்று நினைக்கிறது. அவ்வாறு கிடைக்கும் வேலை உடல் சோர்வை ஏற்படுத்தாது நிழலிலும் குளிர் சாதன அறையிலும் தன் பிள்ளைகள் இருக்க வேண்டும் என்று பெற்றோர்களும் நினைக்கிறார்கள். எனவே தான் ஆங்கில வழிக் கல்வியின் மீது மோகம் ஏற்பட்டு வளர்ச்சியடைகிறது. பாடத்திட்டத்தில் மாற்றம் கொண்டு வந்து சமூகத்தில் நம்பிக்கை என்னும் விதையை விதைத்தால் அறுவடை நன்றாக அமையும் என்பது போல தொழிற்கல்வியுடன் இணைந்த பாடத்திட்டத்தைத் தர வேண்டும் என்று இச்சங்கம் விரும்புவதாக தெரிகிறது.

தற்காலத்தில் உள்ள பாடத்திட்டம் கற்பித்தலில் பாதிப்பை ஏற்படுத்துகிறதா என்பதை அறிய தமிழாசிரியர்களிடம் கள ஆய்வு மேற்கொண்டபோது, தமிழ்க் கற்பித்தலில் சிக்கல் உண்டாவதற்கு இன்றைய பாடத்திட்டம் காரணமாக உள்ளதா? ஆம் என்று விடையளித்தவர்கள் 67 பேர் இல்லை என்று விடையளித்தவர்கள் 33 பேர். எனவே பெரும்பான்மையான ஆசிரியர்கள் பாடத்திட்டம் கற்பித்தலில் சிக்கல் உண்டாக்குவதற்குக் காரணமாகின்றன என்று கருதுகின்றனர். ஆம் என்று விடையளித்த ஆசிரியர்களிடம் உரையாடியபோது பாடத்திட்டம் என்பதற்கும் கற்பித்தலுக்கும் என்ன தொடர்பு இருக்கிறது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



இருக்கின்ற பாடத்தை மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பதில் என்ன சிக்கல் என்று தானே கேள்வி என்று வினா எழுப்பிய போது மாணவனின் மனநிலையறிந்து பாடம் கொடுக்க வேண்டும். ஆனால் பாடத்திட்டம் அப்படி இல்லையே. இக்காலத்தில் இக்கல்வியை அதாவது இப்பாடத்தை முடிக்க வேண்டும் என்று தானே பாடத்திட்டம் உள்ளது. அக்காலக்கட்டத்தில் மாணவனுடைய சூழ்நிலை சரியில்லை எனின் குறித்த காலத்தில் குறித்த பாடத்தை முடிக்க இயலாது. அப்பொழுது அப்பாடம் இருந்து என்ன பயன். எனவே பாடத்திட்டம் என்பது முக்கிய பங்காற்றுகிறது என்று தமிழாசிரியர்கள் கருதுகிறார்கள்.

**இன்றைய பாடத்திட்டமும் தமிழ் பற்றாளர்களும்**

உலக அளவில் அங்கீகாரம் பெற்ற முக்கியமான தமிழ் மொழியியலறிஞர்கள் பலர் தமிழ்நாட்டில் இருந்தனர். இன்னும் இருக்கின்றனர். ஆனால் இவர்கள் யாரும் தமிழ்ப் பகைவர் என்ற பழியைச் சுமக்க விரும்பவில்லை. தமிழ்ச் சமூகத்தில் தங்கள் படிமம் சிதைவுறாதிருப்பதாக இவர்கள் சற்று அடக்கியே வாசித்தனர். இவர்கள் யாரும் தங்கள் புலமைசார் எழுத்துகளில் தவிர தமிழ்நாட்டில் தமிழ்ப் பழமைவாதத்தை எதிர்த்துப் பொதுமேடைகளில் கலகக் குரல் எழுப்பவில்லை. இவர்களுள் சிலர் பழமைவாதிகளுடன் சமரசம் செய்து கொண்டு அவர்களின் குரலில் பேசவும் செய்தனர். சிலர் தம் பாடுண்டு தம் ஆராய்ச்சி உண்டு என்று ஒதுங்கிப் போனார்கள்.

இதனால் நவீன மொழியியல் நமது மொழிச் சிந்தனையிலோ தமிழ் கற்றல், கற்பித்தலிலோ எவ்விதச் செல்வாக்கும் செலுத்தவில்லை. பள்ளிகளில் இலக்கணக் கல்வி என்பது நன்னூல் கருத்துகளைச் சொல்லிக்கொடுப்பதாகவே இருக்கிறது. கற்பித்தல் இலக்கணம் (Pedagogic Grammar) என்னும் கருத்தாக்கமே நமக்கு அறிமுகமாகவில்லை. மொழித் தூய்மையை, இலக்கணத் தூய்மையைப் பேணுவதே தமிழ் கற்பித்தலின் நோக்கமாயிற்று. பள்ளி, கல்லூரிப் பாடநூல்கள் இதன் அடிப்படையிலேயே அமைந்துள்ளன. மாணவர்களின் மொழித் தேவை என்ன? தமிழ்மொழியில் தேர்ச்சியைப் படிப்படியாக அவர்களிடம் எவ்வாறு ஏற்படுத்துவது? எந்த வகுப்பில் எதைக் கற்பிப்பது, ஏன், எப்படிக் கற்பிப்பது என்பது பற்றி நாம் அதிகம் சிந்திப்பதில்லை. நன்னூலில் உள்ள இலக்கணக் கலைச்சொற்களை எல்லாம் மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுத்துவிட விரும்புகிறோம். மொழி, இலக்கியம், பண்பாடு பற்றிய நமது மதிப்பீடுகளையெல்லாம் அவர்களின் தலையில் சுமத்திவிட நினைக்கிறோம். அவர்களுடைய மொழித்திறன் வளர்ச்சிக்கு இவையெல்லாம் அவசியமா என்று நாம் சிந்திப்பதில்லை. இதனால், பள்ளி, கல்லூரித் தமிழ் வேறாகவும் ஊடகங்களிலும் படைப்பிலக்கியங்களிலும் பயன்படும் தமிழ் வேறாகவும் பிளவுண்டு கிடக்கிறது. இது ஆரோக்கியமான சூழல் அல்ல.

நமது மொழிச் சிந்தனையிலும் தமிழ்க் கல்வியிலும் புதிய, புரட்சிகரமான மாற்றங்கள் ஏற்பட வேண்டுமானால் தமிழ்க் கல்வித் துறையில் மொழியியல் முக்கியத்துவம் பெற வேண்டும். மேலை நாடுகளில் மொழிக் கல்வியில் மொழியியல் பிரிக்க முடியாதவாறு

E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com

இணைந்துள்ளது. அதனால் அத்துறைகளில் அவர்கள் அதிக முன்னேற்றம் கண்டிருக்கின்றனர். மொழியியல் தமிழுக்கு அறிமுகமாகி அரை நூற்றாண்டு கழிந்த பின்னரும் நாம் அதை ஓரங்கட்டியே வைத்திருக்கிறோம். இந்நிலை மாற வேண்டும். தமிழைத் தாய்மொழியாக, இரண்டாம் மொழியாகக் கற்பித்தல், மாணவர்களின் மொழித்திறன், வளர்ச்சி, மொழி, இலக்கிய ஆய்வு போன்றவற்றில் முன்னேற்றம் காண இது அவசியம்.

அரங்கராசன் கூறியது போல மொழியியலையும் தமிழ்ப்பாடங்களையும் இலக்கணங்களையும் ஒன்றிணைத்துப் பார்ப்பது இல்லை. இக்கருத்தும் ஆசிரியர்கள் பாடத்திட்டம் அமைப்பதில் ஆசிரியர்கள் பங்கு இல்லை. பாடத்திட்டம் என்பது மாணவர்களின் மனநிலைக்கு ஏற்றவாறு அமைதல் வேண்டும் என்று கூறியிருப்பதும் பொருத்தமாக உள்ளது. எனினும் மொழியியலையும் தமிழ்க்கல்வியில் கொண்டுவரவேண்டும் என்பது நோக்கத்தக்கது.

**ஆரம்ப பள்ளிகளில் கற்பிக்கும் முறைகளும் பாடத்திட்டமும்**

“நு.செந்தோல் (Sendall) என்பவர் குழந்தைகளுக்கென எழுதிய ஆரம்பப் பாடநூல்களைப் பற்றிக் கூறுகையில் அடிகளார் சில தவறுகளை எடுத்துக்காட்டுகின்றார். பள்ளிக்கூடத்துக்குச் செல்லாத தொடக்கநிலையில் உள்ள குழந்தைகளுக்கு ஔ, ஃ என்ற எழுத்துக்களைச் சொல்லிக்கொடுப்பது பயனற்ற செயல். இக்குறியிடுகள் அக்குழந்தைகளின் தேவைகளுக்கும், அனுபவத்துக்கும் அப்பாற்பட்டவை என்பார் அடிகள். இக்கால கட்டத்தில் கிராமப்புற, நகர்ப்புற இடங்களில் வாழ்கின்ற எல்லாக் குழந்தைகளுக்கும் பொதுவான ஒரு சொல் தொகையைக் கையாள வேண்டும் என்பார் அடிகள். ஐவர், ஒப்பந்தம் போன்ற சொற்கள் முதல் வகுப்பில் படிக்கின்ற குழந்தைகளின் சிந்தனைக்கு அப்பாற்பட்ட சொற்களாகும். ஈசன், ஓடம், ஔவை, ஔடதம், எ∴கு, அ∴து போன்ற சொற்கள் அசாதாரண சொற்களாகும். முதலாம் வகுப்பிற்குப் பிறகு இச்சொற்களைப் பயன்படுத்தலாம். உறி, எருது, ஏற்றம், இரதம், ஈச்சமரம் போன்ற சொற்கள் பட்டணத்துக் குழந்தைகளுக்குச் சாதகமான சொற்களாக இல்லை. ஒட்டகம், அன்னம் என்ற சொற்கள் கிராமத்துக் குழந்தைகளுக்குச் சாதகமான சொற்காளக இல்லை. மிருகக்காட்சிச் சாலைக்குப்போய்ப் பார்த்திருந்தால் கூட இச்சொற்கள் பழக்கமான சொற்களாக இல்லை. குழந்தைகளுக்கெனப் பாடநூலில் உள்ள 91 சொற்களில் 24 சொற்கள் கேள்விக்குரியன. பாடநூலில் உள்ள சில சொற்களான ஈஞ்சு, ஆயுள், இல்லம், ஒற்றர், ஓலம், கௌதாரி, யௌவனம், ரௌத்திரி, லௌகீகம், சௌக்கியம் போன்ற சொற்கள் குழந்தைகளின் அனுபவத்துக்கும், ஆர்வத்துக்கும் அப்பாற்பட்ட சொற்களாகும். இந்தத் குழந்தைகளின் ஆரம்ப பாட நூல்களில் தெரிந்தெடுக்கப்பட்டாற்கலெல்லாம் பெயர்ச் சொற்களாகவே இருக்கின்றன. குழந்தைப்பருவத்தில் குழந்தைகளின் செயலை எடுத்துக்காட்டுகின்ற வினைப் பெயர்கள் குறைவாகும்.

இரு, ஓடு, ஆடு, எறி, ஏறு போன்ற குழந்தைகளின் செயலை விளக்குகின்ற சொற்கள் பலவற்றை அடிக்கடி குழந்தைகளுக்கான பாட நூல்களில் சேர்க்கவேண்டும் என்பர் அடிகள்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



குழந்தைகள் எழுத்துக்களைக் கண்டுபிடிப்பதற்காக அவற்றை அடிக்கடி சொல்ல வேண்டியதாக இருக்கும்." குழந்தைகளின் பேச்சு வழக்கில் வருகின்ற சொற்களை அதிகமாக எழுத்து வழக்குக்கு பயன்படுத்த வேண்டும். "குழந்தைகளுக்கு அறக் கருத்துக்களை நுண்பொருள்மூலம் சொல்லக் கூடாது. அவர்கள் காணும் பருப்பொருள்மூலம், அவர்கள் சந்திக்கும் ஆட்கள் மூலம், செயல்கள் மூலம், நிகழ்ச்சிகள் மூலம் உணர்த்தலாம் என்பார் அடிகள்"

மேற்கண்ட அனைத்தும் தமிழ்ப்பாடம் கற்பிப்பதில் உள்ள சிக்கல்களை முன்வைக்கின்றன. இவற்றையெல்லாம் கற்பிக்கும் முறைகளில் மாற்றத்தைக் கொண்டு வந்தால் சிக்கல்களைத் தீர்க்க இயலும்.

**நிறைவாக**

சிக்கல் என்றால் ஆசிரியராலோ அல்லது மாணவர்களாலோ சிக்கல் உண்டாவதில்லை. நிர்ணயிக்கப்பட்ட திட்டமிடப்பட்ட பாடத்திட்டதால் உண்டாகும் சிக்கல்கள் என்பதை தனிநாயகம் அடிகள் கூறியுள்ளார். எனவே கற்பித்தலில் உண்டாகும் சிக்கல்களில் பாடத்திட்டம் கணிசமான பங்கினை வகிக்கிறது என்பது மேற்கண்ட கருத்துக்களால் விளங்குகிறது. கள ஆய்வில் ஆசிரியர்களின் பதிலும் ஓரளவுக்கு ஒத்து போகின்றன. ஆசிரியர்கள் நேரடியாக பதிலுரைக்கவில்லை. அவர்களிடம் உரையாடிய போது அடிகள் கூறியது போல் அவர்களின் மனதில் இருந்த கருத்துக்களும் வெளிப்பட்டன. தற்கால பாடத்திட்டங்கள் இந்நிலையிலிருந்து மாறுபட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

**பார்வை நூல்கள்**

1. அந்தோனி.வி.ஜான் — தனிநாயக அடிகளின் வாழ்வும் பணியும்
தாங்கோர் பதிப்பகம் (Thangaor),
இலங்கை (Ceylon), பதிப்பு. 1984.
2. கல்விப் பாதுகாப்புக் குழு — சுயநிதி பலசரக்குக் கல்விக் கடை
கல்விப் பாதுகாப்புக் குழு,
3. இராமசுந்தரம்.பேரா — கல்வி
இந்திய மாணவர் சங்கம்,
சவுத் வின்,
சென்னை. 02.
4. இந்திய மாணவர் சங்கம் — கல்வி,
இந்திய மாணவர் சங்கம், சவுத் வின்,
சென்னை. 600002.
முதற் பதிப்பு, ஜனவரி 2000.
5. காலச்சுவடு — மலர் 27, இதழ் 3,



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



| | |
|---|---|
| | மார்ச் - 2015. |
| 6. மக்கள் கலாச்சாரக் கழகம் | புதிய கல்விக் கொள்கை, ஜனநாயகத்துக்கு ஒரு சவால், மக்கள் கலாச்சாரக் கழகம், தமிழ்நாடு, சென்னை. 29. |



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



# Psychological Thoughts in Ve. Iraianbu's Writings

**E. Sekhar,**
Reasearch Scholar, Department of Tamil,
Scott Christian College,
Pleasant Nagar, Nagercoil – 629 001.

Each character is hidden with lot of energy and creativity, like eminence is hidden in each art. Whilst we take away unwanted elements from a stone we can get an excellent shape of a sculpture; likewise and character is moulded with the aid of shaping his weaknesses. Iraianbu exposes this trait through his writings. One cannot actually examine any art out of compulsion; no formation will show up out of compulsion or command. Formation getting via violence will actually create damaged hearts. Individuals who preference for accomplishing splendid pursuits they should go through hardships and difficulties. They love even difficult paintings and exhaustions of their lives. This is properly stated as '**a sculpture cannot be created unless it accepts the pain of the hammer**'[1] in Eazhavathu Arivu Part - I. So, the intention of this article is to deliver the psychological mind in Iraianbu's writings to the more youthful technology.

Ve. Iraianbu, a perfect person, being an officer in the Indian administrative provider, Ve. Iraianbu is famous as a creator, orator, thinker and social activist. As Bharathidhasan stated:

**"எங்கும் பாரடா இப்புவி மக்களைப்
பாரடா உனது மானிடப் பரப்பை!
பாரடா உன்னுடன் பிறந்த பட்டாளம்!
'என்குலம்' என்றுனைத் தன்னிடம் ஒட்டிய
மக்கள் பெருங்கடல் பார்த்து மகிழ்ச்சிகொள்!
அறிவை விரிவுசெய் அகண்ட மாக்கு!
விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை!
அணைந்து கொள்! உன்னைச் சங்கம மாக்கு.
மானிடச் சமுத்திரம் நானென்று கூவு!"**[2]

He evolved multifaced understanding in numerous element of existence. When he was studying, he loved to examine books. He made books friends and so, now the books become his pals. He has literary ability and precise persona with the desire to serve humanity. While he served after passing his ias in kuddalore, he posted his first poetic paintings 'Poobalathirkoru Pullanguzhal' (பூபாளத்திற்கொரு புல்லாங்குழல்). He studied not simplest our literature, however additionally world literature to expand his imaginative and

E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com

prescient and he wrote his first novel 'Aathankarai Oram Narmada Anai' (அத்தங்கரை ஓரம் நா்மதா அணை) become on the premise of the those who had been pushed away to assemble the river Narmada. It was given the award for Thiruppur Tamil Sangam. He posted 33 books inclusive of the literary genres – tale, poem, novel and essays. Those display his excessive character his writings mirror his perfection.

**What means Psychology?**

It's miles necessary to know the which means of psychology before reading the mental thoughts in Iraianbu's writings.

**'Psychology is a scientific research of one's mental activities and behavious'**[3]. One who gets proper familiarity in this field is a psychologist.

**"Basic research in psychology is linked with one's insight, carefulness, feelings brain activities, personality and behavious."**[4]

**Etymological Meaning**

**Psychology is a word termed from the Greek word 'logic' which means 'study of mind'** [5]

**'Beauty' in Psychological Perspective**

Each person wants to be beautiful. It is a choice to be beautiful in the front of other persons. For that reason, we regularly do face-wash and decorate the face before the mirrors. Consistent with Ve. Iraianbu, **"we can't change our face not event one president. One can modify his style in his hair only. Naturally, everyone has his own beauty. It is needed not to change the beautiful face into ugly one"** [6] While we come upon ill-remedy or misery in society our original face itself is a beautiful one. He desires that one have not to be silent when unwell-remedy is done. We beautify our faces with lot of chemical substances so that you can enhance them, however it looses our beauty.

**'Anger' in Psychological Perspective**

Anger is one among feelings of guy. It's miles one of the powerful feelings of person. It brings hazard and destruction. Too much of anger usually offers destruction. Anger is the reason for many killings. Thiruvalluvar stated,

**"சொல்லிடத்துக் காப்பான் சினம் காப்பான் சினம் காப்பான்**
**அல்லிடத்துக் காக்கின்என் காவாக்கால் என்".**[7]

It isn't always excellent to expose anger to folks who effortlessly get fear by using the anger of others. That is well stated by the author says: **'Anger brings even the flower a**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



**dried one'**[8]. In addition, he says: **'we are our enemies. Our angry, haste, impatience and greed are all acting as our enemies.'**[9]

On the identical time, it is not; top that anger is not expressed anywhere it is wanted. The writer says that if anger is needed anger have to be shown out. He also says: **'laziness and inactiveness birth yawns. But busy faces and give attractive expressions will make others happy'** [10]**.**

**Happiness in Psychological Attitude:**

We cannot borrow happiness. The things, which might be borrowed, cannot supply happiness. Even the small deeds grow to be a factor of worship when we do it with happiness and pride. This is nicely stated via the author as **'strong nature is forceful than the beautiful decorations.'**[11]

Masses of human beings are expecting change or turning point in their life to get happiness. All of us have own issues, problems and pains. The author asks us through his e-Book **cs;nshspg; gazk**; to defeat the above and to utilize our energies for a new sunrise.

**'Happiness is not attained through outward incidents. Even the happiness that we got by our achievements will be short lived. Happiness which arises from our inner mind will live long. Today there are people who are running after outward incidents to get happiness and do not get happiness or piece of mind'** [12]**.**

The issues pressure a man away but he should be happy then best the desire reigns in his mind. Struggling is not always the give up of human existence. It need to be the alternative side of happiness. Shakespeare changed into humiliated by means of many whilst he became dwelling. Thomas Greene insulted him as 'a cock dressed in peacock's wing'. But times offers name and fame to Shakespeare folks that want to be glad do not sense about the beneath-estimation of others.

There are some folks that don't recognize their own contributions. We must no longer worry for this. The writer states that we need to be satisfied for people to whom we serve are happy. In short, to stay a lifestyles with truth and honest will supply us solace and happiness. **'Happy life is a life living with love; it brings hope in every minute; it thinks healthy in every second** [13].

**Eradication of Suicide Feelings**

Lifestyles is an amalgamation of reviews. However, we have a careful life, difficulties and losses may embody us. That is the nature of human life. Those will train us



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



meaning and intensity of our birth. If we calculate our existence, we forestall our cautious residing. This life has now not use in any respect. Therefore, it does not supply happiness. The writer says: **"people who meet failure crush it as a dried leaf and improve themselves with happiness by making the failure as manure for success. They bear even tempest and life itself greets them"**[14].

Life is remarkable and exquisite. People who do not experience lives may additionally spoil themselves. There are people who kill themselves because of wondering failure as a give up. Person who kills himself kills others additionally. According to G.K. Chesterton, he is the man who kills the arena.

**The well-known psychologist Sigmund Freud says that every individual has fear of death by nature. To avoid his feeling he may use violence. Robert Green Ingersoll said that to commit suicide needs more courage.** [15]

Nowadays people are tormented by mental despair and mental stress in all age groups. It is not an amazing sign that maximum of the women and men between age 15 to 44 died not because of warfare however because of their suicides.

A person who has alienated or dealt with contempt may also lose faith in life. **'He thinks that he is useless and so he plans to die'** [16]. Intellectual stress is the basic cause for suicidal strive. It conjures up one to get suicide. Intellectual pressure is different from depression. Melancholy arises for one cause. Its transient says Sigmund Freud. Intellectual strain occurs with none purpose. Person who happens with none motive? One who tells that I am going to get suicide must be watched, folks that are in pain without thinking the good things in his existence ought to be taken to the psychiatrist for counseling.

**"Those who are affected in childhood days may try for suicide. If there is one evil experience in their lives it may inspire suicidal attempt. Those show are affected by traumatic events may attempt foe suicide even 30 to 50 times"** [18]

The kids with fantastic mind, self assurance and desirable friend's circle will develop with desirable personality. Worry for failure and worry of examination need to be identified within the formative year's days and good counseling need to accept.

**"In some houses there are hurried children. These children asked to grow soon. These immature children get shock and impatience while they are treated with matured children. They worry to pass in the exam. From this, they may use drugs. Sometimes they may start to think about suicide"** [19]



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com



Every person has weak point; no person is exempted from this. Even the god has weak point; it could be loving the man or women at the maximum. '**The weakness of others is the strength of ours'** says Buddhism. Knowing the weak spot of the enemies is the smooth way the win a battle. Even the mightiest individual is also having weakness. We will not win the enemy without knowing the weak point of him.

It is very honest that we should defeat personal weaknesses than others.

**"Yesterday he might be a thorn**
**Today he can be a flower**
**Yesterday he might be a poll entrains**
**Today he can be honey**
**Yesterday he might be a colour**
**Today he can be an art**
**Yesterday he might be a filament**
**Today he can be a cloth**
**Yesterday she might be a woman**
**Today she can be a mother"** [21]

Exchange will occur at any time to each person. It is not compulsory that the day past weakness have to stay today. We need not well as ours. A good way to safeguard our lives, we should not recognition our weakness to our combatants.

We need lot of knowledge to indentify our electricity. If we suppose that there may be no opposition success is impossible. Competition can also get up from all sides of the society.

**"Sometimes, the weaknesses of others**
**will become the strength of ours."** [22]

**"Our strength is not to focus our weakness to others. At the same time we have to use our total strength towards the weakness use our total strength towards the weakness of our opponents"** [23]. we have to not be pessimistic even as assembly failures because each failure is a stepping stone closer to fulfillment.

**A Good Deed a Day:**

If our frame and thoughts are to be energetic; we ought to do true deeds continuously. Even the character nurtures regular at each time for the coolest of the human beings. Best humans thinks rationally; we must now not be the trouble to others.

**'When we do good deeds everyday it will bring the eternal bliss in us. When we go to the bed the result of our good deeds bring a kind of unexperienced pleasure'.** [24] we want not do adventures; the real adventures are helping others. Even guiding a man or watering a plant is itself a very good deed. To eradicate our laziness and our inferiority complex, we need to do accurate deeds. Procrastination must be avoided to get precise consequences of our deeds. If one wants to be younger, he should preserve doing right deeds **"when we study the history of the world the great achievers were the persons who kept themselves always busy. Their rest time as very less and they never spent their time in unnecessary entertainments'** [25]**.**

We use to be jealous on others; a form of terrible feeling is being created in us, while they arrive up in life styles. To avoid this sort of terrible feelings, we have to keep on doing exact deeds. **'The great people never feel either inferiority complex or superiority complex. They become sometimes as falls and sometimes as clouds'** [26]

**Let us Maintain the Surroundings Smooth:**

If we need to keep our body and thoughts as ever inexperienced, it is far essential to maintain our surroundings smooth. If we see inside the mental perspective, folks that live with certain concepts and rules constantly love the cleanliness. As Vivekananda says "field is residing without selfishness'. All of the undisciplined deeds are the out coma of selfishness. **"The cleanliness is not measured by society by us"**[27]

The world wherein we supply is very extraordinary and beautiful. Typically we are attracted by the social scenes, which can be within the media. But we fail to revel in the actual nature that's around us. That is why our mind is not on stable.

It is far very painful that even we are not afflicted about our homes and monuments that are built with gift method artwork and technology. Because of this, we're losing plenty of money, energy time and many sources. **We never respect and accept the caution of the government. Knowingly or unknowingly we are using the common places as toilets we should keep the common property as our own property. Cleanliness is for good health** [28]. Those who abide by way of the regulations of the society becomes as super personalities. Environment is our existence. While we disturb the character, it is going to react and wreck brutally. So it's miles our obligation to shop the nature.

**'Those who love the nature will understand the life deeply. They are always with confidence and very courageous. They are always aware of themselves and society. They**



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019
Available at: www.ijtlls.com



**are always happy in the midst of pains and sufferings. They easily adopt the nature of accepting the entire situation." [29]**

**Whatever in around us is environment. So it is our inevitable duty to keep the environment clean. Those who abide by this law are the lovers of the society and all the environmentalists say that if we save all the living beings, we can only save the early."[30]** whilst the flood us near to human. So allow us to plant enough timber of the trees. So, let us plant enough bushes in which we stay.

**Allow us to Embody Friendship and Live Joyfully:**

Nowadays, the arena will become as a small village. The world has shrunk within the palm of a person. As the sector has shrunk, the relationship of humans additionally becomes very small. We like media greater than courting. Nowadays our members of the family are like things without hearts. Therefore, there may be a kind of vacuum in each coronary heart of people. We are continually hearing the languages of things than the people. This creates a variety of anxiety, stress despair laziness, inferiority complex, loneliness and so forth. It creates a listing f day by day suicidal tendency is also improved inside the society.

**"We should go beyond the idea that the parents are our world and friends are the real guides. The friends are the measures of our heights and encourage ourselves" [31]**

Our friends ought to be off with lot of goodnesses. Then handiest, our existence is to be fertile; loneliness will disappear. Desirable friends are the mirrors of our existence. A good way to improvement very good character, the authentic pals are wanted. Then simplest we can be healthful in both physically and mentally.

People who aware of live self contended will stay fortunately. The self-contended thoughts are reduced in gift technology. They might say that for the reason that dad and mom introduced forth, they should fulfill the wishes of them. **"Nowadays, some children are growing without knowing the value of money. For them, parents are the immediate fulfillers. If they do not get the delicious food one day, immediately they will murmur and react the parents. Even if they achieve anything avoiding the love of parents, they are like the song of the grasshopper, not the song of the parrot". [32]**

If we want to glorious, we have to be self-contended and live happily.

**Conclusion:**

After writing this article my heart is filled with joy. Every person has two facets – thoughts and body. If our thoughts are apparent, our frame is also clear. If our frame is

E-ISSN: 2581-7140
Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com

obvious our thoughts is also clean. So, it's far like sides of a coin. Our ancestors stated this, as **'face is the index of the mind'**. The writer, Iraianbu may be very precise about the doing of small matters because small top deeds cause extra achievements. He may be very eager on saying that our existence have to be framed with correct values. Hence, this article will truly make an impact to everybody's future.

**End Notes**

1. Ve. Irainabu, Yezhavathu Arivu (Part – I), Page 81.
2. S. Gowmareeswari, Bharathidasan Kavithaigal, Page 95.
3. Dr. A. Alphonse, Nee Nan Avan, Page 65.
4. How dows the APA define psychology.
5. Online Puthu Sollakkam Agarathi 2001 'Ulavial'.
6. Ve. Iraianbu, Yezhavathu Arivu, Part – I, Page 55.
7. P.S. Accharya, Thirukkural, Page 80.
8. Ve. Iraianbu, Yezhavathu Arivu, Part – I, Page 55.
9. Dr. Sundara Avudaippan, Iraianbuvin Chinthanai Vaanam, Page 111.
10. Ve. Iraianbu, E.A.P. Essays.
11. Ve. Iraianbu, Ulloli Payanam, Page 212.
12. Ve. Iraianbu, Ucchiyilirunthu Thodanku, Page 161.
13. Dr. Sundara Avudayappan, Iraianbuvin Chinthanai Vaanam, Page 138.
14. Ve. Iraianbu, Ucchiyilirunthu Thodanku, Page 7.
15. Ibid, Page 14.
16. Ibid, Page 31.
17. Ibid, Page 39.
18. Ibid, Page 79.
19. Ibid, Page 119.
20. Ve. Iraianbu E.A.P. Essays.
21. Ve. Iraianbu, Odum Nathiyin Osai, Part – II, Page 233.
22. Ve. Iraianbu, Ilakkiyathil Melanmai, page 326.
23. Ibid, 333.
24. Ve. Iraianbu, Unnodu Oru Nimisham, Page 33-34.
25. Ibid, Page 120.
26. Ibid, Page 76.

E-ISSN: 2581-7140

Vol. 1: Issue II, January-2019 Available at: www.ijtlls.com

27. Ibid, Page 34.
28. Ve. Iraianbu, E.Aa.Pa. Essays.
29. Ve. Iraianbu, Unnodu Oru Nimisham, Page 124.
30. Ve. Iraianbu, Ilakkiyathil Melanmai, Page 402.
31. Ve. Iraianbu, Unnodu Oru Nimisham, Page 59.
32. Ibid, Page 82

**Bibiliography**

1. S. Gowmareeswari, Bharathidasan Kavithaigal, Ramaiya Pathipagam, G-4, Santhi Adukkagam, 3, Sri Krishnapuram street, Rayapettai, Chennai – 14, 2012.
2. Dr. Sundara Avudayappan, Iraianbuvin Chinthanai Vaanam, New Century Book House P.Ltd., 41B, Chitco Industrial Estate, Ambatoor, Chennai – 600 098, 2016.
3. Dr. A. Alphonse, Uruvagum Naan, Mera Veliyeedu, Mullanganavilai, Karungal – 629 157, 1997.
4. B.S. Acharya, Thirukkural, Narmada Pathippagam, Nalla Nool Veliyeetalargal, 10, Nana Theru, Thiyagaraya Nager, Chennai – 17, 2006.
5. Ve. Iraianbu, Uchiyilirunthu Thodanku, Vijaya Pathippagam, 20 Raja Veethi, Coimbatore – 641 001, 2007.
6. Ve. Iraianbu, Yezhavathu Arivu (Part – I), New Century Book House P.Ltd, 41B, Chitco Industrial Estate, Ambatore.
7. Ve. Iraianbu, Unnodu Oru Nimisham, Vikatan Prasuram, 757, Anna Salai, Chennai – 600 002, 2016.
8. Ve. Iraianbu, Ulloli Payanam, New Century Book House (P) Ltd, 41B, Chitco Industrial Estate, Ambatore, Chennai – 600 098, 2016.
9. Ve. Iraianbu, Odum Nathiyin Osai, New Century Book House (P) Ltd, 41B, Chitco Industrial Estate, Ambatore, Chennai – 600 098, 2016.
10. Ve. Iraianbu, Ilakkiyathil Melanmai, New Century Book House (P) Ltd, 41B, Chitco Industrial Estate, Ambatore, Chennai – 600 098, 2016.

**Essays**

1. Online Puthu Sollakkam Agarathi 2001 Ulavial.
2. Inayathalam.
3. Ve. Iraianbu, E.Aa.Pa. Essays.
4. How does the APA define psychology.